வெளியீடு
மாநிலத் திட்டக்குழு
தமிழ்நாடு அரசு
எழிலகம்
காமராஜர் சாலை
சென்னை - 600 005

பதிப்புரிமை
தமிழ்நாடு அரசு

முகப்பு அட்டை உதவி
தமிழ்நாடு அரசு

முகப்பு அட்டை வடிவமைப்பு
நீலிமாராவ்

மறுதோன்றி அச்சு வடிவமைப்பு மற்றும் அச்சீடு



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
இரண்டாம் முதன்மைச்சாலை
மையத் தொழில் நுட்பப் பயிலக வளாகம்
தரமணி அஞ்சல், சென்னை - 600 113.
பேசி : 22542992 நகலி : 22542781
மின்னஞ்சல் : iits@tn.nic.in

# பொருளடக்கம்

# பெட்டிச் செய்திகளின் பட்டியல்

# படங்களின் பட்டியல்

# அட்டவணைகளின் பட்டியல்

# பின்னிணைப்பு அட்டவணைகளின் பட்டியல்

# முன்னுரை

தமிழ்நாட்டின் மனித மேம்பாட்டு அறிக்கையை வெளியிடுவதில் நான் மகிழ்ச்சியடைகிறேன். மாநிலத்திற்கான இவ்வகையான வெளியீடுகளில் இதுவே முதல் அறிக்கையாகும். ஒரு மாநிலத்தின் பொருளாதார வளர்ச்சியும் மாநிலத்தின் மொத்த உள்நாட்டு உற்பத்தி உயர்வும் மக்களுடைய உள்ளபடியேயான நல்வாழ்வை பிரதிபலிக்கும் என்பது கட்டாயமில்லை. வளர்ச்சிக்கான நோக்கங்கள் மொத்த உள்நாட்டு உற்பத்தியின் உயர்வு அல்லது தனிநபர் வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு மட்டுமே விளக்கப்படுவதில்லை. மாறாக, இந்நோக்கங்கள் பெரும்பாலும் மக்களின் நல்வாழ்வினை உயர்த்திட வேண்டும் எனும் அடிப்படையில்தான் விளக்கப்படுகின்றன. எனவே, மனித மேம்பாட்டுக் குறியீடுகளின் கொள்கையானது, மக்களின் நல்வாழ்வின் வளர்ச்சியையும் தரத்தையும் அளவிடவே வெளிப்படையாகப் பரிந்துரைக்கிறது.

பெயரே விளக்கும் வகையில் இம்மனித மேம்பாட்டுக் கொள்கையானது கல்வி, நலவாழ்வு, எதிர்ப்பார்ப்பு ஆயுட்காலம், வருமானம், பாதுகாப்பான குடிநீர் வாய்ப்புகள், துப்புரவு வசதிகள் ஆகியனவற்றை அடைவதைச் சுட்டிக்காட்டும் அடிப்படையில் உள்ளபடியேயான மக்களின் நல்வாழ்வை மையமாய் கொண்டுள்ளது. ஐக்கிய நாடுகளின் வளர்ச்சித் திட்டம் 1990-லிருந்து மனித மேம்பாட்டு அறிக்கையை வெளியிட்டு வருகிறது. மத்தியத்திட்டக்குழு, அண்மையில் 2001-ஆம் ஆண்டிற்கான தேசீய மனித மேம்பாட்டு அறிக்கையை வெளியிட்டுள்ளது.

மாநில திட்டக்குழு தமிழ்நாட்டுக்கும் இது போன்றதொரு அறிக்கையைத் தயாரிக்கும் முயற்சியை மேற்கொண்டது. இத்தயாரிப்பானது, வல்லுநர்கள் மற்றும் கல்வியாளர்களுடன் கலந்தாய்வு செய்யப்பட்ட மாநில திட்டக் குழுவினுடைய முழுமையானதொரு சுய முயற்சியே யாகும். முன்னேற்றம் தேவைப்படும் துறைகளைக் கண்டறியும் வகையில் மாவட்ட வாரியாக வளர்ச்சியை அளவீடு செய்வதே இதன் முக்கிய நோக்கங்களில் ஒன்றாகும். மனித மேம்பாட்டுக் குறியீட்டுடன் ஆயுட்கால எதிர்பார்ப்பு, கல்வியறிவு, வருமானம் ஆகியவையும் மற்றும் சமஉரிமைச் சமுதாயத்தை உருவாக்கிட கவனம் செலுத்தப்பட வேண்டி ஆண், பெண் இன ஏற்றத்தாழ்வுகள் போன்ற அடிப்படைத் தகுதியுடைமைகளை வெளிக்கொணர்ந்து ஆண், பெண் இன குறியீடும் கணிக்கப்பட்டுள்ளது.

தமிழ்நாடு வளமார்ந்தப் பண்பாட்டினையும் வரலாற்றுடனான மரபுரிமையையும் பெற்றுள்ளது. இம்மாநிலம் செழிப்பான இயற்கை வள ஆதாரங்களைப் பெற்றிராவிட்டாலும் நன்கமைந்ததொரு பொருளியலான மற்றும் சமூகக் கட்டமைப்பினையும் பெற்று அனைத்துத் துறைகளிலும் மிகச் சிறந்து விளங்குகிறது. மாநிலத்தின் ஒட்டுமொத்த வளர்ச்சியை இவ்வறிக்கை சுருக்கமாக விளக்குகிறது. தமிழ்நாடு மனித மேம்பாட்டறிக்கை, மாநிலத்தின் வளர்ச்சி, சமூகநீதி மற்றும் சமத்துவத்தை திட்டமிட ஒரு முக்கியக் கருவியாய் உதவுகிறது. இவ்வறிக்கை முதலீட்டுக்கான உத்தி மற்றும் வருங்கால கவனத்திற்குரிய பகுதிகள் மீதான புதிய மதிப்பீடுகளைச் செய்ய உதவும். மேலும் இவ்வறிக்கையில் கண்டறியப்பட்டுள்ள அறைகூவல்கள் சமாளிக்கப்பட்டால் தமிழ்நாட்டை இந்தியாவிலேயே முதல் மாநிலமாக்கிட வேண்டும் என்ற கனவு மெய்ப்படும்.

**ஜெ. ஜெயலலிதா** அவர்கள்

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்

# ஒப்புகைகள்

தமிழ்நாட்டின் மனித மேம்பாட்டறிக்கையின் தயாரிப்பானது, ஐக்கிய நாடுகளின் வளர்ச்சித் திட்டம் மற்றும் மத்திய திட்டக்குழுவின் ஆதரவோடு கூடிய தமிழ்நாடு அரசின் தொடக்க முயற்சியேயாகும். மாநில திட்டக்குழு இப்பணியை முழுமையானதொரு தன் முயற்சியாய் எடுத்துக் கொண்டது. அப்போதைய மாநில திட்டக்குழுவின் உறுப்பினர் - செயலரான திரு எல். என். விஜயராகவன், இ.ஆ.ப.வைத் தலைவராகவும், மாநில திட்டக்குழுவின் முழுநேர உறுப்பினர் திரு. கே.வி. பழனிதுரை, திருமதி தங்கம் சங்கரநாராயணன், இ.ஆ.ப. அப்போதைய திட்டம் மற்றும் வளர்ச்சித்துறையின் செயலர், திருமதி ஆனந்தி ரவிச்சந்திரன், இ.பொ.ப. அப்போதைய மாநில திட்டக்குழுவின் ஆலோசகர், தொ.மி.போ (IPT), அப்போதைய இயக்குநர், மதிப்பாய்வு மற்றும் செயல்முறை ஆராய்ச்சி, முனைவர் சி. சந்திரமோகன், இ.பொ.ப., அப்போதைய பொருளாதார மற்றும் புள்ளிவிவரங்கள் துறை இயக்குநர் திரு. ஆர். பாஸ்கரன், இ.ஆ.ப., முனைவர் (திருமதி) அனுராதா கதிஇராஜீவன், இ.ஆ.ப., திருமதி கிரிஜா வைத்தியநாதன், இ.ஆ.ப., திருமதி ஷீலாராணி சுங்கத், இ.ஆ.ப. திரு. கே. இராஜாராமன், இ.ஆ.ப. ஆகியோரை உறுப்பினராகக் கொண்ட ஒரு உள் மையக்குழு இப்பணியை மேற்கொண்டது. தமிழ்நாடு மனித மேம்பாட்டறிக்கையின் தயாரிப்பு இக்குழுவினரின் சோர்விலா முயற்சிகளால் சாத்தியமாயிற்று. இக்குழுவினர், ஏராளமான அடிப்படை விவரங்களையும் தகவலையும் திரட்டியளித்ததன் மூலம் அவை ஒருங்கிணைந்ததொரு அறிக்கையாக உருப்பெறுவதை உறுதி செய்தனர்.

மனித மேம்பாட்டறிக்கையின் அத்தியாயங்களுக்கு முதன்மைப் பங்களிப்பாளர்கள் :

| | | |
|---|---|---|
| இயல் 1 : | தமிழ்நாடு ஓர் உருவடிவம் | *எல்.என். விஜயராகவன்*, இ.ஆ.ப.<br>*தங்கம் சங்கரநாராயணன்*, இ.ஆ.ப. |
| இயல் 2 : | தமிழ்நாட்டில் மனித மேம்பாட்டின் நிலை | *எல்.என். விஜயராகவன்*, இ.ஆ.ப. |
| இயல் 3 : | வேலைவாய்ப்பு வருமானம் மற்றும் வறுமை. | *கே.வி. பழனிதுரை*,<br>*முனைவர் சி. சந்திரமோகன்*, இ.பொ.ப. |
| இயல் 4 : | மக்கட்தொகையியல் நலவாழ்வு மற்றும் ஊட்டச்சத்து | *ஷீலாராணி சுங்கத்*, இ.ஆ.ப.,<br>*முனைவர் அனுராதா கதிஇராஜீவன்*, இ.ஆ.ப.,<br>*ஆனந்தி ரவிச்சந்திரன்*, இ.பொ.ப. |

இயல் 5 : கல்வியறிவும் கல்வியும் — எல்.என். விஜயராகவன், இ.ஆ.ப. கிரிஜா வைத்தியநாதன், இ.ஆ.ப.

இயல் 6 : பாலினம் — கே. இராஜாராமன், இ.ஆ.ப. எல்.என். விஜயராகவன், இ.ஆ.ப. முனைவர் அனுராதா கதிஇராஜீவன், இ.ஆ.ப.

இயல் 7 : சமூகப் பாதுகாப்பு — எல்.என். விஜயராகவன், இ.ஆ.ப.

இயல் 8 : எதிர்காலப் பாதை : புதிய நூற்றாண்டில் தமிழ்நாடு — பி.வி. இராஜாராமன், இ.ஆ.ப. எல்.என். விஜயராகவன், இ.ஆ.ப.

இவ்வறிக்கை தயாரிப்பு முயற்சியில் மத்திய திட்டக்குழு முழு ஆதரவளித்தது. முனைவர் ரோகிணி நய்யார் ஆலோசகர், ஊரகத்துறை, மத்திய திட்டக்குழு மற்றும் திரு. பி.என். நந்தா, இயக்குநர், ஊரகத்துறை, மத்திய திட்டக்குழு ஆகியோர் தீவிர அக்கறை எடுத்துக்கொண்டு மாநில திட்டக் குழுவுக்கு இம்முயற்சியில் வழிநடத்தினர். முனைவர் ஏ.சி. குல்ஷெரேஷ்தா மற்றும் முனைவர் என்.ஜே. குரியன், ஆலோசகர் (வள ஆதாரங்கள்) ஆகியோர் முறையே, வருமானம் மற்றும் வேலைவாய்ப்புத் துறைகள் தொடர்பான இயல்களுக்குத் தேவையான உள்ளீடுகளை அளித்தனர். முனைவர் பிரென்டா கேயல்மக்ஸ்வீனி, உள்ளுறை சார்பாளர், ஐக்கிய மாநாடுகள் வளர்ச்சித் திட்ட இந்திய நாட்டு அலுவலகம் இம்முயற்சிக்கு நிலையான ஆதரவளித்தார். ஓஸ்லோவிலிருக்கும் ஐக்கிய நாடுகளின் வளர்ச்சித் திட்டத்தின் ஆளுமை மையத்தின் தற்போதைய முனைவர் ஆர். சுதர்சன் இவ்வறிக்கையின் பொதுக் கருத்தாக்கம் மற்றும் முன்கூட்டிய வடிவமைப்பிற்கும் முதன்மைக் காரணகர்த்தவாயிருந்தார். மனித மேம்பாட்டு வள ஆதார மையத்திலிருந்து முனைவர்கள் கே. சீதாபிரபுவும், சூரஜ்குமாரும் தங்களுடைய குழுவினர் அபர்ணா பாண்டே, எலினாபோர்சாட்டி, மீனாட்சி காதெல் மற்றும் த்ரிஷ்ணா சத்பதி ஆகியோரின் உதவியோடு இவ்வறிக்கை தயாரிப்பதற்கான முக்கிய உள்ளீடுகளை அளித்தனர்.

தமிழ்நாடு அரசின் தொடர்புள்ள அலுவலர்களுடனும் துறைகளுடனும் விரிவான விவாதங்கள் நடைபெற்றன. அறிக்கை தயாரிப்பதற்காக அறிவாற்றல் மிக்க பல விவாதங்களின்றி ஒரு கருத்தரங்கும் நடத்தப்பட்டது. இவ்வறிக்கைக்குப் பங்களிப்புச் செய்த ஏனையோரின் பெயர்களும் கீழே பட்டியலிடப்பட்டுள்ளது. முனைவர் அல்மாஸ் அலி, முனைவர் அஞ்சனா மங்களகிரி, பேராசிரியர் எஸ். அனந்தலட்சுமி, முனைவர் எஸ். அனந்தலட்சுமி, முனைவர் வி.பி. ஆத்ரேயா, திருமதி தேவகி ஜெயின், முனைவர் பி.ஆர். கோபிநாதன் நாயர், முனைவர் கமலா கிருஷ்ணசாமி, திரு. கே.பி. கண்ணன், செல்வி. மனாபிமஜூம்தார், முனைவர் மீனா சுவாமிநாதன், திரு. கே. நாகராஜ், முனைவர் பத்மினி சுவாமிநாதன், திரு பால் டயமண்ட், முனைவர் எஸ். இராஜகோபால், திரு. பி.எஸ். ராணா, பேராசிரியர் வி.எம். இராவ், முனைவர் ரேணுகா விசுவநாதன், திருமதி. ரேவதி நாராயணன், திரு. சந்தீப் தீட்சித், முனைவர் சாந்தப்பா, திருமதி ஈ.வி. சாந்தா, முனைவர் வி. சாந்தி கோஷ், முனைவர் ஏ. சிவகுமார், முனைவர் சாலமன் பெஞ்சமின், திரு. வி. சீனிவாசன், பேராசிரியர் எஸ். சுப்பிரமணியன், செல்வி. சுனிதா ரங்கசுவாமி, முனைவர் எம்.எச். சூரியநாராயணா,

திரு. எஸ்.எஸ். சூரியநாராயணன், முனைவர் ஸ்வர்ணா, எஸ். வேபா, முனைவர் ஏ. வைத்தியநாதன், முனைவர் வினோத் வியாசுலு, முனைவர் வினோதினி ரெட்டி, திரு. யாஷ் பி. அகர்வால்.

பொருளியல் மற்றும் புள்ளியியல் இயக்ககம் விரிவான புள்ளி விவரங்களடிப்படையை அளித்து மாவட்ட அளவில் வறுமை மற்றும் வருமான மதிப்பீடுகளைக் கணக்கிட தேசிய மாதிரி அளவை நிறுவனத்திலிருந்து, மைய மற்றும் மாநில மாதிரிகளின் செலவின விவரங்களைப் பொதுச் சேர்மமாக்கும் கடினமான பணியை மேற்கொண்டது. திரு. ஆர். பாஸ்கரன், திரு. பழனி மற்றும் திருமதி அனந்தலட்சுமி ஆகியோர் பாராட்டத்தக்க பணியாற்றியவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள். மக்கட்தொகைக் கணக்கெடுப்பு ஆணையரான, முனைவர். சி. சந்திரமௌலி, இ.ஆ.ப. 2001 மக்கட்தொகைக் கணக்கெடுப்பின் தற்காலிக முடிவுகள் உள்ளிட்ட மக்கட்தொகை விவரங்கள் கிடைக்கப் பெறச் செய்தார்.

செல்வி. ரஞ்சினிமூர்த்தி ஆண், பெண் (பாலின) இயலை, எழுத்து வடிவிலமைக்க உள் மையக் குழுவுக்கு உதவினார். திரு. ஆர். பக்தவத்சலு மொத்த சேர்க்கை விகிதத்தைக் கணக்கிட 1991 மக்கட்தொகைக் கணக்கெடுப்பிலிருந்து மாவட்டவாரியான வயது குறிப்பிட்ட உத்தேச மதிப்பீடுகளைக் கணக்கிட ஒழுங்கு முறைமையை அளித்தார். முனைவர் வீ. சௌந்தரராஜன், வேலைவாய்ப்பு, வருமானம் மற்றும் வறுமை இயலுக்கு மதிப்புள்ள கருத்துரைகளை அளித்தார்.

இறுதியாக, ஆனால் மிகக் குறைவின்றி, மாநில திட்டக்குழுவின் அனைத்து அலுவலர்களும் பணியாளர்களும் இம்முயற்சியை பயனுள்ளதாக்க தங்களது பங்களிப்பை அளித்தனர்.

# செய்திக் குறிப்பு

ஒரு மாநிலத்தின் உண்மையான வளர்ச்சி மக்களின் நல்வாழ்க்கையின் மூலம் பிரதிபலிக்கிறது. பொருளாதாரத்தின் மரபார்ந்த மாநிலத்தின் மொத்த உற்பத்தி, மாநில மக்களின் உள்ளபடியேயான நல்வாழ்க்கையை வெளிப்படுத்தாது. வளர்ச்சியைப் பிரதிபலிக்கும் எந்த ஒரு சுட்டிக்காட்டும் தற்போதிருக்கும் நிலையைமட்டும் எடுத்துக்காட்டுவதோடன்றி எதிர்கால கொள்கைகளை வகுக்க ஒரு சூழ்நிலையையும் உருவாக்குகிறது. இவ்விதமாக மனித மேம்பாட்டுக் கோட்பாடு சமுதாயமாய் அமைந்திருக்கும் மக்களை மையப்படுத்துவதாய் 'அமைந்திருக்கிறது. எனவே, மனித மேம்பாடே திட்டமிடுதலின் முக்கிய நோக்கமாயிருக்க வேண்டும்.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சரால் தொடங்கப்பட்ட 15 அம்சத் திட்டத்தின் மூலம் அரசு, மக்களின் நீடித்த பாதுகாப்பு மற்றும் நல்வாழ்க்கை ஆகியவற்றில் முக்கிய கவனம் செலுத்தி வருகிறது. கடந்த பல பத்தாண்டுகளில் கல்வி, நலவாழ்வு, வறுமைத்தணிப்பு, வேலைவாய்ப்பு உருவாக்கல், ஊட்டச்சத்து முதலான துறைகளில் வளர்ச்சியைப் பெருக்க பெருமுயற்சிகளை செய்துள்ளோம். இப்போதுள்ள நேரம், நம்முடைய முதலீடுகள் அனைத்துப் பிரிவுகளையும் சேர்ந்த மக்களுக்கும் சமமான வாய்ப்புக்களை அளிக்கக்கூடிய நீடித்த பொருளாதார மற்றும் சமுதாய வளர்ச்சியை அளிக்க வல்லதா என்று நாம் மதிப்பீடு செய்ய வேண்டிய நேரமாகும்.

தமிழ்நாடு மனித மேம்பாட்டறிக்கையின் வலியுறுத்தம் கல்வி, வேலைவாய்ப்பு, நலவாழ்வு, நீண்ட ஆயுள், ஆண் - பெண் இன சம உரிமை மற்றும் அடிப்படைத் தேவைகளுக்கான வாய்ப்பு வழிகளின் மீதுள்ளது. இப்பிரச்சனைகளைப்பற்றி, இவ்வறிக்கையில் விரிவாய் விவாதிக்கப் பட்டுள்ளது. தற்போதைய வளர்ச்சி நிலையைப் பகுப்பாய்வு செய்யும்போது, ஆண்-பெண் இன சமுதாய சமஉரிமை சார்ந்த வளர்ச்சிக்காதரவான குறிப்பான திட்டங்களை அரசு உருவாக்குவதற்கு ஏதுவாக உரிய அளவீடுகளைக் கண்டறிய வேண்டியதும் முக்கியம் வாய்ந்ததாயிருக்கிறது.

இவ்வறிக்கை மாவட்ட அளவில் ஊரக, நகர்ப்புற மற்றும் தகவல் அளிப்பதில் வெளிப்படையான தன்மையையும் உண்மையையும் அதிகரிக்கச் செய்வதையும் மனித மேம்பாடு மற்றும் ஆண் - பெண் இன மேம்பாடு மீதான தகவலை வலுப்படுத்துவதையும் குறிக்கோளாய்க் கொண்டுள்ளது. இது, கொள்கையை உருவாக்குவோர், ஆராய்ச்சியாளர் மற்றும் மாநிலத்தின் மற்றும்

அம்மக்களின் மேம்பாட்டில் அக்கறை கொண்ட அனைவருக்கும் அதன் பயனீட்டை அதிகரிக்கச் செய்யும். மனித மேம்பாட்டின் மீது கவனம் செலுத்தும் தேவை குறித்து உலகளாவிய விழிப்புணர்வை உருவாக்கிய தொலைநோக்குக்காக நோபல் பரிசு பெற்ற முனைவர் அமர்த்தியாசென் மற்றும் மறைந்த முனைவர் மகபூப்-அல்ஹக் ஆகியோர் நம்முடைய நன்றிக்குரியவர்களாவர். இவ்வறிக்கை தயாரிப்பதில் ஐக்கிய நாடுகள் வளர்ச்சித் திட்டத்தின் ஆதரவையும் வழிகாட்டுதலையும் பெற்றுக்கொண்டமை நன்றியுடன் தெரிவிக்கப்படுகிறது. இந்திய அரசுக்கும் திட்டக்குழுவுக்கும் அவற்றின் உதவிக்காக நன்றி கூறுகிறேன். இறுதியாக, மாநில திட்டக்குழு அலுவலர்களையும் ஏனைய துறை அலுவலர்களையும் அவர்களுடைய உண்மையான அர்ப்பணிப்பு முயற்சிகள் இவ்வறிக்கையை வெளியிடப் பெருமளவு உதவியமைக்குப் பாராட்டுகிறேன்.

**எம்.எஸ். சுவாமிநாதன் அவர்கள்**
துணைத்தலைவர், மாநில திட்டக்குழு
தமிழ்நாடு அரசு
சென்னை




கமாலுதீன் அகமத்

सदस्य
योजना आयोग
योजना भवन
नई दिल्ली - 110001

உறுப்பினர்
திட்டக்குழு, யோஜனா பவன்
புதுடில்லி - 110 001

நாள் : 29, சூலை 2002

# செய்திக் குறிப்பு

திட்டக்குழு மற்றும் ஐக்கிய நாடுகளின் வளர்ச்சித் திட்ட ஆதரவோடு முதல் மாநில மனித மேம்பாட்டறிக்கையைத் தயாரித்தமைக்காகத் தமிழ்நாடு மாநில அரசை நான் பாராட்டுகிறேன்.

கடந்த பத்தாண்டுகளில் ஐக்கிய நாடுகளின் வளர்ச்சித் திட்டத்தால் வகுத்தளிக்கப்பட்ட மனித மேம்பாட்டுக் கட்டமைப்புக் குறித்துப் பெருகி வரும் ஏற்கத்தக்கமை காணப்படுகிறது. இது, மற்றவற்றுக்கிடையில் வாழ்க்கைத் தரத்தின் உருவளவில் வருமானம் ஒன்றாயிருப்பதை ஏற்கிறது. பொருளாதார வளர்ச்சியின் அளவைகளுக்கும் சமுதாய வளர்ச்சியின் அளவைகளுக்குமிடையே நேரடியான தொடர்பு ஏதுமில்லை. போதிய அளவில் சமூகப் பணிகளின் பங்களிப்பு அதற்கேற்ப மக்களுக்கு மேலான வாழ்க்கை தரங்களை உறுதிசெய்யக் கூடும். மேலும், அவை வருங்காலத்தில் மேலான வாய்ப்புகளுக்காதரவான நிலைமைகளையும் உருவாக்கும்.

தமிழ்நாடு மனித மேம்பாட்டறிக்கை, இப்பிரச்சனைகளை, அதன் சொந்த மேம்பாட்டுத் தொலைநோக்குக்குள்ளாகவே வைத்துக் குறிப்பிட்ட மனித மேம்பாட்டை சுட்டிக்காட்டும் தொடர்பான முயற்சியில் அடைந்துள்ள நிலைகளை வெளிக்கொணர்ந்துள்ளது. வருமானம், கல்வி மற்றும் நலவாழ்வுக் குறியீடுகள் தொடர்பாக, பெரும்பாலான மாவட்டங்களுக்கிடையே வேறுபாடுகளிருப்பது ஏற்கப்பட்டுள்ளது. ஒரு கூட்டுக் குறியீடான, மனித மேம்பாட்டுக் குறியீடும்கூட இந்த வேறுபாடுகளைப் பிரதிபலிக்கிறது. ஆகவே, அறிக்கையிலிருந்து வெளிப்படும் முடிவுகளின் ஒரு தொடர் நடவடிக்கையாக, உரிய கொள்கைகளும் திட்டங்களும் மனித மேம்பாடு மற்றும் வருமான நிலைகளில் பின்தங்கியுள்ள மாவட்டங்கள் / ஒன்றியங்களுக்கேற்ப

உருவாக்கப்படும். அதிகம் பின் தங்கிய பகுதிகள், நிதியைப் பெறும் வகையில் வளஆதாரங்கள் ஒதுக்கீடு செய்யப்பட வேண்டும். மேலான செயலாக்கத்திற்கு அதிக அளவு சமுதாயப் பங்கேற்பு. மேலான ஆளுகை மற்றும் பரவலாக்கப்பட்ட வளர்ச்சி தேவைப்படும்.

மாநிலத்திற்குள்ளான வேறுபாடுகளைக் குறைத்து மாநிலத்தில் அதிக சமமான வளர்ச்சியையடைய உரிய நடவடிக்கைகளைத் தமிழ்நாடு அரசு மேற்கொள்ளும் என நான் நம்புகிறேன்.

**கமாலுதீன் அகமது** அவர்கள்
ஐக்கிய நாடுகளின் வளர்ச்சித் திட்டம்

**ஐக்கிய நாடுகளின் வளர்ச்சி திட்டம், இந்தியா**



# செய்தி

தமிழ்நாடு மனித மேம்பாட்டு அறிக்கை குறித்து என் பாராட்டினைத் தெரிவிக்க நான் விரும்புகிறேன். இவ்வறிக்கை நிலை சாதனைகள் மற்றும் சவால்களையும் மகளிர்க்கதிகார மளிப்பை அடைவதற்கான வழியையும் மாநிலத்திலிருக்கும் சமூகப் பிரிவுகளின் மேம்பாட்டுக்கான உத்திகளையும் காட்டுகிறது.

இந்தியாவில் மாநில மனித மேம்பாட்டறிக்கையை ஒரு மக்களின் ஆவணமாய், வருங்கால நடவடிக்கைக்கான முதனிலை வரைபடமாய், வெளியிடும் ஆறாவது மாநிலமாய் தமிழ்நாடு திகழ்கிறது. இவ்வறிக்கை வறுமை ஒழிப்பு, வேலைவாய்ப்பு உருவாக்கம், ஹெச்.அய்.வி. / எய்ட்ஸ் மற்றும் சமூகப் பாதுகாப்பு ஆகிய பிரச்சனைகளை சிறப்பம்சங்களாய் கொண்டுள்ளது. மேலும், மேம்பாட்டு செய்முறையில் அரசு, குடிமக்கள் மற்றும் ஊடகங்கள் ஆகியவற்றின் பங்கினை வற்புறுத்துகிறது.

அறிக்கையில் அளிக்கப்பட்டிருக்கும் பகுப்பாய்வு, பரவலாக்கல் மற்றும் ஆண், பெண், இன சம உரிமையை வலியுறுத்துவதையும், இந்தியாவிலுள்ள ஐக்கிய நாடுகளின் வளர்ச்சி உதவிக்கட்டமைப்பின் அடிப்படைக் கருப்பொருட்கள் மனித மேம்பாட்டு நோக்கங்களை அடையும் வழிவகையாக அமைந்திருப்பதையும் அறிந்து நான் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

மனித மேம்பாட்டின் காரணத்திற்கான அதன் கூர்உணர்வு மற்றும் ஒப்பிய பொறுப்புக்காக, நான், தமிழ்நாடு அரசைப் பாராட்டுகிறேன். மனித மேம்பாட்டை வளர்ச்சியுடன் ஒருங்கிணைப்பதிலும், ஆண் - பெண் இன மற்றும் வறுமை ஆகிய பிரச்சனைகளை மாவட்ட திட்டமிடுதலில் ஒருங்கிணைப்பதிலும் இந்த அறிக்கை ஒரு முக்கியக் கருவியாக அமையும் என நான் நம்பிக்கைத் தெரிவிக்கிறேன்.

Brenda Gael McSweeney

**பிரெண்டா கேயல் மக்ஸ்வீனி**

ஐக்கிய நாடுகளின் வளர்ச்சித் திட்ட உள்ளுறை சார்பாளர்

ஐக்கிய நாடுகளின் உள்ளுறை ஒருங்கிணைப்பாளர்

# முன்னுரை

மனித மேம்பாடு மக்களின் விருப்பேற்பு வேறுபாட்டெல்லையின் விரிவாக்கச் செய்முறை என விளக்கப்படுகிறது. இவ்விரிவான மாறுபாட்டெல்லையைக் கொண்ட விருப்பேற்புகளில் மிக முக்கியமானவை நீண்ட நலவாழ்வுடன் கூடிய வாழ்க்கை, கல்விபெறுதல் மற்றும் ஒரு நற்பாங்கான வாழ்க்கைத் தரத்திற்குத் தேவையான வள ஆதாரங்களைப் பெறும் வாய்ப்பு வழி ஆகியன. அரசியல் சுதந்திரம், காப்புறுதியளிக்கப்பட்ட மனித உரிமைகள் மற்றும் தனிப்பட்டவரின் தன்மதிப்பு ஆகியன கூடுதலான விருப்பேற்புகளாம் (ஐக்கிய நாடுகளின் வளர்ச்சித் திட்டம், ஐ.நா.வ.தி. 1990)

மனித மேம்பாடு எனும் கோட்பாடு, வழக்கமான பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடுகளைக் காட்டிலும் மிக விரிவானது. அது பொருளாதார வளர்ச்சி மாதிரிகள் மனிதவள மேம்பாடு மற்றும் ஏனைய நலவாழ்வு அணுகுமுறைகளுக்கப்பால் பரவியிருக்கிறது. மனித மேம்பாடு, பண்டங்களின் உற்பத்தி மற்றும் வழங்கல் மற்றும் மனிதத் திறம்பாடுகளின் விரிவாக்கம் மற்றும் பயன்பாட்டை ஒருங்கிணைக்கிறது. அது, வளரும் நாடுகளுக்கு மட்டுமின்றித் தொழிற்துறையில் வளர்ச்சி பெற்ற நாடுகளுக்கும் சமமாய்ப் பொருந்தக்கூடிய ஒரு இலக்கணமாயுள்ளது. மனித மேம்பாடு உற்பத்தி, சமஉரிமை, நீடித்திருக்கும்தன்மை மற்றும் அதிகாரமளித்தல் ஆகிய நான்கு பகுதிகளைக் கொண்டுள்ளது. மேலும் இக்கோட்பாடு, ஆண் - பெண் இன சமஉரிமையை வலியுறுத்துகிறது. வளர்ச்சி செய்முறைகளிலிருந்து மகளிர் விலக்கி வைக்கப்பட்டிருக்கும் வரை வளர்ச்சி வளவற்றதாயும் ஒரு சார்புடையதாயுமிருக்கும். நீடித்த உறுதியான மனித மேம்பாடு, மேம்பாட்டு இலக்கணத்தை உண்டு பண்ணும் எனப் பொருள் கொள்ளலாம்.

2000-ல் ஐக்கிய நாடுகளின் பொதுச்சபை, வளர்ச்சிக்கான எட்டு இலக்குகளை நிர்ணயித்தது. அவை 2015-க்குள் அடையப்பட வேண்டிய நூற்றாண்டு வளர்ச்சி இலக்குகள் என அழைக்கப் பட்டன. கொடிய வறுமையையும் பசியையும் ஒழித்தல், அனைவர்க்கும் அடிப்படைக் கல்வி, ஆண் - பெண் இன சமஉரிமைக்காதரவு, மகளிர்க்கதிகாரம், குழந்தை இறப்பு விகிதத்தைக் குறைத்தல், எச்.ஐ.வி / எய்ட்ஸ் மலேரியா மற்றும் ஏனைய நோய்களுக்கு எதிரான போர், சுற்றுப்புற உறுதிப்பாட்டை உறுதி செய்தல் மற்றும் வளர்ச்சியில் உலக நாடுகளின் பங்கேற்பை உருவாக்கல் ஆகியவை. இவ்விலக்குகளில் முக்கியமானவை. பன்னாட்டு சமுதாயத்தால் முடிவு செய்யப்பட்ட தரநிலைகளுக்கெதிராய் அளவிடக்கூடிய அளவை கண்காணிப்பு இலக்குகளைப் பெற்றுள்ளன.

மனித மேம்பாட்டுக் கோட்பாடு, ஏழைகளுக்கு ஆதரவான வளர்ச்சிக்காதரவாய் வாதிடும் ஒரு மிகச் சக்தி வாய்ந்த வாதமாயும் பயன்படுத்தப்பட்டு வருகிறது. அது வளர்ச்சியின் வெறும் அளவு மட்டும் அல்ல. தன் வழங்கலே முக்கியமானது என்ற உண்மையை அது முன்னிலைப்படுத்திக்

காட்டுகிறது. நாடுகளுக்கிடையே வளர்ச்சியின் நிலைகளை ஒப்பீடு செய்ய மனித மேம்பாட்டு அறிக்கைகள் (ம.மே.அ.) மனித மேம்பாடு ஆண் - பெண் இன மேம்பாடு மகளிர்க்கு அதிகாரமளிப்பு மற்றும் மனித வறுமை ஆகியவற்றின் நிலையை பிரதிபலிக்கும் வகையில், முறையே, மனித மேம்பாட்டுக் குறியீடு, ஆண் - பெண் இன மேம்பாட்டுக் குறியீடு, ஆண் - பெண் இன அதிகாரமளிப்பு அளவை மற்றும் மனித வறுமைக் குறியீடு போன்ற எளிய கூட்டுக் குறியீடுகளை முன்வைத்துள்ளது. (ம.மே.கு.) மக்கள் மேம்பாட்டு குறியீட்டின் அளவைகளாவன: பிறப்பின்போது, எதிர்பார்ப்பு ஆயுட்காலம், வயதுவந்தோர் கல்வியறிவு, மொத்த உள்நாட்டு உற்பத்தி தனிநபர் வருமானம் (டா.வா.தி.) ஆகியன. ஆண் - பெண் இன மேம்பாட்டுக் குறியீட்டின் அளவைகள் மக்கள் மேம்பாட்டு குறியீட்டிற்கிருப்பன போன்றே இருக்கும். ஆனால், ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையிலான சாதனைகளைப் பிரதிபலிக்குமாறு சாதனைகளைச் சரிகட்டுகிறது. ஆண் - பெண் இன அதிகாரமளிப்பு அளவை, நாடாளுமன்றத் தொகுதிகளில் பெண், ஆண் பங்களிப்பில் விழுக்காட்டிலுள்ள சமஉரிமைகள் அற்ற தன்மை. சட்டமன்றங்கள், மூத்த அலுவலர்கள் மற்றும் மேலாண்மையில் அவர்களுடைய பங்கின் நிலை மற்றும் தொழிற்கல்வி, தொழில் நுட்ப நிலைகளில் பங்குகளின் விழுக்காடு மற்றும் மதிப்பிடப்பட்ட ஈட்டிய வருமானம் (டா.வா.தி.) ஆகியனவற்றை தெள்ளத் தெளிவாக காட்டுகிறது. முடிவாக, (ம.வ.கு.) மனித வறுமைக் குறியீட்டின் அளவைகளாவன : பிறப்பின்போது 60 வயது வரை உயிர் வாழமாட்டார் எனும் நம்பிக்கை செயல், கல்வியறிவுத்திறன் குறைவான வயது வந்தோரின் (16 - 65 வயதுக்குட்பட்ட) விழுக்காடு வறுமை, வருமானக் கோட்டிற்குக் கீழ் உறையும் மக்களின் விழுக்காடு மற்றும் நீண்டகால வேலைவாய்ப்பு வீதம் (12 மாதங்களும் அதற்கு மேலானவையும்).

இந்திய அரசின் திட்டக்குழு இந்திய மாநிலங்களுக்கான ம.மே.கு. மனித வறுமைக் குறியீடு (ம.வ.கு) ஆண் - பெண் இன சமஉரிமைக் குறியீடு (ஆ-பெ ச.கு.) ஆகியவற்றைக் கணக்கிட்டுள்ளது. ம.மே.கு.ன் அளவைகளாவன : பயனீட்டளவு செலவினம் (தனிநபர் மாதம் ஒன்றுக்கு) 7 ஆண்டுகள் மற்றும் அதற்கு மேலான காலத்தில் கல்வியறிவு வீதம். முறை சார்ந்த கல்வியின் செறிவு (மதிப்பிடப்பட்டது) ஏழு வயதில் ஆயுட்கால எதிர்பார்ப்பு, குழந்தை இறப்பு விகிதம் ஆகியன. வறுமைக்கோட்டுக்கும் கீழ்வாழும் மக்கட்தொகையின் விகிதம், பிறப்பின்போது மருத்துவ வசதி பெறாதவரின் மக்கட்தொகை விகிதம். செப்பமற்ற வீடுகளில் வசிப்போரின் மக்கட்தொகை விகிதம் அடிப்படை வசதிகளுக்கு வாய்ப்பு வழிகளற்ற மக்கட்தொகையின் விகிதம் ஆகியன. ஆண் - பெண் இன அதிகாரமளிப்புக் குறியீடு (ஆ.பெ.இ.கு.) ஆண்கள் மற்றும் பெண்களுக்கிடையிலான அடைந்த நற்பேறு நிலைகளின் விகிதத்தில் விளக்கப்படுகிறது. மற்றும் தனி ஒருவரின் மாதாந்திர செலவினத்திற்கு பதில் ஆண்கள் மற்றும் பெண்கள் பெற்ற பொருளாதார நற்பேறுகள் அந்தந்தத் தொழிலாளர் மக்கட்தொகை விகிதங்களின்படிக் கணக்கிடப் படுகிறது.

மாநில மனித மேம்பாட்டறிக்கைகள் (ம.மே.அ) மாநிலங்களில் மனித மேம்பாட்டு முன்னுரிமைப் பிரிவுகளுக்குத் தேவையான பெரும் வள ஆதாரங்களை ஊக்குவித்து மாநில மாவட்ட / சமுதாய நிலைகளில் அடிப்படை விவர அமைப்பு முறைகளையும் அறிவிப்பு நடைமுறை வழக்கத்தையும் மேம்படுத்த உதவும் என எதிர்பார்க்கப் படுகின்றன. இதுவரை இருபத்திரண்டு மாநிலங்கள் மாநில ம.மே.அ.கள் தயாரிப்பதில் வெவ்வேறு நிலைகளில் உள்ளன. இவ்வறிக்கைகள் மாநிலங்களின் மேம்பாட்டுக்கான மாற்று வழிகள் மீதான விரிவான விவாதங்களை மேற்கொள்ள செயல்படும் சக்தி வாய்ந்த கருவிகளாய் அமையும். ஏனைய பன்னாட்டு நன்கொடையாளருடன் இணைந்து மாநிலங்களின் வளர்ச்சித் திட்டங்களுக்குத் தேவைப்படும் கூடுதல் நிதி வசதிகளைப் பெறவும் அவை பயன்படுத்தப்படலாம். இதுவரை மத்தியபிரதேசம்,

கர்நாடகம், சிக்கிம், ராஜஸ்தான் மற்றும் மகாராஷ்டிரா மாநிலங்கள் மாநில மனித மேம்பாட்டறிக்கைகளை வெளியிட்டுள்ளன.

மாநில ம.மே.அ.யைத் தயாரிப்பதில், தமிழ்நாடு இந்தியாவில் ஆறாவது மாநிலமாயும் தென்னிந்தியாவில் இரண்டாவது மாநிலமாயும் உள்ளது. தமிழ்நாட்டின் மாநில ம.மே. அறிக்கை முக்கியம் வாய்ந்தது. மிகப் பெருமளவு தொழில்மயமாக்கல், நகர்மயமாக்கல் மேலான வளர்ச்சி விகிதங்கள் (15 பெரும் மாநிலங்களைக் காட்டிலும் சிறிதளவு முன்னேறிய) மற்றும் தேசிய சராசரிக்கும் கீழான வறுமை நிலைகளைக் கொண்ட தனிச்சிறப்பினைப் பெற்றிருக்கும் ஒரு மாநிலத்தின் மேம்பாட்டு செய்முறைக்குள்ளான நுண்ணறிவை இவ்வறிக்கை வெளிப்படுத்துவதாய் அமைந்திருக்கிறது. ஒப்பீட்டடிப்படையில் இது ஒரு நடுத்தர வருமான மாநிலம் (பெரிய மாநிலங்களில் ஐந்தாவது). மனித மேம்பாட்டைச் சுட்டிக்காட்டுவதில் குறிப்பிடத்தக்க நிறைவுகளைப் பெற்றுள்ளதாய் பெருமைப்படுகிறது. மேலும் அதன் பாலினக் கொள்கைகள் தொடர்பான தீவிர அக்கறை பாராட்டுதலுக்குரியது. சுருங்கச் சொல்லின் ஒரு நடுத்தர வருமானத்தைப் பெறும் ஒரு மாதிரி மாநிலமாய் தமிழ்நாடு திகழ்கிறது. மாநிலத்தின் ஏழை எளிய, நலிவடையத்தக்க மற்றும் பின்னடைந்த மக்கட்தொகையின் தேவைகளை நிறைவு செய்யும் திட்டங்களைத் தீட்டி செயலாக்குவதின் மூலம் மனித மேம்பாட்டின் நிலையை உயர்த்திடும் முயற்சிகளைத் தமிழ்நாடு மேற்கொண்டுள்ளது. பிரச்சனைக்குரிய பகுதிகளைக் கண்டறிவதோடு நில்லாமல், இவ்வறிக்கை தமிழ்நாடு பெற்றுள்ள வெற்றிகளை, குறிப்பாக மகளிருக்கதிகாரமளித்தல் மற்றும் சமுதாய மேம்பாட்டுத் துறைகளில் பெற்ற வெற்றிகளைப் பற்றிய மதிப்பீடும் செய்துள்ளது. தெளிவான செய்முறை உணர்வின் அடிப்படையில், அரசுக்கும், மாநில மக்களுக்கும் வருங்கால அவசரப் பிரச்சனைகளை இந்த ஆவணம் முன்னிலைப்படுத்துகிறது.

இது தமிழ்நாட்டின் முதல் மாநில ம.மே.அ. இவ்வறிக்கை தமிழ்நாட்டில் மனித மேம்பாட்டுக் குறியீட்டை ஆய்வு செய்கையில், மாநிலத்தில் ஒட்டுமொத்த மனித மேம்பாட்டு நிலைமையை மேலும் விரிவாய் ஆய்வு செய்யும்முகத்தான் ம.மே.அ.க்கும் அப்பாலும் செல்கிறது. வேறுவிதமாய் சொல்வதென்றால் ஒட்டுமொத்த நல்வாழ்க்கையை உயர்த்திட முக்கியமாயிருக்கும் இருப்பிடம். சமூகப் பாதுகாப்பு மற்றும் முடிவெடுத்தல் முதலான மனித மேம்பாட்டின் ஏனைய அளவைகள். மனித மேம்பாட்டறிக்கையால் நிச்சயமாக கருத்தில் கொள்ளப்படவில்லை என்ற பொருளில் ம.மே. குறியீடும் வரம்புக்குட்படுகிறது என்பதையும் இவ்வறிக்கை ஏற்கிறது.

தமிழ்நாடு மனித மேம்பாட்டுச் சாதனைகளுக்குக் குறிப்பான காரணக் கூறுகள் இவ்வறிக்கையில் விரிவாய் விளக்கப்பட்டுள்ளன. அறிக்கை தமிழ்நாட்டில் மனித மேம்பாட்டு நிலையை சுருக்கமாய் எடுத்துக் காட்டுவதோடு மட்டுமன்றி சில துறைகளில் மாநிலம் ஏன் நன்கு செயல்பட்டுள்ளது ஏனைய துறைகளில் ஏன் அவ்விதம் இல்லை என்பதற்கான விளக்கத்தையும் காண விழைகிறது. மனித மேம்பாட்டுக்குப் பங்களித்த காரணங்கள், வட்டாரங்களின் ஏற்றத்தாழ்வு களையும் அதன் பின்னணியிலிருக்கும் காரணங்களைப் புரிந்து கொள்ளும் நோக்கத்துடன் தனித்தனியாகப் பிரித்து, மாவட்ட அளவில் பகுப்பாய்வு செய்யப் பட்டுள்ளது. அத்தகைய சமமின்மையை சரி செய்யத் தேவையான கொள்கை மாற்றங்களையும் இவ்வறிக்கை முன்னிலைப்படுத்துகிறது. வரும் ஆண்டுகளில் மாநிலத்தில் வளர்ச்சி சமூக நீதி மற்றும் சமஉரிமை ஆகியவற்றை திட்டமிடுதலில் தமிழ்நாடு மனித மேம்பாட்டறிக்கை ஒரு முக்கியக் கருவியாக அமையும் என்பதில் ஐயப்பாடு ஏதுமில்லை.

# இயல்

# 1

# தமிழ்நாடு - ஓர் உருவடிவம்

இந்தியாவின் தென்கோடி மாநிலமான தமிழ்நாடு, இந்தியத் துணைக் கண்டத்தில் கிழக்கே வங்கக் கடலுக்கும், தெற்கே இந்து மாக்கடலுக்கும், மேற்கே மேற்குத் தொடர்ச்சி மலைகளுக்கும் அரபிக்கடலுக்கும் இடையில் அமைந்திருக்கிறது. வடக்கிலும், மேற்கிலும் இம்மாநிலம் கர்நாடகத்தையும், ஆந்திர மாநிலத்தையும் கேரளாவையும் சார்ந்திருக்கிறது. வெப்பமண்டல மழைக் காடுகள், ஆற்றுப்பள்ளத்தாக்குகள் மற்றும் மலைவாழிடங்கள் உடனான கடலோர சமவெளிகளும், பல்வகை வளங்களையும் மற்றும் புவியியலிலும் தட்பவெப்பநிலையிலும் பல்வேறான தன்மைகளையும் தமிழகம் கொண்டுள்ளது. மாநிலத்தின் கிழக்குக் கோடியான கோடிக்கரை 80°20' கிழக்கு நிரை கோட்டிலமைந்துள்ள கோடிக்கரைக்கும் மேற்கு முனையில் முதுமலை புகலிடமும் (71°15' கிழக்கு நிரைகோட்டில்) அமைந்துள்ளன. வட மற்றும் தெற்கு கோடிகள் பழவேற்காடு ஏரி (13°35' வடக்கு நிலநேர்க்கோடு) மற்றும் குமரிமுனை (8°5' வடக்கு நிலநேர்க்கோடு)யும் உள்ளன.

வழக்காறாக்கும் மாநிலம் நிலஇயற்கையியலாய் ஐந்து பகுதிகளாய் பிரிக்கப்பட்டுள்ளது. அவை, குறிஞ்சி (மலைப்பகுதி) முல்லை (கானகம்) பாலை (வறண்ட பகுதி) மருதம் (செழிப்பான நிலப்பகுதி) நெய்தல் (கடற்கரையோரப் பகுதி) தமிழ்நாட்டைக் கேரளாவிலிருந்து தனியே பிரிக்கும் மேற்குத் தொடர்ச்சி மலைகளில்லாமல், மாநிலம் மற்றொரு மலைத் தொடரையும் பெற்றுள்ளது. கிழக்குத் தொடர்ச்சி மலை முக்கியமாய் தாழ்வான கற்பாறைக் குன்றுகளைக் கொண்டதாய் அமைந்துள்ளது. முக்கிய ஆறாக, 760 கி.மீ. நீளமுள்ள காவிரி தமிழ்நாட்டின் மொத்த அகலத்திலும் பரவி பாய்கிறது. மற்ற பெரிய ஆறுகள், பாலாறு, பெண்ணாறு, வைகை மற்றும் தாமிரபரணி.

இவ்வியலில் மாநிலத்தின் பொருளியல், வரலாற்று, பண்பாட்டு மற்றும் பொருளாதாரக் கூறுகள் தொடர்பான ஒரு மொத்த உருவறையையும் அளித்து, அதை மனித மேம்பாட்டு தொடர்பானதொரு உரிய சூழமைவில் வைக்கிறது. தொடரும் இயல்களில் பல்வேறான பிரச்சனைகள் குறித்த விரிவான பகுப்பாய்வும் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**வரலாறு**

தமிழ்நாடு, 6000 ஆண்டுகளுக்கும் முற்பட்ட மிகப் பழமையானதொரு வரலாற்றினைப் பெற்றுள்ளது. இந்தியாவில், இம்மாநிலம் திராவிடப் பண்பாட்டின் சார்புடையதாய் உள்ளது. நாட்டில்

கிட்டத்தட்ட ஓராயிரம் ஆண்டுகள், ஆரியப் பண்பாட்டிற்கு முற்பட்டதாயிருந்தது இது. கி.மு. 4-ம் நூற்றாண்டுக்குரிய சிந்துநதிப் பள்ளத்தாக்கு நாகரிகத்தின் சிற்பிகள் திராவிடர்கள் என்பதும் மற்றும் ஒரு காலத்தில் ஆரியர்களுக்கு முற்பட்டிருந்த அவர்கள் இந்தியா முழுவதிலும் பரவியிருந்தனர் என்பதும் வரலாற்றாசிரியர்களின் கருத்து. வடஇந்தியாவிற்குள் ஆரியரின் வருகைக்குப் பின்னர், திராவிடர்கள் தெற்கே விரட்டியடிக்கப்பட்டு, அவர்கள் தமிழ்நாட்டுக்குள்ளாக நிலை பெற்றிருந்தனர். ஏனைய தென் மாநிலங்களான ஆந்திரப் பிரதேசம், கர்நாடகம் மற்றும் கேரளம் ஆகியன. திராவிடப் பண்பாட்டின் இருப்பிடங்களாய் அமைந்தன. தமிழ் தேசம் நீண்டகாலம் (அ) அதன் பெரும் பகுதிகள் எந்த ஒரு வெளிநாட்டினரின் ஆளுகைக்கும் உட்படுத்தப்பட்டிருக்கவில்லை. வடஇந்திய இந்து (அ) முஸ்லிம் ஆட்சிகளின் ஆளுகைக்குட்படுத்தப் பட்டிருக்கவில்லை. கி.பி. 14-ம் நூற்றாண்டில் இந்தியாவில் முஸ்லிம்களின் ஆதிக்கம் தெற்கிலும் அதன் செயல்விளைவை ஏற்படுத்தியது. இருப்பினும் தமிழ்ப் பகுதி வட மற்றும் மைய இந்தியாவில் ஏற்பட்ட எழுச்சிகளால் பாதிக்கப்படாதிருந்தது. தமிழ்ப்பகுதியின் பெரும்பாலான பகுதி ஒரு குறிப்பிட்ட நேர்மையைப் பேணிப் பராமரித்த அதே சமயத்தில், தென்னிந்தியாவின் எஞ்சிய பகுதியிலிருந்து அதைக் காத்துக் கொள்ளவில்லை.

தமிழ்நாடு நான்கு பேரரசுகளின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. அவை : சோழ, சேர, பாண்டிய மற்றும் பல்லவப் பேரரசுகள், சோழர்கள் தம் ஆதிக்கத்தை கி.பி. 100 மற்றும் 200-க்கு இடைப்பட்ட காலத்தில் நிறுவி கி.பி. 5-ம் நூற்றாண்டு வரை தென்மேற்கில் சேரர்கள் மீதும் தென்கிழக்கில் பாண்டியர்கள் மீதும் தம் ஆதிக்கத்தைத் தொடர்ந்து செலுத்தினர். முக்காலத்தில் ஆண்ட கரிகால் சோழன், அணைக்கட்டுகள் மற்றும் ஏரிகளின் அமைப்பு மூலம் காவிரியாற்றின் ஆற்றலைப் பயன்படுத்தி ஏராளமான நீர்ப்பாசன ஏரிகளைக் கட்டிப் பெரும்புகழ் பெற்றான். கி.பி. 6-ம் நூற்றாண்டில் பல்லவர்கள் ஆட்சிக்கு வந்தனர் அவர்களது ஆதிக்கம் இப்போதிருக்கும் தமிழ்நாட்டின் பெரும்பகுதிகளுக்கு விரிவடைந்தது. இக்காலத்தில் மீண்டும் எழுச்சி பெற்ற பாண்டியர்கள் மாநிலத்தின் தென்கிழக்குப் பகுதியில் செல்வாக்குப் பெற்றனர். பல்லவர் காலம் கி.பி. 9-ம் நூற்றாண்டு வரை நீடித்தது. இக்காலகட்டத்தில் ஆரிய திராவிடப் பண்பாடுகளில் ஒரு கலப்பு உருப்பெற்றது. இக்காலம் நிலவருவாய் முறை மற்றும் வேளாண்மைப் பொருளாதாரத்தின் ஒரு தோற்றக் காலம் என அறியப்படுகிறது.

சோழர்கள், கி.பி. 9-ம் நூற்றாண்டில் பல்லவர்களைத் தோற்கடித்து மீண்டும் ஆட்சிக்கு வந்தனர். அடுத்த 4 நூற்றாண்டுகளில் தம் ஆட்சியை ஒருங்கிணைத்துக் கொண்டனர். சோழ மன்னர்களின் ஆட்சிக்காலம் அண்டைநாடான இலங்கை மற்றும் தென்கிழக்காசிய நாடுகளுக்குக் கடலாண்மைப் பயணங்களுக்குக் காரணமாயிருந்தது. இதன் விளைவாய் இந்நாடுகளுடன் வணிக மற்றும் பண்பாட்டு உறவுகள் ஏற்பட்டன. இக்காலத்தில் கிராம நிலையிலான அரசியல் பிரிவுகளுக்குச் சில சுயாட்சி உரிமையுடன் கூடிய விரிவானதொரு ஒருமுகமைய ஆட்சி நடப்பிலிருந்ததாய் வரலாற்றாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். சோழர் ஆட்சியின் நலிவு, விஜயநகர மன்னர்களின் எழுச்சிக் காலம் வரை, ஒரு குறுகிய காலத்திற்கு முஸ்லிம்களின் ஆட்சியை சந்தித்தது. விஜயநகர மன்னர்கள் தமிழ் ஆட்சிப் பகுதிகளைத் தெலுங்குப் படைத்தலைவர்கள் (அ) நாயக்கர்கள் மூலமாயும் உள்ளூர்த் தமிழ்ப் படைத் தலைவர்கள் மூலமாயும் ஆண்டனர். ஆதிக்கமுள்ள நிலஉடைமைக் குழுக்கள் எழுச்சி பெற்றன. சோழர் ஆட்சிக் காலத்தில் சிறப்பியல்பான பயிரில் பங்கு கோரும் குடியானவர்களின் உரிமைகள் பாதிப்புக்குள்ளாயின. விஜயநகரப் பேரரசின் நலிவுக்குப் பின்னர் தமிழ் ஆட்சிப் பகுதிகள், தம்மை சுயாட்சியாளராய் அறிவித்துக் கொண்ட மதுரை

நாயக்கர்கள் மற்றும் தஞ்சாவூர் மன்னர்கள் போன்ற பல சிற்றரசர்களுக்கிடையே பிரித்துக் கொள்ளப்பட்டன. இக்காலம் அரசியல், பொருளாதார மற்றும் சமூக நிலையற்ற தன்னமயதா யிருந்ததையடுத்து, ஆங்கிலேயர் முழு நன்மையையும் எடுத்துக் கொண்டனர்.

1639-ல் சென்னைக்குக் கிழக்கிந்திய கம்பெனி வருகையையடுத்து, தென்னிந்திய வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயம் தொடங்கியது. மிக விரைவில் தென்னிந்தியாவின் பெரும்பகுதி ஆங்கிலேயரின் ஆளுகையின் கீழ் வந்தது. அடுத்து வந்த இரண்டு நூற்றாண்டுகளில் கிழக்கிந்தியக் கம்பெனி படிப்படியாய் அதன் செல்வாக்கை விரிவுபடுத்தி, குமரிமுனையிலிருந்து வடக்குப்பகுதி சர்க்கார்கள் வரை, தரங்கம்பாடியின் டேனிஷ் நிலையம் புதுச்சேரியிலுள்ள பிரெஞ்சுக்காரர்களின் குடியிருப்புகள் மற்றும்[1] 5 சுதேச மன்னர்களின் ஆட்சிப் பகுதிகளின் உடைமை உரிமையைப் பெற்றனர். இவ்வனைத்தும் ஒன்றாக சேர்ந்து, பிற்காலத்தில், சென்னையைத் தலைநகராய்க் கொண்டு சென்னை மாகாணம் என அழைக்கப்பட்டது. அப்போதிருந்த சென்னை மாகாணத்தின் பரப்பு, 1,41,705 சதுரமைல்களாக இருந்தது.

1947-ல் இந்தியா விடுதலை பெற்றபின் சென்னை மாகாணம் தமிழ்நாடு, ஆந்திரப் பிரதேசம், கர்நாடகம், கேரளாவின் பகுதிகள் அடங்கிய அதன் தொடக்க உருவிலேயே தொடர்ந்தது. இருப்பினும், ஒரு தனி ஆந்திர மாநிலம் வேண்டி வெடித்த கிளர்ச்சி, சென்னை மாகாணத்தை இரண்டாய் பிரிக்க, தெலுங்கு பேசும் பகுதிகளை ஆந்திராவாகவும், தமிழ் பேசும் பகுதிகளை சென்னையாகவும், பிரிக்கும் கட்டாயத்தில் இந்திய அரசை ஆழ்த்தியது. பழைய தலைநகரான சென்னை, புதிய சென்னை மாநிலத்தால் இருத்தி வைத்துக் கொள்ளப்பட்டது. மாநில புனரமைப்புச் சட்டம் 1956-ன்படி, மலபார் மாவட்டத்தையும், காசர்கோடு வட்டத்தையும் புதிதாய் தோற்றுவிக்கப்பட்ட கேரளாவுக்காக இழந்தது. திருவனந்தபுரம் மாவட்டத்தின் நான்கு வட்டங்களையும் கொல்லம் மாவட்டத்தைச் சேர்ந்த செங்கோட்டா வட்டத்தையும் சென்னை பெற்றது. புதிதாய் பெற்ற நான்கு வட்டங்களும், புதிய சென்னை மாநிலத்தில் கன்னியாகுமரி மாவட்டமாய் அமைந்தது. புதிய மைசூர் (கர்நாடகா) 1960-ல் பழைய தென் கன்னட மாவட்டத்தின் (காசர்கோடு வட்டம் நீங்கலாக) சில பகுதிகளையும் கோயம்புத்தூர் மாவட்டத்தின் கொள்ளே கால் வட்டத்தையும் ஈர்த்துக் கொண்டது. ஆந்திரப் பிரதேசத்தின் சித்தூர் மாவட்டத்திலிருந்து 405 சதுர மைல்கள் செங்கல்பட்டு மற்றும் சேலம் மாவட்டங்களிலிருந்து 326 சதுர மைல்களுக்குப் பரிமாற்றம் செய்து கொள்ளப்பட்டது. இவ்வாறாய் அமைக்கப்பட்ட சென்னை மாநிலம் இன்று, 1,30,000 ச.கி.மீ. பரப்பளவைப் பெற்று, நாட்டிலேயே நான்காவது மிகப் பெரும் மாநிலமாய் விளங்குகிறது. இதற்கு தமிழ்நாடு என சனவரி, 14, 1967 அன்று, மீண்டும் பெயர் சூட்டப்பட்டது. புனரமைப்பைத் தொடர்ந்து, தொடக்க ஆண்டுகளில் சென்னை மாநிலம் 13 மாவட்டங்களைக் கொண்டிருந்தது. இது, 1971-ல் 14-ஆக உயர்ந்தது. 1980-களிலும் 1990-களிலும் வளர்ச்சியை வேகப்படுத்த மாவட்டங்களின் அளவைக் குறைக்க வேண்டும் எனும் அரசின் கொள்கைப்படி, இராமநாதபுரம், திருநெல்வேலி, மதுரை போன்ற பல பெரிய மாவட்டங்கள், சிறிய மாவட்டங்களாய் பிரிக்கப்பட்டன. ஏனைய பல மாவட்டங்களும் இரண்டாய் பிரிக்கப்பட்டன. அண்மையில், சனவரி 2001-ல் பழைய திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலிருந்து பிரித்தமைக்கப்பட்ட அரியலூர் மாவட்டத்துடன் சேர்த்துத்

[1]திருவாங்கூர், கொச்சி, புதுக்கோட்டை, பங்கன பள்ளி மற்றும் சாந்தூர்

தமிழ்நாட்டிலிருக்கும் மாவட்டங்களின் மொத்த எண்ணிக்கை 30 ஆகும். 2001-ம் ஆண்டு மக்கட்தொகை கணக்கெடுப்பின்படி தமிழ்நாட்டின் மக்கட்தொகை 62.11 மில்லியன். இந்தியாவின் மக்கட்தொகையில் இது 6.05 விழுக்காடாகும். இயன்றவரை 29 மாவட்டங்களுக்கு அடிப்படை விவரங்கள் உருவாக்கப்பட்டன. இவை, தற்போதைய அறிக்கை[2]யில் பகுப்பாய்வுக்கடிப்படையாய் அமைந்தது. அனைத்து 29 மாவட்டங்களுக்கும் நம்பகமான தற்போதிருக்கும் அடிப்படை விவரங்கள் கிடைக்கப்பெறாத இடங்களில் முன்பிருந்த 21 மாவட்டங்களை உள்ளடக்கிய மக்கட்தொகைக் கணக்கெடுப்பின் அடிப்படை விவரங்கள் நம்பிக்கைக்குரியவையாய் எடுத்துக்கொள்ளப்பட்டன.

## தமிழ்மொழி

மாநிலத்தில் பேசப்படும் ஆட்சிமொழி தமிழ் ஆகும். இது இந்தியாவின் மிகப் பழமையான மொழிகளில் ஒன்றாகும். பல நூற்றாண்டுகளில், கவிஞர்கள், புலவர்கள் மற்றும் ஆட்சியாளரின் குறிப்பிடத்தக்க பங்களிப்புகளுடன் இம்மொழி, பல அடுக்கடுக்கான மாற்றங்களை சந்தித்தது. கி.மு. 5-ம் நூற்றாண்டுக்குரிய, தொல்காப்பியம் தமிழ்மொழியின் தொன்மைக்கு சான்று பகரும் ஒரு நிலையான சின்னமாகும். மிக தொன்மையான இலக்கியமான சங்ககாலப் பாடல்கள், மதுரையில் தோன்றி இரண்டாம் நூற்றாண்டில் புகழேணியின் உச்சியை அடைந்தது. சங்ககாலத்தின் கிட்டத்தட்ட மூன்று நூற்றாண்டுகளில் கவிதையும், இலக்கியமும் வளம் பெற்றன. சங்க இலக்கியங்கள், அதன் உயர் இலக்கிய தரம் மற்றும் பண்பாட்டுத் தூய்மைக்குப் பெயர் பெற்றவை. இக்காலத்தின் மிகச் சிறப்பாய் அறியப்பட்ட திருக்குறள் (தத்துவம் மற்றும் தூய வாழ்க்கைக்கு வழிகாட்டியான ஈரடிச் செய்யுட்கள்) திருவள்ளுவரால் இயற்றப்பட்டது. இன்றைக்கும் பொருத்த முள்ளதமைந்திருக்கிறது. கி.பி. 2 (அ) 3-ம் நூற்றாண்டில் சேர மன்னன் ஒருவனின் மகனான இளங்கோ அடிகளால் இயற்றப்பட்ட 'சிலப்பதிகாரம் மற்றும் மணிமேகலை' ஆகிய இரண்டும் இருபெரும் முன்மாதிரியான இலக்கியங்கள்; இக்காவியத்தில் தோன்றிய மற்ற பெரும் புலவர்கள், நாயன்மார்களும், ஆழ்வார்களும் ஆவர். இராமாயணத்தின் தமிழ் வடிவை இயற்றியளித்த கம்பர், இந்தக் காலத்தில் வாழ்ந்தவர். அப்போதைய மன்னர்கள் தமிழ்மொழியின் வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் பேணிப் பாதுகாத்தனர். கல்வி நிலையங்களில் தமிழ் பயிற்று மொழியாய் உள்ளது. மாநிலத்தில் அரசு அலுவல்களை நடத்துவதில் பெருமளவில் பயன்படுத்தப்படுகிறது. இருப்பினும், தமிழ்நாட்டு மக்கள் ஏனைய மொழிகளையும் மக்கள் ஊடுபரவுதல் மற்றும் கலாச்சார பரிவர்த்தனை மூலமாய் கற்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

## கலை, கட்டிடக்கலை மற்றும் பண்பாடு

பண்டைத் தமிழகத்தை ஆண்ட அரச மரபுகள் கலை, கட்டிடக் கலை மற்றும் பண்பாடான வளமிக்கதொரு மரபுரிமையை விட்டுச் சென்றுள்ளது. அவற்றுள் முதன்மையானது சோழர்கள். கி.பி. 2-ம் நூற்றாண்டில் காவிரியாற்றின் குறுக்கே, சோழ மன்னர்களால் கட்டப்பட்ட கல்லணை இன்றளவும் பொறியியலில் ஒரு பெரும் வியப்பு எனக் கருதப்படுகிறது. 2000 ஆண்டுகளுக்கு முன்னர்க் கட்டப்பட்ட சோழர் பேரரசனின் பூம்புகார்த் துறைமுகம் தென்கிழக்காசிய அரசுகளுடன் கொண்டிருந்த மிகச் சிறப்பான வணிக உணர்வுகளைச் சுட்டிக்காட்டுவதாய் அமைகிறது. காஞ்சிபுரத்தை அவர்களது தலைநகராய் கொண்டு கி.பி. 6 மற்றும் 8-ம் நூற்றாண்டுகளுக்கிடையில் ஆட்சி புரிந்த பல்லவர்கள் அவர்தம் மாபெரும் ஆலயங்கள் மற்றும் ஆலயக் குகைக் கோயில்கள்

[2] அரியலூர் மாவட்டத்திற்கு அடிப்படை விவரங்கள் கிடைக்கப் பெறவில்லை.


குறிப்புகள்
மாநிலத் தலைமையிடம்
சுற்றுலா மையங்கள்
ஏனைய நகரம்
மலைவாழிடங்கள்
வனவிலங்கு காப்பகம்
ஏரி / நீர்த்தேக்கம்
வரலாற்றுத்தலம்
சமய மையம்
துறைமுகம்
கடற்கரை
விடுமுறைப் போக்கிடம்
தொல்பொருளிடங்கள்
ANDHRA PRADESH
KARNATAKA
KERALA
TAMIL NADU
PONDICHERRY
(PUDUCHCHERI)
KARAIKAL
Bay of Bengal
Palk Strait
Palk Bay
Gulf of Manmar
Lakshadweep Sea
SRI LANKA
N D I A
Pulicat
Tiruttani
Arakkonam
MADRAS
Guindy N.P.
Gudiyattam
Vellore
Ranippettai
Sriperumbudur
Thiruvanmiyur
Kanchipuram
Covelong
Hosur
Chengalpattu
Arani
Tirukkalukkunram
Mamallapuram
Krishnagiri
Jolarpettai
Tiruppattur
Vandavasi
Vedantangal
Chetput
Gingee
Tindivanam
Sattanur
Tiruvannamalai
Marakkanam
Hogenakal Falls
Dharmapuri
Harur
Thiruvakkarai
Tirukkovilur
Auroville
Viluppuram
Stanley
Mettur
Yercaud
Omalur
Panruti
Cuddalore
Ulundurpettai
Mudumalai
Salem
Attur
Gudalur
Satyamangalam
Vriddhachalam
Neyveli
Parangippettai
Pichavaram
Kotagiri
Bhavani Sagar
Bhavani
Chidambaram
Coonoor
(Ooty)
Tirchengodu
Erode
Mettuppalaiyam
Namakkal
Perambalur
Avanashi
Turaiyur
Tiruppur
Poompuhar
Mayiladuturai
Tarangambadi
Coimbatore
Kangayam
Karur
Musiri
Kumbakonam
Swamimalai
Srirangam
Thiruvaiyaru
Nachiarkoil
Tiruchchirappalli
Thanjavur
Nagore
Dharapuram
Aravakkurichchi
Thiruvarur
Nagappattinam
Pollachi
Mannargudi
Velanganni
Anaimalai
Udumalaippettai
Viralimalai
Kiranur
Palani
Pudukkottai
Alangudi
Pattukkottai
Vedaranniyam
Kodaikanal
Vattalkundu
Tiruppattur
Bodinayakkanur
Alagar Kovil
Melur
Teni
Usilampatti
Madurai
Devakottai
Thirupparankundram
Sivaganga
Tirumangalam
Tondi
Kottai Malai
Manamadurai
Virudunagar
Srivilliputtur
Aruppukkottai
Sivakasi
Ramanathapuram
Mudukulattur
Rameswaram
Kurusadai
Sankarankovil
Kovilpatti
Ettaiyapuram
Kurukkuchalai
Tenkasi
Kuttalam
Tuticorin
Tirunelveli
Palayankottai
Mundanthurai
Nanguneri
Tiruchchendur
Padmanabhapuram
Nagercoil
Cape Comorin

மூலம் கலை மற்றும் கட்டிடக் கலை சிறப்புகளை வெளிக்காட்டியுள்ளனர். மதுரைப் பாண்டிய மன்னர்களும், பிற்காலத்திய சோழ மன்னர்களும்கூடக் குறிப்பாய் கலைநுட்பங்கள் வாய்ந்த கோபுரங்களும் சிற்பங்களும் கூடிய ஆலயங்கள் போன்ற வியக்கத்தக்க புகழ் பெற்ற நினைவுச் சின்னங்களை விட்டுச் சென்றுள்ளனர். ஆலயங்கள் வழிபாட்டிடங்களாய் இருந்ததோடன்றி, கற்கும் மையங்களாயும் அமைந்திருந்தன. வடபுறத்திலிருந்து அடுத்தடுத்த விஜயநகர மன்னர்களின் படையெடுப்புகள் கட்டிடக் கலைத்துறையை மேலும் வளமூட்டியது. மற்ற துறைகளிலும் தமிழ்நாடு வளமிக்கதொரு பண்பாட்டு மரபுரிமையைப் பெற்றிருந்தது. பரதநாட்டியம் போன்ற நாட்டிய முறைகளும் கர்நாடக இசை உள்ளிட்ட பல்வேறான இசை முறைகளும் பல நூற்றாண்டுகளாய் இங்கே செழிப்படைந்திருந்தன. கைவினைப் பொருட்களில், மரம் கல் மற்றும் உலோகமும் நுணுக்கமான சிற்ப வடிவமைப்புகள் உள்ளடங்கும். மிக நேர்த்தியாய் செதுக்கப்பட்ட வெண்கல மற்றும் தஞ்சாவூர்த் தட்டுகள் இங்கு சிறப்பாய் குறிப்பிடப்பட வேண்டும். சுப்பிரமணியபாரதி, வ.வே. சுப்பிரமணிய அய்யர், வ.உ. சிதம்பரம் பிள்ளை மற்றும் ஈ.வே. இராமசாமி நாயக்கர் போன்ற நவீன கால சமூக சீர்திருத்தவாளர்களும்கூடத் தமிழ்நாட்டின் பண்பாட்டுக் கட்டமைப்பில் அழிக்க முடியாத அடையாளங்களை விட்டுச் சென்றுள்ளனர்.

## மக்கட்தொகையின் போக்கு

2001-ம் ஆண்டின் மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி மாநிலத்தின் மக்கட்தொகை, 1991-ல் இருந்த 55 .9 மில்லியன்களுக்கெதிராய், ஏறத்தாழ 62.00 மில்லியன்களாயிருந்தது. ஆண், பெண் இன விகிதம் 1991-ல் (974) 1981-ல் (977) இருந்தவையோடு ஒப்பிடுகையில் 2001-ல் 986 ஆகக் கணக்கிடப் பட்டுள்ளது. (அட்டவணை 1 - 1) பத்தாண்டின் (1991 - 2001) வளர்ச்சி விகிதம் 11.19 விழுக்காடாகும். தமிழ்நாட்டில் மக்கட்தொகைப் பங்கீட்டின் உண்மையான சுட்டிக்காட்டும் கருவியாயிருக்கும் மக்கட் தொகை நெருக்கம், 2001-ல் ஒரு சதுர கிலோ மீட்டருக்கு 478 ஆக இருந்தது. இது, 1991-ல், 429, 1981-ல் 372 ஆக இருந்தது. இன்று தமிழ்நாடு, நாட்டிலேயே மிக அதிக அளவில் நகர்மயமாக்கப்பட்ட மாநிலமாக விளங்குகிறது. அதன் மக்கட்தொகையில் 42 விழுக்காட்டினர் நகர்ப்புறப் பகுதிகளில் வாழ்கின்றனர்.[3]

அட்டவணை - 1.1 1997-ல் 15 வயதுக்குட்பட்ட சிறார்கள், மக்கட் தொகையில் 30.3 விழுக்காடாயிருந்ததாய்க் காட்டுகிறது.

**அட்டவணை - 1.1 : அடிப்படை மக்கட்தொகையியல் சுட்டிக்காட்டும் கருவிகள்**

| வ.எண் | சுட்டிக்காட்டும் கருவிகள் | 1971 | 1981 | 1991 | 1997 | 2001 (தற்காலிகமானவை) |
|---|---|---|---|---|---|---|
| 1. | மக்கட் தொகை மில்லியன் | 41.2 | 48.2 | 55.9 | 60.0 | 62.1 |
| 2. | பத்தாண்டுக்கொருமுறை வளர்ச்சி(%) | 22.3 | 17.5 | 15.4 | 7.5 | 11.2 |

(தொடர்ச்சி)

[3] 1991-ல் மொத்த மக்கட்தொகையில் தமிழ்நாட்டில் நகர்ப்புறவாழ் மக்கட்தொகை 34.15 விழுக்காடாயிருந்தது. மகாராஷ்ட்ராவுக்கும் குஜராத்துக்கும் அடுத்தபடியாய் தமிழ்நாடு மிக அதிகமாக நகர்மயமாக்கப்பட்ட மாநிலமாயிருந்தது. நகர்ப்புறவாழ் மக்கட் தொகையில் பெரும் உயர்வு பெரும்பாலும் கிராமப்புறப் பகுதிகளை நகர்ப்புறப் பகுதிகளாய் மாற்றி வகைப்படுத்தியதால் ஏற்பட்டது.

(அ.1.1 - தொடர்ச்சி)

| வ.எண் | சுட்டிக்காட்டும் கருவிகள் | 1971 | 1981 | 1991 | 1997 | 2001 (தற்காலிகமானவை) |
|---|---|---|---|---|---|---|
| 3. | மக்கட்தொகை நெருக்கம் ச.கி.மீ ஒன்றுக்கு | 317.0 | 372.0 | 429.0 | 462.0 | 478.0 |
| 4. | நகர்ப்புற மக்கட்தொகை (%) | 30.3 | 33.0 | 34.2 | 36.8 | 43.9 |
| 5. | ஆண் பெண் இனவிகிதம் | 978.0 | 977.0 | 974.0 | 975.0 | 986.0 |
| 6. | 0-14 வயதானோரின் விழுக்காடு | 37.8 | 35.0 | 30.9 | 30.3 | கிடைக்கப் பெறவில்லை |

ஆதாரம் : இந்திய முதன்மைப் பதிவாளர் மக்கட்தொகை ஆவணங்கள் 1971, 1981, 1991, 2001 (தற்காலிகமானவை)

மாநிலத்தில் சார்புச் சுமை மிக உயர்வாயிருப்பதையும் இது காட்டுகிறது. இது, பொருளாதாரத்தில் முதலீடு உருவாக்கத்தை மோசமாகப் பாதிக்கும். தமிழ்நாட்டின் மக்கட் தொகையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர், உயர்ந்த விழுக்காட்டாயமைந்துள்ளனர். 1991-ல், 19.18 விழுக்காடு. 1981-ல் 18.3 விழுக்காடு. நாடு முழுமைக்கும் 1991-ல் 16.3 விழுக்காடு 1981-ல் 15.7 விழுக்காடு. இருப்பினும், தமிழ்நாட்டில் மிகக் குறைவான பழங்குடியினரின் விழுக்காடு பெற்றுள்ளது. 1991-ல் ஒரு விழுக்காடு. மொத்த இந்திய சராசரி 8 விழுக்காடு.

## பொருளாதாரம்

### *வேளாண்மை*

விடுதலை பெற்ற நாளிலிருந்து, மாநிலத்தின் பொருளாதாரத்தில் வேளாண்மை ஒரு முக்கிய ஆதாரமாய் இருந்துவருகிறது. 65 விழுக்காட்டுக்கு மேலான மக்கட் தொகையினர் வாழ்வின் ஆதாரமாக இத்தொழிலை நம்பி உள்ளனர். வேளாண் தொழிலுக்கும், பொருளாதார வளர்ச்சிக்குமிடையில் உறுதியான தொடர்புகள் காணப்படுகின்றன. வேளாண் தொழில், உரங்கள், பூச்சிக் கொல்லிகள் மற்றும் இயந்திரங்களுக்கான உள்ளீடுகளைத் தூண்டுகிறது. வழங்கல் தரப்பில் பருத்தி நெசவு ஆடைகள், சர்க்கரை மற்றும் தாவர எண்ணெய்கள் போன்ற வேளாண் சார்ந்த தொழில்களுக்குத் தேவையான மூலப் பொருள்களை வழங்குகிறது. வருமானங்களில் உயர்வின் விளைவாக ஊரகக் குழுமங்களின் செலவின உயர்வு, உடைகள் சர்க்கரை மற்றும் சமையல் எண்ணெய்கள் உள்ளிட்ட நுகர் பொருள்களில் ஒரு உயர்வான கோட்டிற்கு கொண்டு செல்கிறது.

இருப்பினும் வளர்ச்சியின் செய்முறையில் நிகர மாநில உள்நாட்டு உற்பத்தியில் வேளாண்மையின் பங்கு, வேளாண் அல்லாத துறைகளில் அதிக உற்பத்தி திறன் மற்றும் உற்பத்தியின் காரணமாய் படிப்படியாய் நலிவடைகிறது. தமிழ்நாட்டில் நிகர மாநில உள்நாட்டு உற்பத்திக்கு (பயிர், கால்நடை, மீன்வளம் மற்றும் வனவளம் உள்ளடங்கிய) வேளாண்மையின் பங்களிப்பு கடந்த சில பத்தாண்டுகளில் குறைந்து வருகிறது. (அட்டவணை 1.2) 1950-1-ல் நிகர மாநில உள்நாட்டு உற்பத்தியில் வேளாண்மையின் பங்கு 53.27 விழுக்காடாயிருக்கையில்,

2001-02-ல் அது 16.65 விழுக்காடாக மட்டுமே இருந்தது. மறுபக்கம் இடைநிலை மற்றும் மூன்றாவதான துறைகளின் பங்கு, முறையே 1950-51-ல் 13.72 விழுக்காட்டிலிருந்து 34.04 விழுக்காடாகவும் 2001-02-ல் 33 விழுக்காட்டிலிருந்து 49.31 விழுக்காடாகவும் உயர்ந்தது. (அட்டவணை 1.2) தேசிய நிலையில் முதனிலைத் துறையில் இதே காலத்தில் 49 விழுக்காட்டிலிருந்து 27.5 விழுக்காடாய் ஒரு குறைவு காணப்பட்டது.

**அட்டவணை - 1.2 : மாநில நிகர உற்பத்தியின் துறைவாரியான பங்கீடு**

| வ.எண் | முதனிலை | இடைநிலை | மூன்றாவதான | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1950-51 | 53.27 | 13.72 | 33.01 | 100 |
| 1960-61 | 51.98 | 17.98 | 30.42 | 100 |
| 1970-71 | 39.86 | 26.12 | 34.02 | 100 |
| 1980-81 | 24.85 | 34.49 | 40.66 | 100 |
| 1990-91 | 22.20 | 34.53 | 43.27 | 100 |
| 2001-02 | 16.65 | 34.04 | 49.31 | 100 |

**குறிப்பு** : 1993-94-ஆம் ஆண்டு விலைவாசிகளின் படி
**ஆதாரங்கள்** : 1. தமிழ்நாடு அரசின் 8-வது திட்ட ஆவணம்
2 .பொருளாதாரம் மற்றும் புள்ளியியல் துறை

ஒப்பீட்டடிப்படையில் மாநிலத்தில் பெரும் வீழ்ச்சிக்குக் காரணம், வேளாண்மையில் உறுதியான வளர்ச்சியில்லாமையே. 1990-களில் வேளாண் துறையின் வளர்ச்சி, 1980-களிலிருந்த 5.3 விழுக்காட்டிற்கெதிராய் 3.95 விழுக்காடாயிருந்தது மறுபுறம், உற்பத்தி மற்றும் மூன்றாவதான துறைகளில் ஆண்டு வளர்ச்சி வீதங்கள் 1980-களில் 4.52 விழுக்காட்டிலிருந்து 6.72 விழுக்காடாயும் 1990-களில் 5.35 விழுக்காட்டிலிருந்து 7.12 விழுக்காடாயும் முன்னேறியது.

தமிழ்நாட்டின் வேளாண்மையின் சில முக்கிய சிறப்பியல்புகளும், சாத்தியமான நீண்டகால வரையளவான நிலைகளும் வருமாறு :

அ. பரவலான நிலையற்ற பருவ மழைப்பொழிவை நம்பியிருத்தல்

ஆ. 95 விழுக்காடு மேற்பரப்பு நீரும், 70 விழுக்காடு நிலத்தடி நீரும் ஏற்கனவே பயன்படுத்தப்பட்டுவிட்ட நிலை.

இ. நிலத்திற்கான வளர்ந்து வரும் தேவை
மொத்த நிலவியல் பரப்பில் நிகரப் பயிரிடப்பட்ட பகுதியின் விழுக்காடு மொத்த இந்திய சராசரியைக் காட்டிலும் ஏறத்தாழ ஒன்றாயிருப்பினும் நீர்ப்பாசன முனைப்பும் பயிரிடும் முனைப்பும், மாநிலத்தில் அதிகமாகவுள்ளது. நீர் ஆதாரங்களின் குறைபாடு காரணமாய் சராசரியாக மொத்த பயிரிடும் பரப்பில் ஏறத்தாழ 12-லிருந்து 16 விழுக்காடு, ஒவ்வொரு ஆண்டும் தரிசாய் விடப்படுகிறது.

கூடுதலான நிலப்பரப்பை பாசனத்தின் கீழ்க் கொண்டுவரல் என்பது வரையறைக்குட் பட்டிருப்பதோடன்றி விலையின் அடிப்படையில் தவிர்க்கப்படவேண்டியதாயும் உள்ளது. வறண்ட மற்றும் வானம் பார்த்த நிலங்களில் உரிய தொழில் நுட்பவியலுடன் மேம்படுத்தும் உத்திகளை மேற்கொள்வதால் பன்மடங்கான பயன்கள் கிடைக்கப்பெறும். உணவுப் பாதுகாப்புக்கு உறுதி சிறு, குறு உழவர்களின் பெருகிய வருமானம், பண்ணைத் தொழில் நிலைத்திருக்கும் தன்மையை உயர்த்துதல் மற்றும் சூழலியலில் சமநிலையை ஏற்படுத்துதல்.

தரிசு நில மேம்பாட்டினை வேகப்படுத்த தரிசுநில மேம்பாட்டு திட்டமொன்று 1999-2000-ம் ஆண்டில் தொடங்கப்பட்டது. இதன் நோக்கம் போதிய இலாபமளிக்கும் வகையில் குறிப்பாய் சிறு, குறு விவசாயிகளுக்கு, ஒருங்கிணைந்ததொரு நடைமுறைப் பழக்கம் மூலம் தரிசுநிலங்களைப் பண்ணை நிலங்களாய் மாற்றல். திறம்பட்ட நீர்சேகரிப்பும் சேமிப்பு முறைகள் மற்றும் ஒரு நீர்த்தடுப்பு அணுகு முறையை அடிப்படையாய்க் கொண்ட தகுதி வாய்ந்த தொழில்நுட்பவியல் மற்றும் பாசன ஒருங்கிணைப்புத் திட்டங்கள் தானியங்களை அடிப்படையாய்க் கொண்ட உழவு முறையை மாற்றி நிலத்தின் உற்பத்தித் திறனை அதிகரிக்கச் செய்யவேண்டும். வறட்சியைத் தாங்கக்கூடிய வகைப் பயறுகளையும், பெருந்தானியங்களையும் (Coarse Creals) (இப்பகுதிகளில் பிரதானமாய்ப் பயிரிடப்படுபவை) உள்ளடக்கிய உற்பத்தித்திறனை மேம்படுத்தும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகையில் இவ்வுதவி தானியங்களின் உற்பத்தி மட்டுமே பொருளாதார வளர்ச்சிக்கு உதவியாக இல்லாததால் வேளாண்மையைப் பன்முகமாக்கல் அவசியமாயுள்ளது. வேளாண்மைப் பன்முகமாக்கல், துணைத் துறைகளுக்கிடையில் மட்டுமல்லாமல் தோட்டக்கலை, மீன்வளம், கால்நடை மற்றும் பால் பண்ணை மேம்பாடு போன்ற ஒவ்வொரு துணைத்துறைக் குள்ளாகவும் செயல்படுத்தப்படலாம்.

### *தொழில்*

இன்று தமிழ்நாடு பெரும் தொழில்மயமாக்கப்பட்ட மாநிலங்களிடையே உள்ளது. இம்மாநிலம், நிகர மாநில உள்நாட்டு உற்பத்திக்குத் தயாரிப்புத்துறைப் பங்களிப்பில் மகாராஷ்ட்ரா மாநிலத்திற்கு அடுத்த நிலையில் உள்ளது. பெருந்தொழில்களாவன. உந்தூர்திகள், பருத்தி, நெசவாளர்கள், இரப்பர், உணவுத் தயாரிப்புகள், இயந்திரம் போக்குவரத்துத் தளவாடங்கள் தோல் மற்றும் தோல் பொருள்கள்.

1980-களில் தொழிற்துறையின் சராசரி வளர்ச்சி 4.52 விழுக்காடாயிருந்தது 1990-களில் சராசரி வளர்ச்சி விகிதம் 5.35 விழுக்காட்டுக்கு உயர்ந்தது. இருப்பினும் தொழில் வளர்ச்சி விகிதம், 1983-84-ல் மிக அதிகமாக 16 விழுக்காடும் 1991-92-ல் மிகக் குறைவாக -7.4 விழுக்காடு ஆகவும் ஆண்டாண்டுக்குக் குறிப்பிடும்படியாக ஏற்றத்தாழ்வுடையதாயிருந்தது. வளர்ச்சி விகிதங்கள் தற்போதைய கொள்கைத் தொடக்க முயற்சிகளின் விளைவாய் வருங்காலத்தில் நீடித்த உறுதி யானதாயிருக்க வேண்டும்.

தமிழ்நாடு அரசு மிக தாராளமானதொரு மற்றும் செய்திறமிக்க தொழில் கொள்கையைப் பின்பற்றியது. பின்பற்றியும் வருகிறது. இது வாய்ப்பானதொரு தொழிற் சூழ்நிலையை மாநிலத்தில் உருவாக்கியுள்ளது. மின்விசை உற்பத்திப் பெருக்கம், தொலைத் தொடர்புத் தொடரமைப்புகள் மற்றும் சிறு துறைமுகங்களின் வளர்ச்சி ஆகிய துறைகளில் தொழில் மற்றும் சமூகக்

கட்டமைப்புகளை வலுப்படுத்துவதில் மாநில அரசு முக்கிய கவனம் செலுத்தியதும்கூட இதுவரை பெற்ற வெற்றிக்கு காரணமாகும்.

தமிழ்நாடு வேகமாய் முன்னேறுகிறது என்பதற்கான சான்றுகள் உள்ளன. தமிழ்நாட்டில் அவர்களுடைய தயாரிப்பு வசதிகளை அமைக்க வேண்டும் எனும் ஏராள வெளிநாட்டு, உள்நாட்டு முதலீட்டாளரின் கவனத்தை மிக வேகமாய்க் கவர்ந்து வருகிறது. தமிழ்நாடு இந்தியப் பொருளாதாரத்தின் கண்காணிப்பு மையத்தின் ஒரு அறிக்கைப்படி வெளிநாட்டு நேரடி முதலீடு களின் ஏற்பை பொறுத்தவரை தமிழ்நாடு, நாட்டில் மூன்றாவதிடத்தில் உள்ளது. வெளிநாட்டு நேரடி முதலீட்டின் அளவு ஆகஸ்ட் 2002-ல் 2351 மில்லியனாய் இருந்தது. இது நாட்டின் மொத்த நேரடி முதலீட்டில் 8.32 விழுக்காடாயிருக்கிறது.

50 விழுக்காட்டிற்கு மேலான முதலீடுகள், கட்டமைப்பு வசதிகளை மேம்படுத்துவதற்காகும். இதில், 50 விழுக்காட்டிற்கு மேல் மின் விசை உற்பத்திக்காகும் கட்டமைப்பு வசதிகளின் தரத்தைப் பொறுத்த மட்டில் இந்தியப் பொருளாதாரத்தின் கண்காணிப்பு மையம் தமிழ்நாட்டை, நாட்டில் மிகச் சிறந்த இரண்டாவது மாநிலமாய் மதிப்பிட்டுள்ளது.

உள்நாட்டு தகவல் தொழில் நுட்பத் தொழிலில் வெளிநாட்டு முதலீடுகளைக் கவருவதிலும் தமிழ்நாடு முன்னிலை வகித்து வருகிறது. 1998-ல் அரசு தொழில் வளர்ச்சிக்குகந்த தகவல் தொழில் நுட்பக் கொள்கையை அறிவித்தது. அதன் செயலாக்கத்தைக் கண்காணிக்கும் பொருட்டு ஒரு சிறப்புப் பணிப்பிரிவையும் அமைத்தது. மென்பொருள் ஏற்றுமதிகள், கிட்டத்தட்ட ஒன்றுமில்லை என்ற நிலை நிலையிருந்து, 2001-02-ல் 1 பில்லியன் அமெரிக்க டாலர்களுக்கு மிகையாக உயர்ந்தது. தமிழக முதல்வர் செப்டம்பர் 19, 2002-ல் 2002-ம் ஆண்டிற்கான புதிய தகவல் தொழில் நுட்பகொள்கையை அறிவித்தார். இது தமிழ்நாட்டைத் தகவல் தொழில் நுட்ப முதலீடுகளில் தேர்வின் சேரிடமாய் உருவாக்கிடவும் தமிழ்நாட்டை ஒரு உலக வெளிநாட்டு ஆதார வணிக மையமாக ஆக்கிடவும் வடிவமைக்கப்பட்டது. மேலும் அரசுத் துறை அலுவல்களில் மின்னணு மூலம் நிர்வாகம் மற்றும் தகவல் தொழில் நுட்பங்களை செயற்படுத்தல்களை மேற்கொள்ளுதல் மற்றும் மின் அணு மூலம் சேவைகள் அளிப்பு அறிமுகம் ஆகியவை மூலம் இணையதள (இண்டர்நெட்) டிஜிட்டல் டிவைடு (The Digital Divide) வசதிகள் பரவலை கிராமப்புறங்களில் வேகப்படுத்த கூடாரங்கள் இணைவழி (Online) நூலகங்கள் மற்றும் மாநில அரசுத் துறைகள் மற்றும் பணிகளுக்கு இணைப்புகளுடன் கூடிய இருமொழி இணைய தள நுழைவாயிலால் (Internet Portal) இணைக்கப்படும்.

### *வளர்ச்சி, வருவாய் மற்றும் வறுமை*

கடந்த ஐந்து, பத்தாண்டுகளில் மாநிலத்தின் ஒட்டு மொத்த வளர்ச்சியை மாநிலப் பொருளாதாரத்தின் உண்மையான வருமானத்திற்கு தொழில்கள் (இடைநிலை) மற்றும் பணிகள் (மூன்றாவதான) துறைகளின் பெருகிவரும் பங்களிப்பிலிருந்து நாம் காணலாம். நாட்டின் மொத்த செயலாக்கத்தோடு பல்வேறான திட்டகாலங்களில் தமிழ்நாட்டின் செயலாக்கத்தை ஒப்பிடுகையில் (நிலையான விலைவாசிப்படி) மாநிலத்தின் பொருளாதார வளர்ச்சி விகிதம் நாட்டினுடையதைக் காட்டிலும் முதலாவது, நான்காவது திட்டங்களில் 5-லிருந்து 7-வது திட்டங்களில் மற்றும் ஒன்பதாவது திட்டத்தின் முதல் மூன்று ஆண்டுகளில் சிறிதளவு அதிகமாயும், இரண்டாவது, மூன்றாவது மற்றும்

எட்டாவது திட்ட காலங்களில் (அட்டவணை 1.3) நாட்டினுடையதைக் காட்டிலும் சிறிதளவு குறைவாகவுமிருந்தது. தமிழ்நாட்டின் நிகர உள்நாட்டு உற்பத்தி வளர்ச்சி விகிதம் 1990-களில் ஆண்டொன்றுக்கு 6-3 விழுக்காடாயுமிருந்தது. இது நாட்டின் 15 பெரும் மாநிலங்களின் மாநில உள்நாட்டு உற்பத்தி வளர்ச்சி விகிதமான 5.99 விழுக்காட்டைக் காட்டிலும் மிகையானதாயும் உள்ளது.

**அட்டவணை - 1.3 : ஆண்டு வளர்ச்சிவிகிதம், 1980-81 விலைவாசிப்படி**
**தமிழ்நாடு மற்றும் இந்தியா**

| திட்டகாலம் | தமிழ்நாடு | இந்தியா |
|---|---|---|
| முதலாவது திட்டம் | 4.45 | 3.6 |
| இரண்டாம் திட்டம் | 2.90 | 4.0 |
| மூன்றாவது திட்டம் | 1.58 | 2.2 |
| நான்காவது திட்டம் | 3.40 | 3.3 |
| ஐந்தாவது திட்டம் | 7.00 | 5.2 |
| ஆறாவது திட்டம் | 6.01 | 5.2 |
| ஏழாவது திட்டம் | 4.94 | 5.8 |
| எட்டாவது திட்டம் | 5.97 | 6.8 |
| ஒன்பதாவது திட்டம் | 5.46 | 5.34 |

**குறிப்பு** : 1993-94 விலைவாசிப்படி (பொருளாதார மற்றும் புள்ளியியல் துறை)

**ஆதாரங்கள்** :
1. ஐம்பதில் தமிழ்நாடு ஒரு புள்ளிவிவர சுருக்கத் தொகுப்பு (பொருளியல் மற்றும் புள்ளியியல் இயக்ககம்)
2. தமிழ்நாடு ஒன்பதாவது திட்ட ஆவணம்.
3. இந்திய அரசு ஐந்தாவது ஆண்டு திட்ட ஆவணங்கள் 6,7,8,9 மற்றும் 10.

1993-94-லிருந்து 1996-97 வரையிலான காலத்தில் மாவட்ட நிலையில் உள்நாட்டு உற்பத்தியின் வளர்ச்சி விகிதத்தைக் கணக்கிடப் பொருளாதாரம் மற்றும் புள்ளியியல் துறை மேற்கொண்ட முயற்சி பெரும் வேறுபாட்டைக் காட்டியது. தஞ்சாவூரில் 4.38%. மதுரையில் 10.66% மூன்று மாவட்டங்கள் மட்டுமே (காஞ்சிபுரம், ஈரோடு மற்றும் மதுரை) 10%-க்கு மிகையானதொரு வளர்ச்சி விகிதத்தைக் காட்டின.

### *தனிநபர் வருமானம்*

தமிழ்நாட்டின் தனி நபர் வருமானம் 1980-களில் தேசீய சராசரியைக் காட்டிலும் குறைவாயிருந்தது. ஆனால் 1991-92-ல் மொத்த இந்திய சராசரியை மிஞ்சியது. 1990-களின் தொடக்கத்திலிருந்து, இந்த உயர் தனி நபர் வருமானம் தொடர்ந்து நிலைநிறுத்தப்பட்டு வருகிறது.

தனி நபர் வருமானத்தைப் பொறுத்தவரை தமிழ்நாடு, பெரிய மாநிலங்களில் நான்காவதாய் இடம் பெற்றுள்ளது. 2000-01-ல் தமிழ்நாட்டின் தனி நபர் வருமானம் (நடப்பு விலைவாசிப்படி) ரூ. 19,889/- மகாராஷ்ட்டிரா, பஞ்சாப் மற்றும் அரியானா ஆகிய மூன்று மாநிலங்கள், தமிழ்நாட்டைக் காட்டிலும்

உயர்வான தனி ஒருவர் வருமானத்தைப் பெற்றுள்ளன. தென்மாநிலங்களில், தமிழ்நாட்டின் தனி நபர் வருமானமானது, கேரளம் (ரூ.19,463), கர்நாடகம் (ரூ.18041) மற்றும் ஆந்திரப் பிரதேசம் (ரூ.16373) ஆகிய மாநிலங்களின் தனி நபர் வருமானத்தைக் காட்டிலும் உயர்வாக இருந்தது.

### *வறுமை நிலை*

1999-2000-ல் இந்திய திட்டக் குழுவால் செய்யப்பட்ட வறுமையின் மதிப்பீடு மாநில மக்கட் தொகையில் 21.12 விழுக்காட்டினர் வறுமைக்கோட்டுக்கும் கீழ் வசிப்பதாகக் காட்டுகிறது. இது மொத்த இந்தியாவின் சராசரியான 26.15% காட்டிலும் குறைவாக உள்ளது.[4] 1973-74-ல் தமிழ்நாட்டில் வறுமைக்கோட்டுக்கும் கீழ் வாழும் மக்கட்தொகை 56.51 விழுக்காடாக இருந்தது. இது, இந்தக் காலத்தில் 35.39 விழுக்காடு புள்ளிகள் குறைவைக் காட்டுகிறது. மேலும், 1973-74-ல் வறுமைக்கோட்டிற்குக் கீழாக வாழும் மக்கட்தொகை மொத்த இந்திய சராசரியான 54.93 விழுக்காட்டைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. வறுமைக் கோட்டுக்குக் கீழ் உள்ள மக்கட் தொகையைப் பொறுத்தவரை, பெரிய மாநிலங்களில் தமிழ்நாடு ஆறாவது இடத்தில் உள்ளது.

மேற்சொன்ன சுட்டிக்காட்டும் கருவிகள் தனித்தனியாய்ப் பிரிக்கப்பட்டு ஒரு சிறிய அளவில் பகுப்பாய்வு செய்யப்பட்டால், ஊரக நகரப் பகுதிகளில் மட்டுமல்லாமல் பல்வேறு நிலவியல் பகுதிகளுக்கிடையிலும் கூட பெரும் வேறுபாடுகள் இருப்பது வெளிப்படையாய்த் தெரியவரும். நலவாழ்வு மற்றும் கல்வியறிவு நிலைகள் போன்ற பல சுட்டிக்காட்டும் கருவிகளுக்கு பெரிய அளவு அடிப்படைப் புள்ளி விவரங்கள் கிடைக்கப் பெறுகையில், சிறிய அளவில் மற்றதை சுட்டிக்காட்டும் கருவிகள் பகுப்பாய்வு செய்யப்படவில்லை. மேலும் சமூகப் பொருளாதாரக் குறியீடுகள் சிலவற்றுக்கிடையில் எவ்வித நேரடி ஒப்புமை தொடர்புமிருப்பதாய் தோன்றவில்லை. எடுத்துக்காட்டாக கேரளத்திற்கிணையான மிக உயர்வான கல்வியறிவு நிலையும் குறைவான பிறப்பு விகிதமும் கொண்ட கன்னியாகுமரி மாவட்டம், விதிவிலக்காக வறுமைக்கோட்டிற்குக் கீழ் உள்ள மக்கட் தொகையினை உயர்விகிதமாக 48 விழுக்காடாகக் காட்டுகிறது. உண்மையில் மாநில சராசரியோடு ஒப்பிடுகையில் ஏழு மாவட்டங்கள் வேலூர், திருவண்ணாமலை, கடலூர், சேலம், திண்டுக்கல், தூத்துக்குடி மற்றும் கன்னியாகுமரி உயர்வான வறுமை நிலைகளைப் பெற்றுள்ளன (1993-94) தேசீயமாதிரி அளவையின் அடிப்படைப் புள்ளிவிவரப்படி 31.66 விழுக்காடு)

## சமூகத்துறை

### *நலவாழ்வு*

அனைத்திந்தியப் புள்ளி விவரங்களோடு, தமிழ்நாட்டின் பெரிய நலவாழ்வுக் குறியீட்டுக் கருவிகள் சிலவற்றோடு செய்யப்பட்ட ஒப்பீடு, மாநிலம் வியக்கத்தக்க சாதனைகள் படைத்ததைக் காட்டுகிறது. கடந்த இரு பத்தாண்டுகளில் தமிழ்நாடு, கேரளாவைத் தவிர ஏனைய அனைத்து மாநிலங்களோடு ஒப்பிடுகையில், மக்கட் தொகை வளர்ச்சி விகிதத்தில் வேகமான குறையைகாட்டுகிறது. அனைத்திந்தியாவுக்கும், 1981-91-ல் ஆண்டு மக்கட் தொகை வளர்ச்சி விகிதம் 2.14 விழுக்காடாயிருந்தது. ஆனால் தமிழ்நாட்டில் இது 1.43 விழுக்காடாயிருந்தது. (கேரளாவுக்கு மட்டும் அடுத்தபடியாய் (1.34 விழுக்காடு) )

---

[4]தேசீய மாதிரி அளவையின் 55-வது சுற்றால் கடைபிடிக்கப்பட்ட (RECALL) மீண்டும் பின்பற்றத்தக்க வழிமுறையைப் பற்றி ஐயப்பாடுகள் எழுப்பப்பட்டுள்ளன. நபர்களை எண்ணும் விகிதங்கள் இந்த வழி முறை காரணமாய் குறைவாய் மதிப்பீடு செய்யப்பட்டுள்ளன எனச் சிலர் கருதுகிறார்கள்.

ஆயுட்கால எதிர்பார்ப்பு மொத்த கருத்தரிப்பு விகிதம் முதலான நலவாழ்வுக் குறியீட்டுக் கருவிகளுக்கு தேசீய மற்றும் மாநில அளவில் எப்போதுமே, இரு அடிப்படை விவரத் தொகுதிகள் இருக்கின்றன. இவ்விரண்டுமே, பயனுள்ளதாய், கருதப்பட்டதால் ஒப்பீட்டுப் புள்ளி விவரங்களைத் தழுவதற்காக இங்கே கொடுக்கப்பட்டுள்ளன. பிறப்பின் போது ஆயுட்கால எதிர்பார்ப்பு மாநிலத்தில் நலவாழ்வின் தரத்தை சுட்டிக்காட்டுகிறது. தமிழ்நாடு டேனிஷ் பன்னாட்டு வளர்ச்சி உதவி நலவாழ்வுக் காப்பு திட்டத்தால் 1997-ம் ஆதார ஆண்டில் நடத்தப்பட்ட உயிராதார நிகழ்வுகளின் கணக்கெடுப்பு, பிறப்பின் போது ஆயுட்கால எதிர்பார்ப்பு (1959-60-ல்) ஆண்டுகளுக்கு 41.09 ஆண்டுகளாயிருந்தது, 1997-ல் 64.91 ஆண்டுகளாய் உயர்ந்ததையும், அதேகாலத்தில், பெண்களுக்கு 38.24 ஆண்டுகளிலிருந்து 68.85 ஆண்டுகளாய் உயர்ந்ததையும் வெளிப்படுத்துகிறது. 1997-2001-ம் ஆண்டுகளுக்கான மாதிரிப் பதிவுமுறை மதிப்பீடுகள், தமிழ்நாட்டின் பிறப்பின்போது ஆயுள் எதிர்பார்ப்புக் கால (ஆண்டுகளுக்கு 65.2 பெண்களுக்கு 67.6) த்தைக் கேரளா, மகாராஷ்ட்ரா மற்றும் பஞ்சாப் மாநிலங்களுக்கடுத்த நிலையில் வைத்து மதிப்பிட்டது. மாநிலத்தின் உத்தேச பிறப்பு விகிதம், 1971-ல் இருந்த 31.4-லிருந்து 2000-ல் 19.3-க்குக் குறைந்து கேரளாவுக்கு அடுத்த குறைவாயிருந்தது (18.2) உத்தேச இறப்பு விகிதம் 1971-லிருந்த 14.4-லிருந்து, 2000-ல் 7.9 ஆகக் குறைந்து, இவ்வகையில் மாநிலம் நாட்டில் எட்டாவது இடத்தில் உள்ளது.

**படம் 1.1 - மொத்த கருத்தரிப்பு விகிதம் (பெரிய மாநிலங்கள்)**




ஆதாரம் : தேசிய குடும்பநல வாழ்வு கணக்கெடுப்பு (1998-99)

தமிழ்நாட்டின் மொத்த கருத்தரிப்பு விகிதமானது 1971-லிருந்த 3.9-லிருந்து 1997-ல் 2.00-க்கு குறைந்த பெரும் இறக்கத்தைக் காட்டுகிறது. (மாதிரிப் பதிவு முறை) உயிராதார நிகழ்வுகளின் கணக்கெடுப்பு (1997)-ம் கூட மொத்தக் கருத்தரிப்பு விகிதமான 2.0-ஐ சுட்டிக்காட்டுகிறது. இருப்பினும் அண்மைய தேசிய குடும்ப நலவாழ்வுக் கணக்கெடுப்பு (2) 1998-99 அடிப்படை விவரமானது. தமிழ்நாட்டின் மொத்தக் கருத்தரிப்பின் விகிதம் 2.48 ஆக இருக்குமெனக் காட்டுகிறது. (படம் 1.1) கேரளாவை அடுத்ததாக (2.0) இது உள்ளது.

குழந்தை இறப்பு விகிதத்தைப் (கு.இ.வி.) பொறுத்தவரை தமிழ்நாடு துரித முன்னேற்றத்தை அடைந்துள்ளது. கு.இ.வி. 1971-ல் 113 ஆக இருந்ததிலிருந்து 1998-99ல் 48.2 ஆகக் குறைக்கப்பட்டுள்ளது. (படம் 1.2) தேசியக் குடும்ப நலவாழ்வுக் கணக்கெடுப்பு - 2 பெரிய மாநிலங்களில் தமிழ்நாடு ஐந்தாவதாயும், கேரளா தொடர்ந்து முன்னணி வகித்தும் (16.3) மற்றும் மகாராஷ்ட்ரா மிகக் குறைவான குழந்தை இறப்பு விகிதத்தில் பஞ்சாப்புக்குப் பதிலாக இரண்டாவது இடத்தைப் பிடித்துள்ளதைக் காட்டுகிறது. இருப்பினும் பேறுகால இறப்பு விகிதம் மிகக் குறிப்பிடும்படியாகக் குறையவில்லை. மாதிரி பதிவு முறையின்படி 1971-ல் 55.2, 1997-ல் 43.4. 1997-ல் இதே விவரங்கள் இந்தியா 43.2, கேரளம், 43.2.

2000-ம் ஆண்டுக்குள் எல்லோருக்கும் நலவாழ்வு என்பது தமிழ்நாடு அரசின் கொள்கையாகும். இதன் குறிக்கோள்களாவன. தொற்று நோய்களுக்கெதிரான தடைக்காப்பு, கொள்ளை நோய்களைக் கட்டுப்படுத்தல், தாய்க்குரிய குழந்தைக் காப்பளித்தல், மருந்துகள் வழங்கல் (ஒரு சிலவே குறிப்பிடப்பட்டுள்ளன) இவை, நலவாழ்வுத் துறையில் பாராட்டத்தக்கச் சாதனைகளை செய்வதில் உறுதியான ஒரு செயல் விளைவை (ஆனால் முழுப் பொறுப்பாயல்ல) பெற்றிருந்தன. தேசியக் குடும்ப நலவாழ்வு கணக்கெடுப்பு-2, பேறுகாலத்திற்கு குழந்தை காப்பில் தமிழ்நாடு, மருத்துவமனைகள் அல்லாத மகப்பேற்றினை பிறப்பிலிருந்து இரண்டு மாதத்திற்குள்ளான பிறப்புக்குப் பிந்தைய சோதனைகளில் 53 விழுக்காடுடனும் பிறப்பிலிருந்து இரண்டு நாட்களுக்குள், 10 விழுக்காட்டுடனும் பேறுகாலத்திற்குப் பிந்தைய இரு சுட்டிக்காட்டும் குறியீடுகளிலும் மற்ற மாநிலங்களின் பட்டியலில் முன்னணியில் உள்ளது. தேசீய நலவாழ்வு மாதிரி கணக்கெடுப்பு (2)ன் படி, தமிழ்நாடு பேறுகாலச் சுட்டிக்காட்டும் குறியீடுகளிலும் மூன்றாவது நிலையில் உள்ளது. இச்சாதனைகள் பாராட்டுக்குரியன.

மக்கட் தொகையில் பெரும் பிரிவினருக்கு இலவச நோய் தடுப்பு நலவாழ்வுப் பணிகளை அளிப்பதில் தொடக்க நலவாழ்வுக்காப்பு அணுகுமுறையை மேற்கொள்ளும் கொள்கையும் இதற்கு ஒரு வகையில் காரணமாகும். இருப்பினும் சேய், தாய் நோயுறும் தன்மை மற்றும் இறப்பு விகிதம் மற்றும் பரவும் பரவா நோய்களைக் கட்டுப்படுத்தல் போன்ற சில இனங்களில் கவலைக்குரிய நிலை காணப்படுகிறது.

**கல்வியறிவும் கல்வியும்**

தமிழ்நாட்டில் மனித மேம்பாட்டுச் சாதனைகளுக்கான பெரும் காரணம், அதன் உறுதியான கல்விப் பாரம்பரியமே. தொடக்க ஆண்டுகளில் மாநிலம் சென்னை மாகாணமாயிருந்த காலத்திலும் கூடக் கல்வி முனைப்பாகக் கற்கப்பட்டும் கல்வியின் வளர்ச்சிக்கு ஆதரவளிக்கப்பட்டும் வந்தது.

இதன் முடிவுகள் நாடு விடுதலை பெற்றதற்குப் பின்னரும் தக்க தெளிவு நிலையாய் அமைந்துள்ளன.

**படம் 1.2 - குழந்தை இறப்பு விகிதம் (பெரிய மாநிலங்கள்)**




ஆதாரம் : தேசிய குடும்பநல வாழ்வு கணக்கெடுப்பு - 2 (1998-99)

**பெட்டிச் செய்தி 1.1 - சென்னை மாகாணத்தில் தொடக்க ஆண்டுகளில் கல்வி**

1822-ல் சர். தாமஸ் மன்றோவால் தொடங்கப்பட்ட சென்னை மாகாணத்தில் கல்வி நிலைப் பற்றிய விசாரணை ஆயிரம்பேர் கொண்ட மக்கட் தொகைக்குத் தோராயமாய் ஒரு பள்ளியும், கல்வி கற்பிக்கப்பட்ட ஆண்பிள்ளைகளின் எண்ணிக்கை பள்ளி செல்லும் மொத்த மக்கட் தொகையில் நான்கில் ஒரு பங்கு இருந்ததையும் காட்டியது. இந்த உள்ளூர் கல்வி நிலையங்களில் கற்பிக்கப்பட்ட கல்வி அறிவுக்குப் பயிற்சியளிப்பதைக் காட்டிலும், நினைவுக்கு சுமையாயிருப்பதாய், நடைமுறைக்கும் சற்றும் பயனற்றதாயிருந்ததையும், விசாரணை காட்டியது. ஆகவே ஒரு கல்வி முறையை ஏற்படுத்த ஒரு குழுமம் அமைக்கப் பட்டது. பள்ளிகளை ஏற்படுத்த ஓராண்டு மானியமாய் ரூ.50,000 ஒப்பளிக்கப்பட்டது. 1826-ல் சென்னையில் ஒரு மையப்பள்ளியுடன் கூடிய 14 ஆட்சியலுவலகங்களும், 81 வட்டப் பள்ளிகளும் தொடங்கப்பட்டன. 1836-ல் இத்திட்டம் தோல்வியடைந்தது. எனவே திறமையற்றதான இப்பள்ளிகள் ஒழிக்கப்பட்டன. 1840-ல் ஒரு மையப்பள்ளியையும் சில மாகாணப் பள்ளிகளையும் ஏற்படுத்தி நடத்த எல்லன்பரோ பிரபுவின் அரசால் ஒரு

பல்கலைக்கழகக் குழுமம் அமைக்கப்பட்டது. 1841-ல், மையப்பள்ளி, உயர்நிலைப் பள்ளியாய் மாற்றப்பட்டது. 1853-ல் அதனோடு, ஒரு கல்லூரித்துறை சேர்க்கப்பட்டுப் பின்னர் அது மாநிலக் கல்லூரியாய் வளர்ச்சி பெற்றது. 1854-ல் இயக்குநர்களின் நீதிமன்றம் கல்வி பற்றி நினைவுக்குரிய ஒரு அறிவிப்பை வெளியிட்டது. அதன் பின்னர், பொதுக் கல்வி இயக்குநருடன் கூட்டிய கல்வித்துறையும், அதன் ஆய்வுப் பணியாளர்களும் உருவாக்கப் பட்டனர். சென்னைப் பல்கலைக்கழகம் என்றழைக்கப்பட்டது. திருத்தியமைக்கப்பட்டு மாநிலக் கல்லூரியெனப் பெயரிடப்பட்டது. ஒரு வழக்கமான பள்ளியும் மாவட்டப் பள்ளிகளும் திறக்கப்பட்டன. உதவி மானியமுறையும் அறிமுகம் செய்யப்பட்டது. 1853-ல் 460 கல்வி நிலையங்களும், 14,900 மாணவர்களுமிருந்தனர். 1904-ல் இவ்வெண்ணிக்கை 7,84,000 மாணவர்களுடன் கூடிய 26,771 பள்ளிகளாய் உயர்ந்தது.

*ஆதாரம் : சென்னை அரசிதழ் (ரிம். பிரான்சிஸ்)*

நாளடைவில் மாநிலத்தில் கல்வியறிவு விகிதம் வேகமாக அதிகரித்தது. 2001-ம் ஆண்டின் மக்கட்தொகை கணக்கெடுப்பின்படி, கல்வியறிவு விகிதம் 73.47 விழுக்காடாயிருந்தது. இது கேரளா, மற்றும் மகாராஷ்ட்ராவுக்கு அடுத்தப்படியாகவும் மொத்த இந்திய அளவான 65.38 விழுக்காட்டினைக் காட்டிலும் மிக அதிகமாயிருந்தது. எல்லோருக்கும் தொடக்கக் கல்வி எனும் அதன் முயற்சியில் தமிழ்நாடு அரசு, கல்விக்கட்டமைப்பில் குறிப்பாக, ஊரகப் பகுதிகளில் கணிசமான முதலீட்டைச்

**படம் 1.3 - கல்வியின் நிலை (பெரிய மாநிலங்கள்)**




ஆதாரம் : தேசிய குடும்பநல வாழ்வு கணக்கெடுப்பு (1998-99)

செய்தது. 1998-99-ல் மாநிலத்தின் ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை 83.15 விழுக்காடாயிருந்தது. தொடக்க நிலையில் ஆண்களின் மொத்த சேர்க்கை 106.37 விழுக்காடு பெண்களின் சேர்க்கை 104.01 விழுக்காடு. தேசிய குடும்ப நலவாழ்வுக் கணக்கெடுப்பு-2 (1998-99) தமிழ்நாட்டில் பள்ளிக்குச் செல்லும் ஆண்டுகளின் சராசரி எண்ணிக்கை 6.4 ஆண்டுகள். இது கேரளா (8.1) மற்றும் மகாராஷ்ட்ராவுக்கு (7.1) அடுத்து நெருக்கமாக மூன்றாவது நிலையில் உள்ளது. (படம் 1.3) இதே இந்திய மொத்த எண்ணிக்கை 5.5 ஆண்டுகளாகும்.

நாட்டில் எல்லா அரசு மேல்நிலை மற்றும் உயர்நிலைப் பள்ளிகளில் கணிப்பொறிக் கற்பிக்கும் முதல் மாநிலமாய்த் தமிழ்நாடு விளங்குகிறது. இப்புதிய திட்டத்தின் கீழ் 1,00,000-க்கும் மேற்பட்ட மாணவ மாணவியர்கள் பயன் பெற்றுள்ளனர். உயர்நிலைப் பள்ளிக் கல்வியின் தரத்தை மேம்படுத்த பல்துறைத் திறப்பயிற்சி வாயிலாய்த் தொழிற்கல்வி கற்பிப்பதில் தமிழ்நாடு ஒரு முன்னோடி மாநிலமாய்த் திகழ்கிறது. உயர்கல்வித்துறையில் மாநில அரசின் கல்வியளிக்கும் பளுவைக் குறைக்கத் தன் நிதிக்கல்வி நிறுவனங்கள் பல்தொழில் நுட்பப் பயிலகங்கள், தொழிற்பயிற்சி நிலையங்கள், கலை மற்றும் அறிவியல் கல்லூரிகளுக்கு ஊக்கமளிக்கப்படுகிறது.

## இயல்

# 2

# தமிழ்நாட்டில் மனித மேம்பாட்டின் நிலை

இவ்வறிக்கையின் தொடக்கத்தில் குறிப்பிட்டுள்ளபடி ஐக்கியநாடுகளின் வளர்ச்சி திட்ட மனித மேம்பாட்டுக் குறியீடு மனித மேம்பாட்டின் ஒட்டுமொத்த நிலையைச் சுட்டிக்காட்டும் விரிவானதொரு கருவியாக இருப்பதோடு மனித மேம்பாட்டின் விரிவானதொரு மட்டக் குறியாக செயல்படுகிறது. (பெட்டி - 2.1) எப்படியிருப்பினும் வளர்ச்சி நடவடிக்கைகளின் காரணமாக தமிழ்நாட்டிலும் அதன் மாவட்டங்களிலும், ஆயுட்காலம், கல்வி மற்றும் வள ஆதாரங்களின் (வருமானம்) மீது கட்டுப்பாடு போன்ற மனித மேம்பாட்டுச் குறியீட்டைக் சுட்டிக்காட்டி மதிப்பீடு செய்யப்பட்ட வாழ்க்கையின் தரம் எவ்வாறு உயர்ந்துள்ளதென்பதை அறிய வேண்டியுள்ளது. மேலும் மனித மேம்பாட்டைச் சுட்டிக் காட்டுபவைகளும் பாலின மேம்பாட்டுக் குறியீடும் (ம.மே.கு.பா.மே.கு.) மனித மேம்பாட்டு அக்கறைகளை அதன் மேம்பாட்டு உத்தியோடு இணைத்துக்கொள்ள அரசுக்கு உதவுகிறது.

மேலும், மனித மேம்பாட்டுக் குறியீட்டை (ம.மே.கு.)க் கணக்கிட ஐக்கிய நாடுகளின் வளர்ச்சி திட்ட (ஐ.நா.வ.தி) வழிமுறையைப் பின்பற்றுவதற்கான முக்கியக் காரணம், தமிழ்நாட்டில் மனித மேம்பாட்டினை இந்தியாவின் மற்ற மாநிலங்களுடனும் வளரும் வளர்ந்த நாடுகளுடனும் ஒப்பீடு செய்ய வாய்ப்பாயிருப்பதற்காகவே ஆகும். இதே போல பா.மே.கு. பாலின சம உரிமையில் தமிழ்நாட்டின் சாதனைகளை ஒப்பீட்டானதொரு கட்டமைப்புக்குள்ளாக ஆய்வு செய்ய உதவும். எனவே, இந்த இயல் தொடர்ந்து வரும் மனித மேம்பாடு மீதான விரிவானதொரு பின்னணியாகும்.

**மனித மேம்பாட்டுக் குறியிடு (ம.மே.கு.)**

**பெட்டி 2.1 மனித மேம்பாட்டின் நிலை**

ம.மே.குறியீட்டின் மதிப்பு 0-லிருந்து 1 வரையில் வேறுபடுகிறது. ஒரு நாட்டிற்கான மதிப்பு, இயலக்கூடிய பெரும் மதிப்பான 1ஐ (அ) அதன் குறைவை அடையப் பயணம் செய்யும் தொலைவைக் காட்டுகிறது. மற்றும் நாட்டிடையிலான ஒப்பீட்டையும் அனுமதிக்கிறது.

இவ்வாண்டில் ம.மே.கு. தயாரிக்கப்பட்ட 174 நாடுகளில் 46 உயர் மனித மேம்பாடு வகைப்பாட்டில் (ம.மே.கு.) மதிப்பு கிட்டத்தட்ட 0.800-க்கு இணையாக அல்லது

மிகையாக) 93, நடுத்தர மனித மேம்பாட்டு வகைப்பாட்டிலும் (0.500-0.790) மற்றும் 35 குறைவான மனித மேம்பாட்டு வகைப்பாட்டிலும் உள்ளன (0.500-க்கும் குறைவாக)

*(ஆதாரம் - ஐ.நா.வ.தி. 2000)*

## மனித மேம்பாட்டுக் குறியீடு தென்கிழக்கு மற்றும் இந்திய சூழமைவில் தமிழ்நாடு

தமிழ்நாட்டின் ம.மே.கு (2001) இந்தியா முழுமைக்குமான 0.571 உடன் ஒப்பிடுகையில் 0.657 ஆக உள்ளது.[1] உலக ம.மே.கு-ன் தரநிலைகள் 116 மற்றும் 132 தெற்காசிய சூழமைவிலும் தமிழ்நாடு நல்லதொரு இடத்தில் உள்ளது.

தமிழ்நாட்டின் ம.மே.கு (2001) பாகிஸ்தான், நேபாளம், பூடான் மற்றும் வங்கதேசம் ஆகிய நாடுகளின் தே.ம.கு.களின் மதிப்புகளான முறையே 0.508, 0.463, 0.454 மற்றும் 0.440 ஆகியவற்றுடனும் மற்றும் உலக தரநிலைகளான 138, 144, 145 மற்றும் 150 ஆகியவற்றுடன் ஒப்பிடுகையில் நல்ல சாதனையை எட்டியுள்ளது. ம.மே.கு. 0.716 மற்றும் 0.721-களைக் கொண்ட மாலத்தீவுகள் இலங்கை ஆகிய இரு நாடுகள் மட்டுமே நன்கு செயல்பட்டுள்ளன. உலக அளவில் அவற்றின் தர நிலைகள் 93 மற்றும் 90.

தமிழ்நாட்டின் நல்ல செயலாக்கம் (நடுத்தர மனித மேம்பாட்டுத் தரநிலை) மற்றும் அதன் இந்திய சராசரிக்கும் மேலான நிலையை மே.கு-ஐத் தனித்தனியாய்ப் பிரிப்பதன் மூலம் நன்கு புரிந்து கொள்ளலாம். தமிழ்நாட்டின் தனி நபரின் வருமானமும் தேசீய சராசரியைக் காட்டிலும் மிகையானதாயும் இந்தியாவின் பெரிய 15 மாநிலங்களில் 15-ஆவது இடத்தைப் பெற்றுள்ளது. தமிழ்நாடு கேரளாவுக்கு அடுத்தபடியான மிகக்குறைவான கருத்தரிக்கும் விகிதத்தைப் பெற்றுள்ளது. பிறப்பின்போது ஆயுட்கால எதிர்ப்பார்ப்பு, ஆண்களுக்கும், பெண்களுக்கும் முறையே 64.85 மற்றும் 65.20 ஆக இருந்தது. கல்வியறிவு வீதம் கடந்த ஆண்டுகளில் அதிகரித்து 2001-ல் 73.47 விழுக்காடு நிலையை எட்டியது. இது கேரளாவுக்கும் மகாராஷ்ட்ராவுக்கும் அடுத்த நிலையில் உள்ளது.

இந்திய அரசு திட்டக்குழுவால் தயாரிக்கப்பட்ட தேசீய மனித மேம்பாட்டு அறிக்கை தமிழ்நாட்டை 0.531 மதிப்புள்ள ம.மே.கு. உடன் இந்தியாவின் 15 பெரிய மாநிலங்களில்[2] மூன்றாவது இடத்தில் வைத்துள்ளது. இருப்பினும் தமிழ்நாடு மொத்த இந்திய சராசரியைக் காட்டிலும் மிக அதிகமாயிருந்தாலும் அது இன்னும் சில மாநிலங்களுடன் ஒப்பிடுகையில் பின்தங்கியேயுள்ளது. எடுத்துக்காட்டாய், கல்வியறிவிலும் பிறப்பின்போது எதிர்பார்க்கும் ஆயுட்காலத்திலும் கேரளா, தமிழ்நாட்டைக் காட்டிலும் மிக முன்னிலையில் உள்ளது. மகாராஷ்ட்டிரா வருமானத்திலும், பிறப்பின்போது எதிர்பார்ப்பு ஆயுட்காலத்தில் முன்னிலையில் உள்ளது. எனவே அடுத்த பத்தாண்டுகளில் தமிழ்நாட்டின் முனைப்பான கவனம், நலவாழ்வு மற்றும் கல்வியில் கேரளாவின்

---

[1]தமிழ்நாட்டின் ம.மே.கு.டைத் தயாரிக்கப் பின்வரும் அடிப்படை விவரங்கள் பயன்படுத்தப்பட்டன. 1998-99-ம் ஆண்டுக்கான மாவட்டவாரி வருமான மதிப்பீடுகள் (1993-94 விலைவாசிப்படி புதிய தொகுதிகள்) பொருளியல் (ம) புள்ளியியல் இயக்ககத்தால் மதிப்பீடு செய்யப்பட்டது). 1977-ஆம் ஆண்டுக்கான, பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்பு (பி.ஆ.எ) டேனிஷ் பன்னாட்டு வளர்ச்சி உதவி நலவாழ்வு திட்டத்தால் நடத்தப்பட்ட முக்கிய நிகழ்வுகளின் கணக்கெடுப்புமூலம் கணக்கிடப்பட்டது. 2001-க்கான கல்வியறிவு வீதங்கள் மற்றும் 1998-99-க்கான மொத்த சேர்க்கை விகிதங்கள் (மொ.சே.27).

சாதனை அடைவு நிலைகளை எட்ட வேண்டும் என்பதாயிருப்பதோடு வறுமையையும், ஏற்றத் தாழ்வையும் குறைக்க, பஞ்சாபும், மகாராஷ்ட்டிராவின் மாநில மொத்த உற்பத்தி நிலைகளுக்குத் தன் நிலையை உயர்த்துவதாயுமிருக்க வேண்டும்.

**மனித மேம்பாட்டுக் குறியீடு மாவட்டங்களிடை மாறுபாடுகள்**

ஐக்கிய நாடுகளின் வளர்ச்சித் திட்ட முறையைப் பயன்படுத்தி, 29 மாவட்டங்களுக்கு ம.மே.கு-கள் தயாரிக்கப்பட்டுள்ளது. மேலே சுட்டிக்காட்டியுள்ளபடி, மாநிலத்தின் ம.மே.கு. 0.654 (அட்டவணை 2.2) மாவட்ட அளவில் இது 0.757-லிருந்து 0.584 வரை மாறுபடுகிறது. சென்னை மாவட்டம் உச்ச நிலையிலும் தருமபுரி தாழ்ந்த நிலையிலும் உள்ளது. சென்னையின் உயர் தனி நபர் வருமானம் அதன் ம.மே.கு. மதிப்பைக் கணிசமான அளவு உயர்த்தியுள்ளது. சென்னையின் கல்வியறிவு வீதமும், எதிர்பார்ப்பு ஆயுட்காலமும்கூட மிக உயர்வானதாயுள்ளது. இருப்பினும், அதன் நகர்ப்புற இயல்பின் காரணமாய் சென்னை மாவட்டம், தமிழ்நாட்டின் ஒரு சார்பு மாவட்டமாய் எடுத்துக் கொள்ளப்படமாட்டாது.

முதல்தர நிலை ம்மாவட்டமான சென்னையின் ம.மே.கு. மதிப்புக்கும் இரண்டாம் தரநிலை மாவட்டமான கன்னியாகுமரிக்கும் (ம.மே.கு. 0.045) இடையிலான இடைவெளி கணிசமாய் உள்ளது. ஏனைய மாவட்டங்களைப் பொறுத்தவரை சாதனையின் இடைவெளி மிக அகன்றதாயில்லை. 11 மாவட்டங்கள் மாநில ம.மே.கு.ஐ. மதிப்பைவிடவும் அதிகமான ம.மே.கு. மதிப்பைப் பெற்றுள்ளன.

ஒவ்வொரு சுட்டுக்கும் தனித்தனியாய் மாவட்டங்களின் ம.மே. நிலையின் ஒரு மொத்தக் காட்சியை முன்னிலைப்படுத்த முயற்சி மேற்கொள்ளப்பட்டது. மிகச் சிறப்பாகச் செயலாற்றிய 5 மாவட்டங்களும், மிக மோசமாக செயலாற்றிய 5 மாவட்டங்களும் கண்டறியப்பட்டன. (அட்டவணை 2.1-ஐப் பார்க்கவும்)

குறியீடுகளைக் கணக்கிட பரிசீலிக்கப்பட்ட எல்லா மனித மேம்பாட்டைச் சுட்டுகளிலும் மாநிலத்தின் மிகச்சிறந்த 5 மாவட்டங்களின் பட்டியலில் சென்னை மாவட்டம் மட்டுமே இடம் பெற்றுள்ளது. அடுத்து, கல்வியறிவு சேர்க்கை விகிதம் மற்றும் நீண்ட ஆயுட்காலம் ஆகியவற்றில் கன்னியாகுமரியும், அதைத் தொடர்ந்து கல்வியறிவு சேர்க்கை விகிதத்தில் தூத்துக்குடி மாவட்டமும், தனி ஒருவர் வருமானம் மற்றும் நீண்ட ஆயுட் காலத்தில் கோவையும், நீலகிரி கல்வியறிவிலும் நீண்ட ஆயுட்காலத்திலும், காஞ்சிபுரம் தனி நபர் வருமானத்திலும் நீண்ட ஆயுட்காலத்திலும், தருமபுரி கல்வியறி வீதத்திலும் மொத்த சேர்க்கை விகிதத்திலும் (மொ.சே.வி) மிகக் குறைவான தரநிலையிலும், விழுப்புரம் தனி நபர் வருமானத்தில் மிகக் குறைவான தரநிலையிலும் உள்ளன.

மனித மேம்பாட்டின் மூன்று சுட்டுகளிலும் சாதனை நிலையின் ஒரு நுண்ணிய ஆய்வு, அவற்றில் ஒவ்வொன்றிற்கிடையிலிருக்கும் உறவின் உள் ஆழத்தை வெளிப்படுத்துவதை தெரிவிக்கிறது. உயர் வாழ்க்கைத் தரத்தை அடைவதில் வருமானத்தின் முக்கியத்துவம் நன்கறிந்ததே. வருமானம் மக்களுக்குப் பொருள்களையும் பணிகளையும் வாங்கும் தகுதியை அளிக்கிறது. வருமானம் அதிகரிக்க, நுகர்வு விருப்புரிமையும் விரிவடைகிறது. இருப்பினும் உயர் கல்வியறிவும் நலவாழ்வும் குறைவான தனி நபர் வருமானத்தின் மூலம் பெற முடியும். இவ்வகைக்கு

கன்னியாகுமரியே மாதிரி எடுத்துக்காட்டாயிருக்கிறது. இதேபோன்று, இதற்கு எதிரானதும் உண்மையே! எடுத்துக்காட்டாய் சேலம், பெரம்பலூர் மாவட்டங்களில் தனி நபர் வருமானம் ஒப்பிடுகையில் உயர்வாயிருந்த போதிலும் கல்வியறிவு, நலவாழ்வில் அவற்றின் செயலாக்கம் ஒப்பீட்டடிப்படையில் குறைவு.

### அட்டவணை - 2.1 ம.மே.சுட்டிக்காட்டும் கருவிகளில் (ம.மே.சு.க) உச்ச மற்றும் அடிமட்ட 5 மாவட்டங்கள்

| சுட்டிக்காட்டும் கருவிகள் | உச்சம் 5 | தாழ்வு 5 |
|---|---|---|
| தனி ஒருவர் வருமானம் | காஞ்சிபுரம் | தஞ்சாவூர் |
| | சென்னை | திருவாரூர் |
| | கோயம்புத்தூர் | சிவகங்கை |
| | மதுரை | திருவண்ணாமலை |
| | தூத்துக்குடி | விழுப்புரம் |
| கல்வியறிவு விகிதம் | கன்னியாகுமரி | பெரம்பலூர் |
| | சென்னை | ஈரோடு |
| | தூத்துக்குடி | சேலம் |
| | திருச்சி | விழுப்புரம் |
| | மதுரை | தருமபுரி |
| ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை விகிதம் | சென்னை | விருதுநகர் |
| | தூத்துக்குடி | காஞ்சிபுரம் |
| | மதுரை | புதுக்கோட்டை |
| | கன்னியாகுமரி | விழுப்புரம் |
| | தேனி | தருமபுரி |
| பிறப்பின் போது எதிர்பார்ப்பு ஆயுட்காலம் | சென்னை | தஞ்சாவூர் |
| | கன்னியாகுமரி | தேனி |
| | கோயம்புத்தூர் | மதுரை |
| | காஞ்சிபுரம் | பெரம்பலூர் |
| | நீலகிரி | தருமபுரி |

[2]ம.மே.கு.-ஐக் கணக்கிட தேசீய ம.மே. அறிக்கையில் பயன்படுத்தப்பட்ட அளவுகோல்கள் நீண்ட ஆயுட்காலம், கல்வி, வள ஆதாரங்கள் மீதான கட்டுப்பாடு ஆகியன தமிழ்நாட்டுக்கு 1981-ல் ம.மே.குறியீட்டின் தரநிலை ஏழாவது 1991, 2001-ல் இது மூன்றாவது தர நிலைக்கு உயர்ந்தது.

இதே போன்ற குறிப்பிடும்படியான சிறப்பியல்பு மாநில அளவிலும் கூடக் காணப்படுகிறது. மகாராஷ்ட்ரா, பஞ்சாப் போன்ற மாநிலங்களின் தனி நபர் வருமானம் உண்மையாகவே அதிகமாயுள்ளது. ஆனால் இந்த மாநிலங்கள் சமூகப்பிரிவுகளில் - கல்வியறிவு மற்றும் நலவாழ்வில் - குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தைப் பெறவில்லை. ஆனால் ஒப்பீட்டடிப்படையில் குறைவானதொரு தனி நபர் வருமானத்தைப் பெற்றுள்ள கேரளம் மனித மேம்பாட்டில் வேகமான வளர்ச்சியைப் பெற்றுள்ளது. ஆகவே, இங்கு குறிப்பிடத்தக்க பொருள் என்னவெனில், மக்களின் உயர் வருமான நிலைகள் அவசியம் என்பதில் ஐயமேதுமில்லை. ஆயினும், உயர் வருமான நிலைகள் மக்களால், அவர்களுடைய கல்வியறிவு மற்றும் நலவாழ்வு தகுதி நிலையை மேம்படுத்தப் பயன்படுத்தப் படுவது உறுதி செய்ய வேண்டும். கல்வியும், நலவாழ்வுப் பணிகளும் மக்களுக்குப் பெற இயலக்கூடிய நிலையிலிருப்பது மாநிலங்கள், அவற்றின் மனித மேம்பாட்டு நிலையை மேம்படுத்துவதில் மிக முக்கியமானது.

## பாலின மேம்பாட்டுக் குறியீடு

### *பாலின மேம்பாட்டுக் குறியீடு மாவட்டங்களிடையே மாறுபாடுகள்*

பாலின மேம்பாட்டுக் குறியீடு என்பது பாலின மேம்பாட்டு நிலைகளை ஒப்பீடு செய்வதில் பயனுள்ளதெனக் கண்டறியப்பட்ட ஒரு சுருக்க அளவாகும். அது பாலின சமஉரிமையின் அளவை மதிப்பிட, பாலின மேம்பாட்டுக் குறியீட்டையும் (பா.மே.கு.) ம.மே.கு ஐயும் ஒப்பீடு செய்யவும் பயன்படுகிறது. தமிழ்நாட்டின் பா.மே.கு. (2001) - 0.654. மொத்த இந்திய சராசரி மதிப்பு 0.560 (மனித மேம்பாட்டறிக்கை 2002)[3] மொத்தத்தில் நாட்டிலிருப்பதைக் காட்டிலும் தமிழ்நாட்டின் பாலின சம உரிமையில் சாதனை மேலானதாயிருப்பதை இது காட்டுகிறது. தமிழ்நாட்டிலிருக்கும் மாவட்டங்களுக்கான பா.மே.கு-ன் மதிப்பு 0.766-லிருந்து 0.582 வரை வேறுபடுகிறது. (அட்டவணை - 2.2) மீண்டும் சென்னை, மிகச்சிறந்தும், தருமபுரியும் (விழுப்புரமும்) மிகக் குறைவாகவும் செயல்பட்டுள்ளன. நன்கு செயல்படும் மற்ற மாவட்டங்கள் கன்னியாகுமரி, தூத்துக்குடி, காஞ்சிபுரம் மற்றும் கோயம்புத்தூர். இதே மாவட்டங்கள் ம.மே.கு.-லும் நன்கு செயல்பட்டுள்ளன.

அட்டவணை - 2.3-ல் 1991-க்கு பா.மே.கு.ன் பல்வேறு பிரிவுகளுக்கான மாவட்டங்களின் உச்ச, தாழ்வு தரநிலைகள் தரப்பட்டுள்ளன. பெண்களின் தனி நபர் வருமானம் ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை விகிதம் (மொ.சே.வி) மற்றும் பிறப்பின்போது ஆயுள் எதிர்பார்ப்புக் காலத்தில் முதல்தர நிலையிலும் கல்வியறிவு விகிதத்தில் இரண்டாவது தர நிலையிலும் உள்ளது. கல்வியறிவு சேர்க்கை விகிதங்கள் மற்றும் பிறப்பின் போது ஆயுட்கால எதிர்பார்ப்பு ஆகியவற்றைப் பொறுத்தவரையில் தருமபுரி மாவட்டத்தின் நிலை மிகக் குறைவானதாய் உள்ளது. விழுப்புரம் மாவட்டமும் கூட தனி நபர் வருமானம், கல்வியறிவு விகிதம் மற்றும் பிறப்பின்போது ஆயுள் எதிர்பார்ப்பு காலம் ஆகியவற்றில் மிகக்குறைவாயிருக்கும் 5 மாவட்டங்களில் ஒன்றாயிருக்கிறது.

[3]இந்தியாவின் பா.மே.கு. அதன் ம.மே.கு.-ஐப் போன்றே 2001-ஆம் ஆண்டின் கல்வியறிவு விகிதத்தைப் பயன்படுத்தி மறுமதிப்பீடு செய்யப்படவில்லை. அந்தப் பொருளில் அதைத் தமிழ்நாட்டின் 2001-ஆம் ஆண்டின் பா.மே.கு. உடன் கண்டிப்பாய் ஒப்பீடு செய்ய முடியாது.

## அட்டவணை - 2.2 மாவட்ட வாரியான ம.மே.கு. மற்றும் பா.மே.கு. மதிப்புகள் 2001

| மாவட்டம் | ம.மே.கு.மதிப்பு | பா.மே.கு.மதிப்பு |
|---|---|---|
| சென்னை | 0.757 | 0.766 |
| காஞ்சிபுரம் | 0.712 | 0.710 |
| திருவள்ளூர் | 0.654 | 0.651 |
| கடலூர் | 0.644 | 0.643 |
| விழுப்புரம் | 0.587 | 0.582 |
| வேலூர் | 0.658 | 0.655 |
| திருவண்ணாமலை | 0.612 | 0.608 |
| சேலம் | 0.626 | 0.625 |
| நாமக்கல் | 0.636 | 0.631 |
| தருமபுரி | 0.584 | 0.582 |
| ஈரோடு | 0.658 | 0.656 |
| கோயம்புத்தூர் | 0.699 | 0.697 |
| நீலகிரி | 0.685 | 0.686 |
| திருச்சிராப்பள்ளி | 0.671 | 0.671 |
| கரூர் | 0.647 | 0.641 |
| பெரம்பலூர் | 0.596 | 0.592 |
| தஞ்சாவூர் | 0.630 | 0.629 |
| நாகப்பட்டினம் | 0.654 | 0.652 |
| திருவாரூர் | 0.637 | 0.633 |
| புதுக்கோட்டை | 0.618 | 0.615 |
| மதுரை | 0.661 | 0.661 |
| தேனி | 0.628 | 0.628 |

*(தொடர்ச்சி)*

| மாவட்டம் | ம.மே.கு.மதிப்பு | பா.மே.கு.மதிப்பு |
|---|---|---|
| திண்டுக்கல் | 0.641 | 0.638 |
| ராமநாதபுரம் | 0.629 | 0.626 |
| விருதுநகர் | 0.651 | 0.649 |
| சிவகங்கை | 0.640 | 0.635 |
| திருநெல்வேலி | 0.658 | 0.656 |
| தூத்துக்குடி | 0.703 | 0.703 |
| கன்னியாகுமரி | 0.711 | 0.708 |
| மாநிலம் | 0.657 | 0.654 |
| இந்தியா | 0.571 | 0.553 |

### ம.மே.கு-க்கும் பா.மே.கு-க்கும் இடையில் உள்ள தொடர்பு

மாநில அல்லது மாவட்ட நிலைகளில் ம.மே.கு. மதிப்புகளுக்கும் பா.மே.கு. மதிப்புக்குமிடையே மிகுந்த வேறுபாடில்லை என்பது கவனத்தை ஈர்ப்பதாயுள்ளது. ஒரு மாவட்டத்தில் பா.மே.கு. தரநிலை, ம.மே.குன் தரநிலையைக் காட்டிலும் குறைவாயிருந்தால், அம்மாவட்டத்திலிருக்கும் பெண்கள், ஆண்களைக் காட்டிலும் சாதனையளவில் குறைவாயிருப்பதைக் காட்டுகிறது. ஒரு மாவட்டத்தில் பா.மே.கு. மற்றும் ம.மே.கு. தர நிலைகள் ஒரே மாதிரியாயிருந்தால் அது ம.மே-ல் பாலின சம உரிமையைச் சுட்டிக்காட்டுவதாயமையும்.

அட்டவணை - 2.2, 2001-ல் மாநிலத்தின் எல்லா மாவட்டங்களுக்குமான ம.மே.கு மற்றும் பா.மே.கு. மதிப்புகளையும் அளிக்கிறது.

**அட்டவணை - 2.3 : பாலின மேம்பாட்டுச் சுட்டுகளில் உச்ச மற்றும் தாழ்வு 5 மாவட்டங்கள்**

| சுட்டிக்காட்டிகள் | உச்சம் 5 | தாழ்வு 5 |
|---|---|---|
| | பெண்கள் | பெண்கள் |
| 1 | 2 | 3 |
| தனி நபர் வருமானம் | சென்னை | தஞ்சாவூர் |
| | காஞ்சிபுரம் | திருவாரூர் |
| | கோயம்புத்தூர் | சிவகங்கை |

*(தொடர்ச்சி)*

| 1 | 2 | 3 |
|---|---|---|
| | மதுரை | திருவண்ணாமலை |
| | தூத்துக்குடி | விழுப்புரம் |
| கல்வியறிவு | கன்னியாகுமரி | சேலம் |
| | சென்னை | விழுப்புரம் |
| | தூத்துக்குடி | பெரம்பலூர் |
| | நீலகிரி | திருவண்ணாமலை |
| | திருச்சி | தருமபுரி |
| ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை விகிதம் | சென்னை | திருவள்ளூர் |
| | மதுரை | சேலம் |
| | கன்னியாகுமரி | விழுப்புரம் |
| | தூத்துக்குடி | காஞ்சிபுரம் |
| | வேலூர் | தருமபுரி |
| பிறப்பின் போது ஆயுள் எதிர்பார்ப்புக் காலம் | சென்னை | திண்டுக்கல் |
| | கன்னியாகுமரி | தேனி |
| | நீலகிரி | மதுரை |
| | காஞ்சிபுரம் | பெரம்பலூர் |
| | ஈரோடு | தருமபுரி |

## மாவட்டங்களின் வகைப்பாடு

வசதியான அர்த்தமுள்ள பகுப்பாய்வின் பொருட்டு மாவட்டங்களின் ம.மே.கு.மும் பாலின மேம்பாட்டுக் குறியீட்டு (பா.மே.கு.) மதிப்புகள் உயர்ந்த, நடுத்தர மற்றும் குறைவான என மூன்று வகைகளாய் பிரிக்கப்பட்டுள்ளன. மேலும், விளக்குவதென்றால் (அ)வும் (ஈ)யும் குறியீடுகளின் மிக உயர்ந்த மற்றும் மிகக் குறைவான மதிப்பைக் குறிப்பிட்டுக் காட்டினால், அப்போது (ஆ)வும் (இ) யும் 'X' மாவட்டங்களின் மதிப்புகளின் எண்களுக்கு சராசரிக்கு முறையே மேலாகவும் கீழாகவும் உள்ள மாவட்டங்களுக்கான குறியீடுகளின் எண்களுக்கு சராசரி மதிப்புகளாக பெறப்பட்டன. இவ்விதமாய் பெறப்பட்ட மூன்று வகைகள் :

1. அ மற்றும் ஆ
2. ஆ மற்றும் இ
3. இ மற்றும் ஈ

ஆகியவற்றுக்கிடையே இடம் பெறும் மாவட்டங்களால் அமைக்கப்படும் மாவட்டங்களை மூன்று வகைகளாகப் பிரிக்கும் இந்த நடைமுறைப் பழக்கம் ம.மே.கு மற்றும் பா.மே.கு மதிப்புகளுக்குப் பின்பற்றப்படுகின்றது. இவ்விதம் எல்லா மாவட்டங்களும், மூன்று நிலை அளவில் அதாவது உயர் (உ) நடுத்தர (ந) மற்றும் குறைவான (கு) என மனித பாலின மேம்பாட்டு நிலைகளுக்கேற்ப பிரிக்கப்பட்டுள்ளன.

அதே மாவட்டங்கள் ம.மே.கு. மற்றும் பா.மே.கு ஆகிய இரண்டிலும் நன்கு செயல்படுகின்றன. நன்கு செயல்படும் மாவட்டங்களில் சென்னை, கன்னியாகுமரி, தூத்துக்குடி, காஞ்சிபுரம், கோயம்புத்தூர் மற்றும் நீலகிரி மாவட்டங்கள் அடங்கும். குறைவாய் செயல்படும் மாவட்டங்கள். புதுக்கோட்டை, திருவண்ணாமலை, விழுப்புரம் மற்றும் தருமபுரி ஆகியன மற்ற 19 மாவட்டங்களும் நடுத்தரமானவை என வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றில் சில திருவள்ளூர், கடலூர், திருச்சி, மதுரை, திருநெல்வேலி, ஈரோடு, வேலூர், தேனி, சேலம், தஞ்சாவூர், திண்டுக்கல் மற்றும் நாமக்கல் ஆகியன.

**அட்டவணை - 2.4 : மாவட்டங்களின் ஒப்பீடு**

| | மாவட்டங்கள் |
|---|---|
| 1 | 2 |
| பாலின மே.கு.ம.மே. தரநிலை குறியீட்டுத் தரநிலையைக் காட்டிலும் குறைவு | 1. கடலூர் (-1) |
| | 2. வேலூர் (-1) |
| | 3. பெரம்பலூர் (-1) |
| | 4. மதுரை (-1) |
| | 5. தேனி (-1) |
| பா.மே.கு. தரநிலை ம.மே.கு. தரவுநிலைக்கு நிகரான | 1. சென்னை |
| | 2. காஞ்சிபுரம் |
| | 3. திருவள்ளூர் |
| | 4. விழுப்புரம் |
| | 5. திருவண்ணாமலை |
| | 6. தருமபுரி |
| | 7. கோயம்புத்தூர் |
| | 8. நீலகிரி |
| | 9. திருச்சி |
| | 10. கரூர் |

*(தொடர்ச்சி)*

| 1 | 2 |
|---|---|
| | 11. தஞ்சாவூர் |
| | 12. நாகப்பட்டினம் |
| | 13. புதுக்கோட்டை |
| | 14. ராமநாதபுரம் |
| | 15. விருதுநகர் |
| | 16. தூத்துக்குடி |
| | 17. கன்னியாகுமரி |
| பா.மே.கு. தரநிலை ம.மே.கு தரநிலையைக் காட்டிலும் அதிகம் | 1. சேலம் (1) |
| | 2. நாமக்கல் (1) |
| | 3. ஈரோடு (1) |
| | 4. திருவாரூர் (1) |
| | 5. திண்டுக்கல் (1) |
| | 6. சிவகங்கை (1) |
| | 7. திருநெல்வேலி (1) |

*குறிப்பு : அடைப்புக் குறிகளுக்குள்ளிருக்கும் எண்ணிக்கை பா.மே. தரநிலை - ம.மே.கு. தரநிலையைச் சுட்டிக்காட்டுகிறது.*

இவ்வாறாக, இவ்வியல் மனித மேம்பாட்டுக் கொள்கைக்கு அடிப்படையான காரணமாயிருப்பதில் உயர் வருமானம் மட்டுமே ஒரு முடிவல்ல என்பதை வலியுறுத்தி முடிவுறுகிறது. இந்த அதிகரித்த வருமானத்தை அதன் மக்களின் ஒட்டுமொத்த நிலையை மேம்படுத்துவதில் ஒரு நாடு அல்லது மாநிலம் எவ்வாறு பயன்படுத்திக் கொள்கிறது என்பதே முக்கியம். 14 மாவட்டங்கள் தனி ஒருவரின் மொத்த உள்நாட்டு உற்பத்தி (மொ.உ.உ.) தரநிலையைக் காட்டிலும் உயர்வானதொரு ம.மே.கு-ன் தரநிலையைப் பெற்றுள்ளன. இதன் விளைவாக இம்மாவட்டங்களில் உயர் வருமானம் மிகவும் பயனளிக்கும் வகையில் மனித மேம்பாடாய் மாற்றப்பட்டுள்ளது. 15 மாவட்டங்கள் தனி ஒருவர் மொத்த உள்நாட்டு உற்பத்தி தரநிலையைக் காட்டிலும் குறைவான ம.மே.கு தரநிலையைப் பெற்றுள்ளது. மேலும் இம்மாவட்டங்களில் உருவாக்கப்பட்ட வருமானம் மனித மேம்பாட்டை அதிகரிக்க முழுமையாகப் பயன்படுத்தப்படவில்லை.

**அட்டவணை - 2.5 : மாவட்ட மொ.உ.உ. மற்றும் மாவட்ட ம.மே.குக்கிடையிலான ஒப்பீடு**

| மொத்த உ.உ.தனி நபர் தரநிலையைக் காட்டிலும் குறைவான ம.மே.கு. தரநிலையைக் கொண்ட மாவட்டங்கள் | மொத்த உ.உ. தனி நபர் தரநிலையைக் காட்டிலும் உயர்வான ம.மே.கு. தரநிலையைக் கொண்ட மாவட்டங்கள் |
|---|---|
| 1 | 2 |
| 1. தருமபுரி | 1. சென்னை |
| 2. ஈரோடு | 2. திருவள்ளூர் |
| 3. கோயம்புத்தூர் | 3. கடலூர் |
| 4. பெரம்பலூர் | 4. விழுப்புரம் |
| 5. புதுக்கோட்டை | 5. திருவ்ண்ணாமலை |
| 6. மதுரை | 6. நீலகிரி |
| 7. திண்டுக்கல் | 7. திருச்சி |
| 8. காஞ்சிபுரம் | 8. தஞ்சாவூர் |
| 9. வேலூர் | 9. நாகப்பட்டினம் |
| 10. சேலம் | 10. திருவாரூர் |
| 11. நாமக்கல் | 11. சிவகங்கை |
| 12. விருதுநகர் | 12. திருநெல்வேலி |
| 13. கரூர் | 13. தூத்துக்குடி |
| 14. தேனி | 14 கன்னியாகுமரி |
| 15. இராமநாதபுரம் | |

# இயல்

# 3

## வேலைவாய்ப்பு, வருமானம் மற்றும் வறுமை

மனித மேம்பாட்டைத் தீர்மானிப்பதில் முக்கியமானவை உற்பத்திப் பணியில் ஈடுபட்டிருக்கும் மக்கட்தொகையின் வீதம், வேலைவாய்ப்பின் தரம், பணி செய்யும் மக்கட்தொகையால் பெறப்படும் உழைப்பூதியம் ஆகியன. இலாபகரமான வேலைக்கான போதிய வாய்ப்பில்லாமையால், மக்கள் குறைந்த ஊதியம் அளிக்கக்கூடிய வேலைகளை ஏற்க நேரிடுகிறது. இந்நிலை மக்களை வறுமை நிலைக்குத் தள்ளி விடுகிறது. இவ்விதமாய் வருமானம், வறுமை மற்றும் வேலைவாய்ப்பு ஆகியவற்றிற்கிடையில் நெருங்கிய தொடர்புள்ளது. மேலும், பொருளாதார வளர்ச்சி மொத்த உ.உ. (வருமானம்) மற்றும் வேலை வாய்ப்பு ஆகியவற்றின் கட்டமைப்பு மாற்றங்களுடன் மாற்றமுடியாதபடி இணைந்திருக்கிறது. வளர்ந்து வரும் ஒரு பொருளாதாரத்தின் தனி இயல்பு, மொ.உ.உ.யில் முதன்மைத் துறையின் பங்கு குறைந்து வரும் ஒரு போக்கே. பொருளாதாரப் பரவலாக்கலின் செய்முறையில் தொழிலாளர்களின் பங்கில் முதன்மைத் துறையிலிருந்து இடைநிலைக்கும் மூன்றாவதான துறைகளுக்குமாய் ஒரு மாற்றமிருப்பதை நாம் எதிர்பார்க்கலாம்.

தமிழ்நாட்டில் வருமானம் மற்றும் வேலை வாய்ப்புகளில் வட்டக்கூறு சார்ந்த பங்குகளின் போக்குப் பற்றிய ஆய்வு, முதன்மைப் பகுதியின் வருமானத்தில் பங்கில் ஒரு பின்தங்கிய நிலை இருந்தபோதிலும், அதனால், வேலைவாய்ப்பின் பங்கில் ஒரு குறிப்பிடும்படியான மாற்றம் எதுவும் நிகழவில்லை என்பதைக் காட்டுகிறது. மிகக் கணிசமானதொரு தொழிலாளர் மக்கட்தொகை (ஏறத்தாழ 50 விழுக்காடு) முதன்மைப்பகுதியையே தொடர்ந்து நம்பி உள்ளனர். இதன் விளைவாய் வேளாண் பிரிவை நம்பியிருப்போரின் சராசரி வருமானம் இடைநிலை, மூன்றாவதான பிரிவுகளில் பணிபுரிபவர்களுடைய வருமானத்தைக் காட்டிலும் கணிசமாய்க் குறைவாய் உள்ளது. கிராமப்புறங்களில் பரவலாய் வறுமை நிலை நிலவுவதற்கு முக்கிய காரணமாக வேளாண் பிரிவில் தொழிலாளரின் குறைவான உற்பத்தித் திறனும் வேலைவாய்ப்பின் பருவக்காலத் தன்மையுமே ஆகும். வேலைவாய்ப்பு, வருமானம் மற்றும் வறுமை ஆகியவற்றிற்கிடையேயுள்ள தொடர்புகளை நன்கு புரிந்து கொள்வதற்காக மாநிலத்தில் கடந்த காலத்தில் நிகழ்ந்த வேலை வாய்ப்பு நிலை மற்றும் கட்டமைப்புகளின் மாற்றங்களைப் பற்றி விரிவானதொரு பகுப்பாய்வை இந்தப் பிரிவு மேற்கொண்டுள்ளது.

### வேலைவாய்ப்பு

தமிழ்நாட்டில் 2001-ல் தொழிலாளரின் மக்கட்தொகை 27.8 மில்லியனாகும். இது 1991-ல் இருந்த 24.2 மில்லியனைக் காட்டிலும் சற்றேறக்குறைய 3.6 மில்லியன் அதிகமாகும். அட்டவணை 3.1-ல்

காணப்படுவதைப் போல், **தொழிலாளர் பங்கேற்பு விகிதம் (தொ.ப.வி.)** அதாவது மொத்த மக்கட் தொகையில் தொழிலாளர்களின் விகிதம் உள்ளபடியே 1961-2001 காலத்தில் 45.7-லிருந்து 44.8 விழுக்காடாய்க் குறைந்தது. 1981-க்கும் 2001-க்குமிடையில், 41.7 விழுக்காட்டிலிருந்து 44.8 விழுக்காட்டிற்கு ஒரு ஏறுமுகப் போக்கு காணப்பட்டது.

எனினும் 2001 மக்கட் தொகைக் கணக்கெடுப்பில் கவலையுறத்தக்க காரணமாயிருந்த பொருள் யாதெனில் 1991-ல் 1.4 மில்லியனாயிருந்த ஓரளவு வேலை பெற்ற தொழிலாளரின் எண்ணிக்கை 2001-ல் 4.1 மில்லியனாய் உயர்ந்துள்ளது ஆகும். இக்காலத்தில் தொழிலாளரின் பங்கேற்பு விகிதத் (தொ.ப.வி.)தில் உயர்வுக்குக் காரணம் பெரும்பாலும் முக்கியத் தொழிலாளருக்கெதிராய், சிறிதளவு வேலை பெற்ற தொழிலாளர்களின் எண்ணிக்கையில் ஏற்பட்ட ஒரு உயர்வே. முக்கியத் தொழிலாளர்களின் எண்ணிக்கை 22.8 மில்லியனிலிருந்து 23.7 மில்லியன் அதாவது ஒரு மில்லியனுக்கும் குறைவாகவே அதிகரித்தது.

## அட்டவணை - 3.1 : தமிழ்நாட்டில் மொத்தத் தொழிலாளர்களும் தொழிலாளர்களல்லாதவர்களும்

(மில்லியன்)

| வகை | 1961 | % | 1981 | % | 1991 | % | 2001 | % |
|---|---|---|---|---|---|---|---|---|
| தொழிலாளர்கள் | 15.4 | 45.7 | 20.2 | 41.7 | 24.2 | 43.3 | 27.8 | 44.76 |
| 1. முக்கிய தொழிலாளர்கள் | - | - | 19.0 | 39.2 | 22.8 | 40.8 | 23.6 | 38.00 |
| 2. சிறுபான்மை தொழிலாளர்கள் | - | - | 1.2 | 2.5 | 1.4 | 2.5 | 4.12 | 6.63 |
| தொழிலாளர் அல்லாதோர் | 18.3 | 54.3 | 28.3 | 58.4 | 31.7 | 56.7 | 34.2 | 55.06 |
| மக்கட்தொகை | 33.7 | 100.0 | 48.5 | 100.0 | 55.9 | 100.0 | 62.11 | 100.0 |

*ஆதாரங்கள் : மக்கட்தொகைக் கணக்கெடுப்புகள் 1961, 1981, 1991 மற்றும் 2001*

2001-ல் தொழிலாளர் பங்கேற்பு விகிதம் ஆண்கள் 58.96 விழுக்காடும் பெண்களுக்கு 31.32 விழுக்காடும் ஆகும். தமிழ்நாடு மிக அதிக ஆண் தொழிலாளர் பங்கேற்பு விகிதத்தை (58.5 விழுக்காடு) பெற்றிருந்தது (அட்டவணை 3.2) அகில இந்தியப் புள்ளிவிவரம் 51.93 விழுக்காடு. பல மாநிலங்கள் மற்றும் அகில இந்தியாவினுடையதைக் காட்டிலும் (25.68 விழுக்காடு) பெண் தொழிலாளர்கள் பங்கேற்பு விகிதமும் (தொ.ப.வி) 31.32 விழுக்காடு பெற்று கணிசமான அளவு அதிகமாயிருந்தது.

**அட்டவணை - 3.2 : தமிழ்நாட்டில் தொ.ப.வி.மும் தொழிலாளர் எண்ணிக்கையும்**

| கிராமப்புறம் / நகர்ப்புறம் | தொ.ப.வி (விழுக்காடு) | | | தொழிலாளர் (மில்லியன்) | | |
|---|---|---|---|---|---|---|
| | 1981 | 1991 | 2001 | 1981 | 1991 | 2001 |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| கிராமப்புறம் | | | | | | |
| ஆண் | 59.24 | 58.28 | 59.38 | 9.67 | 10.82 | 10.40 |
| பெண் | 33.55 | 38.50 | 41.33 | 5.41 | 7.01 | 7.18 |
| நபர்கள் | 46.48 | 48.49 | 50.39 | 15.08 | 17.83 | 17.58 |
| நகர்ப்புறம் | | | | | | |
| ஆண் | 51.25 | 52.78 | 56.37 | 4.18 | 5.14 | 7.76 |
| பெண் | 11.97 | 13.10 | 18.42 | .93 | 1.22 | 2.48 |
| நபர்கள் | 32.05 | 33.34 | 37.59 | 5.11 | 6.36 | 10.24 |
| மொத்தம் | | | | | | |
| ஆண் | 56.58 | 56.39 | 58.06 | 13.85 | 15.96 | 18.16 |
| பெண் | 26.52 | 29.89 | 31.32 | 6.34 | 8.24 | 9.66 |
| நபர்கள் | 41.73 | 43.31 | 44.78 | 20.19 | 24.19 | 27.82 |

*ஆதாரங்கள் 1981, 1991, 2001 (தற்காலிக மக்கட்தொகை அட்டவணைகள்)*

வேலைவாய்ப்பு வளர்ச்சியில் நீண்டகால நிலையை ஒப்பீடு செய்ய **தேசீய மாதிரிக் கணக்கெடுப்பு (தே.மா.க.)** அடிப்படை விவரங்கள் இரண்டு காலங்களுக்காகப் பிரிக்கப்பட்டன. வேலைவாய்ப்பின் மொத்த வளர்ச்சி, கிட்டத்தட்ட ஒரே மாதிரியாக நிலைத்திருந்தது. அதாவது, 1972-73-லிருந்து 1983 மற்றும் 1983-லிருந்து 1993-94 வரையிலுள்ள காலங்களில் முறையே 1.71 மற்றும் 1.74 விழுக்காடுகளா யிருந்தன. (அட்டவணை 3.3) இந்த இருகால கட்டங்களுக்கிடையில் ஆண்களுக்கான வேலை வாய்ப்பு ஆண்டு வீதமாக முறையே 1.36 மற்றும் 1.87 விழுக்காடு அதிகரித்ததையும் காணலாம். பெண்களைப் பொறுத்தவரை, பிந்தைய கால 1.45 விழுக்காட்டுடன் ஒப்பிடுகையில் முதலாவது காலத்தில் மிக வேகமாய், 2.36 விழுக்காடு வளர்ச்சியடைந்தது. இருப்பினும், 1999-2000-ஆம் ஆண்டுக்கான தேசீய மாதிரிக் கணக்கெடுப்பு (தே.மா.க.) 55-ஆவது சுற்றின் அடிப்படை விவர முதனிலைப் பகுப்பாய்வு, ஆண்டு வளர்ச்சி விகிதம், எதிர்பார்ப்பு வளர்ச்சி விகிதமான, 2.0 விழுக்காட்டிற்கும் மிகக் குறைவாய் 0.24 விழுக்காட்டிற்கு குறைந்தது. இது கவனிக்கப்பட வேண்டிய, கவலை தரும் போக்காகும்.

அட்டவணை - 3.2 எடுத்துக்காட்டியுள்ளபடி, நகர்ப்புறங்களைக் காட்டிலும் கிராமப் புறங்களில் தொ.ப.விகிதங்கள் அதிகமாயிருந்தன. தமிழ்நாட்டின் கிராமப்புற தொ.ப.வி; 1981-லிருந்த 46.48

விழுக்காட்டிலிருந்து 2001-ல் 50.39, விழுக்காட்டிற்கு உயர்ந்தது. ஆனால் நகர்ப்புற தொ.ப.வி. 37.59 விழுக்காட்டிலிருந்து 33.34 விழுக்காடாக உயர்ந்தது. இருப்பினும் நகர்ப்புற தொ.ப.வி., இதே காலத்தில் கிராமப்புற தொ.ப. விகிதத்தோடு ஒப்பிடுகையில் வேகமானதொரு விகிதத்திற்கு விரைவு படுத்தப்பட்டது. கிராமப்புறம் மற்றும் நகர்ப்புறம் ஆகிய இரண்டிலும் பெண்களின் தொ.ப.விகிதம் ஆண்களின் தொ.ப.விகிதத்தைக் காட்டிலும் வேகமான வீதத்தில் அதிகரித்தது. பெண்கள் தொ.ப.வி வேக வளர்ச்சி காரணமாய் மாநிலத்தின் மொத்த தொழிலாளர்களில் பெண் தொழிலாளர்களின் விழுக்காடு, 1981-லிருந்த 31.4 விழுக்காட்டிலிருந்து 1991-ல் 34.7 விழுக்காட்டுக்கு அதிகரித்தது.

**அட்டவணை - 3.3 : பாலின அடிப்படையில் வேலைவாய்ப்பு வளர்ச்சி**

| தே.மா.ஆ. சுற்றுகள் | மொத்த வேலைவாய்ப்பு | | | வளர்ச்சி வீதம் | | |
|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | மொத்தம் (மில்லியன்) | ஆண் % | பெண் % | மொத்தம் % |
| 1972 - 73 | 12.61 | 7.68 | 20.28 | - | - | - |
| 1977 - 78 | 13.48 | 8.92 | 22.40 | 1.34 | 3.05 | 2.00 |
| 1983 | 14.43 | 9.60 | 24.03 | 1.37 | 1.68 | 1.42 |
| 1987 - 88 | 15.74 | 10.14 | 25.87 | 1.75 | 0.90 | 1.49 |
| 1993 - 94 | 17.37 | 11.19 | 28.56 | 1.65 | 1.66 | 1.66 |
| 1999 - 2000 | 18.26 | 10.73 | 28.98 | 0.83 | (-)0.70 | 0.24 |
| 1972 - 73 / 1983 | ஆண்டுக் கூட்டு வளர்ச்சி வீதம் | | | 1.36 | 2.36 | 1.71 |
| 1983 / 1993 - 94 | | | | 1.87 | 1.45 | 1.74 |

*ஆதாரம் : சர்வெக்சணா பல்வேறு வெளியீடுகள்*

## தொழிலாளரின் இடவாரியான பகிர்வு

தமிழ்நாட்டில் 2001-ஆம் ஆண்டு மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி நாமக்கல் மிக அதிக தொ.ப. விழுக்காட்டைப் பெற்றுள்ளது. (56.28 விழுக்காடு) சென்னை (34.19 விழுக்காடு) மற்றும் கன்னியாகுமரி (32.68 விழுக்காடு) மாவட்டங்கள், மிகக் குறைவான தொ.ப. விழுக்காடுகளைப் பெற்றுள்ளன. இதற்கு முக்கியக் காரணம் குறைவான பெண் தொ.ப. விழுக்காடுகளான முறையே 12.09% மற்றும் 12.23% ஆகும். 13 மாவட்டங்கள் மாநில சராசரியான 44.78%-ஐக் காட்டிலும் உயர்வான தொ.ப. விழுக்காடுகளைப் பெற்றிருந்தன.

ஆண் தொ.ப.வி. 60%-க்கு மிகை ஈரோடு (66.80%), கோயம்புத்தூர் (64.01%), கரூர் (63.33%) மற்றும் சேலம் (60.84%) மாவட்டங்களில் இருந்தது. அது கன்னியாகுமரியில் 53.39% தூத்துக்குடியில் 56.33% மற்றும் சென்னையில் 55.19% ஆக மாநில சராசரியின் 58.06%-க்குக் குறைவாயிருந்தது. பெண் தொ.ப.வி நாமக்கல்லில் மிக அதிகமாய் 88.71%-ம் அதைத் தொடர்ந்து நீலகிரியில் 55.28% பெரம்பலூரில் (52.19%) ஈரோட்டில் (44.76%) கரூரில் (42.95%) மற்றும் அரியலூரில் (41.21%) ஆகவுமிருந்தது. பெண் தொ.ப.வி. மாநில சராசரிக்குக் (31.32%) குறைவாயிருந்த மாவட்டங்கள், மிகக் குறைந்த அளவாய் சென்னை 12.09%, கன்னியாகுமரி 12.23%.

### வயதுவாரியான தொழிலாளர் பகிர்வு

தேசிய மாதிரிக் கணக்கெடுப்பு நிறுவனம் குறிப்பிட்ட வயது தொழிலாளர் மக்கட்தொகை விகித (ம.தொ.வி.) விவரங்களை அளிக்கிறது. தொழிலாளர் மக்கட்தொகை விகிதம். மக்கட்தொகையில்,[1] பணியமர்த்தப்பட்டுள்ள நபர்களின் மொத்த எண்ணிக்கையை, ஒரு சதவீதமாய் விளக்கப்படுகிறது.

அனைத்து வயதுத் தொகுதிகளுக்கும், கிராமப்புற மற்றும் நகர்ப்புற ம.தொ.வி.கள் தமிழ்நாட்டில் குறிப்பிடும்படியாக, தேசிய நிலையிலிருப்பதைக் காட்டிலும் அதிகமாய் உள்ளது. இதற்குக் காரணம் இம்மாநிலத்தில் பெண்களுக்கான ம.தொ.வி.கள் ஒப்பீட்டடிப்படையில் உயர்வாயிருப்பதே. கிராமப்புற நகர்ப்புறம் ஆகிய இரண்டின் தொ.ம. = தொ. விகிதங்கள் வயதுத் தொகுதி 20-24-லிருந்து தொடங்கி வயதுத் தொகுதி 40-44-உடன் முடிவடையும் மூத்த வயதுத் தொகுதிகளில் தொடர்ந்து அதிகரிக்கிறது. அதற்குப் பிறகு, தொ.ம.தொ.விகிதங்கள் நலிவடைகின்றன. தமிழ்நாட்டில் 60-க்கும் அதற்கும் மேற்பட்ட மூத்த வயதுத் தொகுதியிலிருக்கும் தொழிலாளர்களின் மதிப்பீட்டு எண்ணிக்கை இரண்டு மில்லியன்கள். இது, மொத்தத் தொழிலாளர் தொகையில் கிட்டத்தட்ட 6.9% ஆகும். இதற்கிணையான மொத்த இந்திய விகிதம் 7.4% (அட்டவணை 3.4)

**அட்டவணை - 3.4 : வயது குறிப்பிட்ட தொழிலாளர் மக்கட்தொகை விகிதம் 1993 - 94 மற்றும் 1999 - 2000**

| வயதுத் தொகுதி | தமிழ்நாடு | | | | மொத்த இந்தியா | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 1993 - 94 | | 1999 - 2000 | | 1993 - 94 | | 1999 - 2000 | |
| | கிராமப்புறம் | நகர்ப்புறம் | கிராமப்புறம் | நகர்ப்புறம் | கிராமப்புறம் | நகர்ப்புறம் | கிராமப்புறம் | நகர்ப்புறம் |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
| 5 - 9 | 21 | 5 | 4 | 1 | 13 | 5 | 7 | 3 |
| 10 - 14 | 183 | 88 | 86 | 47 | 140 | 56 | 93 | 43 |

*(தொடர்ச்சி)*

[1]தொழிலாளர் மக்கட்தொகை விகிதம் (தொ.ம.வி.) தேசீய மாதிரிக் கணக்கெடுப்பு நிறுவனம் விளக்கியுள்ளபடியும் மற்றும் தொ.ம.வி. மக்கள் கணக்கெடுப்பில் விளக்கியுள்ளபடியும், அடிப்படையில் ஒன்றேதான். அதாவது, மொத்த மக்கட்தொகையில் தொழிலாளரின் எண்ணிக்கை பொதுவாய் ஒரு மாதிரியை அடிப்படையாய்க் கொண்ட தொ.ம.விகிதங்கள் மா.தொ.வி.களைக் காட்டிலும் சிறிதளவு அதிகமானவை. பொதுவாய் நாம் மக்கட்தொகைக் கணக்கெடுப்பு தொ.ம. தொகை விகிதங்களை, தொழிலாளரின் எண்ணிக்கை மற்றும் விழுக்காட்டின் அடிப்படையில், ஒட்டுமொத்த நிலையை அறியப் பயன் படுத்தியுள்ளோம். ஆனால், மேலும் விரிவான வயது குறிப்பிட்ட பகுப்பாய்வுக்காக தொ.ம.வி.யைப் பயன்படுத்தியுள்ளோம்.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 15 - 19 | 579 | 330 | 451 | 297 | 481 | 236 | 411 | 218 |
| 20 - 24 | 706 | 516 | 653 | 467 | 651 | 436 | 618 | 420 |
| 25 - 29 | 799 | 592 | 751 | 600 | 732 | 571 | 713 | 543 |
| 30 - 34 | 888 | 712 | 837 | 625 | 782 | 632 | 758 | 599 |
| 35 - 39 | 867 | 668 | 833 | 705 | 807 | 651 | 784 | 637 |
| 40 - 44 | 893 | 715 | 841 | 724 | 798 | 685 | 791 | 664 |
| 45 - 49 | 872 | 675 | 833 | 698 | 789 | 678 | 780 | 645 |
| 50 - 54 | 812 | 715 | 815 | 616 | 763 | 636 | 741 | 633 |
| 55 - 59 | 752 | 564 | 751 | 537 | 702 | 550 | 688 | 517 |
| 60-64 | 649 | 412 | 460 | 258 | 619 | 371 | 430 | 241 |
| 65-ம் அதற்கு மேலும் | 396 | 244 | - | - | 375 | 212 | - | - |
| எல்லாம் | 539 | 402 | 513 | 393 | 444 | 347 | 417 | 337 |

*ஆதாரம் : தேசிய மாதிரிக் கணக்கெடுப்பு. 50-வது சுற்றின் முடிவுகள் சர்வேக்சணா*

1993 - 94 மற்றும் 1999 - 2000-க்குமிடையில் சிறார் தொழிலாளர், 102 மில்லியனிலிருந்து 0.45 மில்லியனுக்கு, கணிசமான 56[2]%-க்குக் குறைந்தது. கிராமப்புறச் சிறார் தொழிலாளரின் எண்ணிக்கை 0.81 மில்லியனிலிருந்து. 0.34 மில்லியனுக்குக் குறைந்து அதே வேளையில் நகர்ப்புறச் சிறார் தொழிலாளரின் / எண்ணிக்கை 0.21 மில்லியனிலிருந்து. 0.11 மில்லியனாய் குறைந்தது (பெட்டி 3.1) சிறார் தொழிலாளரின் பாலினக் கூட்டமைவில் இதுவரை காணப்பட்ட போக்குகள் தலைகீழாய் மாறியிருப்பது கவனிக்கத்தக்கது. 1987-88 மற்றும் 1993-94-ல் இருந்த மொத்த சிறார் தொழிலாளரில் பெண் சிறார் தொழிலாளர் ஏறத்தாழ 55% இருப்பதாய் கணக்கிடப்பட்டுள்ளது. இருப்பினும் 1999-2000-ல் ஆண் சிறார் தொழிலாளர் (56.3%) பெண் சிறார் தொழிலாளரின் எண்ணிக்கையை மிஞ்சியிருந்தனர் (43.7%).

மற்ற தொழிலாளரைப் போன்றே சிறார் தொழிலாளரையும் முதனிலை அல்லது துணைத் தொழிலாளராய் வகைப்படுத்தலாம். 1993-94 மற்றும் 1999-2000-களில் பெண் சிறார் தொழிலாளர், மொத்தப் பெண் சிறார் தொழிலாளரில் முறையே 5.1% (5.73 லட்சங்கள்) மற்றும் 4.2% (1.96 லட்சங்கள்) ஆக இருந்தனர். மொத்த சிறார் தொழிலாளரில் (முதனிலை மற்றும் துணை) துணை நிலைப் பெண் சிறார் தொழிலாளர், 1993-94-லும் 1999-2000-லும் முறையே 11.3% (65000) மற்றும்

[2]இக்குறைவுக்கு எச்சரிக்கையோடு பொருள் விளக்கப்பட வேண்டும்.

16.3% (32000) மட்டுமே இருந்தனர். முதனிலைத் தொழிலாளர் எண்ணிக்கையில் குறைவே, சிறார் தொழிலாளர் எண்ணிக்கைக் குறைவுக்கு முக்கியக் காரணமெனத் தெரிகிறது. ஊட்டச்சத்து மதிய உணவு திட்டங்கள். இலவச சீருடை / புத்தகங்கள் வழங்கல், பேருந்துகளில் இலவசப் பயண வசதி, பெண் சிறார் மேம்பாட்டுத் திட்டங்கள், திருமண உதவி மற்றும் பள்ளிச் சேர்க்கையை அதிகரிக்கச் செய்யும் ஊக்கத் திட்டங்கள் போன்ற பலவாறான சமூகத்துறை திட்டங்களின் மூலம் சிறார் தொழிலாளரைக் குறைத்து இறுதியில் ஒழித்திட அரசு மேற்கொண்ட முயற்சிகள் வெற்றி பெற்று வருகின்றன. தனி நபர் வருமானத்தின் துரித வளர்ச்சியும் ஒப்பீட்டடிப்படையில் மேலான வாழ்க்கைத் தரமும், சில குடும்பங்களை தொழிலாளர் சந்தையிலிருந்து, இளம் / மூத்த வயதுப் பிரிவு வருவாய் ஈட்டுவோரையும் எப்போதாவது வேலைக்குச் செல்வோரையும் திரும்பப் பெறச் செய்துள்ளன.

## பெட்டி 3.1 : தமிழ்நாட்டில் குறைந்து வரும் சிறார் தொழிலாளர்

ஒரு குறிப்பிட்ட வயதுக்குக் கீழான சிறார்களைத் தொழில்களில் பணியமர்த்துவது, அது அவர்களுடைய கல்வி கற்கும் வாய்ப்புகளைப் பறித்துப் பெருமளவு அவர்களுடைய உற்பத்தித் திறனை வளராமல் தடை செய்வதால் சட்டத்தால் தடை செய்யப்பட்டுள்ளது. இந்திய அரசமைப்புச் சட்டம் பிரிவுக்கூறு 24-ன் கீழ், 14 வயதுக்குட்பட்ட சிறார் எவரும் தொழிற்சாலை அல்லது சுரங்கம் எதிலும் வேலைக்கமர்த்தப்படக் கூடாது அல்லது மற்ற வேறு இன்னல் ஏற்படுத்தும் வேலைகளில் ஈடுபடுத்தக் கூடாது எனத் தடை செய்கிறது. பிரிவுக்கூறு 39-ன் கீழ், சிறாரின் இளம் வயது தவறாய் பயன்படுத்தப்படக் கூடாது, பொருளாதாரக் காரணங்களால் அவர்களுடைய வயது மற்றும் வலிமைக்கு ஏற்புடைமை யில்லாத தொழில்களில் அவர்களை ஈடுபடக் கட்டாயப்படுத்தக் கூடாதெனக் குறிப்பிடுகிறது. அவர்கள் தன்னலப் பயன்படுத்தல் மற்றும் அறமுறையாயும், பொருளியலாயும் அவர்களைக் கைவிடுதலுக்கு எதிராயும் காக்கப்பட்டுள்ளனர்.

அமைப்பற்ற, முறைப்படியல்லாத, ஒழுங்கு முறைப்படுத்தப்படாத துறைகளில், சிறார் தொழிலாளர் மிகப் பெருமளவில் காணப்படுகின்றனர். வீட்டிலிருந்தபடி செய்யும் தொழில்கள் (பீடி சுற்றல்) மரபுரிமையான தொழில்களில் தொழில் பழகுநர் மற்றும் சில தொழிற்சாலைப் பணிகள் (தீப்பெட்டி வேலை) போன்றவற்றில் சிறார் தொழிலாளர் ஈடுபட்டிருப்பது காணப்படுகிறது. சிறார் தொழிலாளர் ஒழிப்பு இறுதி நோக்கமா யிருக்கையில் இப்போதைய அவசரத் தேவை. கூலி, வேலை நேரம் மற்றும் வேலை செய்யும் நிலைமைகள் ஆகியவற்றில் தன்னலப் பயன்படுத்தலைத் தடுப்பதே. 1991-ஆம் ஆண்டு மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி மொத்த தொழிலாளர் சக்தியில் சிறார் தொழிலாளர் 2.39% ஆக இருந்தனர். தேசிய நிலை போலன்றி தமிழ்நாட்டில் பெண் சிறார் தொழிலாளர் ஆண் சிறார் தொழிலாளரைக் காட்டிலும் (1.7%) அதிக எண்ணிக்கையில் உள்ளனர் (3.64%) மிக அண்மைக்கால சான்றுகள், சிறார் தொழிலாளரைப் பணி யமர்த்துதலில் பெருமளவு குறைந்திருப்பதைக் காட்டுகின்றன.

**தமிழ்நாட்டில் சிறார் தொழிலாளரின் மதிப்பீடு**

(மில்லியன்)

| பகுதி | 1987-88 (43-வது தே.மா.க.) | | | 1993-94 (50-வது தே.மா.க.) | | | 1999-2000 (55-வது தே.மா.க.) | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | பெண் | ஆண் | சிறார் | பெண் | ஆண் | சிறார் | பெண் | ஆண் | சிறார் |
| கிராமப்புறம் | 0.59 | 0.45 | 1.04 | 0.48 | 0.34 | 0.81 | 0.16 | 0.18 | 0.34 |
| நகர்ப்புறம் | 0.13 | 0.14 | 0.26 | 0.09 | 0.11 | 0.21 | 0.04 | 0.07 | 0.11 |
| தமிழ்நாடு | 0.72 | 0.59 | 1.30 | 0.57 | 0.45 | 1.02 | 0.20 | 0.25 | 0.45 |

## தொழிலாளர் தொகையில் தொழில் வகைப்பாடு

1991-ஆம் ஆண்டு மக்கட்தொகைக் கணக்கெடுப்புப்படி மக்கட்தொகை அடிப்படை விவரங்களின் விரிவான பகுப்பாய்வு பயிரிடுபவர்களின் பங்கு குறைந்து வருவதையும் வேளாண் தொழிலாளரின் எண்ணிக்கையில் ஒரு கணிசமான உயர்வையும், குடும்பத் தொழில் தொழிலாளரின் பங்கில் ஒரு குறைவையும் காட்டுகிறது. பயிரிடுபவர்களின் விகிதம் 1961-ல் 42%-லிருந்து 1991-ல் 23.4%-க்குக் குறைந்திருக்கையில் இதே காலத்தில் வேளாண் தொழிலாளரின் எண்ணிக்கை 18.4%-லிருந்து 31.1%-க்கு உயர்ந்தது. முழுமையான அளவிலும் இதே போக்கு காணப்படுகிறது. இருப்பினும் 2001 மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி பயிரிடுபவர்களின் பங்கில் இறக்கம் காணப்பட்டாலும் (25%-லிருந்து 18.4%) வேளாண் தொழிலாளர் மற்றும் குடும்பத் தொழில்களில் தொழிலாளரின் பங்கு, நடுத்தரமாய் உயர்ந்துள்ளது. மற்ற தொழில்களின் பங்கும் தொடர்ந்து அதிகரித்து வருகிறது. இதன் மூலம் கிராமத் தொழில்களும் கைத்திறத் தொழில்களும் வேளாண்மையிலிருந்து, மிகைத் தொழிலாளர் களைப் பணியிலமர்த்திக் கொள்ள இயலாத நிலையிலிருப்பது தெரிகிறது. (அட்டவணை 3.5)

**அட்டவணை - 3.5 : 1981 மற்றும் 1991 மக்கட்தொகைக் கணக்கெடுப்பில் தொழிலாளரின் தொழில் வகைப்பாடு (முக்கிய, சிறிதளவு வேலைத் தொழிலாளர்) ஒருங்கிணைந்தது**

மில்லியன்களில்

| தொழில் வகை | 1961 | % பங்கு | 1981 | % பங்கு | 1991 | % பங்கு | 2001 | % பங்கு |
|---|---|---|---|---|---|---|---|---|
| பயிரிடுவோர் | 6.46 | 42.0 | 5.82 | 28.8 | 6.04 | 25.0 | 5.11 | 18.4 |
| வேளாண் தொழிலாளர் | 2.83 | 18.4 | 6.77 | 33.5 | 8.76 | 36.2 | 8.67 | 31.1 |
| குடும்பத் தொழில் மற்றும் உற்பத்தி முதலான | 2.06 | 13.4 | 0.97 | 4.8 | 0.87 | 3.6 | 1.46 | 5.3 |
| மற்ற தொழிலாளர் | 4.03 | 26.2 | 6.64 | 32.9 | 8.53 | 35.2 | 12.57 | 45.2 |
| மொத்த தொழிலாளர் | 15.37 | 100.0 | 20.20 | 100.0 | 24.19 | 100.0 | 27.81 | 100.0 |

*ஆதாரம் : மக்கட்தொகைக் கணக்கெடுப்பு ஆவணங்கள்*

இருப்பினும் உற்பத்தி மற்றும் பணித்துறைகளில் வளர்ச்சி இருப்பது தெரிகிறது. ஏனைய பிறவகைத் தொழிலாளரின் மதிப்பீட்டு எண்ணிக்கை 1961-லிருந்த 4.03 மில்லியனிலிருந்து 2001-ல் 12.57 மில்லியனாக அதிகரித்துள்ளது. இதனை அடுத்து, பிறவகைத் தொழிலாளரின் விகிதம் மொத்த தொழிலாளரில் 26.2%-லிருந்து 45.2 விழுக்காட்டிற்கு உயர்ந்துள்ளது. பெரும்பாலான இந்த பிறவகைத் தொழிலாளர்கள், உற்பத்தி அல்லது கட்டுமானம், உற்பத்தி, வணிகம், மற்றும் போக்குவரத்து, உணவகங்கள், நிதி மற்றும் சமுதாயப் பணிகள் போன்ற தொழில்களில் பணித்துறைத் தொழிலாளராயிருப்பர்.

**அட்டவணை - 3.6 : தொழிலாளரின் தொழில் வகைப்பாடு**

| துறைகள் | வேலைவாய்ப்பு (மில்லியன்கள்) | | | வளர்ச்சி வீதம் | |
|---|---|---|---|---|---|
| | 1987-88 | 1993-94 | 1999-2000 | 1987-88 1993-94 வரை | 1993-94 1999-2000 வரை |
| 1. வேளாண்மை | 13.79 | 15.34 | 14.44 | 1.79 | (-)1.00 |
| 2. சுரங்கம் | 0.11 | 0.10 | 0.14 | 0.00 | 3.60 |
| 3. உற்பத்தி | 4.94 | 5.05 | 5.30 | 0.37 | 0.80 |
| 4. மின்சாரம் | 0.09 | 0.11 | 0.10 | 3.40 | (-)1.19 |
| 5. கட்டுமானம் | 0.92 | 1.08 | 1.45 | 2.87 | 4.90 |
| 6. வணிகம், உணவகங்கள் போக்குவரத்து | 3.20 | 3.57 | 4.67 | 1.79 | 4.65 |
| 7. பணிகள்/சேவைகள் | 2.85 | 3.32 | 2.88 | 2.63 | (-)2.41 |
| எல்லாம் | 25.90 | 28.56 | 28.98 | 1.66 | 0.24 |

*ஆதாரம் : தே.மா.க. 43, 50 மற்றும் 55-வது சுற்றுகள்*

தே.மா.க-வின் அடிப்படை விவரங்களை அடிப்படையாய் கொண்டு மேலும் விரிவான தொழில் வகைப்பாடு அட்டவணை-3.6-ல் தரப்பட்டுள்ளது. வேளாண்மையில் ஈடுபட்டிருந்த தொழிலாளரின் எண்ணிக்கை 1987-88ல் 13.79 மில்லியனிலிருந்து 1993 - 94-ல் 15.34 மில்லியனாக அதிகரித்ததெனவும் பின்னர் 1999 - 2000-ல் 14.44 மில்லியனாய் குறைந்ததெனவும் தெரிகிறது. இருப்பினும் வேளாண்மை மொத்த வேலைவாய்ப்பில் வேளாண்மை 50%-க்கு நெருக்கமான பங்கைப் பெறுகிறது. வேளாண்மைக்கடுத்தபடியாக மொத்த வேலைவாய்ப்பில் தயாரிப்புத் தொழில் 18.3%-ஐ (5.3 மில்லியன்கள்) பெற்றுள்ளது. மூன்றாவதான மிகப் பெரும் அளவில் வேலை வாய்ப்புகளை அளிக்கும் துறைகள், வணிகம், உணவகங்கள் மற்றும் போக்குவரத்துத் தொழில்கள். இவை, மொத்த வேலைவாய்ப்பில் 16%-ஐ (4.67 மில்லியன்) பெற்றுள்ளது. நிதித்துறை மற்றும் சமுதாயப் பணிகள் 2.88 மில்லியன் பேருக்கு வேலைவாய்ப்பளித்துள்ளது.

போக்குகளின் பகுப்பாய்வு, அண்மைக்காலத்தில் (அட்டவணை - 3.6) வேளாண்துறையில், வேலைவாய்ப்பு வளர்ச்சியில் ஒரு மந்தமான போக்கைக் காட்டுகிறது. இதற்கான காரணம், பெண் துணைத் தொழிலாளர்கள் மற்றும் சிறார் தொழிலாளரின் எண்ணிக்கையில் குறைவே. தயாரிப்புத் துறையில் வேலைவாய்ப்பு வளர்ச்சியில் சிறிது வேகம் காணப்படுகிறது. கட்டுமானத் தொழில்கள் 1987 - 88 மற்றும் 1993 - 94-க்கிடையில் இருந்த 2.87%-க்கு எதிராக, 1993 - 94 மற்றும் 1999 - 2000[3]-க்கிடையில் செழிப்பானதொரு துரித வளர்ச்சி வீதமான 4.9%-ஐப் பெற்றிருந்தது. வணிகத்துறையிலும் இதே போன்ற போக்குகளை காணப்படுகிறது.

## தொழிலாளரின் பிரிவு வாரியான கூட்டமைவு

பிரிவு வாரியாய் பார்த்தால் வேலைவாய்ப்புகளைப் பொறுத்தவரை முதன்மைப் பிரிவே, பெரிய பிரிவாய் அமைந்துள்ளது. இப்பிரிவில் முக்கியத் தொழிலாளரின் விகிதம் 1961-ல் 60%-க்கு மேலாகவும் 1999-2000-ல் தோராயமாய் 50%-க்கு குறைந்த போதிலும், அதுவே, இன்னமும்கூட வேலைவாய்ப்பளிப்பதில் மிகப்பெரும் பங்களிப்பதாக உள்ளது. இடைநிலைப் பிரிவு மொத்த வேலைவாய்ப்பில் 1999 - 2000-ல் 23.6%-ம் மூன்றாவதான பிரிவு 26.1%-ம் பெற்றிருந்தன.

வருங்காலத்தில் இந்நிலை, இடைநிலை, மூன்றாவதான பிரிவுகளுக்காதரவாய் மாறும் வாய்ப்பு உள்ளது. முதனிலைப் பிரிவில், கிராமப்புறங்களிலும் நகர்ப்புறங்களிலும் வேலைவாய்ப்பு வளர்ச்சியின் வேகம் குறைந்துள்ளது. இதற்கு மாறாக இடைநிலைப் பிரிவில் வேலைவாய்ப்பு வளர்ச்சி கிராமப் புறங்களிலும் நகர்ப்புறங்களிலும் விரைவு பெற்றுள்ளது. விரைவு நகர்ப்புறங்களோடு ஒப்பிடுகையில் (ஆண்டுக்கு 0.60%) கிராமப்புறங்களில் அதிகமாக உள்ளது. (ஆண்டுக்கு 2.5%) அட்டவணை - 3.7-ஐப் பார்க்கவும்). மூன்றாவது பிரிவு வேலைவாய்ப்புகள் 1993-94 மற்றும் 1999-2000-க் கிடையில் கிராமப்புறங்களில் குறைந்த போதிலும், நகர்ப்புறங்களில் ஆண்டுக்கு 3.1% வீதத்தில் அதிகரித்தது (அட்டவணை - 3.7)

**அட்டவணை - 3.7 : பெரும் பிரிவுகளில் தொழிலாளர்களின் கூட்டமைவு 1987 - 88 மற்றும் 1999 - 2000**

(மில்லியன்கள்)

| | முதனிலை | | | இடைநிலை | | | மூன்றாவதான நிலை | | | மொத்தம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | அ | ஆ | இ | அ | ஆ | இ | அ | ஆ | இ | அ | ஆ | இ |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| கிராமப்புறம் | 13.0 | 14.4 | 13.7 | 2.9 | 3.1 | 3.6 | 2.4 | 2.9 | 2.7 | 18.3 | 20.4 | 20.1 |
| | | (1.70) | (-0.8) | | (1.42) | (2.5) | | (2.4) | (-0.8) | | (1.75) | (-0.26) |
| % பங்கு | 70.9 | 70.7 | 68.4 | 15.7 | 15.3 | 18.1 | 13.4 | 14.0 | 13.5 | 100.0 | 100.0 | 100.0 |
| நகர்ப்புறம் | 0.9 | 1.0 | 0.8 | 3.0 | 3.1 | 3.2 | 3.6 | 4.0 | 4.8 | 7.5 | 8.1 | 8.8 |
| | | (2.66) | (-3.2) | | (0.31) | (0.6) | | (1.93) | (3.1) | | (1.37) | (1.46) |

(தொடர்ச்சி)

[3]மக்கட்தொகைக் கணக்கெடுப்பு மற்றும் தேசிய மாதிரிக் கணக்கெடுப்பு (தே.மா.க) எண்ணிக்கைகள் சரிநுட்பமாக இணையாக இல்லை. எனவே, ஒப்பீடு செய்வதற்கில்லை. இருப்பினும், மொத்தத்தில் போக்குகள் ஒன்றாயிருக்கின்றன.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| %பங்கு | 11.5 | 12.3 | 9.3 | 40.7 | 38.1 | 36.2 | 47.8 | 49.6 | 54.5 | 100.0 | 100.0 | 100.0 |
| எல்லாம் | 13.9 | 15.4 | 14.5 | 5.9 | 6.2 | 6.8 | 6.0 | 6.9 | 7.5 | 25.8 | 28.5 | 28.9 |
| (உ+ப) | | (1.77) | (-0.96) | | (0.82) | (1.6) | | (2.22) | (1.6) | | (1.66) | (0.24) |
| %பங்கு | 53.7 | 54.1 | 50.3 | 23.0 | 21.8 | 23.6 | 23.3 | 24.1 | 26.1 | 100.0 | 100.0 | 100.0 |

*குறிப்பு : அடைப்புக் குறிக்குள்ளிருக்கும் புள்ளி விவரங்கள் ஆண்டு வளர்ச்சி வீதத்தை (%)க் குறிக்கிறது*
*ஆதாரம் : சர்வேக்சணா தே.மா.க. அ-1987 - 88, ஆ-1993 - 94, இ-1999 - 2000.*

ஆண், பெண், இனப் பகுப்பாய்வும் இங்கு சரியாக, உள்ளது. முதன்மைப் பிரிவில் ஆண் தொழிலாளரின் பங்கு தொடர்ந்து குறைந்து வருகிறது. 1977 - 78-ல் 57.4% ஆக இருந்தது. 1999 - 2000-ல் 42.9%-க்குக் குறைந்தது. (அட்டவணை - 3.8) பெண்களுக்கான இதே விகிதங்கள் முறையே 73.2% மற்றும் 62.8%-ம் ஆகும். அண்மை ஆண்டுகளில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் மூன்றாவதான பிரிவில் பெண்களுக்கான வேலைவாய்ப்பின் பங்கு 1993-94-ல் 13.7% ஆக இருந்தது. 1999-2000-ல் 16.5% ஆக அதிகரித்தது. முதனிலைப் பிரிவில் பெண்களுக்கான வேலைவாய்ப்புப் பங்கில் ஏற்பட்ட இழப்பு, இடைநிலை மற்றும் மூன்றாவதான பிரிவுகளில் ஏறக்குறைய நிகரான, ஆதாயமாய் பெறப் பட்டது. இருப்பினும், ஆண்களைப் பொறுத்தவரை, அண்மைக்காலத்தில் இடைநிலைப் பிரிவில் ஒப்பீட்டு அடிப்படையில் ஒரு உயர் பங்கு பெறப்பட்டது. 1970-களின் பிற்பகுதியிலிருந்து நிலையை ஒருவர் ஆய்வு செய்தால் மூன்றாவதான பிரிவில் ஆண்களின் வேலைவாய்ப்புப் பங்கு, 1977 - 78-ல் 22.9%-லிருந்து, 1999 - 2000-ல் 31.4%-க்குத் தொடர்ந்து அதிகரித்து வருவதைக் காணலாம்.

### அட்டவணை - 3.8 : ஆண், பெண் இன தொழிலாளரின் பிரிவு வாரியான பகிர்வு

(விழுக்காடு)

| தே.மா.க. | முதனிலைப் பிரிவு | | இடைநிலைப் பிரிவு | | மூன்றாவதான பிரிவு | | மொத்தம் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 1977 - 78 | 57.4 | 73.2 | 19.7 | 16.2 | 22.9 | 10.6 | 100 | 100 |
| 1983 | 49.2 | 70.4 | 23.1 | 16.4 | 27.6 | 13.1 | 100 | 100 |
| 1987 - 88 | 46.1 | 65.8 | 24.6 | 20.4 | 29.3 | 13.8 | 100 | 100 |
| 1993-94 | 45.5 | 67.3 | 23.6 | 19.0 | 30.8 | 13.7 | 100 | 100 |
| 1999 - 2000 | 42.9 | 62.8 | 25.7 | 20.7 | 31.4 | 16.5 | 100 | 100 |

*ஆதாரம் : தே.மா.க. 32, 38, 43 மற்றும் 50-வது சுற்றுகள்*

**பிரிவுவாரியான விளைவளவு**

வேலைவாய்ப்புகளில் வேளாண்மை தொடர்ந்து முதனிலை வகித்தாலும், இப்பிரிவிலிருந்து பெறப்படும் வருமானம் அதைப் பிரதிபலிப்பதாயில்லை. வேளாண் வருமானம் 1993-94-ல் 24.82% ஆக இருந்தது. 1999-2000-ல் 18.16% ஆகக் குறைந்தது. ஆனால், இடைநிலை மற்றும் மூன்றாவதான பிரிவுகளிலிருந்து பெற்ற வருமானத்தின் பங்கு இதே காலத்தில் முறையே 33.72%-லிருந்து 34.12%-க்கும் 41.46%-லிருந்து 47.72%-க்கும் முன்னேற்றமடைந்தது. தனி ஒருவர் வருமானத்தில் ஏனைய பிரிவுகளில் கணிசமான உயர்வுகளுடன் ஒப்பிடுகையில் முதனிலைப் பிரிவில், தொழிலாளர் ஒருவரின் சராசரி வேலை அளவு சிறிதளவு மட்டுமே அதிகரித்தது. (அட்டவணை - 3.9-ஐப் பார்க்கவும்)

**அட்டவணை - 3.9 : நிகரமாநில உள்நாட்டு உற்பத்தி வேலைவாய்ப்பு மற்றும் தொழிலாளரின் வேலை அளவின் பிரிவுவாரியான பகிர்வு**

(1993 - 94 விலைவாசிப்படி)

| பிரிவு | மொத்த மாநில உள்நாட்டு உற்பத்தி ரூ. மில்லியன் | | | | வேலைவாய்ப்பு (மில்லியன்களில்) | | | | தொழிலாளர் ஒருவரின் செயலளவு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1993-94 | %பங்கு | 1999-2000 | %பங்கு | 1993-94 | %பங்கு | 1993-2000 | %பங்கு | 1993-94 | 1999-2000 |
| முதனிலை | 142,646.6 | 24.82 | 155,072.6 | 18.16 | 15.4 | 54.1 | 14.5 | 50.3 | 9263 | 10,695 |
| இடைநிலை | 193,809.3 | 33.72 | 291,323.8 | 34.12 | 6.2 | 21.8 | 6.8 | 23.6 | 31,260 | 42,842 |
| மூன்றாவதான நிலை | 238,364.2 | 41.46 | 407,515.3 | 47.72 | 6.9 | 24.1 | 7.5 | 26.1 | 345,546 | 543,335 |
| மொத்தம் | 574,820.1 | 100.0 | 853,911.7 | 100.0 | 28.5 | 100.0 | 28.9 | 100.0 | 20,169 | 29,547 |

முதனிலைப் பிரிவில் தனி ஒருவர் வருமானத்தில் விளைவளவு, வருமானம் மற்றும் பயனீட்டளவு ஆகியவற்றின் பகிர்வில் பெரும் விளைவுகளை ஏற்படுத்தும். இடைநிலை மற்றும் மூன்றாவதான பிரிவுகளின் வேலைவாய்ப்புகள், நகர்ப்புறப் பகுதிகளிலேயே நிறைந்திருப்பதால், தொழிலாளர் ஒருவரின் வேலையளவில் பெரும் மாறுபாடுகள், மாநிலத்தில் கடும் கிராமப்புற / நகர்ப்புறப் பிரிவினையை உருவாக்கும்.

எனவே, வேளாண்துறையில் தனி ஒரு தொழிலாளரின் வேலையளவை பொருளியலாகவும் பணவியலாகவும் அதிகரிக்கச் செய்வது அவசியமாகிறது. ஒரு முதலீட்டலகின் பொருள் உற்பத்தித் திறனை அதிகரிக்கச் செய்யும் நோக்கத்தோடு உயர்மதிப்புப் பயிர் மற்றும் தொடர்புடைய நடவடிக்கைக்குப் போதிய அளவில் வலியுறுத்தி வேளாண்மையைப் பலவாறாக்கல் இப்பிரச்சனையைப் பெருமளவில் மட்டுப்படுத்தக்கூடும். அரசு, தமிழ்நாடு வேளாண் மேம்பாட்டுத் திட்டத்தை ஏற்கெனவே செயலாக்கியுள்ளது. இது வானம் பார்த்த வேளாண்மையை மேம்படுத்தவும். முடிவுகள் எடுப்பதில் அதிகாரப் பரவலாக்கும் நோக்கத்தைக் கொண்டதொரு பன்முகத் துறை திட்டமாகும்.

### வேலைவாய்ப்புக் கட்டமைப்பு

தற்காலிக அடிப்படையிலான வேலைவாய்ப்பு, கூலி, பொருளீட்டல் மற்றும் அமைப்புச் சார்ந்த / அமைப்பு சாராப் பிரிவுகள் போன்ற சில குறிப்பிட்ட கட்டமைப்புத் தன்மைகளின் பின்னணியில் வேலைவாய்ப்பு நிலையைக் கவனிப்பது பயனுள்ளதாய் அமையும். அட்டவணை - 3.10 கூலித் தொழிலாளரின் விழுக்காடு 1977-78-ல் 51.4% ஆக இருந்தது. 1999-2000-ல் 63.9% ஆக உயர்ந்திருப்பதை காட்டுகிறது. கூலித் தொழில் குறிப்பாக பெண் தொழிலாளருக்கிடையிலும், (76.7%) கிராமப்புறத் தொழிலாளர்களுக்கிடையிலும் (81.4%) அதிகமாயிருக்கிறது. பெண் கூலித்தொழில் உள்ளபடியே 1977-78-ல் 87.7% ஆக இருந்தது. 1999 - 2000-ல் 76.7% ஆகக் குறைந்துள்ளதெனக் கூறப்பட்டது. மேலும் ஆண் தற்காலிகக் கூலித் தொழிலாளரின் விழுக்காடும் அதிகமாயுள்ளது. உண்மையில், அது 1977 - 78-ல் 51.8%-லிருந்து 1999 - 2000-ல் 60.1% ஆக உயர்ந்துள்ளது.

மொத்த வேலைவாய்ப்பில், தற்காலிக வேலைவாய்ப்பின் பங்கு 1977-78-ல் 32.9%-லிருந்து 1993-94-ல் 42.7% ஆக உயர்ந்து, 1999-2000 வரை ஏறத்தாழ அதே நிலையில் (42.2%) இருந்தது. 1993-94 மற்றும் 1999-2000-க்கிடையில் பிரிந்திருந்த நிலை, ஆண்களின் தற்காலிக வேலைவாய்ப்பு, 6.78 மில்லியனிலிருந்து 7.15 மில்லியனுக்கு உயருகையில் பெண்களின் தற்காலிக வேலை வாய்ப்பு 5.41 மில்லியனிலிருந்து 5.07 மில்லியனாகக் குறைந்தது. நகர்ப்புறப் பெண்களைப் பொறுத்தவரை குறைவு கடுமையாயிருந்தது. அதாவது கிராமப்புற பெண்களுடைய -0.44%-க்கெதிராய் -5.95% ஆக இருந்தது (அட்டவணை-3.10) வேளாண் கூலித் தொழிலாளர் குடும்பங்களுக்கிடையில் கூலித் தொழிலாளரின் ஒரு விகிதமாய் தற்காலிகத் தொழிலாளரின் எண்ணிக்கை 90% வரை உயர்வாக உள்ளது. பொதுவாக கிராமப்புறத் தொழிலாளரில் தற்காலிகத் தொழிலாளரின் விகிதம் 81.4% வரை உயர்வாகவுள்ளது (1999-2000).

**அட்டவணை - 3.10 : பல்வேறு வகைகளில் தொழிலாளரின் பகிர்வு (வழக்கமான நிலை)**

| | 1977-78 | 1983 | 1987-88 | 1993-94 | 1999-2000 |
|---|---|---|---|---|---|
| 1. சுய வேலைவாய்ப்பு | 48.6 | 43.3 | 42.8 | 40.0 | 36.1 |
| 2. முறைப்படியான சம்பளம் பெறும் | 18.5 | 17.2 | 19.9 | 17.3 | 21.7 |
| 3. தற்காலிகம் | 32.9 | 39.5 | 37.3 | 42.7 | 42.2 |
| 4. கூலித்தொழில் (2+3) | 51.4 | 56.7 | 57.2 | 60.0 | 63.9 |
| 5. மொத்த தொழிலாளர்கள் | 100.0 | 100.0 | 100.0 | 100.0 | 100.0 |
| 6. மொத்த தொழிலாளரில் தற்காலிகத் தொழிலாளரின் வீதம் | | | | | |
| 7. அ. ஆண் | 51.8 | 59.8 | 57.4 | 64.0 | 60.1 |
| ஆ. பெண் | 87.7 | 85.9 | 78.4 | 82.5 | 76.7 |
| இ. கிராமப்புறம் | 75.1 | 82.6 | 80.4 | 84.1 | 81.4 |
| ஈ. நகர்ப்புறம் | 35.7 | 40.5 | 32.6 | 41.5 | 32.5 |
| உ. எல்லாம் | 64.0 | 69.7 | 65.2 | 71.1 | 66.0 |

*ஆதாரம் : சர்வேக்சணா பல்வேறு வெளியீடுகள்*

பெருகி வரும் தற்காலிக வேலைவாய்ப்பு முறை மாநிலத்தில் நிகழ்ந்து வரும் வேளாண்மை மாற்றங்களின் தன்மைக்குத் தொடர்புடையதாக அமைகிறது. வேளாண்மை நவீனமயமாக்கல் பயிர் பராமரிப்பில் தொழிலாளரின் தேவையைக் குறைத்துள்ளதாகத் தெரிகிறது. குடியானவர்களை வெளியேற்றல், சிறுநில உடைமையாளர்களின் வருந்தத்தக்க நிலை, பொருள்களாகக் கொடுப்பது குறைந்து வருதல் கூலவகை தானியங்கள் பயிரிடும் நிலப்பரப்பு குறைந்து வருதல் பொது வழங்கல் முறைத் தொடரமைவு விரிவாக்கம், உணவுப் பாதுகாப்புக்காக நிலக்கிழார்களை நம்பியிருப்பது குறைந்து வருதல் போன்ற ஏனைய பிற காரணங்களும் ஒருங்கிணைந்து கிராமப்புறங்களில் கட்டமைப்பு மாற்றம் மற்றும் தொழிலாளர் சக்தியில் தரமான மாற்றத்திற்குப் பங்களித்துள்ளன.

வேலைவாய்ப்பு தற்காலிகமாக்கப்பட்டதின் விளைவுகளில் ஒன்று தொழிலாளருக்கிடையில் ஏற்பட்டிருக்கும் பெரும் துறையிடை இடம் பெயர் ஆற்றல் ஆகும். மிகப் பெரும்பான்மையான செங்கல் - சுண்ணாம்பு சூளைத் தொழிலாளர், கல்லுடைக்கும் தொழிலாளர் மற்றும் கட்டுமானத் தொழிலாளர்கள் அடிப்படையில் வேளாண் தொழிலாளர்களும் சிறு நில உடைமையாளர்களுமே தற்காலிகமாக்கல், வேலை பாதுகாப்பின்மை, அடிக்கடி பணி இடமாற்றம் தன்னலப்படுத்தலுக்கான அதிகரித்த வாய்ப்பு, முறைப்படியல்லாத ஒப்பந்த ஏற்பாடுகள், இடைவிட்டு நிகழும் வேலை, மோசமான வேலை செய்யும் நிலைகள் மற்றும் இவற்றின் விளைவாகப் பெருமளவு நிலையற்ற வருமான நிலை ஆகியவற்றிற்குக் காரணமாக அமைகிறது.

கூலி வேலைவாய்ப்பின் மற்றொரு பகுதி சம்பளத்துடன் கூடிய வேலைவாய்ப்பு. 1993-94 மற்றும் 1999-2000-க்கிடையிலுள்ள காலத்தில் அத்தகைய வேலைவாய்ப்புகள் 4.94 மில்லியனிலிருந்து 6.29 மில்லியனாய் அதிகரித்தது. 1977-78 மற்றும் 1999-2000-க்குமிடையில் ஆண்களுக்கு முறைப் படியான சம்பள வேலைவாய்ப்புகள் 3.78% ஆண்டுக் கூட்டு வளர்ச்சி வீதத்தில் அதிகரித்த போது அதே வகையில் பெண்களுக்கு வேலைவாய்ப்புகள் 5.09% வீதப்படி அதிகரித்தது. முறைப் படியான சம்பள வேலைவாய்ப்பு உயர்வு, கிராமப்புறங்களைக் காட்டிலும் (3.78%) நகர்ப்புறங்களில் வேகமானதா யிருந்தது (4.28%) தன் வேலைவாய்ப்புப் பெற்ற தொழிலாளர்களின் விகிதம் 1977-78-ல் 48.6%-லிருந்து, 1994-2000-ல் 36.1%-க்குக் குறைந்ததையும் அட்டவணை-3.10 எடுத்துக்காட்டுகிறது.

### கூலியும் வருவாய் ஈட்டலும்

தமிழ்நாட்டில் உயர் விழுக்காடு கூலித் தொழிலாளர்கள் இருக்கின்ற காரணத்தால் கூலி வருவாய் ஈட்டல் கணிசமான முக்கியத்துவம் பெறுகிறது. அண்மைக்காலமாய் வேளாண் தொழிலாளர்களின் கூலியில் கணிசமான உயர்வு காணப்படுகிறது. ஊரகத் தொழிலாளரின் கூலியும் வருவாய் ஈட்டலும் குறித்த விசாரணையறிக்கையின்படி மொத்த இந்திய மற்றும் ஏனைய தென்மாநிலங்களோடு ஒப்பிடுகையில் கிராமப்புறக் குடும்ப ஆண், பெண் சிறார்களின் வேளாண் தொழில்களிலிருந்து கிடைக்கப்பெறும் சராசரி தினசரி வருமானம், தமிழ்நாட்டில்தான் மிக அதிகமாயுள்ளது. ஆண்களின் சராசரி நாளொன்றின் வருமானம் சாதாரணமாக 156% அளவு உயர்ந்துள்ளது. மகளிர் மற்றும் சிறாருடையது. முறையே 144% மற்றும் 125% உயர்ந்துள்ளது.

வேளாண் தொழிலாளரின் கூலி உண்மையான நிலைப்படியும்கூட, 1993 - 94-க்கும் 1997 - 98-க்கும் இடைப்பட்ட காலத்தில் உயர்ந்துள்ளது. ஏர் உழுபவரின் உண்மையான கூலிக் குறியீடு 26.8% உயர்ந்திருக்கிறது. ஆண், பெண் நாற்று நடுபவர்கள் களை பிடுங்குவோரின் கூலிகள்

முறையே, 19.3%-ம், 23.4%-ம் உயர்ந்துள்ளது. ஆண், பெண் அறுவடையாளரின் கூலி முறையே 15.2%-ம் 8.9%-ம் உயர்ந்துள்ளது. பணக்கூலி மட்டுமின்றி பொதுவழங்கல் முறை தொடரமைவின் விரிவாக்கமும் ஏழைகளுக்கு உணவுப் பாதுகாப்பளித்ததோடும் மட்டுமில்லாமல் விலைவாசியைப் பொதுவாய் கட்டுப்பாட்டில் வைத்திருக்கவும் கணிசமாக உதவியுள்ளது.

வேளாண்மையிலிருப்பதோடு ஒப்பிடுகையில் வேளாண் அல்லாத தொழில்களில் ஆண்களின் சராசரி நாளொன்றின் வருமானம் மொத்தத்தில் மேலும் அதிகமாயுள்ளது. 1987 -88-க்கும் 1993 - 94-க்கும் இடைப்பட்ட காலத்தில் 183% மொத்த வளர்ச்சி விகிதத்தை சந்தித்தது. இருப்பினும், பெண்களின் சராசரி நாளொன்றின் வருமானம் 131% மட்டுமே அதாவது வேளாண்மையைக் காட்டிலும் மிக மந்தமான விகிதத்தில் உயர்ந்தது. பெண்கள் மற்றும் சிறாரின் சராசரி நாளொன்றின் வருமானத்தில், அதிக வேறுபாடில்லாததால் மற்ற நிலைகளில் மாற்றமில்லாமல் ஒரே மாதிரியிருக்கையில் வேளாண் அல்லாத தொழில்களில் பெண்கள் பெரியவர்களுக்குரிய கூலியைப் பெறவில்லை என உய்த்துணரலாம்.

### அமையப் பெற்ற துறை வேலைவாய்ப்பு

வேலைவாய்ப்பின் மற்றொரு முக்கியக் கட்டமைப்பு சுட்டிக்காட்டும் குறியீடு அமையப்பெற்ற துறை வேலைவாய்ப்பின் அளவாகும். 1999 - 2000-ல் மொத்த தொழிலாளரில் (28.98 மில்லியன்) மொத்த அமையப் பெற்ற துறையின் வேலைவாய்ப்பு 8.7% ஆக இருந்தது. (2.52 மில்லியன்) அமையப்பெற்ற துறையில் பெண்களின் பங்கு, 1979 - 80-ல் 2.97 லட்சத்திலிருந்து (மொத்த அமையப்பெற்ற துறை வேலைவாய்ப்பில் 16% 1999 - 2000-ல் 7.54 லட்சமாக (30%) உயர்ந்தது. பொது மற்றும் தனியார் துறை வேலைகளில், பெண்களின் பங்கு முறையே 4.26 லட்சம் மற்றும் 29.9 லட்சமாயுமிருந்தது.

மொத்தத்தில் இந்நிலை, பின்வருமாறு தெரிவிக்கிறது. முதலாவதாக அமையப்பெற்ற துறையின் உள்ளீர்ப்புத்திறன், ஓரளவு முன்னேற்றமடைந்திருக்கிறதென்பது சுட்டிக்காட்டப்படுகிறது. இரண்டாவது திட்ட காலத்தில் அமையப்பெற்ற துறை வேலைவாய்ப்பின் ஆண்டு வளர்ச்சிவீதம் 1.3%-ஆக விருக்கையில் எட்டாவது திட்ட காலத்தில் அது 2.4%ஆக இருந்தது. தனியார்த்துறை வேலைவாய்ப்பு, மிக வேகமான வளர்ச்சியைப் பெற்றது. இரண்டாவதாக, வளர்ச்சி அவ்வாறிருந்த போதிலும், அமையப்பெற்ற துறை, மொத்த வேலைவாய்ப்பில், ஒரு சிறு விழுக்காட்டை மட்டுமே (8.7%) பெற்றிருந்தது (படம் 3.1)

**படம் 3.1 : மொத்த வேலைவாய்ப்பும், அமைப்பு சார்ந்த பிரிவில் வேலைவாய்ப்பும், 1999 - 2000**



## பொதுத்துறை வேலைவாய்ப்பு

அமையப்பெற்ற துறையின் கட்டமைப்பு, பொதுத்துறை பெரும்பான்மையாயிருப்பதை சுட்டிக் காட்டுகிறது. இத்துறை அமையப்பெற்ற துறையின் வேலைவாய்ப்பில் 63%-ஐப் பெற்றுள்ளது. பொதுத் துறைக்குள், மாநில அரசுப் பணியாளர், அரசு சார்பு நிறுவனப் பணியாளர் மைய அரசுப் பணியாளர் மற்றும் உள்ளாட்சி மன்றப் பணியாளர் ஆகியோர் மொத்தத்தில் முறையே 39%, 35%, 15% மற்றும் 11% ஆக உள்ளனர்.

மேலும் தனியான விவரங்கள் மற்ற முக்கிய அம்சங்களை மையப்படுத்துவதாய் அமைகிறது. பொதுத்துறையின் பல்வேறு பிரிவுகளில் மாநில அரசுக்குள் வேலைவாய்ப்பின் வளர்ச்சி மிகக் கணிசமாக உள்ளது. மாநில அரசு வேலைவாய்ப்பு, 1979 - 80-ல் 3.75 லட்சத்திலிருந்து 1999 - 2000-ல் 6.32 லட்சமாக உயர்ந்தது. இதற்கு மாறாக, மைய அரசு வேலைவாய்ப்பு உள்ளபடியே குறைந்தது. பொதுத்துறையில் வேலைவாய்ப்பளிக்கும் பல்வேறு தொழிற் பிரிவுகளில் சமுதாய மற்றும் சமூகப் பணிகள் பெரும்பங்கை ஏற்றுள்ளன. இதைத் தொடர்ந்து வருவது போக்குவரத்தும் தகவல் தொடர்பும் (19.2%) தயாரிப்புத்துறை 1979 - 80-ல் 9% ஆக இருந்தது. தற்போது 1999 - 2000-ல் 6.6% ஆக மட்டுமே உள்ளது.

இருப்பினும், மொத்த நிலைமை, வளர்ச்சி சார்ந்ததாயுள்ளது. கடந்த இருபத்தாண்டுகளில் பொதுத்துறை வேலைவாய்ப்பு 1.42% ஆண்டுக்கூட்டு வளர்ச்சி வீதத்தில் வளர்ந்துள்ளது. பொதுத் துறையில் பெண்களுக்கான வேலைவாய்ப்பு மேலும் வேகமாக அதாவது 5.5% வீதத்தில் வளர்ந்துள்ளது.

## தனியார்த்துறை வேலைவாய்ப்பு (அமையப் பெற்றது)

1999-2000-ல் தமிழ்நாட்டில் அமையபெற்ற மொத்த தனியார்துறை வேலைவாய்ப்பு 9.27 லட்சம் வேலைவாய்ப்பாக இருந்தது. இது, பெருமளவு மொத்த வளர்ச்சி வீத உயர்வு காரணமாய் முந்தைய பத்தாண்டுகளிலிருந்ததைக் காட்டிலும் கணிசமாக உயர்வாயுள்ளது. தனியார்துறையில் வேலைவாய்ப்பின் வளர்ச்சி 1980-களில் 0.65% ஆக மட்டுமேயிருந்த போதிலும், அது 90-களில் 2.76% ஆக உயர்ந்தது. ஆண்களுக்கான வேலைவாய்ப்பு ஒரு ஆண்டுக்கு 0.80% மட்டுமே உயர்ந்தது. ஆனால், பெண்களுக்கு ஆண்டொன்றுக்கு 3.95% வீதம் அதிகரித்தது. இதன் விளைவாய், தனியார்த்துறையில் பெண்களின் வேலைவாய்ப்பு, 1979-80-ல் 22.8%-லிருந்து 1999-2000-ல் 35.4%-க்கு உயர்ந்தது. அமைப்பு சார்ந்த தனியார்த்துறை வேலைவாய்ப்புகளில் கிட்டத்தட்ட மூன்றில் இருபங்கு (64.7%) தயாரிப்புத்துறையில் குவிந்திருக்கிறது. அடுத்த பெரிய பங்களிப்பு, சமுதாய மற்றும் சமூகப் பணிகள் (20.8%) வணிகம், உணவகங்கள், போக்குவரத்து தகவல் தொடர்பு மற்றும் நிதித்துறைப் பணிகள் போன்ற மூன்றாவதான துறைப் பணிகள், 80-களில் எதிர்மறையான வளர்ச்சியை சந்தித்தன. பிறகு 90-களில் மிகத் துரிதமாய் வளர்ச்சியடையத் தொடங்கின.

## வேலையின்மை

வழக்கமான நிலையான வேலையின்மை என்பது ஒப்பீட்டடிப்படையில் நீண்டகால வேலையின்மையைக் குறிக்கும். அதாவது, நீடித்த வேலையின்மை, வேறு சொற்களில் சொல்வ

தென்றால் முறையான வேலைவாய்ப்பைத் தேடிக் கொண்டிருப்பவர்களின் எண்ணிக்கையை சுட்டிக்காட்டும் ஒரு நல்ல கருவியாகும். எனினும் நாள்தோறும் வேலையின்மை என்னும் நிலையானது வேலையின்மையின் உண்மையான அளவை சுட்டிக்காட்டும் அதிகப் பயனுள்ள மற்றும் அதிகம் உள்ளடங்கிய ஒரு பகுதியான கருவியாகும்.

அண்மைக்கால தே.மா.க. விவரப்படி (1999-2000) மாநில மொத்தத்திற்குமான வழக்கமான முதன்மை நிலைப்படி[4] 2.4% ஆகும். இதற்கு இணையான வேலையில்லாதோரின் எண்ணிக்கை 710,000 ஆகும். வேலையற்றோரின் விழுக்காடு கிராமப்புறங்களில் 2.00%-ம் நகர்ப்புறங்களில் 4.0% ஆகும். இவற்றிற்கிணையான வேலையற்றோரின் எண்ணிக்கை முறையே 344,000 மற்றும் 3,67,000 ஆகும். கிராமப்புறங்களில் வேலையின்மை விகிதம் பெண்களைக் காட்டிலும் ஆண்களுக்கு அதிகமாயிருக்கிறது. இருப்பினும் நகர்ப்புறங்களில், பெண்களின் வேலை யின்மை விகிதம் அதிகமாய் உள்ளது.

மேலே குறிப்பிட்டவாறு இம்மதிப்பீடுகள் மாநிலத்தில் நிலவும் உண்மையான வேலை யின்மை நிலைமையைப் பிரதிபலிக்கவில்லை. மிக முக்கியமாய் அவை தற்போதைய மறைமுக வேலையின்மை மற்றும் குறைவான வேலைவாய்ப்பு நிலையைக் கருத்தில் கொள்ளவில்லை. வேலைக்கோரி விண்ணப்பித்தோரின் பதிவேடுகளில் 4.3 மில்லியன் விண்ணப்பங்கள் பதிவாகி இருப்பதை அதாவது, அது அதைவிட குறைவான கால அளவு வேலைவாய்ப்பைக் கருத்தில் கொள்ளவில்லை. பரிமாற்ற விவரங்கள் காட்டுகிறது. இதில் மூன்றில் ஒரு பங்கு பெண்கள். வேலைவாய்ப்பு அலுவலகங்களில் பதிவு முற்றிலும் தன்னியலானதென்ற அடிப்படையில் இந்தப் புள்ளி விவரங்கள் புரிந்து கொள்ளப்பட வேண்டும். அதே சமயம், பதிவு செய்திருக்கும் அனைவருமே வேலையற்றிருக்கின்றனர் எனக் கருத்தில் கொள்ள வேண்டிய அவசியமில்லை. இருப்பினும், மாநிலத்தில் கல்வி கற்றோரின் வேலையின்மை அதிகரித்து வருகிறதென்பதை மறுக்க இயலாது. வேலை தேடுவோரில் 70% குறைந்த அளவாக பத்தாம் வகுப்புத் தேர்ச்சித் தகுதியைப் பெற்றுள்ளனர்.

வேலையின்மை மற்றும் குறைவாகப் பணியமர்த்தப்பட்ட நபர்களின் தேக்கநிலையுடன் இணைந்த தொழிலாளர் சக்தியின் அதிவேக வளர்ச்சி, பொதுவான வளர்ச்சி திட்டத்திற்கும் குறிப்பாய் மனித மேம்பாட்டு திட்டத்திற்கும் பெரும் சவாலாய் இருந்து வருகின்றன. பல்தொழில் நுட்பப் பயிலகங்களும் பொறியியல் கல்லூரிகளும் ஆண்டொன்றுக்கு ஏறத்தாழ முறையே 30,000 மற்றும் 22,000 நபர்களை, வெளியனுப்பும் நிலையில் தொழில் நுட்ப மனித சக்தியின் வளர்ச்சி மிக வேகமாய் உள்ளது. மேலும், இவ்வெண்ணிக்கையில் ஒவ்வொரு ஆண்டும் கல்லூரிக் கல்வியை முடித்துவிட்டு வெளிவரும் 3,00,000-க்கும் மேற்பட்டோர் அடங்கார். துணைக்கூலி வேலைவாய்ப்பு திட்டங்களும் ஏனைய கட்டமைப்பு வளர்ச்சி திட்டங்களும் கல்வி கற்காத குறைவாய் கல்வி கற்ற வேலையில்லாத நபர்களின் பிரச்சனைகளை மட்டுப்படுத்தினாலும் கல்வி கற்ற மனித ஆற்றல் தகுதிகளும் எதிர்பார்ப்புகளுடன் கூடிய இணையான வேலைகளுடன் உரிய முறையில் பயன்படுத்தப்பட வேண்டும்.

---

[4]தே.மா.க. விவரம் வழக்கமான முதன்மை நிலை மற்றும் வழக்கமான முதன்மை நிலை மற்றும் துணை நிலை வேலையின்மைக்கும் இடையில் வேற்றுமைப்படுத்திக் காட்டுகிறது. வழக்கமான முதல் நிலை வேலையின்மை, குறைந்த அளவாக ஒரு ஆண்டில், ஆறு மாதங்களுக்காவது பொருளாதார நடவடிக்கையில் ஈடுபட்டிருக்காதவர்களைக் குறிக்கிறது.

## எதிர்காலக் கொள்கை முயற்சிகள்

தற்போதிருக்கும் வேலைவாய்ப்பு நிலையையும் எதிர்காலத் தேவைகளையும் அடிப்படையாய் கொண்ட பகுப்பாய்விலிருந்து எண்ணற்ற முக்கியப் பிரச்சனைகள் எழுகின்றன. இப்பிரிவு, முக்கியக் கண்டுபிடிப்புகளை சுருக்கமாய் விளக்கி, அதற்கு தேவையான தீர்வுகளையும் அளிக்கிறது.

- வேளாண்மையில், குறிப்பாய் தண்ணீர்ப் பற்றாக்குறையுள்ள தமிழ்நாட்டில் கூடுதலான தொழிலாளரை ஈர்க்கும் கொள்திறன் வரையறையான நிலையில், வேளாண் தொழிலாளர்களை வேறு துறைகளில் ஈர்க்கப்படுவதை ஊக்குவிப்பதோடு அதன் விளைவாய் வேளாண்துறையில் தொழிலாளரின் உற்பத்தித் திறனையும் உயர்த்திடும் ஒரு கொள்கையை மேற்கொள்வது விரும்பத்தக்கது.

- தொழில் நுட்பத் தகுதி பெற்ற தொழிலாளர் ஆற்றல் அதிவேகமாய்ப் பெருகிவரும் நிலையில், வேளாண்மை அதை சார்ந்த நடவடிக்கைகள் ஆகிய இரண்டிலும் குறிப்பாய் தோட்டக்கலை, உணவுப்பொருள் பதனீட்டுத் தொழில் மற்றும் சிறு தொழில்கள் மற்றும் பெரும் பயனீட்டுப் பொருட்களைத் தயாரிப்பதில் முக்கியமாய் ஈடுபட்டுள்ள ஏனைய வேளாண் சாராத தொழில்கள் தன் வேலை முயற்சிகளுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டும்.

- சம்பள வேலைவாய்ப்பு சுருங்கி வரும் வேளையில் தன் வேலைவாய்ப்புகளுக்கு ஆதரவளிக்கப்பட வேண்டும். தொழிற்சாலை வேலைவாய்ப்புகளில் அண்மைக் காலப்போக்கு பருத்தி நெசவு, நெசவு உற்பத்திப் பொருட்கள், உணவுத் தயாரிப்புகள், தோல் உற்பத்திப் பொருட்கள் முதலானவை போன்ற வழக்கமான தொழில்களே தொடர்ந்து பெரும்பான்மையாய் இருந்து வருகின்றன. காகிதம் மற்றும் காகிதப் பொருட்கள் உற்பத்தி, மின்யந்திரங்கள், தகவல் தொழில்நுட்ப இயந்திரங்கள் தயாரிப்பு தொழில்களும் கூடக் கணிசமான வேலைவாய்ப்புகளை உருவாக்கியுள்ளன.

- சுய வேலைவாய்ப்பு முயற்சிகளுக்கு நிதி உதவியளிக்கும் நிறுவன ஏற்பாடுகளுக்கு ஆதரவளிக்கப்பட வேண்டும். கடனளிக்கும் நிறுவனங்களின் தற்போதிருக்கும் செயலாக்கமில்லா உடைமைகள் பற்றிய மண்டல வாரியான நிலைகள் கவனமுடன் ஆய்வு செய்து பிரச்சனைகளைக் கண்டறிந்து செயல்திறம் மற்றும் பயிற்சி (குறிப்பாய் விற்பனையில்) உள்ளடங்கிய உரிய ஏற்பாடுகளை மேற்கொள்ள வேண்டும். கிராமப் புறங்களில் விற்பனை வசதியுடன் கூடிய வீட்டிலிருந்தபடியே செய்யும் தொழிலுக்கான நிறுவன ஏற்பாடுகளுக்கு நல்வாய்ப்பு உள்ளது.

- சந்தைகளில் அவ்வப்போது எழும் தேவைகளுக்கேற்ப பெருகி வரும் தொழிலாளர் ஆற்றலுக்கு ஏற்ப பயிற்சியளிக்கத் தொடர்ச்சியான மனித ஆற்றல் மேம்பாடு வலியுறுத்தப் பட வேண்டும்.

- சிறார் தொழிலாளர், பிணைத்தொழிலாளர் ஆகியன போன்ற விரும்பத்தகாத வழக்கங்கள் நிறுத்தப்பட வேண்டும். கூடுதலாய் எல்லாத் தொழிலாளர்களும் அரசு உதவி அல்லது ஈட்டுறுதி அடிப்படையிலான சமூகப் பாதுகாப்பு திட்டங்களின் கீழ்க்கொண்டு வரப்பட வேண்டும்.

**வருமானம்**

**தனி நபர் வருமானம்**

அகில இந்தியத் தனி நபர் வருமானமான ரூ. 11,554/- உடன் ஒப்பிடுகையில் தமிழ்நாட்டின் தனி நபர் வருமானம் 1996 - 97-ல் இருந்த விலை நிலவரப்படி ரூ. 15,929/- ஆக இருந்தது. இது 1980-களில் தமிழ்நாட்டின் தனி நபர் வருமானம், அகில இந்திய சராசரியை விடக் குறைந்திருந்த நிலையின் தலைகீழ் மாற்றமாகும். தனி நபர் வருமானத்தில், 15 பெரிய மாநிலங்களில் தரவரிசையில் தமிழ்நாடு ஐந்தாவது திட்டத்தைப் பெற்றுள்ளது. மகாராஷ்ட்டிரா மிக அதிகத் தனி நபர் வருமானத்தை (ரூ. 19,098) பெற்றுள்ளது. இதைத் தொடர்ந்து பஞ்சாப், அரியானா மற்றும் குஜராத் மாநிலங்கள் ரூ. 15,000/-க்கும் மிகையான தனி நபர் வருமானத்தைப் பெற்றிருந்தன. இருப்பினும், தமிழ்நாடு தென் மாநிலங்களுடன் ஒப்பிடுகையில் அதிகமான தனி நபர் வருமானத்தைப் பெற்றுள்ளது.

தமிழ்நாட்டின் அண்மைக்கால, தனி நபர் வருமானத்தில் மேலான செயலாக்கத்திற்குக் காரணம் 1996-97-க்கும் 1990-91-க்கும் இடைப்பட்ட காலத்தில் 6.3% வீத ஆண்டு வளர்ச்சியே. ஏனைய 14 பெரிய மாநிலங்களின் வளர்ச்சி வீதத்தைக் காட்டிலும் அதிகமானது. இது[5] 1993-94-க்கும் 1996-97-க்கும் இடைப்பட்ட காலத்தில், தனியான வளர்ச்சி வீதம். மூன்றாவதான பிரிவு ஆண்டுதோறும் மிக அதிக வேகமாக 13.11% வளர்ச்சி பெற்றதை விளக்குகிறது. இடைநிலைப்பிரிவு 8.78%-ம், முதனிலைப் பிரிவு 0.46%-ம் வளர்ச்சியைப் பதிவு செய்திருக்கின்றன.

**மாவட்ட வாரியான தனி நபர் வருமானம்**

மாவட்ட வாரியான தனி நபர் வருமான மதிப்பீடுகளின் ஒரு பகுப்பாய்வு பெரும் மாறுபாடு களை வெளிப்படுத்துகிறது. காஞ்சிபுரம் மிக உயர்ந்த தனி நபர் வருமானத்தையும், விழுப்புரம் மிகக் குறைவான தனி நபர் வருமானத்தையும் பெற்றிருக்கின்றன. காஞ்சிபுரத்தில், 1996-97-ல் (நடப்பு விலைவாசிப்படி) தனி நபர் வருமானம் ரூ. 23,075/- இருந்தது. இது விழுப்புரத்தைக் காட்டிலும் கிட்டத்தட்ட 3 மடங்கு அதிகம். தனி நபர் உயர் வருவாயுடன் கூடிய மற்ற மாவட்டங்கள். சென்னை, கோயம்புத்தூர், மதுரை, சேலம் மற்றும் ஈரோடு. மாவட்டவாரி, பிரிவுவாரியங்களில் அட்டவணை அ6.4-ஐயும் தனி நபருடைய வருமானத்திற்கு அட்டவணை-6.2-ஐயும் மொத்த மாவட்ட உள்நாட்டு உற்பத்தி வளர்ச்சி வீத விழுக்காட்டுக்கு அட்டவணை-அ6.5-ஐயும் பார்க்கவும்.) மாநில சராசரி ரூ. 13,985/- ஆகும்.

பொதுவாக நகர் மயமாக்கப்பட்ட மாவட்டங்களான சென்னையும் கோயம்புத்தூரும் தனி நபர் உயர் வருமானத்தைப் பெற்றுள்ளன. இதற்கு நிகராக முதன்மை, தயாரிப்பு மற்றும் மூன்றாவதான பிரிவுகள், மொத்த வருமானத்தில் ஒரு உயர் விழுக்காட்டுப் பங்கு அளிப்பை அளித்துள்ளன. ஆனால், முதனிலைப் பிரிவின் பங்களிப்பு இம்மாவட்டங்களில் கணிசமானதாக இல்லை. திருச்சிராப்பள்ளி, மதுரை, விருதுநகர் போன்ற மாவட்டங்கள் உயர் அளவுகளிலான வணிகம் மற்றும் தொழில் நடவடிக்கைகளைக் கொண்டுள்ளன. இது தனி நபர் உயர் வருமானத்திற்கு வகை செய்கிறது.

---

[5] தமிழ்நாடு உள்ளிட்ட 15 மாநிலங்கள் மத்திய திட்டக்குழுவால் சிறப்பற்ற வகையானவை என வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவையனைத்தும் சேர்ந்து நாட்டில் உருவாக்கப்படும் மொத்த வருமானத்தில் 96%-க்குப் பொறுப்பேற்கின்றன.

தனி நபர் வருமான நிலைகள், வெவ்வேறு அளவுகளில் வகைப்படுத்தலாம். ரூ. 20,000-க்கு மேல் ரூ. 14,000-க்கும், ரூ. 20,000/-க்குமிடைப்பட்ட ரூ. 10,000/-க்கும், ரூ. 14,000-க்கும் இடைப்பட்ட மற்றும் ரூ. 10,000-க்கும் குறைவான பெட்டி 3-2-ல் கண்டுள்ளபடி காஞ்சிபுரமும், சென்னையும் மட்டுமே 1996-97-ல் ரூ. 20,000/-க்கும் அதிகமான தனி நபர் வருமானத்தைப் பெற்றன. தஞ்சாவூர், கடலூர், திருவாரூர், சிவகங்கை, திருவண்ணாமலை மற்றும் விழுப்புரம் ஆகிய 6 மாவட்டங்கள் ரூ. 10,000/-க்கும் குறைவான தனி நபர் வருமானத்தைப் பெற்றன. மிக வியப்பும் ஆர்வமூட்டக் கூடிய பொருள் என்னவென்றால் மாநிலத்தின் நெற்களஞ்சியம் எனப் பெயர் பெற்ற தஞ்சாவூர், மொத்த வருமான நிலைகளில் வேளாண்மை பெருமளவில் பங்களிக்கவில்லை என மீண்டும் ஒருமுறை எடுத்துக்காட்டுகிறது.

**பெட்டி 3.2 : மாவட்ட நிலை - வருமான வகைகள்**

| தனி ஒருவர் வருமான அளவு (1996-97) | மாவட்டங்களின் எண்ணிக்கை | மாவட்டங்களின் பெயர்கள் |
|---|---|---|
| ரூ. 20,000-க்கு மேல் | 2 | காஞ்சிபுரம், சென்னை |
| ரூ. 14,000-லிருந்து ரூ. 20,000 வரை | 8 | கோயம்புத்தூர், மதுரை, சேலம், ஈரோடு, திருச்சி, தூத்துக்குடி, திருவள்ளூர், விருதுநகர் |
| ரூ. 10,000-லிருந்து ரூ. 14,000 வரை | 13 | நீலகிரி, வேலூர், திருநெல்வேலி, நாகப்பட்டினம், நாமக்கல், தேனி, திண்டுக்கல், கரூர், பெரம்பலூர், தருமபுரி, புதுக்கோட்டை, ராமநாதபுரம், கன்னியாகுமரி |
| ரூ. 10,000-க்கும் குறைவு | 6 | தஞ்சாவூர், கடலூர், திருவாரூர், சிவகங்கை, திருவண்ணாமலை விழுப்புரம் |

மொத்த நிகர மாநில உள்நாட்டு உற்பத்தி பங்களிப்பில், சென்னை மாவட்டம், மிக அதிகமான (1996-97) அதாவது 11.38% பங்களிப்பையும், கோயம்புத்தூர் அதற்கடுத்த மிகப்பெரும் பங்கை (9.07%) அளிக்கிறது. இவ்விரண்டு மாவட்டங்களும், ஒருங்கிணைந்து தமிழ்நாட்டின் மொத்த நிகர உற்பத்தியில் தோராயமாய் ஐந்தில் ஒருபங்கு பெற்றுள்ளன. தேனி, நாகப்பட்டினம், புதுக்கோட்டை, பெரம்பலூர், ராமநாதபுரம், திருவாரூர், கரூர், சிவகங்கை மற்றும் நீலகிரி ஆகிய 9 மாநிலங்களும் ஒருங்கிணைந்து ஐந்தில் ஒரு பங்கினைப் பெறுகின்றன.

### தனிநபர் வருமானம், நலவாழ்வு மற்றும் கல்வி

தனி நபர் உயர் வருமானத்தைப் பெற்ற மாவட்டங்கள், பொதுவாய் மேலான கல்வி மற்றும் நலவாழ்வுத் தரங்களைப் பெறும் என எதிர்பார்க்கலாம். அடிப்படை விவரங்கள் பற்றிய கூரிய ஆய்வு, தமிழ்நாட்டில் இத்தொடர்பு உண்மையாயிருக்க வேண்டிய அவசியமில்லை என்பதை வெளிப்படுத்துகிறது. தனி நபர் உயர் வருமானத்தைப் பெற்றுள்ள சென்னை மாவட்டம் ஒரு உயர்

கல்வியறிவு நிலையைப் பெற்றிருந்தாலும் (80%-க்கு மேல்) ஒப்பீட்டு அடிப்படையில் உயர் வருமான நிலைகளைப் பெற்றிருக்கும், சேலம், ஈரோடு போன்ற மாவட்டங்கள் மிகக் குறைவான கல்வியறிவு நிலைகளை பெற்றுள்ளன. (70%-க்கும் குறைவான) மேலும் கன்னியாகுமரி போன்றதொரு மாநிலம் ஒப்பீட்டு அடிப்படையில் குறைவானதொரு தனி நபர் வருமானத்தைப் பெற்றிருந்தாலும் கல்வியறிவில் 80%-க்கு மேலான வீதத்தைப் பெற்றிருக்கிறது. (அட்டவணை-3.11) பள்ளிச் சேர்க்கையில் இதே நிலை காணப்படுகிறது. காஞ்சிபுரம், திருநெல்வேலி, சேலம் மற்றும் உயர் வருமான நிலைகளைப் பெற்ற 4 மாவட்டங்கள் குறைவான சேர்க்கை வீதங்களைப் பெற்றுள்ளன. குறைவான வருமான நிலைகளுடன் குறைவான கல்வியறிவு வீதங்களைப் பெற்ற தருமபுரி போன்ற மாவட்டங்களும் தமிழ்நாட்டில் உள்ளன.

**அட்டவணை - 3.11 : தனி நபரின் வருமானமும் கல்வியறிவும்**

(விழுக்காடு)

| தனிநபர் வருமானம் 1996-97 (நடப்பு விலை விகிதம்) | 80-க்கு மேல் | 70-80 | 60-70 | 50-60 |
|---|---|---|---|---|
| | கல்வியறிவு வீதம் 2001 மக்கட் தொகைக் கணக்கெடுப்புப்படி | | | |
| ரூ.20,000-க்கு மேல் | சென்னை | காஞ்சிபுரம் | | |
| ரூ.15,000 - 20,000 | தூத்துக்குடி | மதுரை, திருவள்ளூர், கோயம்புத்தூர் | சேலம், ஈரோடு | |
| ரூ.12,000 - 15,000 | உதகமண்டலம் | வேலூர், திருச்சி, நாகப்பட்டினம், விருதுநகர், திருநெல்வேலி | நாமக்கல் | - |
| ரூ.10,000 - 12,000 | கன்னியாகுமரி | புதுக்கோட்டை, தேனி, கடலூர், ராமநாதபுரம் | கரூர், பெரம்பலூர், திண்டுக்கல் | தருமபுரி |
| ரூ.8,000 - 10,000 | - | தஞ்சாவூர், திருவாரூர், சிவகங்கை | விழுப்புரம், திருவண்ணாமலை | - |

*ஆதாரம்: மதிப்பாய்வு மற்றும் செயல்முறை ஆராய்ச்சி இயக்ககம்.*

நலவாழ்வு நிலையிலும் மேற்சொன்னவாறு இதே நிலைமைதான். சென்னை போன்ற ஒரு மாவட்டத்தில் வருமானத்திற்கும் நலவாழ்வுக்குமிடையே ஒரு தெளிவான தொடர்பு காணப்படுகிறது. இதே போன்று, தருமபுரி போன்ற மாவட்டங்களிலும் குறைவான வருமான நிலைகள், பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்பில் முடிவுறுகின்றன. (அட்டவணை - 3.12) பெரம்பலூர், தேனி, விழுப்புரம், தஞ்சாவூர் மற்றும் திருவாரூர் மாவட்டங்களும் குறைவான தனி நபர் வருமானத்தையும் பிறப்பின்போது ஆயுள் எதிர்பார்ப்புக் காலத்தையும் பெற்றுள்ளன. (60-63%). இதற்கு மாறாய், கன்னியாகுமரி குறைவான வருமான நிலையிருப்பினும், நலவாழ்வில் கேரளாவுக்கு இணையாக நல்ல செயலாக்கத்தைப் பெற்றுள்ளது.

**அட்டவணை - 3.12 : தனி நபர் வருமானமும் ஆயுட் காலமும் (பி.எ.ஆ.)**

| தனிநபர் வருமானம் ரூ. | பிறப்பின் எதிர்பார்ப்பு ஆயுட் காலம் (பி.எ.ஆ.) ஆண்டுகள் | | | | |
|---|---|---|---|---|---|
| | 72-75 | 69-72 | 66-69 | 63-66 | 60-63 |
| ரூ.20,000-க்கு மேல் | சென்னை | காஞ்சிபுரம் | - | - | - |
| ரூ.15,000-20,000 | - | ஈரோடு, கோயம்புத்தூர் | திருவள்ளூர், தூத்துக்குடி | சேலம் | மதுரை |
| ரூ.12,000-15,000 | - | நீலகிரி, | நாமக்கல், திருச்சி, நாகப்பட்டினம், விருதுநகர், | திருநெல்வேலி, வேலூர் | - |
| ரூ.10,000-12,000 | கன்னியாகுமரி | - | கரூர் | புதுக்கோட்டை, திண்டுக்கல், ராமநாதபுரம் | தருமபுரி, பெரம்பலூர், தேனி |
| ரூ.8,000-10,000 | - | - | கடலூர், திருவண்ணா மலை, சிவகங்கை | விழுப்புரம், தஞ்சாவூர், திருவாரூர் | - |

*குறிப்பு: தனிநபர் வருமானம் 1996-97 (நடப்பு விலைவாசிப்படி); பி.எ.ஆ. 1997-98*

*ஆதாரம்: மதிப்பாய்வு மற்றும் செயல்முறை ஆராய்ச்சி இயக்ககம்.*

**வறுமையும் ஏற்றத்தாழ்வும்**

அவசர கவனத்திற்குரிய மற்றொரு பிரச்சனை வறுமை. வறுமை என்பது அலுவலக சொல்விளக்கப்படி சாதாரண, குறுமமான வாழ்க்கை நிலையை ஒரு நபர் பெற இயலாதிருப்பதாகும். இவ்விதமாய், வறுமைக் கோட்டிற்கும் கீழாக வாழ்வோர், அத்தகைய வாழ்க்கை நிலையைப் பெற இயலாதிருக்கிறார்கள். அனைத்திந்திய நிலையில் ''கிராம மற்றும் நகர்ப்புறங்களுக்கு, குறுமத் தேவைகள் மற்றும் பயனீட்டளவுக் கேட்புத் திட்டம் மீதான சிறப்புப் பணிப்பிரிவு'' பரிந்துரைத்த வறுமைக் கோடுகள் அதாவது மாதாந்திர தனி ஒருவர் மொத்த செலவு முறையே ரூ 49.09 மற்றும் ரூ. 56.64 (1973-74 விலைவாசிகளின்படி). இப்போதும் வறுமை மதிப்பீடுகள் செய்வதற்கான அடிப்படைகளாக உள்ளன. இருப்பினும் ''இந்திய அரசின் திட்டக்குழுவால் அமைக்கப்பட்ட ஏழையரின் எண்ணிக்கையின் விகிதத்தை மதிப்பீடு செய்யும் வல்லுநர் குழுவால்'' பரிந்துரைத்தபடி மாநில அளவில் வறுமைக்கோடுகள் பின்பற்றப்பட்டன. இவ்வாறு அனைத்திந்திய அளவில் கிராமப்புற / நகர்ப்புற வறுமைக்கோடுகளாய் தனி ஒருவர் வருமானங்கள் முறையே ரூ.205.84 மற்றும் ரூ. 281.35-ம் பின்பற்றப்படுகையில் திட்டக்குழு தமிழ்நாட்டில் கிராமப்புற வறுமைக்கோடு மாதம் ஒன்றுக்கு தனி ஒருவருக்கு ரூ.196.53-ம் நகர்ப்புறங்களுக்கு மாதம் ஒன்றுக்கு தனி ஒருவருக்கு ரூ.296.63-ம் இருக்க வேண்டுமென நிபந்தனை விதித்தது. இந்த வறுமைக்கோட்டை அடிப்படையாகக் கொண்டும், மேலும் நபர் எண்ணிக்கை விதித்த அடிப்படையிலும் அதாவது வறுமைக்கோட்டிற்குக்கீழ் வாழ்வோர் தொகை 1999-2000-ம் ஆண்டுக்குக் கணக்கிடப்பட்டது.

## வறுமைநிலை இந்தியாவும் தமிழ்நாடும்

தே.மா.க.- 55-ஆவது சுற்றின்படி இந்திய மக்கட்தொகையில் 26.10 விழுக்காடு அல்லது 260 மில்லியன்கள் இதுவரையில் வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழ்கின்றனர். கடந்த சில பத்தாண்டுகளில் வறுமைக்கோட்டிற்கு கீழ் வாழும் மக்களின் எண்ணிக்கை, விழுக்காடு மற்றும் மொத்த மக்கட்தொகையில் கணிசமாய் குறைந்துள்ளது என்பதில் எந்தவித ஐயமும் இல்லை. 1973-74-ல் 54.88% மக்கள் வறுமைக் கோட்டின் கீழ் வாழ்ந்தனர். மொத்தத்தில் இந்த எண்ணிக்கை 26.10%-ஆகக் குறைந்தது[6] எண்ணிக்கையின்படி வறுமைக்கோட்டின் கீழ் வாழ்வோரின் எண்ணிக்கை 320 மில்லியனிலிருந்து 260 மில்லியனாய் குறைந்தது எனக் கூறலாம். இதில், 193 மில்லியன் கிராமப்புறங்களிலும் 67 மில்லியன் நகர்ப்புறங்களிலும் வாழ்கின்றனர்.

நாட்டில் நபர் வாரி எண்ணிக்கை விகிதத்தில் பெரும் மாறுபாடுகள் உள்ளன. ஐயுறக்கூடிய வகையில், ஒரிசா மாநிலத்தில் வறுமைக்கோட்டிற்கு கீழ் வாழும் மக்கள் 47.15% உள்ளனர். தேசிய சராசரி 26.10% ஆக இருந்தது. ஏழையரின் மொத்த எண்ணிக்கையில் (133 மில்லியன்) ஏறத்தாழ 50%-க்கு மேலானோர், பீகார், மத்தியபிரதேசம், ராஜஸ்தான் மற்றும் உத்திரப்பிரதேசம் ஆகிய 4 மாநிலங்களில் பரந்து காணப்படுகின்றனர். பெரிய மாநிலங்களில் அசாம், பீகார், மத்தியப்பிரதேசம், ஒரிசா, உத்திரபிரதேசம் மற்றும் மேற்கு வங்கம் அனைத்திந்திய சராசரியைவிட அதிகமான வறுமை விகிதத்தைப் பெற்றுள்ளன. அரியானாவும், பஞ்சாபும், வறுமைக்கோட்டிற்கு கீழ் வாழும் மக்கட்தொகையை 10%-க்கும் குறைவாகவே பெற்றுள்ளன. தனி நபர் வாரி எண்ணிக்கை விகிதமாய் 6.16%-ஐ மட்டுமே கொண்டுள்ள பஞ்சாப் மிகக் குறைவான வறுமை நிலையைப் பெற்றுள்ளது.

இருப்பினும் தனிநபர் வாரி எண்ணிக்கை விகிதத்தில் 1993-94-க்கும் 1999-2000-க்கும் மிடையில் ஒரு மொத்தமான குறைந்த போக்கு காணப்பட்டது. இப்போக்கு, ஐயத்துக்கிடமின்றி மாநிலத்திற்கு மாநிலம் கணிசமாக மாறுபட்டிருந்தது. அரியானா, வறுமைநிலையில் மிகப்பெரும் குறைப்பைப் பதிவு செய்தது. 1993-94-ல் 25.35% விழுக்காடாயிருந்தது. 1999-2000-ல் 8.74%-ஆகக் குறைவு. ஒரிசாவில் மிகக்குறைந்த அளவாய் வெறும் 1.41% புள்ளிகளாயிருந்தது.[7]

### அட்டவணை-3.13 : தமிழ்நாட்டில் வறுமை நிலைகளின் போக்கு

| ஆண்டு | வ.கோ.கீ.உள்ள மக்கட்தொகை (%) | | | வ.கோ.கீ.உள்ள மக்கட்தொகை (மில்லியனில்) | | |
|---|---|---|---|---|---|---|
| | கிராமப்புறம் | நகர்ப்புறம் | ஒருங்கிணைந்தது | கிராமப்புறம் | நகர்ப்புறம் | ஒருங்கிணைந்தது |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| 1973-74 | 57.43 | 49.40 | 56.94 | 17.26 | 6.69 | 23.95 |
| 1977-78 | 57.68 | 48.69 | 54.79 | 18.25 | 7.30 | 25.95 |
| 1983 | 53.99 | 46.96 | 51.16 | 18.25 | 7.85 | 26.10 |

(தொடர்ச்சி)

[6]தே.மா.க. 55-வது சுற்றில் ஏற்கப்பட்ட வழிமுறையையே மீண்டும் பின்பற்றும் முறை குறித்து கருத்து மாறுபாடு உள்ளது. நபர்வாரி எண்ணிக்கை விகிதத்தில் இறக்கம் (வறுமைக்கோட்டிற்கு குறைவான எண்ணிக்கை) 1993-94-க்கும் 1999-2000-க்கு மிடையில் உள்ளது உள்ளபடியே மிகைப்படுத்தப் பட்டதென்பது பலருடைய வாதம்.

[7]மறுபடியும் 1993-94-க்கும் 1999-2000-க்கும் இடையிலான வறுமை நிலைகளின் இறக்கம் தே.மா.க. நிறுவனம் ஏற்றுக்கொண்ட அதே வழிமுறையில் மாற்றம் காரணமாய், எச்சரிக்கையுடன் விளக்கப்பட வேண்டும்.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| 1987-88 | 45.80 | 38.64 | 43.39 | 16.18 | 6.93 | 23.11 |
| 1993-94 | 32.48 | 39.77 | 35.03 | 12.17 | 8.04 | 20.21 |
| 1999-2000 | 20.55 | 22.11 | 21.12 | 8.05 | 5.00 | 13.05 |

*குறிப்பு : வ.கோ.கீ. - வறுமைக் கோட்டிற்கு கீழ்*

*ஆதாரம் : திட்டக்குழு, இந்திய அரசு*

1970 மற்றும் 1980-ல் ஒப்பீட்டடிப்படையில் வறுமை நிலைகள் மாறாமல் மேற்கூறியபடி 50% நிலைக்கு மேலாயிருந்தமையால், அந்த காலத்திலிருந்து வறுமை நிலைகளில் திடீர் இறக்கம் காணப்பட்டது. 1987-88-ல் வறுமையின் நிலை 45.80% ஆக இருந்தது. 1993-94-ல் து 32.48% ஆகவும் 1999-2000-ல் 21.12% ஆகவும் மேலும் குறைந்தது. தமிழ்நாட்டில் 1999-2000-ல் வறுமைக்கோட்டிற்கும் கீழ் வசித்த மக்களின் எண்ணிக்கை 13.05 மில்லியன்கள் (கிராமப்புறங்களில் 8.05 மில்லியன். நகர்ப்புறங்களில் 5 மில்லியன்) கிராமப்புறங்களில் வறுமை வீதம் 32.38%-லிருந்து 20.55-க்குக் குறைந்தாலும் நகர்ப்புறங்களில் குறைவு 39.7%-லிருந்து 22.4%-ஆக இருந்தது. இவ்வாறு வறுமை நிலைகள் கிராமப்புறங்களிலும் நகர்ப்புறங்களிலும் கிட்டத்தட்ட சமமாயிருந்தது.

**வறுமையின்தாக்கம் - மண்டலம் மற்றும் மாவட்டம் வாரியாக**

55-ஆவது சுற்றுக்கு மண்டல மற்றும் மாவட்ட வாரியான அடிப்படை விவரங்கள் கிடைக்கப் பெறாமையால் 50-ஆவது சுற்றின் (1993-94) அடிப்படை விவரங்கள் பயன்படுத்தப்பட்டன. ஏழையரை எண்ணுதல், இந்தியாவில் ஏழையர் எங்கே உள்ளனர்? என்ற தலைப்பில், 1998-ல் இந்திய அரசின் புள்ளியல் துறையால் தயாரிக்கப்பட்ட அறிக்கையில், தமிழ்நாட்டில் வெவ்வேறு மண்டலங்களில் நிலவும் வறுமையைப் பற்றிய பயனுள்ள நுண்ணறிவை அளிக்கிறது. (அட்டவணை - 3-14) பயன்படுத்தப்பட்ட புள்ளி விவரங்கள் 1993-94 வரை மட்டுமே இருப்பதால், அந்தக் காலகட்டத்திலிருந்த (22 மட்டும்) மாவட்டங்கள் மட்டுமே சேர்க்கப்பட்டிருந்தன என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும். இதன் விளைவாய், அவை அறிக்கையில் பெருமளவு பயன்படுத்தப்பட்ட 29 மாவட்டங்களிலிருந்து வேறுபட்டுள்ளன.[8]

**அட்டவணை 3-14 : தமிழ்நாடு மண்டலவாரியான வறுமையின் மதிப்பீடு**

| | மண்டலம் 1987-88 | வறுமைக்கோட்டின் கீழ் % 1993-94 | வறுமைநிலைகளில் குறைவு % புள்ளிகளில் |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| சென்னை | 58.17 | 44.23 | 13.94 |
| கடற்கரைப்பகுதி | 37.09 | 21.09 | 16.00 |

*(தொடர்ச்சி)*

[8] பகுப்பாய்வு 22 மாவட்டங்களுக்கு மட்டுமே பொருந்தினாலும், எஞ்சியுள்ள ம.மே.அ.யில் அளிக்கப்பட்டுள்ள அடிப்படை விவரங்களுடன் சரிநிகராய் ஒப்பிட முடியாது. மேலும் அது தேதியிடப் பட்டுள்ளது. அது மண்டலத்தைப் பற்றிய மற்றும் மாவட்டவாரி வறுமை நிலையையும், மாநிலத்தினருக்கும் சமமின்மையையும் பற்றி விரிவான அளவைத் தெரிவிக்கிறது.

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| மதுரை | 50.27 | 37.35 | 12.92 |
| கோயம்புத்தூர் | 28.78 | 22.50 | 6.28 |
| தமிழ்நாடு | 42.90 | 34.42 | 8.48 |
| அனைத்திந்தியா | 39.60 | 33.38 | 6.22 |

*குறிப்பு : எல்லா மண்டலங்களும் கிராமப்புறம் மற்றும் நகர்ப்புறம் இரண்டும் இணைத்து காட்டுகிறது.*
*ஆதாரம் : பொருளியல் மற்றும் புள்ளியியல் இயக்ககம்*

தமிழ்நாடு 4 மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. 1. சென்னை (சென்னை, காஞ்சிபுரம், வடஆற்காடு, திருவண்ணாமலை, தென்னாற்காடு, விழுப்புரம்). 2. கடற்கரையோரம், (திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், நாகப்பட்டினம், புதுக்கோட்டை) 3. மதுரை, (மதுரை, திண்டுக்கல் விருதுநகர், திருநெல்வேலி, கன்னியாகுமரி, தூத்துக்குடி ராமநாதபுரம், சிவகங்கை) மற்றும் 4. கோயம்புத்தூர் (கோயம்புத்தூர், ஈரோடு, நீலகிரி, சேலம், தருமபுரி) மேற்சொன்ன ஆய்வின்படி மாநிலத்தின் மொத்த மக்கட் தொகையில் 30.44% 1993-94-ல் வறுமைக் கோட்டின் கீழ் வாழ்கின்றனர். மண்டல வாரியான வறுமை மதிப்பீடு வறுமை நிலைகள், குறிப்பாக, சென்னை, மதுரை மண்டலங்களில் அதிகமாகவும் கடலோர மற்றும் கோயம்புத்தூர் மண்டலங்களில் மாநில சராசரிக்கும் குறைவா யிருப்பதைக் காட்டுகிறது. சென்னையில் வறுமைக்கோட்டின் கீழ் வாழ்வோரின் விழுக்காடு மிக அதிகமாய் 44.23% ஆக இருக்கையில் கடலோர மண்டலத்தில் அது 21.09% மட்டுமேயிருந்தது. இருப்பினும், அனைத்து மண்டலங்களிலும் வறுமை நிலைக்கு கீழ் வாழும் மக்களின் எண்ணிக்கையில், 1987-88-க்கும் 1993-94-க்கும்மிடையே ஒரு கணிசமான இறக்கமிருந்தது. கடலோர மண்டலத்தில் இறக்கம் மிகவும் கணிசமாக காணப்பட்டது.

தேசிய மாதிரிக் கணக்கெடுப்பு (தே.மா.க.) அடிப்படை விவரங்கள், மாவட்ட வாரியான வறுமை விகிதங்களைக் கணக்கிடுவதற்கான அடிப்படையாயுமிருந்ததென்பது குறிப்பிடத்தக்கது. மாநில மாதிரி மத்திய மாதிரியுடன் மேலான முடிவுகளைப் பெறும்[9] பொருட்டு இணைக்கப்பட்டது.

இம்மதிப்பீடுகளின்படி, மக்கட் தொகையில் 31.66% 1993–94-ல் வறுமைக் கோட்டிற்கு கீழ் இருந்தது. (அட்டவணை - அ6.6) வறுமையின்தாக்கம் ஒப்பீட்டடிப்படையில் கிராமப்புறங்களைவிட, (28.93%) நகர்ப்புறங்களில் அதிகமாய் உள்ளது.

1993–94-ல் தென்னாற்காடு மாவட்டத்தில் வறுமையின்தாக்கம் மிக அதிகமாயிருந்தது. மக்கட்தொகையில் ஏறத்தாழ பாதி வறுமைக்கோட்டிற்கு கீழ் வாழ்ந்தனர். அதிக வறுமை நிலைகளைப் பெற்றிருந்த மற்ற மாவட்டங்கள் கன்னியாகுமரி (48.59%), தூத்துக்குடி (47.02%) திண்டுக்கல் (46.28%) மற்றும் திருநெல்வேலி (44.10%) ஈரோடு, வறுமைக் கோட்டின் கீழ் வாழும்

[9]மத்திய மற்றும் மாநில மாதிரிகளை இணைத்ததால் முடிவுகள், வறுமைக் கோட்டிற்கு கீழ் வாழும் மக்களின் விழுக்காட்டை சிறிதளவு மாற்றி விட்டது. இப்பிரிவில் தரப்பட்டுள்ள 1993–94-ல் வறுமை தொடர்பான எண்ணிக்கைகளை முந்தைய பிரிவில் தரப்பட்டுள்ளவற்றோடு சரிநிகராய் ஒப்பிட முடியாது. இது திட்டக்குழுவின் மதிப்பீடுகளை நேரடியாய் பயன்படுத்தியுள்ளது.

மக்களில் மிகக் குறைவான விழுக்காட்டைப் பெற்றிருந்தது (18.32%). மொத்தத்தில் தென்னாற்காடு, திருச்சிராப்பள்ளி, காஞ்சிபுரம், சேலம், தருமபுரி மற்றும் கோயம்புத்தூர் ஆகிய 6 மாவட்டங்கள் சேர்ந்து, வறுமைக் கோட்டின் கீழ் வாழும் மக்கட் தொகையில் ஏறத்தாழ 50% ஐப் பெற்றிருந்தன.

மாவட்டங்கள் 3 விரிவான வகைகளாகவும் பிரிக்கப்பட்டன. அவை உயர் வறுமை நிலை மாவட்டங்கள் (மக்கட்தொகையில் 40% வறுமைக்கோட்டிற்கு கீழ் வாழ்பவர்கள்) சிறிதளவு ஏழ்மை மாவட்டங்கள் (30-40% வறுமைகோட்டிற்கு கீழ் வாழ்வோர்) மற்றும் குறைவான அளவு வறுமை நிலை மாவட்டங்கள் (30%-க்கும் குறைவான)[10] அட்டவணை 3–15-இல் கண்டுள்ளபடி, 1993–94-ல் 6 மாவட்டங்கள் உயர் வறுமை நிலை மாவட்டங்களாய் கருதப்பட்டன. 5 சிறிதளவான மாவட்டங்கள்[11] குறைவான வறுமை மாவட்டங்கள். அறிந்து கொள்ளவேண்டியது. உயர்தனி ஒருவர் வருமான மாவட்டமாயிருந்த போதிலும் சென்னை, சிறிதளவு வறுமை மாவட்டமாக இருக்கிறது என்பதே. மேலும், ஒரு குறைவான வறுமை மாவட்டமான தருமபுரி, ஒரு குறைவான வறுமை மாவட்டமாக வகைப்படுத்தப் பட்டிருக்கிறது.[11] மற்றொரு குழப்பமூட்டும் மாவட்டம் தனிநபர் உயர் வருமானத்தைப் பெற்றுள்ள மாவட்டம் ஒரு உயர் வறுமை நிலை மாவட்டமாகவும் உள்ளது.

**அட்டவணை - 3.15 : வறுமை நிலைப்படி மாவட்டங்கள்**

| வறுமை விகிதி அளவு | மாவட்டங்களின் எண்ணிக்கை | மாவட்டங்களின் பெயர்கள் |
|---|---|---|
| உயர்வறுமை (40%க்கு மேல்) | 6 | கடலூர், திருவண்ணாமலை, திண்டுக்கல், தூத்துக்குடி, கன்னியாகுமரி மற்றும் திருநெல்வேலி |
| மிதமான வறுமை (30–40%) | 5 | சென்னை, வேலூர், சேலம், தஞ்சாவூர் மற்றும் மதுரை |
| குறைந்த வறுமை (30% க்கும் குறைவு) | 11 | காஞ்சிபுரம், தருமபுரி, நீலகிரி, திருச்சி, புதுக்கோட்டை, சிவகங்கை, கோயம்புத்தூர், விருதுநகர், ராமநாதபுரம், நாகப்பட்டினம் மற்றும் ஈரோடு. |

## சமுதாயப் பிரிவுகளில் வறுமை நிலைகள்

அனைத்து வகுப்பினரின் மாநில சராசரியைக் காட்டிலும் தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியின மக்கட்தொகைக்கு இடையேயான வறுமை நிகழ்ச்சி மேலும் அதிகமாயிருப்பதற்கு சான்றும் உள்ளது. ''ரே'' என்பவரது ஆய்வின்படி (2000) 1993–94-ல் வறுமைக்கோட்டிற்கு கீழ் மொத்த கிராமப்புறங்களில் வாழும் 33.38%ஐ 34.80% மொத்த நகர்ப்புறக் குடும்பங்களோடு ஒப்பிடுகையில் தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடி வகுப்பினரில் முறையே 48.50% குடும்பங்கள் கிராமப்புறங்களிலும் 48.50% நகர்ப்புறங்களிலும் வறுமைக்கோட்டின் கீழ் வாழ்கின்றனர்.[12]

[10]குறைவான வறுமை மாவட்டங்கள் 20% அளவு வறுமை நிலைகள் மொத்தத்தில் குறைவானதெனக் கூறவில்லை. ஆனால் ஒப்பீட்டடிப்படையில், அவை குறைவானவை.

[11]தருமபுரி மாவட்டம் எவ்வாறு ஒரு குறைவான வறுமை நிலை மாவட்டமாகக் கருதப்படுகிறதென்பதற்கு மேலும் பகுப்பாய்வு தேவைப்படுகிறது.

[12]வறுமைக்கோட்டிற்கு கீழ் உள்ள தனிநபர்கள் தொடர்பான முந்தைய பகுப்பாய்வைப் போலன்றி. இவ்வெண்ணிக்கைகள் குடும்பங்கள் தொடர்பானவை.

பெண்களைத் தலைவர்களாகக் கொண்ட குடும்பங்களின் வறுமை நிலைகள், கிராமப்புறங்களிலும் நகர்ப்புறங்களிலும் மொத்த குடும்பங்களின் வறுமை நிலைகளையும் விடவும் அதிகமாயிருந்தது.

**அட்டவணை 3.16 : தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினர் குடும்பங்களுக்கிடையில் வறுமை நிலைகள் - 1993-94**

| மாநிலம் இந்தியா | தனி நபர் மொத்த செலவு (ரூ) | | | வறுமை விழுக்காடு | | |
|---|---|---|---|---|---|---|
| | எல்லா குடும்பங்கள் | தா.வ/ப.கு குடும்பங்கள் | பெண்கள் தலைமையிலான குடும்பங்கள் | எல்லா குடும்பங்கள் | தா.வ./ப.கு. வ. குடும்பங்கள் | பெண்கள் தலைமையிலான குடும்பங்கள் |
| தமிழ்நாடு கிராமப்புறம் | 309.22 | 252.61 | 302.87 | 33.38 | 48.50 | 36.80 |
| தமிழ்நாடு நகர்ப்புறம் | 483.76 | 371.45 | 380.07 | 34.80 | 56.30 | 46.59 |
| அனைத்திந்தியா கிராமப்புறம் | 308.27 | 272.35 | 326.66 | 34.40 | 44.70 | 32.64 |
| நகர்ப்புறம் | 513.92 | 433.43 | 502.61 | 24.30 | 32.40 | 28.45 |

*குறிப்பு : தா.வ. - தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ப.கு.வ. - பழங்குடி வகுப்பினர்*

### பயனீட்டளவில் ஏற்றத்தாழ்வு

அட்டவணை-3.17-ல் கண்டுள்ளபடி, பயனீட்டளவிலும் கணிசமான ஏற்றத்தாழ்வு காணப்படுகிறது. நகர்ப்புற மற்றும் கிராமப்புற மொத்தப் பயனீட்டுச் செலவில் மக்கட்தொகையில் மிக ஏழையரான 10 விழுக்காட்டினர் முறையே வெறும் 3.5 மற்றும் 4.0 விழுக்காட்டை மட்டுமே பெற்றிருக்கையில் உச்சத்திலிருக்கும் 10 விழுக்காட்டினர் பயனீட்டுச் செலவில் முறையே 26% மற்றும் 24%-ஐப் பெற்றுள்ளனர். நகர்ப்புறங்களில் பயனீட்டளவில் ஏற்றத்தாழ்வுகள் அதிகமாயிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

**அட்டவணை - 3.17 : பயனீட்டளவு செலவினத்தின் பங்கு**

| மக்கட்தொகைப் பங்கு | | செலவினப் பங்கு | | | |
|---|---|---|---|---|---|
| மக்கட்தொகை % | மக்கட்தொகையில் திரள் % | கிராமப்புறம் | செலவினத்தில் திரள் % | நகர்ப்புறம் | செலவினத்தில் திரள் % |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| அடி மட்டம் 10% | – | 4.0 | – | 3.5 | – |
| அடுத்த 10% | 20 | 6.0 | 10.0 | 5.0 | 8.5 |
| அடுத்த 10% | 30 | 6.5 | 16.5 | 5.5 | 14.0 |
| அடுத்த 10% | 40 | 7.5 | 24.0 | 7.0 | 21.0 |

*(தொடர்ச்சி)*

| 1 | | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|---|
| அடுத்த | 10% | 50 | 8.0 | 32.0 | 7.0 | 28.0 |
| அடுத்த | 10% | 60 | 8.0 | 40.0 | 9.0 | 37.0 |
| அடுத்த | 10% | 70 | 10.5 | 50.5 | 10.0 | 47.0 |
| அடுத்த | 10% | 80 | 11.5 | 62.0 | 11.5 | 58.5 |
| அடுத்த | 10% | 90 | 14.0 | 76.0 | 15.5 | 74.0 |
| அடுத்த | 10% | 100 | 24.0 | 100.0 | 26.0 | 100.0 |

பயனீட்டளவு (மற்றும் வருமானத்தில்) ஏற்றத்தாழ்வை மதிப்பீடு செய்ய விரிவாய் பயன்படுத்தப்படும் ஒரு குறியீடு, 'கினி' குறியீடு ஆகும். நகர பொருளாதார அமைப்பில் தனி நபர்களுக்கும் குடும்பங்களுக்குமிடையில் பயனீட்டளவு செலவினத்தின் பங்குக்கு முழு நிறைவான சமபங்கீட்டளவிலிருந்து மாறுபடுகிற அளவை அது அளக்கிறது. ''கினி'' குறியீடு 0—விலிருந்து 100 அளவு வரையிலானது. '0' முழுநிறைவான சமநிலையையும் 100 முழுநிறைவான சமமின்மையையும் தெரிவிக்கிறது. தே.மா.க—ன் பயனீட்டளவு செலவின் அடிப்படை விவரங்கள், மீண்டும் பயன்படுத்தப்பட்டுள்ளது. தமிழ்நாடு முழுவதற்குமான ''கினி'' குறியீடு, 1993—94-ல் 28.3 (கிராமப்புறங்களுக்கு 27—ம் நகர்ப்புறங்களுக்கு 31.7-ம்) வெவ்வேறு வகைகள் வருமானத்திரள் பயனீட்டு அளவை ஒருவர் ஒப்பிடுவதன் மூலம் நகர்ப்புற, கிராமப்புற வேறுபாட்டை விளக்கலாம். (அட்டவணை - 3.17) நகர்ப்புறங்களில் மக்கட்தொகையில் அடிமட்ட 30% விழுக்காட்டினர் 14% செலவைப் பெறுகின்றனர். கிராமப்புறங்களில் அடிமட்ட 30% மக்கட்தொகையினர் 16.5% செலவைப் பெற்றுள்ளனர். மேலும், நகர்ப்புறங்களில் மக்கட்தொகையில் உச்ச 10% விழுக்காட்டினர் கிராமப்புறங்களிலிருக்கும் 24%-க்கு எதிராய் 26% செலவைப் பெற்றுள்ளனர்.

தருமபுரி மாவட்டம் குறிப்பிடும்படியாக மாநிலத்திலேயே மிகக் குறைவான அளவு சமமின்மையைப் பெற்ற சிறப்பைப் பெற்றதாயும் சென்னை மிகப்பெரும் அளவு சமமின்மையையும் பெற்றுள்ளது. (அட்டவணை 3.18) ஒப்பீட்டு அடிப்படையில் உயர்வான சமமின்மை நிலைகளைப் பெற்றுள்ள மாவட்டங்கள். திருவண்ணாமலை, கோயம்புத்தூர், காஞ்சிபுரம் மற்றும் தஞ்சாவூர் ஏனைய மேலான செயலாக்க மாவட்டங்களில் வடஆற்காடு, தென்னாற்காடு விருதுநகர், சிவகங்கை மற்றும் மதுரை ஆகியன அடங்கும்.

### அட்டவணை - 3.18 : ''கினி'' குறியீடு

| தொடர் எண் | மாவட்டங்கள் | கினி குறியீடு | | |
|---|---|---|---|---|
| | | கிராமப்புறம் | நகர்ப்புறம் | மொத்தம் |
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 1. | சென்னை | | 33.3 | 33.30 |
| 2. | காஞ்சிபுரம் | 29.7 | 30.5 | 30.22 |

*(தொடர்ச்சி)*

| 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|
| 3. | வடாற்காடு | 30.5 | 21.9 | 24.36 |
| 4. | தருமபுரி | 24.7 | 22.6 | 22.78 |
| 5. | திருவண்ணாமலை | 22.7 | 33.1 | 32.17 |
| 6. | தென்னாற்காடு | 29.3 | 22.8 | 23.73 |
| 7. | சேலம் | 33.2 | 28.0 | 29.32 |
| 8. | ஈரோடு | 25.9 | 24.6 | 24.75 |
| 9. | நீலகிரி | 28.6 | 21.8 | 24.22 |
| 10. | கோயம்புத்தூர் | 32.5 | 30.4 | 31.25 |
| 11. | திண்டுக்கல் | 33.5 | 25.3 | 26.83 |
| 12. | திருச்சி | 30.0 | 24.2 | 24.89 |
| 13. | தஞ்சாவூர் | 36.3 | 26.8 | 30.26 |
| 14. | புதுக்கோட்டை | 28.7 | 26.1 | 26.47 |
| 15. | சிவகங்கை | 29.5 | 21.2 | 23.33 |
| 16. | மதுரை | 26.0 | 22.5 | 23.92 |
| 17. | விருதுநகர் | 30.1 | 19.7 | 23.12 |
| 18. | ராமநாதபுரம் | 26.5 | 24.1 | 24.60 |
| 19. | தூத்துக்குடி | 25.2 | 25.5 | 25.39 |
| 20. | திருநெல்வேலி | 32.4 | 25.4 | 28.44 |
| 21. | கன்னியாகுமரி | 28.1 | 26.4 | 26.64 |
| 22. | நாகப்பட்டினம் | 30.0 | 22.4 | 24.07 |
| | மாநிலம் | 27.0 | 31.7 | 28.32 |

எனவே, வருமானம், வறுமை, சமமின்மை ஆகியவற்றிற்கிடையேயான தொடர்பு மிகச் சிக்கலானது. சென்னை, வருமானத்தில் சிறந்திருப்பினும் வறுமை மற்றும் சமமின்மையில் மிக உயர்நிலைகளைப் பெற்றுள்ளது. (அட்டவணை - 3.19) இதற்கு மாறாக தருமபுரி வருமானத்தில் மட்டுமல்லாமல் கல்வி, நலவாழ்வுக் குறியீடுகளில் மிகப் பின்தங்கியிருந்தாலும் வறுமை, சமமின்மையில் மேலான முன்னேற்றம் கண்டுள்ளது. ஏனிந்த நிலை என்பதை விளக்குவது கடினம். பெரும்பான்மையான மக்கள் குறைவான வருமான நிலையிலிருப்பினும், வறுமைக்கோட்டிற்குச் சிறிதளவு மேலான நிலையிலிருக்கும் காரணத்தால், சமமின்மை மற்றும் வறுமையில் சிறந்திருக்கிறது எனக் கூறலாம்.

மாறாக, சென்னை, ஏன் அதிக சமமின்மை நிலைகளைப் பெற்றிருக்கிறதென்பதைப் புரிந்து கொள்வது எளிது. சென்னையில் உயர்சம்பளம் பெறுவோர் பலர் இருந்தாலும் வறுமைக்கோட்டின் விளிம்பில் தொடர்ந்து வாழ்வோர் பலர் உள்ளனர். வருமானம், சமமின்மை மற்றும் வறுமை ஆகியவற்றில் சேலம் போன்ற மாவட்டங்கள் சிறந்திருந்தாலும் சமூகக் குறியீடுகளில் அவற்றின் செயல்பாடு சிறப்பாயில்லை என்பது மற்றொரு கவனிக்கப்பட வேண்டிய உண்மை.

**அட்டவணை - 3.19 : மாவட்டங்களில் தனிநபர் வருமானமும் வறுமையும் 1993-94**

| தனிநபர் வருமானம் ரூ. | வறுமை விகிதம் % | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | 50%-க்கு மேல் | 45-50% | 40-45% | 35-40% | 30-35% | 25-30% | 25%-க்கும் குறைவு |
| 10,000-க்கும் மேல் | - | தூத்துக்குடி | - | - | சென்னை | கோவை, காஞ்சிபுரம் | - |
| 9,001-10,000 | - | - | - | - | சேலம், மதுரை | விருதுநகர் | ஈரோடு |
| 8,001-9,000 | - | திண்டுக்கல் | திருநெல்வேலி | வடாற்காடு | - | - | நீலகிரி மற்றும் திருச்சி |
| 7,001-8,000 | - | - | - | - | தஞ்சாவூர் | தருமபுரி | நாகப் பட்டினம் |
| 6,001-7,000 | தென்னாற் காடு | கன்னியா குமரி | - | - | - | புதுக் கோட்டை, ராமநாதபுரம் சிவகங்கை | - |
| 5,001-6,000 | - | - | திருவண்ணா மலை | - | - | - | - |

## தவிர்க்க இயலாத எதிர்காலக் கோட்பாடு

வறுமைக் குறைப்பில் தமிழ்நாடு குறிப்பிடத்தக்க முன்னேற்றம் கண்டுள்ளது. சமுதாயப் பிரிவில் ஏராளமான சாதனைகளைப் படைத்துள்ளது. நிதி ஒதுக்கீடுகள் இதற்குக் காரணமா யிருப்பதோடு (கடந்த காலத்தில் தமிழ்நாடு இதற்காக நிறைய செலவிட்டுள்ளது) சாதனைகளுக்குப் பின்வருவனவும் காரணங்கள். வருமானம் மற்றும் வேலைவாய்ப்பை உருவாக்கும் நோக்கத்தோடு செயல்படுத்தப்பட்ட வறுமைஒழிப்பு திட்டங்கள், பள்ளிச்சிறார்கள் மற்றும் முதியோர் ஓய்வூதிய தாரர்களை உள்ளடக்கிய மதியஉணவு திட்டங்கள் மற்றும் முக்கியமாய் மகளிர் மற்றும் சிறார்களின் ஊட்டச்சத்து நிலையை மேம்படுத்த செயல்படுத்தப்பட்ட ஒருங்கிணைந்த சிறார் வளர்ச்சிப் பணிகள் திட்டம் (ICDS) மற்றும் இது போன்ற ஏனைய ஊட்டச்சத்து திட்டங்கள் செயலாக்கம்.

இதற்குப் பின்னரும் பலர் வறுமைக்கோட்டிற்கு கீழ் வாழ்ந்து வருகிறார்கள் மற்றும் குறிப்பிட்ட சமூகப் பிரிவு சுட்டிக்காட்டும் குறியீடுகளில் வெளிப்படையான குறைபாடுகள் உள்ளன எனும்

உண்மை கவலையளிப்பதாக உள்ளது. சமுதாயப் பிரிவில் தேவையான பல திட்டங்களைப் பற்றி ஏனைய இயல்களில் சிறப்பித்துக் கூறப்பட்டிருந்தாலும், குறிப்பாக, வேலைவாய்ப்பு மற்றும் வருமானம் பற்றிய எண்ணற்ற விவரக் கூறுகள் கீழே விரிவாக எடுத்துரைக்கப் பட்டுள்ளன.

- தமிழ்நாட்டில், வறுமைக் குறைப்பு திட்டங்களுக்கு நகர்ப்புறங்களில் முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டும். தேசிய அளவில் கிராமப்புறங்களில் வறுமையின் நிகழ்ச்சி அதிகமாயிருப்பினும், தமிழ்நாட்டில் இதற்கு நேர்எதிரான நிலையிருப்பது உண்மையே.

- வேலைவாய்ப்பை உருவாக்கும் திட்டங்களுக்கு அதிக முக்கியத்துவமளிக்கப்பட வேண்டும். தமிழ்நாட்டில் வேலையின்மையின் விகிதம், குறிப்பாக தினக்கூலி வேலைகளில், மிக அதிகமாய் உள்ளது. கடந்தகாலத்தில் வறுமைக் குறைப்பு திட்டங்களில் உடைமைகளை உருவாக்குவதில் அதிக கவனம் செலுத்தப்பட்டது. இதன் விளைவாக வேலைவாய்ப்பு உருவாக்குவதில் அதிக முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை.

- மாவட்டங்களிடை வேறுபாடுகளில் குறிப்பான கவனம் தேவை. வருமானம், வறுமை, சமமின்மை போன்ற இனங்களில், மாவட்டங்கள் எதிர்கொள்ளும் பிரச்சனைகள், குறிப்பிடுமளவு வேறுபட்டவை. மாவட்டத் தேவைகளுக்கேற்ற திட்டங்கள் வகுக்கப்பட வேண்டும்.

- பொருளாதாரத்தில் கட்டமைப்பு மாற்றங்கள் நிகழும் நிலையில் வேளாண்மை சாராத வேலைவாய்ப்புகள், தயாரிப்பு மற்றும் பணித்துறைகளில் வேலைவாய்ப்புகளை உருவாக்குவதில் அதிக கவனம் செலுத்தப்பட வேண்டும்.

# இயல்

# 4

## மக்கட்தொகையியல் நலவாழ்வு மற்றும் ஊட்டச்சத்து

மனித மேம்பாட்டுக் குறியீட்டில் (ம.மே.கு) மக்கட்தொகையின் மொத்த நலவாழ்வு நிலையைத் தெரிவிக்கும் ஒரு சுட்டிக்காட்டும் குறியீடாக ஆயுட்கால எதிர்பார்ப்பு உள்ளது. இருப்பினும் நலவாழ்வு, ஆயுட்கால எதிர்பார்ப்பைவிட மேலானது, பெரியது. அது வளமை, நோயுறுந் தன்மை, இறப்பு மற்றும் ஊட்டச்சத்து ஆகிய சிக்கல்களை உள்ளடக்கியது. மற்றொரு முக்கிய நலவாழ்வு நிலை என்பது அரசின் கொள்கைகள் மற்றும் திட்டங்களின் விளைவாய் மட்டுமே அரிதாக ஏற்படக் கூடியதாகும். உண்மையில், அரசின் திட்டங்களிலிருந்தும்கூட, அது நிகழ்கிறது.

இவ்வியல் தமிழ்நாட்டின் மக்கட்தொகையியல், நலவாழ்வு மற்றும் ஊட்டச்சத்து நிலையை விளக்குகிறது. அது மாநிலத்தின் நலவாழ்வு மற்றும் ஊட்டச்சத்து ஆகியவற்றை சுட்டிக்காட்டும் கருவிகளின் போக்குகள் மற்றும் மாற்றங்களையும் அரசின் கொள்கைகள் மற்றும் திட்டங்களின் பயனளிக்கும் தன்மை மற்றும் நலவாழ்வுப் பலன்களில் சமூக தரங்களும் பண்பாடும் ஏற்படுத்தும் தாக்கங்களையும் பகுப்பாய்வு செய்கிறது.

### மக்கட்தொகையியல் போக்குகளும் நலவாழ்வைச் சுட்டிக்காட்டும் குறியீடுகளும்

#### மக்கட்தொகையும் மக்கட்தொகையியல் மாற்றமும்

1901-லிருந்து 2001 வரையில் மாநிலத்தின் மக்கட் தொகையின் பத்தாண்டுக் கால வளர்ச்சியின் ஒரு பகுப்பாய்வு, மொத்த மக்கட் தொகை இந்தக் காலகட்டத்தில் மூன்று மடங்குக்கும் மேல் வளர்ச்சி பெற்றதைக் காட்டுகிறது. இது அனைத்திந்திய அளவில் நான்கு மடங்கு வளர்ச்சியைக் காட்டிலும் மிகவும் குறைவு. 2001 மக்கட்தொகைக் கணக்கெடுப்பின் தற்காலிக எண்ணிக்கைப்படி, 2001-ல் தமிழ்நாட்டின் மக்கட்தொகை 62.1 மில்லியன்.

1951-க்குப்பின் இந்திய மற்றும் தமிழ்நாட்டின் மக்கட்தொகை வளர்ச்சி 1951-க்கு முன்பிருந்ததைக் காட்டிலும் மிகவும் அதிகம். நோய்த்தடுப்பு மற்றும் ஊட்டச்சத்துத் தொலைநோக்கின் வாயிலாக இது ஒரு தெளிவான முன்னேற்றமென்றும் கருதலாம். பிறப்புவீதங்கள் 1970-களில் கணிசமாயும், 1980-களில், மேலும் அதிகமாயும் குறைந்துள்ளது.

அப்போதிலிருந்து பிறப்பு இறப்பு ஆகிய இரண்டு வீதங்களும் இயல்பான வளர்ச்சி வீதத்தில் மந்தமான ஆனால் உலகளாவிய வளர்ச்சி வீதப்படி குறைவில் முடிவுறும் வகையில் குறைந்து வருகிறது. நீடித்த உறுதியான பரவலான பொருளாதார வளர்ச்சிக்கு முன்னரும்கூட மற்றும் வாழ்க்கைத்தரத்தில் கடும் சமமின்மை இருந்தபோதிலும் இது நிகழ்ந்தது குறிப்பிடத்தக்கது.

நலவாழ்வு நிலையில், நோயுறும் தன்மை மற்றும் இறப்புவிகிதம் முக்கியக் குறியீட்டு கருவிகளாய் அமைந்துள்ளன. நோயுறும் முறைகள் பற்றிய அடிப்படை விவரங்கள் அரிதாக உள்ளன. எளிய குறிப்பிட்டுக் கூறும்படியான சுட்டிக்காட்டும் குறியீடுகளால் சுலபமாய் எழுத்தில் படிக்க இயலாது. தமிழ்நாட்டின் மக்கட்தொகையின் நலவாழ்வு நிலை குறித்த அடிப்படை சுட்டிக்காட்டும் குறியீடுகள் மீதான விவாதம் பின்வருவனவற்றின் மாறும் இயல்புகளை உள்ளடக்கியதாயுள்ளது. பிறப்பு, இறப்பு வீதங்கள், குழந்தை இறப்புவீதம் (கு.இ.வீ) கருத்தரிப்பு வீதம், நிறுவன மகப்பேறுகள் மற்றும் கருத்தடைகள்.

## உத்தேச பிறப்பு மற்றும் இறப்பு வீதங்கள்

1971-க்கும் 2000-க்குமிடைப்பட்ட காலத்தில், மாநிலத்தின் உத்தேச பிறப்பின் வீதம் 31.4-லிருந்து 19.3-ஆகக் குறைந்தது. குறைவு கிட்டதட்ட 39 விழுக்காடு. மொத்த இந்தியாவுக்கும் உத்தேச பிறப்பின் வீதம் 36.9 விழுக்காட்டிலிருந்து 25.8-க்குக் குறைந்தது. குறைவு 30 விழுக்காடு மட்டுமே (படம் 4.1)

**படம் 4.1 உ.பி.வி மற்றும் உ.இ.வி. தமிழ்நாடு மற்றும் இந்தியா 1971-2000**




*ஆதாரம் : மாதிரிப் பதிவுமுறை*

பெரிய மாநிலங்களில் கேரளாவில் மட்டுமே ஒருவேகக் குறைவாக 42.0% காணப்பட்டது. உத்தேச பிறப்பின் வீத குறைவு, குறிப்பாய் 1984-லிருந்து வேகமாகயிருந்தது.

மேற்கோள் ஆண்டு 2000-க்கான 1999 முக்கிய நிகழ்வுகள் கணக்கெடுப்பு அடிப்படை விவரங்கள் எல்லா மாவட்டங்களிலும் பிறப்பு விகிதத்தில் குறைவு ஒரே சீராக நிகழ்ந்ததைக் காட்டுகிறது. உண்மையில் மாவட்ட குழந்தை பிறப்பு விகிதம் 16.3-லிருந்து 21.3 தொகுதிக் குள்ளாகவும் தருமபுரி மாவட்டம் மட்டும் இத்தொகுதிக்கப்பால் 26.1-என வேறுபட்டு இருந்தது.

1980-களின் இடைக்காலத்திற்குப்பின் தமிழ்நாட்டில் இரண்டாவது காலப் பிறப்பு விகிதக் குறைவு காணப்பட்டது. கருத்தரிப்பில் வேகமான குறைவு, தமிழ்நாட்டின் பிறப்பு விகிதத்தை 1990-ன் இடைக்காலத்தில் கிட்டத்தட்ட கேரளாவுக்கிணையாய் குறைந்த நிலைக்குக் கொண்டு வந்தது (தமிழ்நாடு 20.3, கேரளா 18.0) இது நிலையான ஒரு அளவுக்கு 2 புள்ளிகள் மட்டுமே குறைவு. அதிகக் கல்வி கற்ற மற்றும் ஏனைய வகை மக்களுடன் ஒப்பிடுகையில் குறைவான கல்விகற்ற மற்றும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கிடையே கருத்தரிப்பு குறைவு அதிகமாயிருந்தது. இருப்பினும் அண்மை ஆண்டுகளில் தமிழ்நாட்டில் பிறப்பு மற்றும் இறப்பு வீதங்களில் சமநிலை காணப்படுகிறது. இதன் விளைவாக தமிழ்நாட்டில் இயற்கையான மக்கட் தொகை வளர்ச்சிவீதம் சீராக்கப்பட்டு உள்ளது. 1993-க்குப் பிறகும் குறிப்பாக இதே நிலைதான் உண்மையாக உள்ளது. இருப்பினும் அனைத்திந்தியப் போக்கில் ஒரு குறைவு தொடர்ந்து காட்டப்படுகிறது.

பிறப்பு விகிதத்தில் இருப்பதைப்போல் குறைவு, இறப்பு விகிதத்தில் குறிப்பிடும் படியாக இல்லாவிட்டாலும் பிறப்பு விகிதங்கள், குறிப்பிடத் தக்கதாகவுள்ளது. ப.இ.வீ. 1971-ல் 14.4-லிருந்து 2000-ல் மாதிரிப் பதிவுமுறை (மா.ப.மு)யின் படி 7.9-ஆகக் குறைந்தது. இதற்கு ஒத்திசைவான விவரங்கள் இந்தியாவுக்கு 14.9 மற்றும் 8.5-ஆக இருந்தது.

கிராமப்புற, நகர்ப்புற வேறுபாடுகள் எதிர்பார்த்தபடியே இருந்தன. கிராமப்புற பிறப்பு மற்றும் இறப்பு வீதங்கள் நகர்ப்புற வீதங்களைவிட மிகுதியாயிருந்தன. ஆனால் கிராமப்புற மற்றும் நகர்ப்புற வீதங்களுக்கிடையிலான இடைவெளி 1980-களிலிருந்து மிகவும் குறைந்து வருகிறது. கிராமப்புற நகர்ப்புறக் குடியேற்றங்களில் மற்றும் சமூகப் பொருளாதாரச் சுட்டிக்காட்டும் குறியீடுகளில் குறிப்பிடத் தக்க வேறுபாடுகளிலிருப்பினும் ஒரேவிதத் தன்மைக்கான போக்கு குறிப்பாக பிறப்பு விகிதங்களுக்குக் காணப்படுகிறது. நகர்ப்புற மற்றும் கிராமப்புற இறப்பு மற்றும் கருத்தரிப்புக் கிடையில் ஆன வேறுபாடுகள் மிகக் குறைவதால் மக்கட்தொகையியலை ஒரேவிதத் தன்மையாக்கல் என இந்நிகழ்வு அழைக்கப் படுகிறது. கேரளாவிலும்கூட மக்கட்தொகையியல் செயல்பாட்டின், கிராமப்புற நகர்ப்புற வேறுபாடு காணப்படுவதில்லை. இருப்பினும், அங்கு அவ்விதமாக இருப்பதற்குக் காரணம், குடியேற்றக் கட்டமைப்பில், உறுதியானதொரு கிராமப்புற, நகர்ப்புறத் தொடர்பு இருப்பதேயாகும்.

அனைந்திந்திய அளவில் ஒரு சீரான அளவு காணப்படவில்லை. தமிழ்நாட்டுக்கும் இந்தியாவுக்குமான மாதிரிப் பதிவுமுறைப் புள்ளிவிவரங்கள், தமிழ்நாட்டில் கிராமப்புறப் பிறப்புவீதம் நகர்ப்புறத்தோடு ஒப்பிடுகையில் (19) 21-ஆக இருந்தது. (2. இடைவெளி) கிராமப்புற இறப்புவீதம், நகர்ப்புறத்தோடு ஒப்பிடுகையில் (6.6) 8.8-ஆக இருந்தது. (2.2 இடைவெளி) இதற்கெதிராய் அனைத்திந்திய கிராமப்புற, நகர்ப்புற வேறுபாடுகள் மேலும் கூர்மையாய் உள்ளன.

பிறப்புவீதத்தைப் பொறுத்தவரை, கிராமப்புற நகர்ப்புற இடைவெளி 7.3 வரை அதிகமாயும், இறப்பு வீதத்தினுடையது 3.2-ஆகவுமிருந்தது.

**அட்டவணை - 4.1 : கடைசி இருப்பிடத்திலிருந்து இடம் மாறியவர்கள் - இருப்பிடக் கால அளவு 0-9 ஆண்டுகள், 1991**

| வரிசை எண் | மாவட்டம் | மொத்தம் (மில்லியன்) | | |
|---|---|---|---|---|
| | | நபர்கள் | ஆண் | பெண் |
| 1. | சென்னை | 0.49 | 0.33 | 0.16 |
| 2. | செங்கல்பட்டு | 0.32 | 0.15 | 0.17 |
| 3. | கோயம்புத்தூர் | 0.20 | 0.10 | 0.10 |
| 4. | இராமநாதபுரம் | 0.02 | 0.01 | 0.01 |
| 5. | கன்னியாகுமரி | 0.02 | 0.01 | 0.01 |
| 6' | சிவகங்கை | 0.03 | 0.01 | 0.02 |

*ஆதாரம் : தமிழ்நாடு மக்கட்தொகைக் கணக்கெடுப்பு தமிழ்நாடு மாநில உருவடிவம் 1991*

## இடமாறுதல்

பிறப்பு, இறப்பு வீதங்களின்றி, மக்கட்தொகையளவுகளில் விளைவினை ஏற்படுத்தும் தன்மையது இடம் மாறுதலாகும். மக்கட்தொகைக் கணக்கெடுப்பில் இடம் மாறுதல் என்பது கடைசி இருப்பிட (அ) பிறப்பிடத்திலிருந்து இடம் பெயர்ந்து செல்லல் என ஆய்வு செய்யப்பட்டுள்ளது. இடம்மாறுதல் கிராமப்புற - கிராமப்புற, கிராமப்புற - நகர்ப்புற, நகர்ப்புற - கிராமப்புற (அ) நகர்ப்புற - நகர்ப்புற மாறுதல்களாக, ஒவ்வொன்றும் மாநிலத்திற்குள் மாநிலங்களுக்குள் அல்லது பன்னாட்டு அளவுகளிலும் அமையலாம்.

தமிழ்நாடு மற்றும் இந்தியாவில் மாநிலங்களிடையே இடம் மாறியவர்கள். மிகப்பெரும் பங்கையும் அதைத் தொடர்ந்து, மாநில இடை இடம் மாறியவர்களும், பன்னாட்டு இடம் மாறியவர்களும் மிகக் குறைவான பங்கையும் பெற்றுள்ளனர். தமிழ்நாடு மற்றும் அனைத்திந்தியாவுக்கும் இடம் மாறியவர்களில் ஆண்களைவிடப் பெண்களின் பங்கு அதிகமாய் உள்ளது. மாநிலங்களிடை இடம் மாறியவர்களில், கிராமப்புற - கிராமப்புற இடம் மாறியவர்கள் மிகப்பெரும் பங்கையும், அதைத் தொடர்ந்து கிராமப்புற - நகர்ப்புற இடம் மாறியவர்களும், பிறகு, நகர்ப்புற - நகர்ப்புற இடம் மாறியவர்களும், இறுதியாக நகர்ப்புற - கிராமப்புற இடம் மாறியவர்களும் பங்கைப் பெற்று உள்ளனர். குடும்பங்களின் இடம் மாற்றம் (அ) திருமணம் காரணமாய் பெண்கள் இடம் மாறியவர்களாகப் புள்ளிவிவரங்கள் காட்டுகின்றன. ஆண்களைப் பொறுத்தவரை குடும்ப இடம் மாற்றம் (அ) வேலைவாய்ப்புக்காக இடம்மாறுதல் அதிகமாய் உள்ளது.

அட்டவணை 4-1 தேர்வு செய்த மாவட்டங்களில், இடம் மாறுதல் நிலைகளைக் காட்டுகிறது. பிழைப்பு, கல்வி, திருமணம் போன்ற எதிர்நோக்கும் வாய்ப்புகளுக்கான வாய்ப்புகளே மிகப் பெரும்பான்மையாய் விரும்பப்படும் இலக்குகளாய் இருப்பதை ஊகித்தறியலாகும். இவை அரசு தலையீட்டைக் கோரும் நகர்ப்புற வலியுறுத்தும் இடங்களாகவும் இருக்கலாம். கிராமப்புற-நகர்ப்புற இடம் மாறுதல், இருப்பிட சுற்றுச்சூழல் பிரச்சனை மற்றும் சீர்கேடுடைய குடிசைவாழ் நிலைகள், நகர்ப்புறங்களில் கூட்டநெரிசல் மற்றும் துப்புரவற்ற நிலைமைகள் ஏற்பட காரணம் என அறியலாம்.

## பாலின விகிதம்

தமிழ்நாட்டில் பாலின விகிதம் 1991-க்கும் 2000-க்குமிடையில் 974-லிருந்து 986-க்கு உயர்ந்தது (4-2). பெண் சிசுக் கொலைகளுக்குள்ளான சில மாவட்டங்களில் பாலின விகிதத்தில் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. சேலம் மாவட்டப் பாலின விகிதம் 925-லிருந்து 929-க்கும் திண்டுக்கல்லில் 976-லிருந்து 986-க்கும், மதுரையில் 964-லிருந்து 978-க்கும், தேனியில் 964-லிருந்து 979-க்கும் உயர்ந்துள்ளது. இருப்பினும் தருமபுரி மாவட்டத்தில் தெளிவான மாற்றமேதும் காணப்படவில்லை.

**அட்டவணை - 4.2 : கிராமப்புற, நகர்ப்புறப் பாலின விகிதங்கள் தென்மாநிலங்களும் இந்தியாவும் 1981, 1991 மற்றும் 2001**

| இந்தியா/மாநிலங்கள் | 1981 | 1991 | 2001 |
|---|---|---|---|
| இந்தியா (மொத்தம்) | 934 | 927 | 933 |
| கிராமப்புறம் | 952 | 939 | கிடைக்கவில்லை |
| நகர்ப்புறம் | 879 | 894 | கிடைக்கவில்லை |
| ஆந்திரப்பிரதேசம் மொத்தம் | 975 | 972 | 978 |
| கிராமப்புறம் | 984 | 977 | கிடைக்கவில்லை |
| நகர்ப்புறம் | 948 | 959 | கிடைக்கவில்லை |
| கர்நாடகா மொத்தம் | 963 | 960 | 964 |
| கிராமப்புறம் | 978 | 973 | கிடைக்கவில்லை |
| நகர்ப்புறம் | 926 | 930 | கிடைக்கவில்லை |
| கேரளா மொத்தம் | 1032 | 1036 | 947 |
| கிராமப்புறம் | 1034 | 1037 | கிடைக்கவில்லை |
| நகர்ப்புறம் | 1021 | 1034 | கிடைக்கவில்லை |
| தமிழ்நாடு மொத்தம் | 977 | 974 | 986 |
| கிராமப்புறம் | 987 | 981 | கிடைக்கவில்லை |
| நகர்ப்புறம் | 956 | 960 | கிடைக்கவில்லை |

*ஆதாரம் : இந்திய மக்கட்தொகைக் கணக்கெடுப்பு 1991, 2001 (தற்காலிக)*

மேலும், கடந்த பத்தாண்டில் மாநிலத்தின் பாலின விகிதம் உயர்ந்து அனைத்திந்திய சராசரியை விட (933) உயர்ந்திருந்தாலும், மோசமான பெண்-ஆண் விகிதம் இன்னும் கவலைக்குரியதாக உள்ளது. பெரிய மாநிலங்களில் கேரளாவில் மட்டுமே பாலின விகிதம் மாறாமல் 1000-க்கு மேலாக உள்ளது.

1981, 1991, 2001 விவரங்களுக்கு கிராமப்புற நகர்ப்புறப் பாலின விகிதங்களை ஒப்பிடுகையில் (அட்டவணை-4.2) இந்தியாவில் கிராமப்புறப் பாலின விகிதங்கள், நகர்ப்புற விகிதங்களுடன் அதிகமாயுள்ளது தெரிகிறது. தென்மாநிலங்களிலும் இதே நிலைதான் உள்ளது. இருப்பினும், போக்குகள், தமிழ்நாட்டிலும் இந்தியாவிலும், கிராமப்புறங்களில் ஒரு குறைவையும், நகர்ப்புறங்களில் ஒரு உயர்வையும் காட்டுகிறது. கேரளாவில் நகர்ப்புறங்களிலும் கிராமப்புறங் களிலும் ஒரே உயர்வு காணப்படுகிறது.

## இளைஞர் பாலின விகிதம்

தமிழ்நாட்டில் மொத்தப் பாலின விகிதம் 1991-க்கும் 2001-க்குமிடையில் உயர்ந்திருக்கையில் இளைஞர் பாலின விகிதம் 948-லிருந்து, 939-க்குக் குறைந்தது. சேலம் மாவட்டம் மிகக் குறைவான இளைஞர் பாலின விகிதத்தைக் கொண்டுள்ளது (826). மிகக் குறைவானப் பாலின விகிதத்தைக் கொண்டிருக்கும் மற்ற மாவட்டங்கள் தருமபுரி (878), தேனி (893) மற்றும் நாமக்கல் (896).

குறைந்து வரும் பாலின விகிதத்திற்கான காரணங்கள் பல. அவை : குறைத்து எண்ணப்பட்டதால் விடுபட்ட பெண்களின் எண்ணிக்கை, தவிர்க்கப்பட வேண்டியவர்கள் எனக் கருதப்படுமளவு பெண்களின் குறைவான செல்வ நிலை, குறைவான கவனிப்பு மற்றும் ஊட்டச்சத்துக் காரணமாய் குழந்தைப் பருவத்தில் உயர் இறப்பு விகிதம், மகப்பேறின்போது உயர் இறப்பு பெண்சிசுக் கொலை மற்றும் பாலினத் தேர்வுக் கருச்சிதைக்குதவும் அண்மைக்காலத் தொழில் நுட்பவியல் முன்னேற்றங்கள்.

## பிறப்பின்போது ஆயுட்கால எதிர்ப்பார்ப்பு

மாதிரிப் பதிவு முறையின்படி தமிழ்நாட்டில் பி.ஆ.எ. (பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்பு) 1996-2001 காலத்தில் ஆண்களுக்கு 65.2 ஆண்டுகளும் பெண்களுக்கு 67.6 ஆண்டுகளுமா யிருந்தது. இதற்கு ஒத்திசைவான அனைத்திந்திய விவரங்கள் முறையே 62.4-ம் 63.4-ம் ஆகும். கேரளா, பஞ்சாப் மற்றும் மகாராஷ்ட்ரா மாநிலங்கள் இதில் தமிழ்நாட்டைவிட முந்தியுள்ளன.

மாவட்ட மதிப்பீடுகள், பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்பு தருமபுரியில் குறைவான 61.83 ஆண்டுகளிலிருந்து சென்னையில் உயர்வான 74.21 ஆண்டுகள் வரை வேறுபட்டிருப்பதைக் காட்டுகிறது. சென்னை மட்டுமின்றி பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்பு கன்னியாகுமரி மாவட்டத்தில் மட்டும் 70 ஆண்டுகளுக்கும் மிகையாக உள்ளது. பெரும்பாலான மாவட்டங்களில் மாநில பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்பு சராசரியான 66.74 ஆண்டுகளுக்கு நெருக்கமாய் உள்ளது. (அட்டவணை-4.3)

**அட்டவணை - 4.3 : பிறப்பின்போது ஆயுள்கால எதிர்பார்ப்பு**

| வரிசை எண் | மாவட்டம் | ஆண் | பெண் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | சென்னை | 70.92 | 77.96 | 74.21 |
| 2. | கன்னியாகுமரி | 70.36 | 74.96 | 72.65 |
| 3. | விருதுநகர் | 64.24 | 69.11 | 66.59 |
| 4. | நாகப்பட்டினம் | 64.46 | 68.45 | 66.36 |
| 5. | புதுக்கோட்டை | 64.36 | 66.75 | 65.53 |
| 6. | சேலம் | 65.12 | 65.36 | 65.24 |
| 7. | இராமநாதபுரம் | 63.19 | 67.24 | 65.18 |
| 8. | தஞ்சாவூர் | 61.98 | 66.88 | 64.38 |
| 9. | மதுரை | 61.06 | 63.24 | 62.15 |
| 10. | தருமபுரி | 61.66 | 62.05 | 61.83 |
| | மாநிலம் | 64.91 | 68.85 | 66.74 |

*ஆதாரம் : முக்கிய நிகழ்வுகள் கணக்கெடுப்பு. 1998 டேனிடா மற்றும் தமிழ்நாடு நலவாழ்வுப் பாதுகாப்புத் திட்டம், சென்னை.*

முன்னர் குறிப்பிட்டபடி, நலவாழ்வு சுட்டிக்காட்டும் குறியீடுகள் பலவற்றிற்கு இரு விவரத் தொகுதிகள் உள்ளன. முக்கிய நிகழ்வுகள் கணக்கெடுப்பு மதிப்பீடு, ஆண்களுக்கான பி.ஆ.எ. மாநில மொத்தமான 64.91 ஆண்டுகள், 1996-2001 காலத்திற்கான மாதிரிப் பதிவுமுறை (மா.ப.மு)யின் மதிப்பீடான 65.2 ஆண்டுகளுக்கு மிக நெருக்கமாய் உள்ளது. முக்கிய நிகழ்வுகளின் கணக்கெடுப்பு (மு.நி.க) மதிப்பீடு பெண்களுக்கான பு.ஆ.எ. ஆன 68.85 ஆண்டுகள், மாதிரிப் பதிவுமுறை (மா.ப.மு)யின் மதிப்பீடான 67.6-ஐவிட சிறிதளவு உயர்வாக உள்ளது. எல்லா மாவட்டங்களிலும் பெண்களின் பி.ஆ.எ. ஆண்களின் பி.ஆ.எ.வைவிட அதிகமாயுள்ளது. சென்னை மாவட்டத்தில் 7.04 ஆண்டுகளாக இது வேறுபட்டுள்ளது. 29 மாவட்டங்களில், 10-ல் பெண்களின் பி.ஆ.எ. 70 ஆண்டுகளுக்கும் மிகையாய் உள்ளது. ஆண்களின் பி.ஆ.எ. சென்னையிலும் கன்னியாகுமரியிலும் மட்டுமே அதிகமாய் உள்ளது.

மற்ற நாடுகளில் உயிரியலான நிலை போலல்லாமல், இந்தியாவில் பெண்களின் ஆயுட்கால எதிர்ப்பார்ப்புகள், ஆண்களின் எண்ணிக்கை மொத்தத்தில் ஆண்களின் எண்ணிக்கையைவிட குறைவாய் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. இருப்பினும், 1991-96-ன் சராசரி ஆண்களுக்கு 60.6-ம், பெண்களுக்கு 61.7-ம் ஆகயிருந்தபோதும். ஆண்-பெண் இடைவெளி எதிர்மறையாக உள்ளது. இதேகாலத்தில் தமிழ்நாட்டின் புள்ளிவிவரங்கள் 1951-61-ல் ஆண்களுக்கு 41.09 ஆண்டுகளாகவும் பெண்களுக்கு 39.24-ஆகவும் அனைத்திந்திய சராசரியைவிடக் குறைவாகத் தொடங்கியுள்ளது. ஆனால் 1991-96-ல் ஆண்களுக்கு 62.85-ம், பெண்களுக்கு 63.05-ம் என அனைத்திந்திய சராசரிக்கும் மேலாக அதிகரித்துள்ளது.

**மொத்தக் கருத்தரிப்பு வீதம்**

மாதிரிப் பதிவு முறையின்படி 1971-ல் 3.9-லிருந்த தமிழ்நாட்டின் மொத்த கருத்தரிப்பு வீதம் (மொ.க.வீ.) 1997-ல் 2.00-ஆகப் பெருமளவு குறைந்தது. இதற்கு ஒத்திசைவான விவரங்கள், இந்தியாவுக்கு 5.2 மற்றும் 3.3-ஆகவும் கேரளாவுக்கு 4.1-ம் 1.8-ஆகவுமிருந்தன. 1997-ம் மேற்கோள் ஆண்டுக்கான முக்கிய நிகழ்வுகளின் கணக்கெடுப்பு, மாநில மொத்த கருத்தரிப்பு வீதத்தின் மதிப்பீடான 2.00-ஐ உறுதிப் படுத்துகிறது. (படம் 4.2) மொத்தக் கருத்தரிப்பு குறித்த வீதம் மாவட்ட அளவு மதிப்பீடுகள், பெரும்பாலான மாவட்டங்கள், மாநில சராசரியான 2.05-ஐயே சுற்றியுள்ளன. தருமபுரி, சேலம், பெரம்பலூர் 2.4-க்கு மேலான மொத்தக் கருத்தரிப்பு வீதத்தைத் தெரிவிக்கின்றன. இவற்றில் முதல் இரண்டும் உயர் அதிகப் பெண்கள் குழந்தை இறப்புவீத மாவட்டங்களாகும். இங்கு சிசுக்கொலை மிகப் பரவலாய் வழக்கத்திலிருந்தது.




*ஆதாரம் : மாதிரிப் பதிவுக் கணக்கெடுப்பு*

15-19 வயதுப் பிரிவு இளம்வயது வந்தவர்களின் வயதுக் குறிப்பிட்ட கருத்தரிப்பு வீதம் தமிழ்நாட்டில் 70.7-லிருந்து 1997-ல் 30.7-க்குக் குறைந்ததென்பது குறிப்பிடத்தக்கது. 1997-க்கு அனைத்திந்திய விவரம் 53.7 பஞ்சாப், குஜராத் மற்றும் கேரளா குறைவான வயது குறிப்பிட்ட கருத்தரிப்பு வீதத்தை (15-19) பெற்றுள்ளன. (திருமணத்தின் போதும் முதல் கருத்தரிப்பின் போதும் உயர் வயதை சுட்டிக்காட்டும்) அவற்றின் வீதங்கள் முறையே 16.4, 25.4 மற்றும் 26.00 ஆகும்.

தமிழ்நாட்டில், மொத்த கருத்தரிப்பு வீதம் வேகமான குறைவுக்குப் பல காரணங்கள் உள்ளன. அடுத்தடுத்து வந்த அரசுகளின் உறுதியான நடவடிக்கை, தந்தை பெரியார் போன்றவர்களால் தொடங்கப்பட்ட சமுதாய சீர்திருத்த இயக்கங்களின் மொத்த செல்வாக்கு, சிறுகுடும்பக் கோட்பாட்டைப் பரப்ப ஆதரவான மேம்பட்ட போக்குவரத்து மற்றும் தகவல் தொடர்புத் தொடரமைவு மற்றும் உறுதியான முனைப்பான கல்வி, தொலைத்தொடர்பு முயற்சி, மிதமான

பொருளாதார மற்றும் நலவாழ்வு வளர்ச்சியின் விளைவான மக்களின் வாழ்க்கைத்தரங்களை உயர்த்த வேண்டும் எனும் பேரார்வம், வீட்டுக்கு வெளியே வாழ்க்கைத் தொழில்களில் ஈடுபடுவதற்குப் பெண்களுக்கு வாய்ப்புகள் மற்றும் மேம்பட்ட கல்வியறிவு இவையனைத்தும் இச்செய்முறைக்குப் பங்களித்துள்ளன. இருப்பினும் மொ.க.வீ. மற்றும் உத்தேச பிறப்புவீதம் திடீரென்று குறைந்தாலும் குழந்தை இறப்பு விகிதம் (கு.இ.வி) அதிகமாயுள்ளது கவலையளிப்பதாய் உள்ளது. (குழந்தை இறப்புவீதம் குறித்த பிரிவைக் காணவும்)

## குடும்பநல திட்ட நடவடிக்கைகள்

மேற்குறிப்பிட்டவாறு மாநிலத்தின் மொ.க.வீ மற்றும் உ.பி.வீதங்களில் குறிப்பிடத்தக்க அளவு குறைவு பல காரணங்களால் ஏற்பட்டது. பிறப்புக் கட்டுப்பாடு திட்டங்கள் பெரும்பாலும் மலடாக்கம், தள்ளுபடி செய்ய முடியாத ஒரு காரணமாகும். மலடாக்கத்தின் தன்மைகள் மாறிவிட்டன. 1980-களில் கருப்பையூடு நோக்கியின் மூலம் செய்யப்படும் அறுவை சிகிச்சையின் காரணமாக மலடாக்கத்திற்கு முன்னுரிமையளிக்கப் பட்டாலும் இந்நடைமுறையில் சில தவறுகள் காரணமாய், பெண்களிடையில் தற்போது, வழக்கமான பெண்களுக்கான கருத்தடை அறுவைக்கு முன்னுரிமையளிக்கப்பட்டு வருகிறது. 1982-83-ல் 30 ஆண்டுகளாயிருந்த சராசரி ஒப்புகை வயது 1998-99-ல் 26.4 ஆண்டுகளாய் குறைந்துள்ளது. வழக்கமான கருத்தடை (வ.க), வாய்வழி மாத்திரைகளும் சிறிதளவே பயன்களையளித்தன. இருந்தபோதிலும், எய்ட்ஸ் கொள்ளை நோயுடன் வழக்கமான கருத்தடைப் பயன்படுத்தல்களும் பெருகியுள்ளன.

மலடாக்கம் பற்றிய விவரங்கூறுகள், 1995-96-ல் மலடாக்கத்தை ஏற்றுக் கொண்டவர்களில் 56.3%, இரண்டு அல்லது அதற்கும் குறைவான குழந்தைகளைப் பெற்றிருந்தனர் என்பதை சுட்டிக்காட்டுகிறது. இவர்களிலும்கூட 46% குறைந்தது ஒரு ஆண் குழந்தையைப் பெற்றிருந்தனர். இவர்களில் 10.2%-த்தினர் ஆண் குழந்தைகள் பெறாதவர்கள் ஆவர். தமிழ்நாட்டில் பல மாவட்டங்களில், ஒரு மகனைப் பெறவேண்டும் எனும் உறுதியான விருப்பம் மக்களிடையே உள்ளது. ஈரோடு, கோவை மாவட்டங்களில், மகன்களுக்கான விருப்புரிமை மிகக் குறைவாக காணப்படுகிறது. இங்கு மலடாக்கத்தை ஏற்றவர்களில் (இரண்டு (அ) அதற்கு குறைவான குழந்தைகளைப் பெற்றவர்கள்) முறையே 20% மற்றும் 18% பெண்குழந்தைகளை மட்டுமே பெற்றுள்ளனர். மகனுக்கான மிக உறுதியான முன்னுரிமை விழுப்புரம், திருவண்ணாமலை மற்றும் தருமபுரி மாவட்டங்களில் ஒத்திசைவான 3.7%, 4.1% மற்றும் 4.7% உடன் காணப்படுகிறது.

எனவே, தமிழ்நாட்டில் மக்கட்தொகை நிலைத்தன்மையின் உறுதிப்பாடு ஒருங்கிணைப்பு மூலம் பெறப்பட்ட லாபங்கள் மக்கட்தொகைக் கொள்கையில் பாலின விகிதத்தில் கவனம் செலுத்தப்படுத்த வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகிறது. அவர்களுடைய குரலை ஒலிக்கச் செய்வதில் பெண்களின் திறமையைப் பொறுத்தவரை, மலடாக்கமே பல ஒழுக்கத் தொடர்பான கேள்விகளை எழுப்புகிறது. தற்காலிக மற்றும் நிரந்தரக் கருத்தடையில் ஆண்களின் மிகப் பெருமளவு உள்ளாக்கம் (ஈடுபாடு) தேவையாய் உள்ளது. தற்போது, மாநிலத்தில் செயலாக்கப்பட்ட ஆண் அறுவை சிகிச்சைகளின் எண்ணிக்கை சிறிதே. மேலும் பெரும்பாலும் நகர்ப்புறங்களில் மட்டுமே ஆண்களால் கருத்தடைக் கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. இனப்பெருக்க மற்றும் குழந்தைகள் நலவாழ்வு திட்ட வேகக் கணக்கெடுப்பு, தமிழ்நாட்டில் 12 மாவட்டங்களில் நடத்தப்பட்ட அறிக்கைப்படி (1998) மாதிரி ஆண்களில் 15% மட்டுமே நவீன கருத்தடை முறைகளைப்

பயன்படுத்தினர் எனத் தெரிகிறது. (பெட்டி 4.1-ஐப் பார்க்கவும்) தேசீய நலவாழ்வு கணக்கெடுப்பு-2, படி 5% ஆண்களே, கருத்தடைக் கருவிகளைப் பயன்படுத்தினர். மிகச்சிறிய 0.8% ஆண்களே மலடாக்கத்தை மேற்கொண்டதாகத் தெரிவிக்கிறது.

1991-ல் தமிழ்நாட்டில் இயக்குவிக்கப்பட்ட கருச்சிதைவுகளின் மதிப்பீட்டின்படி எண்ணிக்கை 4,47,000 (கணக்குவிக்கப்பட்ட 60% கருச்சிதைவில், 73 பிறப்புகளுக்கு 25 கருச்சிதைவு எனும் யூகப்படி). 1990-களின் தொடக்கத்தில் தமிழ்நாட்டில் ஆண்டொன்றுக்கு மருத்துவ முறையிலான கருக்கலைப்புகளின் செயலாக்க எண்ணிக்கை ஏறத்தாழ 45000 என அறிவிக்கப்பட்டுள்ளது. மருத்துவ முறையிலான கருக்கலைப்புகள் குறைத்து அறிவிக்கப்பட்டிருப்பதாயும் மற்றும் இணக்குவித்த கருச்சிதைவுகள் அதிகமாக மதிப்பிடப்பட்டிருப்பதாய் எடுத்துக் கொண்டாலும் கணிசமான விகிதக் கருக்கலைப்புகள் பதிவு செய்யப்படாமல் போகிறது. மற்றும் சேமக் கருச்சிதைவுப் பணிகள், அவை தேவைப்படும் கணிசமான விகித மக்களுக்குக் கிடைக்கப்பெறாத நிலையிருப்பதைப் புள்ளிவிவரங்கள் தெரிவிக்கின்றன. கிராமப்புற பெண்கள் குறிப்பாக ஊறுபடத்தக்க நிலையிலிருக்கிறார்கள்.

### பெட்டி 4.1 : இனப்பெருக்க மற்றும் குழந்தை நலவாழ்வு திட்டம்

இனப்பெருக்க மற்றும் குழந்தை நலவாழ்வு திட்டம் (இ.கு.ந.தி.) உலக வங்கியின் கடன் உதவியுடன் செயலாக்கப்பட்டுவரும் ஒருங்கிணைந்ததொரு தேசீய திட்டமாகும். தமிழ்நாட்டில் இத்திட்டம் இரு பகுதிகளைக் கொண்டுள்ளது.

- ரூ. 231.4 மிலியன் மொத்த முதலீட்டுடன் மதுரை மற்றும் தேனி மாவட்டங்களை உள்ளடக்கிய 1997-98-ல் தொடங்கிய 5 ஆண்டுக்கால அளவுள்ள ஒரு துணைதிட்டம்.
- ஒரு மாநில அளவுப் பகுதி மாநில செயலாக்க திட்டம் (மா.செ.தி.) மற்ற எல்லா மாவட்டங்களின் கட்டமைப்புத் தேவைகளுக்கான ரூ. 183 மிலியன் முதலீட்டுடன் கூடியதொரு திட்டத்திற்கு ஒப்புதல் எதிர்பார்க்கப்படுகிறது.

திட்டத்தின் பொதுவான நோக்கங்களில் மக்களுக்கு மேலான நலவாழ்வுப் பணிகளையும் நலவாழ்வுக் காப்பு மகப்பேறு முறையின் செயலாக்கத்தின் போதிய அளவு மேம்பாட்டையும் கோரிப் பெறும் அதிகாரமளித்தலும் உள்ளடங்கும். மதுரை, தேனி துணைதிட்டம், குறிப்பாக மகளிர், வளரிளம் பருவத்தினர் மற்றும் சிறார்களின் நலவாழ்வுக்காப்பு மற்றும் அளிக்கும் பணிகளின் தரத்தை மேம்படுத்தவும் வகை செய்கிறது. குறிப்பிட்ட இலக்குகளில் குழந்தை இறப்பு விகிதம் (கு.இ.வி) மற்றும் மகப்பேற்றின்போது இறப்புவிகிதம் (ம.இ.வி) மட்டுமன்றி தாய் மற்றும் சேய் நோயுறும் தன்மைகள் குறைப்பு மருத்துவமுறை மூலம் கருச்சிதைவுப் பணிகளில் மேம்பாடு மற்றும் கருத்தரிப்பு வீணாதல், பெண்சிசுக்கொலை ஒழிப்பு ஆகியன அடங்கும். மா.செ.தி. நிறுவன மகப்பேறுகள் மற்றும் மருத்துவம் சார்ந்த முறை மூலம் நலத்தொடக்க மையங்களில், நெருக்கடி கால மற்றும் இன்றியமையாப் பேறு மருத்துவ உதவிகளை அளித்தலுக்காக முனைப்பான கவனம் செலுத்துகிறது. அது கிராம நலவாழ்வு

செவிலியருக்கு மருந்துப் பெட்டிகளையும் தொடக்கநல நிலையங்களுக்கு (தொ.ந.நி.) மருந்துகளையும் மருத்துவமனைத் தளவாடங்களையும் வழங்குகிறது மற்றும் தொ.ந.நிலையங்கள் / நலவாழ்வுத் துணை மையங்கள் (ந.து.மை.) முதலில் குறிப்பிடும் பிரிவு மாவட்ட மருத்துவமனைகள் ஆகியவற்றிற்கான சிறுகட்டிடப் பணிகளையும் மேற்கொள்ளுகிறது. இனப்பெருக்கம் மற்றும் குழந்தை நலவாழ்வு திட்டத்தில் பயிற்சி அறிநிலை உருவாக்கம், இடம், பெயர் ஆற்றல் மற்றும் தகவல் தொடர்புத் திறமைகளில் பெண்நல வாழ்வு களப்பணியாளர்களுக்கு பயிற்சி ஆகியனவும் இத்திட்ட ஆணைகளின் ஒரு பகுதியாகும். தகவல் கல்வி தகவல் தொடர்பு வசதிகள் முயற்சிகளையும் இத்திட்டம் உள்ளடக்கியிருக்கும். குறிப்பாய் கலைப்பயணம் உத்தி மூலம், இனப்பெருக்க நலவாழ்வு (ஊர்ஊராக நடத்தப்படும் தெருக்கூத்து) சம்பந்தமாக மக்களைத் திரட்டி செயல் நோக்கமளிக்கவும் இவை பயன்படுத்தப்படும்.

## மகப்பேறின்போது இறப்பு விகிதம்

1992-93-ஆம் ஆண்டிற்கான மதிப்பீடுகள் தமிழ்நாட்டின் பேறுகால இறப்பு விகிதத்தை 376-ஆகக் காட்டுகிறது. மிக அண்மைக்கால சான்று தமிழ்நாட்டில் மகப்பேறின்போது இறப்பு விகிதம் கணிசமான அளவு குறைந்திருப்பதைக் காட்டுகிறது. 1995, 1996, 1997 மற்றும் 1998-ம் ஆண்டுக்கான முக்கிய நிகழ்வுகளின் கணக்கெடுப்பு (1995[1]-ல் 4.5 மில்லியன் மாதிரி மக்கட் தொகையை உள்ளடக்கியது.) நகராட்சிப் பகுதிகளல்லாத மற்றும் மற்ற மூன்று ஆண்டுகளில் ஒவ்வொரு ஆண்டிலும் 9 மிலியன், மாநிலத்தில் 150-லிருந்து 200 அளவுள்ள ஒரு நல்லநிலையான பேறுகால இறப்பு விகிதத்தைக் காட்டுகிறது.

தமிழ்நாட்டில் பேறுகால இறப்புக் காரணங்களின் பகுப்பாய்வு, இவற்றில் பெரும்பாலானவை தடுக்கப்படக் கூடியவை என்ற உண்மை வெளிப்படுத்துகிறது. பேறுகால இறப்புக்கு நேரடியான / மறைமுகமான பேறு மருத்துவக் காரணங்கள் நன்கு கண்டறியப்பட்டாலும், சமூக, பொருளாதாரக் காரணங்களும் முக்கியப் பங்காற்றுகின்றன. எடுத்துக்காட்டாக குடும்பப் பெரியவர்களின் மனப்போக்குகள், கடும்உழைப்பு மற்றும் மட்டமான ஊட்டச்சத்து ஆகிய மிகப்பெரும் சுமைகள், போக்குவரத்து தகவல் தொடர்பு வசதிகளில் உள்ள குறைபாடுகள், உரிய நலவாழ்வு வசதிகளை மதிப்பிடுவதில் காலதாமதம் மற்றும் இன்றியமையாத நெருக்கடிக்கால மகப்பேறுப் பணிகள் போதாமை (அ) தரக்குறைவானவையாயிருத்தல். மருத்துவக் காரணங்களில் 1996-ல் தமிழ்நாட்டில் எல்லாப் பேறுகால இறப்புகளிலும் கிட்டத்தட்ட 40% இரத்தப்போக்கினால் நிகழ்ந்தவையாகும். மதிப்பீட்டில் ஏற்படக்கூடிய தவறுகள் எப்படியிருந்த போதிலும், இது பேறுகால உயிர்களைக் காப்பாற்றுவதில் இரத்தம் கிடைக்கப் பெறுவதன் முக்கியத்தைக் கோடிட்டுக் காட்டுகிறது. மற்ற பெரிய காரணங்கள் கருவுற்றிருக்கும் காலஉயர் இரத்தக் கொதிப்பு மற்றும் சூல்வலி (Eclampsia) தடைப்படும் மகப்பேறு காரணமாக கருப்பையில் ஏற்படும் தகர்வுகள், காயத்தினால் ஏற்பட்ட இரத்தக் கசிவு (Puerperal Sepsis) மற்றும் இரத்த நஞ்சூட்டியவை (Sepiticemia) போன்றவை மறைமுக முக்கிய மகப்பேறு காரணங்கள் இரத்தசோகை இதயநோய், மஞ்சள் காமாலைநோய் மற்றும் மலேரியா ஆகியன.

---

[1]நகராட்சிப் பகுதிகள் அல்லாதவற்றில் கிராமப்புறங்களுக்கும் பேரூராட்சிகளும் அடங்கும். நகராட்சிகள், மாநகராட்சிகள் அடங்காது.

எல்லாப் பேறுகால இறப்புகளிலும் 40% இரத்தப்போக்குக் காரணமாயிருப்பதால் இதற்கான தீர்வு, இரத்தப்போக்கைக் குறைப்பதில் உள்ளது. எனவே போதிய அளவுகளில் இரத்தத்தைக் கிடைக்கப் பெறச் செய்வது மிக முக்கியமாகும். இரத்தம் செலுத்துவதன் மூலம் ஹெச்.ஐ.வி / எய்ட்ஸ் நோய் கிருமிகள் பரவும் சாத்தியக்கூறு பற்றி கவலை அதிகரித்து வரும் நிலையில் இந்தியஅரசு, இரத்த வங்கிகளுக்கு உரிமங்கள் வழங்குவதிலும் இரத்தம் செலுத்தும் நடைமுறைகளிலும் கடுமையான விதிமுறைகளை செயலாக்கத்தில் கொண்டு வந்துள்ளது.

பேறுகால இறப்புகளில் நேரடியாய் 6% பங்கைப் பெற்றிருப்பதாய் மதிப்பீடு செய்யப்பட்டுள்ள மற்றும் மறைமுகமாய் இதற்கு இணையாய் (அ) பெருமளவில் பங்களிப்பதாய் உள்ள இரத்தசோகையை முன்னுரிமை அடிப்படையில் சமாளிக்கப்பட வேண்டும். இரத்தக் குறைவுக்கான அடிப்படைக் காரணம், தாயின் மட்டமான ஊட்டச்சத்துக் குறைவே. வறுமையும், குடும்பத்தில் பாலினசமமின்மைக் காரணமாய் உணவுப் பங்கீடும் இதற்கு முக்கியக் காரணமாக அமைகிறது. வறிய கிராமப்புறக் குடும்பங்களில் தாயின் மீது சுமத்தப்படும் குடும்ப மற்றும் தயாரிப்பு வேலைகள் போன்ற மிகப்பெரும் சுமையும் இதற்குப் பொருத்தமான காரணங்களாக உள்ளன.

1999-ல் தமிழ்நாட்டில் நடத்தப்பட்ட தேசீயக் குடும்பநலக் கணக்கெடுப்பு உள் விவரங்கள் மாநிலத்தில் பெண்களில் 56.5% பேர் இரத்தசோகையுள்ளவர்களாகவும், ஏறத்தாழ 20% மிதமாக (அ) கடுமையாய் இரத்தசோகையுள்ளவர்களாயிருப்பதாகத் தெரிவிக்கிறது. கருவுற்றிருக்கும் மற்றும் பாலூட்டும் பெண்களுக்கிடையே ஒரு டெசிலிட்டருக்கு 11 கிராம்கள் எனும் அளவுப்படி 54% நேர்வு களில் இரத்தசோகை பரவலாயிருக்கிறது. சென்னையின் நகர்ப்புறப் பகுதிகளில் 12 டெசிலிட்டர்கள் என்ற அளவுப்படி, இதன் விழுக்காடு 81%-க்கும் அதிகமாக உள்ளது. மற்ற மாநிலங்களோடு ஒப்பிடுகையில் குறைவாயிருந்தாலும், இந்தப் புள்ளிவிவரங்கள், திருத்த நடவடிக்கை மேற்கொள்ளும் அளவுக்கு இன்னும் அதிகமாகவே உள்ளது. பெண்கள் மேலான உடல்நலத்தோடிருக்க வேண்டும். ஊட்டச்சத்தின் அடிப்படையில் சொல்வதென்றால் அவர்களுடைய சொந்த உடல்நிலைகளை மேம்படுத்த வேண்டும். அடுத்த தலைமுறையின் நலத்தைக் கருதி யாகிலும், இது அவசியமாகிறது.

பிறப்பின்போது எடைகுறைவும் (பி.எ.கு) கூடத் தொடரும் கவலைக்குக் காரணமாகியுள்ளது. அது, பாதிக்கப்பட்டவர்களுக்கும், சமுதாயத்திற்கும் கேடு பயப்பதால், குறிக்கோள், பிறப்பின்போது எடைக்குறைவை (பி.எ.கு) ஒழிக்கவேண்டும் என்பதே. இதற்குப் பெண்களின் ஊட்டக்குறைவை உற்றுநோக்குவதும் மட்டுமன்றி, வளரிளம் பெண்களின் வளர்ச்சி முறைகளின்பாலும் கவனம் செலுத்தப்பட வேண்டும். ஊட்டக் குறைவான இரத்தசோகையுள்ள பெண்கள் கருத்தரிப்பதற்காகக் காத்திருந்து அதன்பின்னர், நடவடிக்கை எடுப்பதைத் தவிர்த்து, வளரிளம் பெண்களிடையே அவர்களுடைய வேக வளர்ச்சிப் பருவத்தில் வளர்ச்சிக்கு ஆதரவளிப்பது எதிர்காலத்தில் உடல்நல மிகுந்த தாய்மார்களை உருவாக்க வாய்ப்பாய் அமையும். எடை மற்றும் உயரம் குறைவான வளரிளம் பெண்கள், இரத்தசோகை போன்ற ஊட்டச்சத்துக் குறைபாடுகளுடன் இணைந்திருத்தல் கவலைக் குரியதொரு முக்கியமான பிரச்சனையாய் உள்ளது.

## மருத்துவ நிலையங்களில் மகப்பேறுகள்

தமிழ்நாடு மருத்துவ நிலையங்களில் மகப்பேறுகளை அதிகரிப்பதில் குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தைக் கண்டுள்ளது. மாதிரிப் பதிவுகள் முறை விவரங்களின்படி 1971-ல் மருத்துவ நிலைய மகப்பேறுகளின் விழுக்காடுகளில், கேரளாவுக்கும் மகாராஷ்ட்டிராவுக்கும் பின்னாலிருந்த தமிழ்நாடு 1996-ல் கேரளாவைத் தவிர மற்றெல்லா மாநிலங்களையும்விட முன்னிலையிலிருந்தது. இவ்வாறு, 1996-ல் கேரளா மகப்பேறுகளில் 97% மருத்துவ நிலைய மகப்பேறுகளாயிருந்தன. தமிழ்நாட்டில் மருத்துவ நிலைய மகப்பேறுகள், மொத்த மகப்பேறுகளில் 65%-ஆகவிருந்தது. 1998-99-ல் தமிழ்நாட்டில் மொத்த மகப்பேறுகளில் கிட்டத்தட்ட 80% மருத்துவ நிலைய மகப்பேறுகளாயிருந்தன.

மாவட்டங்களுக்கிடையில் மாறுபாடுகளும் காணப்படுகின்றன. ஒரு முனையில், முழுமையான நகர்ப்புற மாவட்டமான சென்னையில் 100% மருத்துவ நிலைய மகப்பேறுகளாய் உள்ளன. அடுத்ததாய், திருவண்ணாமலை மாவட்டத்தில் 51% மட்டுமே மருத்துவ நிலைய மகப்பேறுகளாய் உள்ளன. போதிய அளவு எண்ணிக்கையில் ஆரம்ப சுகாதார நிலையங்களும் நலஉதவி மையங்களும் (ந.உ.மை) சாதாரண மகப்பேறுகளை செய்விக்க வசதிகளை அடையப் பெற்றிருந்தாலும் தமிழ்நாட்டிலிருக்கும் 10,000-க்கும் கூடுதலான ஆ.சு.நி மற்றும் ந.உ.மை.-களில் மாநிலத்தின் மொத்த மகப்பேறுகளில் ஏறத்தாழ 8%-10% மட்டும் இடம்பெறுகின்றன. இது மாதமொன்றுக்கு ஒரு ஆ.சு.நி (அ) ந.உ.மை.ற்கு ஒரு மகப்பேறு என்ற விகிதத்தில் இடம்பெறுகிறது.

சேம மகப்பேறுகளின் பங்கைப் பொறுத்தவரை, மருத்துவ நிலைய மகப்பேறுகள் மற்றும் பயிற்சி பெற்ற பணியாளரால் உடனிருந்து நடத்தப்பட்ட உறைவிட மகப்பேறுகள் ஆகிய இரண்டும் சேர்ந்தவையாகும். மாநில மொத்தத்திற்குமான மாதிரிப் பதிவுகள் முறைப் புள்ளிவிவரங்கள், 1971-ல் 39.3%-ஆக இருந்தது. 1996-ல் 85.6%-க்குக் கணிசமாய் உயர்ந்தது. மொத்தத்தில், சேம மகப்பேறுகளின் விகிதம் மாவட்டங்களிடையே, மிகக் குறைவான மாறுபாட்டையே காட்டுகிறது. பெட்டி 4.2-ல் காட்டியபடி தமிழ்நாடு பகுதி நல வாழ்வுக் காப்புதிட்டம் கட்டம் III சேம மகப்பேறு வாய்ப்புகளை மேம்படுத்திட பொதுநலவாழ்வுத் துறையில், மருத்துவப் பணியாளருக்கு அதிகாரமளிப்பதில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் கண்டுள்ளது.

### பெட்டி 4.2 பெண் களப்பணியாளருக்கு அதிகாரமளித்தல்

'டேனிடா' தமிழ்நாடு பகுதி நலவாழ்வுக் காப்புத்திட்டம் - கட்டம் 3 தருமபுரி, தஞ்சாவூர், திருவாரூர், நாகப்பட்டினம், சேலம், நாமக்கல், கடலூர் மற்றும் விழுப்புரம் மாவட்டங்களில் முனைப்பான கவனம் செலுத்துவதோடு மாநிலம் முழுவதிலுமுள்ள, பொதுநல வாழ்வுத் துறையில் இருக்கும் பயிற்சி மற்றும் தகவல் கல்வி மற்றும் தகவல் தொடர்பு ஆகியவற்றிலும் நடவடிக்கை மேற்கொள்ளுகிறது. பொது தொடக்க நலநிலையக் காப்புப் பணிகளை மேம்படுத்தும் மற்றும் பெண்களுக்கதிகாரமளிப்பதில் முனைப்பான கவனம் செலுத்தும் அதன் ஒப்பிய பொறுப்பின் ஒரு பகுதியாய் இத்திட்டம். எல்லாப் பெண் நலவாழ்வுக்களப் பணியாளருக்கும் கிராம நலவாழ்வு செவிலியருக்கும் பிரிவு நலவாழ்வு செவிலியருக்கும் சமுதாய நலவாழ்வு செவிலியருக்கும் உந்தூர்தி ஈருருளிகள் வாங்கக் கடன் உதவி அளிப்பதோடு, ஊர்திகளை ஓட்டப் பயிற்சியும் அளிக்கிறது. திட்ட மாவட்டங்கள் அனைத்தையும் சேர்த்து

ஏறத்தாழ 4000 செவிலியர்களை உள்ளடக்கிப் பெண் நலவாழ்வுக்களப் பணியாளருக்கு இடம் பெயர் ஆற்றல் பயிற்சியளிக்க, இத்திட்டம் ரூ. 2.93 மிலியன் ஒதுக்கீடு செய்துள்ளது. இடம் பெயர் ஆற்றல் பயிற்சி எல்லா திட்ட மாவட்டங்களிலும் முடிக்கப்பட்டுவிட்டது.

இடம் பெயர் ஆற்றல் பயிற்சி உறைவிட முகாம்களில் அளிக்கப்பட்டது. இங்கு பணியாளர்கள், தகவல் தொடர்புத்திறமையிலும் 'யோகா'விலும் பயிற்றுவிக்கப்பட்டனர். இம்முகாம்கள், பெண்நலவாழ்வுக் களப்பணியாளர்களுக்கதிகாரமளித்து, அவர்களுடைய சுயதோற்றத்தையும் நம்பிக்கையையும் உயர்த்திக் கொள்ள உதவின. 1999-ம் ஆண்டின் முதல் இரண்டு மாதங்களில் தருமபுரி மாவட்டத்தில் முதல் முறையாக செயலாக்கப்பட்ட இடம்பெயர் ஆற்றல் தொடக்க முயற்சிகளின் தெளிவான பயன்களும் இவையேயாகும். தருமபுரியில் அளித்த இடம் பெயர் ஆற்றலின் பயிற்சி குறித்த சுயேச்சையான மதிப்பாய்வு, பெண் நலவாழ்வுக் களப்பணியாளரால் உந்தூர்தி ஈருருளியின் பயன்பாடு, பயிற்சிக்கு முந்தைய நிலையான 23%-லிருந்து பயிற்சிக்குப் பிந்தைய நிலையான 98%-ஆகப் பெருமளவு உயர்ந்ததைக் குறிப்பிடுகிறது. இதன்மூலம் தொலைவிடப் பணிகளை மேற்கொள்வதும் கணிசமாக அதிகரித்தது. பணியாளர்க்களிக்கப்பட்ட அதிகாரமும் மற்ற காரணங்களும் தொடக்க நலநிலையங்களில் அளிக்கப்படும் நலவாழ்வுக் காப்புப் பணிகளை மேம்படுத்தியது.

## குழந்தை இறப்புவீதம் (கு.இ.வீ)

பேறுகால இறப்பு விகிதம், மருத்துவ நிலைய மகப்பேறுகள் முதலான மேற்சொன்ன சுட்டிக் காட்டும் குறியீடுகளின் மேம்பாடு, குழந்தை இறப்பு விகிதத்தை (கு.இ.வீ) மேம்படுத்துவதில் ஒரு தெளிவான செயல் விளைவைக் கொண்டிருந்தது. குழந்தை இறப்பு விகிதமே, ம.மே.கு. மு.களில் உள்ளபடியே பயன்படுத்தப்பட்டன. ஓராண்டுக்கு குறைவான குழந்தைகளுக்குரிய நலவாழ்வுநிலை, ஊட்டச்சத்து மற்றும் கவனம் ஆகியவற்றை மட்டுமின்றி சமுதாயப் பொதுநல்வாழ்வையும் எடுத்துக்காட்டும் ஒரு நுட்பமான சுட்டிக்காட்டும் இலக்காக குழந்தை இறப்பு வீதம் உள்ளது. தமிழ்நாட்டிலும் இந்தியாவிலும் குழந்தை இறப்புவிகிதம் 1970-ல் மிக நெருக்கமாயிருக்கையில் (முறையே 125-ம், 129-ம்) தமிழ்நாட்டின் குழந்தை இறப்பு விகிதம் (கு.இ.வி) இந்தியாவினுடையதைவிட மிக வேகமாய் குறைந்தது. தமிழ்நாட்டின் குழந்தை இறப்பு விகிதம் 1980-ல் 100-க்கும் குறைவாக குறைந்தது. ஆனால் இந்தியாவின் குழந்தை இறப்பு விகிதம் 114 வரை மட்டுமே குறைந்தது. 1980-களின் இறுதியில் தமிழ்நாட்டின் குழந்தை இறப்பு விகிதம் 68-ஐ எட்டியது (இந்தியா - 91) 2000-ல் அது 51ஆக இருக்கும் என மதிப்பிடப்பட்டுள்ளது (இந்தியா 68) இருப்பினும் ஒப்பீட்டடிப்படையில் மாநிலத்தின் முன்னேறிய நிலையைக் கருதியும் சமூகப் பொருளாதார வளர்ச்சியுடன் பள்ளிப் பருவத்திற்கு முந்தைய சிறாரின் நலவாழ்வு மற்றும் ஊட்டச்சத்து மையங்களின் மாபெரும் தொடரமைவும் ஒருங்கிணைந்து தமிழ்நாடு மேலும் அதிகக் குறைப்பை இலக்காகக் கொள்ளலாம்.

கிராமப்புற, நகர்ப்புற மாறுபாடுகள் குறித்த ஆய்வு மேம்பாட்டுக்குரிய ஒரு பகுதியைச் சுட்டிக்காட்டுகிறது. படம் 4-3-ல் கண்டுள்ளபடி, கிராமப்புறக் கு.இ.வி. 1970-லிருந்து, 1997 வரையிலுள்ள 28 ஆண்டுக்காலத்தில், நகர்ப்புற கு.இ.வி-ஐ-விட உயர்வாக உள்ளது. இதன்படி, கிராமப்புறங்களில் குழந்தை இறப்புக்கான அதிகஅளவு அபாயம் காணப்படுகிறது.



*ஆதாரம் : மாதிரிப் பதிவுமுறை*

மாநிலத்தின் கு.இ.வி.ஐ ஒரு வாரத்துக்குள், ஒரு வாரம்மேல், ஒரு மாதத்துக்குள், மற்றும் ஒரு வருடத்துக்குள் இறக்கும் முந்தைய, பிந்தைய மற்றும் குழந்தைகள் எனப் பகுதிகளாய் பிரித்தல்கூட அறிவூட்டுவதாக அமைந்துள்ளது. 1970-97-க் காலத்திற்கான மாதிரிப் பதிவுமுறையின் விவரங்கள். மொத்த குழந்தை இறப்புகளின் ஒரு பங்காக ஒரு வாரத்துக்குள் இறக்கும் குழந்தைகள் 1970-ல் 26.3%-லிருந்து 1990-களின் இடையில் ஏறத்தாழ 60%-ஆக உயர்ந்தது. ஒப்பிடுகையில் 1970-களின் இடையில் கேரளாவின் கு.இ.வி. தமிழ்நாட்டில் தற்போதிருப்பதைப்போல ஏறத்தாழ இருந்தது. மொத்தக் குழந்தை இறப்பில் ஒரு வாரத்துக்குள் இறக்கும் குழந்தைகளின் பங்கு 40%-க்குள்ளாக மட்டுமே இருந்தது. மேற்கோள் ஆண்டு 1998-க்கான, 1999-ம் ஆண்டின் முக்கிய நிகழ்வுகளின் கணக்கெடுப்பு விவரங்களும் தமிழ்நாட்டில் மொத்தக் குழந்தைகளின் இறப்பில் ஒரு வாரத்துக்குள் இறக்கும் குழந்தைகள் உயர் பங்கிருந்ததை உறுதி செய்கிறது. தருமபுரி, சேலம் போன்ற உயர் பெண்குழந்தை இறப்பு மாவட்டங்களின் தேர்வில் பெண்குழந்தைகளின் மொத்த இறப்புகளில் ஒரு வாரத்துக்குள் இறக்கும் குழந்தைகளின் பங்கு மேலும் அதிகமாய் உள்ளது.

## பெட்டி 4.3 டேனிடா, தமிழ்நாடு பகுதி நலவாழ்வுக் காப்பு திட்டம்

டேனிஷ் பன்னாட்டு வளர்ச்சி முகமையின் (டேனிடா) நிதியுதவியுடன் நடத்தப்படும் தமிழ்நாடு பகுதி நலவாழ்வுக்காப்பு திட்டம் 1981-ம் ஆண்டிலிருந்து நடைமுறையிலிருந்து வருகிறது. 1981-லிருந்து 1996 வரை முதல் இரு கட்டங்களில், இத்திட்டம் முன்பிருந்த தென்னாற்காடு மாவட்டங்களை (தற்போது முறையே விழுப்புரம் மற்றும் கடலூர், சேலம் மற்றும் நாமக்கல்) உள்ளடங்கியிருந்தன. அதன் மூன்றாவது கட்டத்தில் திட்ட மாவட்டங் களாவன : தருமபுரி, தஞ்சாவூர், திருவாரூர் மற்றும் நாகப்பட்டினம் முடிவு செய்யப்பட்ட திட்டகாலம் டிசம்பர் 1996-லிருந்து டிசம்பர் 2001 வரையாகும். ஒப்புதலளிக்கப்பட்ட

முதலீடு ரூ. 591 மில்லியனாகும் மொத்த திட்டத்தின் குறிக்கோள் கிராமப்புற மக்கட் தொகையின், குறிப்பாக நலிந்த பிரிவினரின் நலவாழ்வு மற்றும் குடும்ப நலநிலை பெண்கள் மற்றும் சிறார்களை கவனத்தில் கொண்டு, மேம்படுத்துதல் என்பதாகும். இத்திட்டம் வழக்கமான பாலினப் பாகுபாடுகளைக் கருத்தில் கொண்டு பெண்களுக்கு அதிகாரமளிக்க வகை செய்கிறது. அதன் நோக்கங்களை அடையும் பொருட்டு நலவாழ்வுத் துறையின் பொருளியலான கட்டமைப்புகளையும், நலவாழ்வுப் பணியளிப்பவர்களின் அறிவாற்றல் மற்றும் செயல் திறங்களையும் நலவாழ்வுப் பணிகளின் மேலாண்மையையும், மருத்துவப் பங்கீட்டு முறையையும் வலுப்படுத்த வகை செய்கிறது. நலவாழ்வு மற்றும் நலவாழ்வுப் பணியளிப்பு குறித்தவைகளின் தொடர்பில் சமுதாய மற்றும் நலவாழ்வுப் பணியளிப்போரின் அறியும் நிலையை மேம்படுத்தவும் வகை செய்கிறது.

இறுதியாக, மாநிலத்தில் பேறுகாலத் தொடர்பு இறப்பு கணிசமாகக் குறையவில்லை. இதற்குக் காரணம் உறுதியான உயர்தொடக்க அண்மைப்பேறுகால இறப்புவீதமும், அதைத் தொடர்ந்த இறந்து-பிறப்பு வீதங்களில் ஒப்பீட்டடிப்படையிலான மிதமான குறைவேயாகும். இவ்வாறு, பேறுகாலத் தொடர்பு இறப்பு வீதம் (பே.தொ.இ.வீ) மட்டுமே 1971-ல் 55.2-லிருந்து 1997-ல் 43.4-ஆக மாதிரிப் பதிவுமுறைப்படி குறைந்தது. இதற்கு ஒத்திசைவான கேரளாவுக்கும் இந்தியாவுக்குமான 1997 விவரங்கள் 17.5 மற்றும் 43.2-ம் மாதிரிப் பதிவுமுறை விவரப்படி மாநில இறந்து பிறப்புவீதம், 1971-ல் 22.1-லிருந்து (இந்தியா 17.5) 1997-ல் 11.7-ஆக (இந்தியா 8.7, கேரளா 11.3) குறைந்தது.

1998 முக்கிய நிகழ்வுகளின் கணக்கெடுப்பின்படி குழந்தை இறப்புக்கான மருத்துவக் காரணங்கள் : பிறப்பு மூச்சுத் திணறல் (Asphyxia) (17.7%) பிறப்பில் எடைக்குறைவு (14.6%) கடும்மூச்சு முட்டல் தொற்றுநோய் (13%) மற்றும் முதிராத்தன்மை (7.1%). இவ்விறப்புகளில் பெரும்பாலானவை ஒரே மாதிரியாக அண்மைப் பேறுகால மற்றும் குறிப்பாக தொடக்க அண்மைப் பேறுகாலக் கட்டங்களில் நிகழ்கின்றன. கு.இ.வீ-ல் கணிசமான குறைப்புக்கு இரு முக்கியத் தேவைகள், பேறுகாலத்திற்கு முந்தைய கவனிப்பும், புதியதாகப் பிறந்த குழந்தைகளின் உயர்தரக் கவனிப்பும் ஆகும். முன்னதாகக் குறிப்பிட்டப்பட்ட கவனிப்பு, தாயின் ஊட்டச்சத்துப் பிரச்சனைகள் மற்றும் உயர்ஆபத்தான கருத்தரிப்பைக் கண்டறிந்து முதிராத்தன்மை மற்றும் பிறப்பில் எடைக் குறைவு ஆகியவற்றால் நேரும் குழந்தை இறப்புகளைக் குறைக்கும்படி உதவுகிறது. பின்னால் கூறப்பட்டது, பிறப்பு மூச்சுத்திணறல் (Asphyxia) மற்றும் கடும்மூச்சுமுட்டல் தொற்றுநோயால் ஏற்படும் குழந்தை இறப்புகளைக் குறைக்கும்.

## நோய்த்தடைக் காப்பில் தமிழ்நாட்டின் நிலை

பெரிய இந்திய மாநிலங்களில் தமிழ்நாடு நோய்த்தடைக் காப்பில் மிகச்சிறந்த வரலாறு படைத்துள்ளது. நடைமுறையில் ஒவ்வொரு ஆண்டும் பிறக்கும் அனைத்து 1.1 மிலியன் குழந்தைகளும் தடைக்காப்புக்குட்படுத்தப் படுகின்றன. 1.2 மில்லியன் கருவுற்ற பெண்களுக்கு ஒவ்வொரு ஆண்டும் வலிப்பு நோய்க்கெதிராகத் தடைக்காப்பளிக்கப்படுகிறது. கடந்த 15 ஆண்டுகளில் நோய்த்தடைக் காப்பின் தரம் குறிப்பிடத்தக்கவாறு மேம்படுத்தப் பட்டுள்ளது. தொடர்

தடுப்பும் (Old Chain) பேணுகை மற்றும் தடுப்பூசி மருந்தின் சக்தியை உறுதி செய்தல் ஆகியவற்றால் தடுப்பூசி மருந்துகளால் தடுக்கப்படும் இறப்புகளைக் குறிப்பிடும்படி குறைக்க வகை செய்யும்.

**பெண்சிசுக்கொலை**

அண்மைப் பேறுகாலப் பெண்குழந்தை இறப்புகளில் ஒரு குறிப்பிடத்தக்க விகிதம் பெண் சிசுக்கொலையின் (பெ.சி.கொ.) காரணத்தால் நிகழ்கிறது. மாநிலத்தின் சில மாவட்டங்களில் கடந்த 3 (அ) 4 பத்தாண்டுகளில் சிறார் பாலின விகிதத்தில் (0-6 வயதுத் தொகுதியில் பாலின விகிதம் என விளக்கப்பட்டது) ஒரு வேகமான குறைவு காணப்படுகிறது. இம்மாவட்டங்களில் கணிசமான பெண்குழந்தை இறப்பு விகிதமும் காணப்படுகிறது. எடுத்துக்காட்டாய் சேலம் மாநிலத்தில் எல்லாக் குழந்தைகள் இறப்பிலும் பெண்சிசுக்கொலை 7% பங்கைப் பெறுகிறது. பெண்குழந்தைகளின் இறப்பில் 14%-ஐயும் சேலம் மற்றும் தருமபுரியில் எல்லாப் பெண் குழந்தைகளின் இறப்புகளில் முறையே மூன்றில் ஒரு பங்கும் மூன்றில் இருபங்கும் நிகழ்கிறது. மாநிலத்தில் மூன்றில் ஒரு பங்கு அதாவது தருமபுரி, சேலம், நாமக்கல், தேனி, மதுரை, கரூர், திண்டுக்கல், ஈரோடு, வேலூர் மாவட்டங்களில் பரவலான 385 ஒன்றியங்களிலும் மற்றும் ஏனைய சில மாவட்டங்களில் எங்கோ ஒன்றான நிகழ்வுகளாய் இப்பழக்கம் இருந்து வருவதாய் புள்ளிவிவரங்கள் கூறுகின்றன.

அரசு, சட்டநடவடிக்கைகள் சமுதாயத் திரட்டல் மற்றும் செயல் நோக்கமளிப்பு ஆகியவற்றின் ஒருங்கிணைப்பு மூலம் இச்சிக்கல்களுக்குத் தீர்வு காண விழைந்துள்ளது. தருமபுரியில், டேனிடா, தமிழ்நாடு பகுதி நலவாழ்வுக் காப்புத் திட்டத்தின் தொடக்க முயற்சியான கலைப்பயணங்கள் ஒரு நல்ல எடுத்துக்காட்டு. தேர்ந்தெடுக்கப்பட்ட உள்ளாட்சி மன்றத் தலைவர்களின் உதவியோடு பெண்சிசுக் கொலைக்கு (பெ.சி.கொ.) எதிரான ஒரு உறுதியான இயக்கமாய், இது தொடர்ந்து இயங்கி வருகிறது. (பெட்டி 4.3-ஐப் பார்க்கவும்).

**பெண் சிசுக் கருக்கலைப்பு**

இதற்கு மிக நெருக்கமான தொடர்புடைய ஒன்று பெண் சிசுக் கருக்கலைப்பு. கருவிலிருக்கும் சிசுவின் பாலினத்தைக் கண்டறியும் தொழில் நுட்பவியல் தோன்றியதன் விளைவாக நாட்டின் பல பகுதிகளில் குறிப்பாக மகாராஷ்ட்ரா, பஞ்சாப், அரியானா மற்றும் டில்லியில் ஒரு பத்தாண்டுக்கு முன்னரே பெண் சிசுக் கருக்கலைப்பு வழக்கம் தோன்றியது. அண்மை ஆண்டுகளாய் இது தமிழ் நாட்டிலும் பரவியுள்ளது. 'மரபியல் ஆலோசனை' எனும் பெயரில் பெண் சிசுக் கருக்கலைப்பு வழக்கம் சில மாவட்டங்களில் நடைமுறையிலிருந்து வருகிறது எனத் தெரியவருகிறது. பிறப்பின்போது, பாலின் விகிதங்கள் குறித்துக் கிடைக்கப் பெறும் புள்ளி விவரங்கள் இப்பழக்கம் மாநிலத்தின் சில பகுதிகளில குறிப்பிடத்தக்க அளவில் பரவியுள்ளது என்பதை சுட்டிக்காட்டுகிறது.

இச்சிக்கல் தொடர்பாக நடவடிக்கை மேற்கொள்ள, மகப்பேறுக்கு முந்திய ஆய்ந்துணர் செய்முறை நுட்பங்கள் (ஒழுங்கு முறையும் முறையற்ற கருவழிப்புத் தடுப்பும்) சட்டம் 1994 எனும் தேசீய சட்டம் ஒன்று, 1994-ல் நிறைவேற்றப்பட்டது. இதன்படி பாலின முடிவுச் சோதனைகள் தடை செய்யப்பட்டன. 1.1.1996 அன்று முதல் இது செயலாக்கப்படுகிறது.

இச்சட்டத்தின்படிப் பதிவு மற்றும் கண்டிப்பாய் கீழ்ப்படிதலை உறுதி செய்யவும். பெண் சிசுக் கருக் கலைப்பு வழக்கத்திற்கெதிராய் மக்களைத் திரட்டி செயல் நோக்கமளிக்க அவசர நடவடிக்கை தேவை.

பெண் சிசுக் கருக்கலைப்பு மற்றும் பெண் சிசுக்கொலை ஆகிய இரண்டுமே தமிழ்நாட்டு மக்களின் ஆண் ஆதிக்க இயல்பு மற்றும் மகன் வேண்டும் எனும் முன்னுரிமையிலிருந்து (அ) அவற்றைப் பிரதிபலிப்பதாய் விளைந்து அதன் விளைவாய்ப் பெண்களுக்குக் குறைவான சமுதாயப்படி நிலை யளிக்கப்பட்டது. இவ்விதமாய், பெண் சிசுக்கொலை மற்றும் பெண் சிசுக் கருக்கலைப்பை சமாளிக்கும் எந்த ஒரு திட்டமும், ஆண் ஆதிக்கத்தை பலவீனப்படுத்திப் பெண்களுக்கதிகாரமளிக்க வேண்டும் எனும் விரிவான சிக்கல்களையும் கருத்தில் கொண்டமைய வேண்டும். அது மக்களின் பங்கேற்பை உள்ளடக்கிய சமுதாய இயக்க இயல்புடையதாய் உருப்பெற வேண்டும்.

## ஊட்டச்சத்து நிலையும் நலவாழ்வுக்கு அதன்தொடர்பும்

இந்தியா உள்ளடங்கிய பல வளரும் நாடுகளில், வயிற்றுப்போக்கு மற்றும் மேல்நிலை / கீழ் நிலை, மூச்சுமுட்டல் தொற்றுநோய்கள் அடிக்கடி பரவலாயிருப்பதன் காரணமாய் உடலால் ஊட்டச் சத்து ஈர்ப்பு மற்றும் பயனீடு திறமைக் குறைவாக செயல்பட்டு வருகிறது. தொற்றுநோய்களால் ஊட்டச் சத்து நிலைசீர்குலையும் அதே சமயத்தில் ஊட்டச்சத்துக் குறைவு தொற்றுநோய் எதிர்ப்பாற்றலைக் குறைக்கிறது. இது ஒரு இளைவினை உறவாகும். எனவே, ஊட்டச்சத்து நிலையைக் காலப்போக்கில் ஒருங்கிணைந்து செயல்படும் பல உயிர் மருத்துவ செய்முறைகளின் பயன் என விளக்கலாம்.

இறப்பின் வீதம் கட்டுப்படுத்தப்பட்டாலும் ஊட்டச்சத்து நிலை மேம்படாது. ஊட்டச்சத்தின் முக்கியத்துவம் பற்றிக் கல்வியறிவு மற்றும் தகவல் தொடர்பு மனப்போக்கில் நீண்டகால மாற்றங்களையும் அவர்களது குழந்தைகளின் ஊட்டச்சத்தின் முக்கியத்தும் குறித்த பெற்றோரின் ஏற்பைப் பெறப் பெருமளவு உதவும்.

## ஊட்டச்சத்தின் நிலைகளும் போக்குகளும்

எடை மற்றும் உயரம் போன்ற மனித உடல் அளவுகள் எப்போதுமே மரபியலாகவும் சிறார்கள் வளரும் சுற்றுப்புறம் ஆகிய இரண்டின் பயனாயும் விளைவதே. சமூக, பொருளாதார வகுப்பினருக் கிடையிலான வேறுபாடுகள், நாடுகளிடையே மரபினக்காரணிகளால் ஏற்படும் வேறுபாடுகளைவிட, சிறார்களின் வளர்ச்சியில் பெரும் வேறுபாடுகளை ஏற்படுத்துகின்றன. எனவே ஊட்டச்சத்து தொற்றுநோய்ச்சுமை, தூய்மை மற்றும் காப்பு, கவனம் போன்றவை மக்களுக்குக் கிடைக்கப் பெறாதிருக்கும் அளவு, அவர்களுடைய எடை, உயரம் ஆகியவற்றின் குறைவுநிலையிருக்கும்.

பன்னாட்டுப் புள்ளிவிவர ஒப்பீடு மனித மேம்பாட்டு அளவின்படி, உயர்நிலையிலிருக்கும் நாடுகள், நடுத்தர மற்றும் குறைவான மனித மேம்பாட்டு நிலை நாடுகளோடு ஒப்பிடும்போது 5 வயதுக்குட்பட்ட சிறார்களில் எடை குறைவானோரின் விழுக்காடு குறைவாயிருப்பதைக் காட்டுகிறது. 1990-97-க் கிடைப்பட்ட காலத்தில் சராசரியாய், உலக மொத்தத்தில் 5 வயதுக்குட்பட்ட சிறார்களில் 30% எடை குறைவாயிருந்தனர். உயர் மனித மேம்பாட்டு நாடுகளில் 12% நடுத்தர மனித மேம்பாட்டு நாடுகளில் 19% (சீனா நீங்கலாய் எண்ணிக்கை 23%-க்கு மிகையாயுள்ளது) மற்றும் குறைவான மனித மேம்பாட்டு நாடுகளில் 45% (இந்தியா நீங்கலாய் எண்ணிக்கை 37%-க்கு குறைகிறது) இந்தியாவின் எண்ணிக்கை 53% பாகிஸ்தான் (38%) மற்றும் நேபாளம் (47%) குறைவான விழுக்காடுகளைத் தெரிவிக்கின்றன. பொருளாதார வளர்ச்சி நிலைகளுக்கும் எடை குறைவான சிறார்களின் விழுக்காட்டுக்கு

மிடையில் நேரடி ஒப்புமைத் தொடர்பும் உள்ளது. அனைத்து வளர்ந்த நாடுகளிலும் 5 வயதுக்குட்பட்ட சிறாரின் விவரம் 30% ஆகவும் மிகக் குறைவாய் வளர்ச்சி பெற்ற நாடுகளில் அது 39% இருந்தது.

தேசீய ஊட்டச்சத்து கண்காணிப்புச் செயலகப் புள்ளி விவரம் 5 வயதுக்குட்பட்ட எடை குறைவான வளர்ச்சி குன்றிய மற்றும் வீணான[2] சிறார்கள் அதிக விழுக்காட்டில் இந்தியாவிலிருப்பதாய்க் காட்டுகிறது. தமிழ்நாடு ஒருங்கிணைந்த ஊட்டச்சத்து திட்ட (த.நா.ஒ.ஊ.தி)த்திலிருந்து, கிராமப்புறச் சிறார்களின் சிறார் வளர்ச்சிதிட்ட விவரம். 1980 மற்றும் 1990-களில் பங்கேற்பாளரிடையில் அதிக விழுக்காட்டில் எடை குறைவான[3] சிறார்களைக் காட்டுகிறது. மதிப்பீடு செய்யப்பட்ட சிறார்களில் அரைபாதி (அ) அதற்கும் மேலானோர், மதிப்பீட்டிற்கு எடுத்துக்கொண்ட பன்னாட்டுப் படிநிலைக்கும் மிகக் குறைவாயிருப்பதாய்த் தோன்றுகிறது. வகைப்பாட்டு முறைகள் மற்றும் பயன்படுத்தப்பட்ட தரநிலைகளைப் பொறுத்து சரிநுட்பமான விழுக்காடு வேறுபடுகிறது. அதனால் திட்ட விவரங்கள் வெளியில் கிடைக்கப் பெறும் புள்ளி விவரங்களுடன் நேரடியாக ஒப்பிடப்பட முடியாது.

தமிழ்நாட்டில் 5 வயதுக்குட்பட்ட சிறாரில் ஏறத்தாழ 46.6% எடை குறைவாய் உள்ளனர். (அட்டவணை-4.4)[4] 1992-93 விவரப்படி, நகர்ப்புறங்களோடு ஒப்பிடுகையில் (37.3%) கிராமப்புறங்களில் (52.1%) விழுக்காடுகள் மேலும் அதிகமாக உள்ளன. இது அனைத்திந்திய நிலைப்பாடான 53% விழுக்காட்டினை விட சிறப்பாக இருந்தபோதிலும், கேரளா, அரியானா மற்றும் இராஜஸ்தான் மாநிலங்கள் தமிழ்நாட்டைவிட சிறப்பாக செயல்படுகின்றன.

**அட்டவணை - 4.4 : தேர்வு செய்த மாநிலங்களில் 1-4 வயதுக்குட்பட்ட சிறார்களுக்கிடையே ஊட்டக்குறை உடைமையின் விழுக்காடு**

**(சதவிகிதம்)**

| மாநிலம் | எடைக்குறைவு (சராசரி 2SD வயதுக்குக் குறைவான எடைக் குறைவு) | | | வளர்ச்சிக் குன்றிய சராசரி 2SD வயதுக்குக் குறைவான உயரம் | | | வீணான (சராசரி 2SD வயதுக்கும் குறைவான எடை/உயரம்) | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | கிராமப்புறம் | நகர்ப்புறம் | மொத்தம் | கிராமப்புறம் | நகர்ப்புறம் | மொத்தம் | கிராமப்புறம் | நகர்ப்புறம் | மொத்தம் |
| ஆந்திரப்பிரதேசம் | 52.1 | 40.0 | 49.10 | கி.பெ. | கி.பெ. | கி.பெ. | கி.பெ. | கி.பெ. | கி.பெ. |
| குஜராத் | 45.8 | 40.50 | 44.10 | 44.60 | 41.60 | 43.60 | 20.30 | 16.10 | 18.90 |
| கர்நாடகா | கி.பெ. | கி.பெ. | 54.30 | கி.பெ. | கி.பெ. | 47.60 | கி.பெ. | கி.பெ. | 17.40 |
| கேரளா | 30.6 | 22.90 | 28.50 | 29.60 | 21.50 | 27.40 | 11.50 | 12.00 | 11.60 |
| மகாராஷ்ட்ரா | 57.5 | 45.50 | 52.60 | 50.80 | 39.10 | 46.00 | 21.50 | 18.30 | 20.20 |
| தமிழ்நாடு | 52.1 | 37.30 | 46.60 | கி.பெ. | கி.பெ. | கி.பெ. | கி.பெ. | கி.பெ. | கி.பெ. |

*குறிப்பு : கி.பெ. – கிடைக்கப்பெறவில்லை*

*ஆதாரம் : மக்கட் தொகை அறிவியல்களுக்கான பன்னாட்டு நிறுவனம் 1995.*

[2] SD வகைப்பாடு

[3] IAP வகைப்பாடு வயதுக்கு எடைப்படி 'ஹார்வார்ட்' படிநிலைகளின் அடிப்படையிலானவை.

[4] தரமாறுபாடு (த.மா.) சராசரி வயதுக்கும் குறைவான எடை (1992-93-ல்)

### ஊட்டக்குறைவு நீடித்திருத்தல்

தமிழ்நாடு மற்றும் மொத்த இந்தியாவுக்கும் ஊட்டக்குறைவு நீடித்திருக்கும் ஒரு நிகழ்வாகும். மிகச் சாதகமானப் புள்ளி விவரம் கூட வயதுக்குத்தக்க எடையின் அடிப்படையில் 5 வயதுக்குக் குறைவான சிறார்கள் தொடர்ந்து எடைக் குறைவாகவே உள்ளதைக் காட்டுகிறது. இது தற்போதிருக்கும் பரவலான ஊட்டக்குறைவைக் காட்டுகிறது. மனிதமேம்பாட்டு நோக்கில் இதுவே மிகுந்த கவலையளிப்பதாய் உள்ளது. இந்நிலை தொடர்ந்தால், தொகுதிக்குப்பின் தொகுதியாய் சிறார்கள் வளர்ச்சி குன்றியவராய் முடிவில் வயதுவந்தவரின் வழக்கமான உயரங்களைக் காட்டிலும் குறைவாயிருப்பர். (வயதுக்கும் குறைவான உயரம்)

சாதிவாரியாய் விவரங்கள் பகுப்பாய்வு செய்யப்படுகையில் முடிவு 0-36 மாதங்கள் மற்றும் 36-60 மாதங்கள் வயதுத் தொகுதிகளில் அனைத்து வகுப்பினருக்குமிடையில் தாழ்த்தப்பட்டோரின் குடும்பங்களைச் சோந்த சிறார்கள் மிக மோசமான நிலையிலிருப்பதைக் காட்டுகிறது. குடும்பத்தின் சமூக பொருளாதார நிலை ஊட்டச்சத்து நிலையில் நேரடியான வரவைப் பெற்றிருப்பதைத் தெளிவாய்க் காட்டுகிறது. குழந்தையின் தாய், தந்தை இருவரின் கல்வியறிவும் கூடக் குழந்தையின் ஊட்டச்சத்து நிலையில் ஒரு விளைவைக் கொண்டுள்ளது. இவ்விளைவுகள் 36-60 மாதங்கள் வயதுத்தொகுதியைக் காட்டிலும் 0-36 மாதங்கள் வயதுத் தொகுதியில் மேலும் அதிக முனைப்பாய்க் காணப்படுகிறது.

தமிழ்நாட்டில் மாவட்டவாரியான திட்ட விவரங்கள் தாயின் கல்வித்தகுதி நிலையின் முக்கியத்துவத்தை மீண்டும் உறுதி செய்கிறது. தமிழ்நாட்டில் மிக அதிக கல்வியறிவைப் பெற்றுள்ள கன்னியாகுமரி மாவட்டம் இயல்பான மற்றும் முதல் தரநிலை சிறார்களைப் பெற்றிருப்பதில் முதல்நிலை பெற்றுள்ளது. மூன்று மற்றும் நான்காம் தரநிலை சிறாரின் மிகக் குறைவான விழுக்காட்டைப் பெற்றிருக்கும் மாவட்டமும் இதுவே.

### வயதுக்குரிய எடை

பயன்படுத்தப்பட்ட வகைப்பாட்டு முறையைப் பொறுத்து (கோமேஸ் மாறுபாடு (த.மா.) (அ) இந்திய சிறார் நோய்[5] மருத்துவக் கல்விக் கழக (இ.சி.ம.க.) மற்றும் பல்வேறு நிலை ஊட்டக்குறைவை விளக்கப் பின்பற்றப்பட்ட மக்கட்தொகை மேற்கோள் எடைத் தரநிலைகள்

---

[5]கோமஸ் வகைப்பாடு (4 நிலைகள்) > = 90% வயதுக்குரிய மேற்கோள் எடை - இயல்பான
75-90% வயதிற்குரிய மேற்கோள் எடை நிலை - 1 (அ) சிறிதளவு ஊட்டக்குறைவு.
60-75% வயதிற்குரிய மேற்கோள் எடை நிலை - 2 மிதமான ஊட்டக்குறைவு
< 60% வயதிற்குரிய மேற்கோள் எடை நிலை 3-க்கும் ஊட்டக்குறைவு.

**இந்திய சிறார் நோய் மருத்துவமுறைக் கல்விக்கழகம். (5 நிலைகள்)**
> 80% வயதிற்குரிய மேற்கோள் எடை - இயல்பான
71-80% வயதிற்குரிய மேற்கோள் எடை -1 ஊட்டக்குறைவு
61-70% வயதிற்குரிய மேற்கோள் நிலை - 2 ஊட்டக்குறைவு
51-60% வயதிற்குரிய மேற்கோள் நிலை-3 ஊட்டக்குறைவு
<=50% வயதிற்குரிய மேற்கோள் நிலை-4 ஊட்டக்குறைவு

(தொடர்ச்சி)

(U.S.NCHS (அ) ஹார்வார்ட்) 'இயல்பான', சிறிதளவு ஊட்டக்குறைவு, 'மிதமான ஊட்டக்குறைவு' மற்றும் 'கடும் ஊட்டக்குறைவு' என வகைப்படுத்தப்பட்ட சிறாரின் உள்ளபடியேயான விழுக்காடுகள் வேறுபடுகின்றன. பல்வேறான ஆய்வுகளின் முடிவுகளை நேரடியாய் ஒப்பீடு செய்வதியலாதிருந்த போதிலும் காலப்போக்கில் மாற்றங்களை மதிப்பீடு செய்யலாம். எவ்வகையான வகைப்பாடு பயன்படுத்தப் பட்டிருந்தாலும், இந்தியாவில் 1-5 ஆண்டுகளுக்குட்பட்ட சிறார்களில் ஏறத்தாழ பாதி (அ) அதற்கும் மேற்பட்டோர் எடை குறைவாயிருக்கிறார்கள் என்பதே முடிவாயிருக்கிறது. இதன் ஒத்திசைவாக கடும் ஊட்டக்குறைவான சிறாரின் பங்கு 15-லிருந்து 6.2%-க்குப் பாதிக்கு மேல் குறைந்தது. எஞ்சியுள்ள சிறார் சிறிதளவு (அ) மிதமான ஊட்டக்குறைவுடையவராயிருந்தனர். இதே மாதிரியான போக்கு, தமிழ்நாட்டின் புள்ளிவிவரங்களிலும் காணப்படுகிறது. இயல்பான மற்றும் சிறிதளவு ஊட்டக்குறைவு அனைத்திந்தியப் புள்ளி விவரங்களைவிட அதிகமாகவும் கடும் ஊட்டக்குறைவின் விழுக்காடுகள் குறைவாகவும் உள்ளன.




17 ஆண்டுகள் திட்ட விவரங்களின்படி (த.நா.ஒ. ஊதி) ஊட்டச்சத்தில் மிகவும் ஊறுபடத்தக்க[6] இயல்பான வயதுக்குரிய எடையுள்ள 6-36 மாதங்கள் வயதுத் தொகுதி சிறாரின் விழுக்காடு, 1983-ல் வெறும் 18.6%-லிருந்து 1999-ல் நிலையாய் 52%-க்கு உயர்ந்தது. உடன் நிகழ்வாக, மிதமான

[5]தரநிலை வேறுபாடு வகைப்பாடு : சராசரி வயதுக்கேற்ற எடைவகுப்பிலிருந்து தரநிலை வேறுபாடுகளின் எண்ணிக்கை வழக்கமானதிலிருந்து காணப்படும் இடைவெளியின் அளவை எடுத்துரைக்கிறது. வயதுக்கேற்ற எடையின் 3 தரநிலை வேறுபாடு (அ) வயதுக்கேற்ற உயரத்திற்கிணையான (அ) குறைவு முறையே கடும் ஊட்டக்குறைவு வளர்ச்சிக் குறைதல் ஆகியவற்றைச் சுட்டிக்காட்டுகிறது. சராசரிக்கும் குறைவான 3 தரநிலை வேறுபாடு 2 தரநிலை வேறுபாட்டு இடைவெளி, கடுமைக் குறைவான மிதமான ஊட்டக்குறைவைச் சுட்டிக்காட்டுகிறது. 2 தரநிலை வேறுபாடு - 3 தர நிலை வேறுபாடு - சிறிதான ஊட்டக் குறைவு. சராசரிக்கு 1 தரநிலை வேறுபாடு இரு புறமும் வழக்கமானதெனக் கொள்ளப்படுகிறது.

[6]இந்திய சிறார் நோய் மருத்துவக் கல்விக் கழக வகைப்பாடு ஹார்வார்ட் படிநிலையை அடிப்படையைக் கொண்டவை.

ஊட்டக்குறைவு (நிலை II) மற்றும் கடும் ஊட்டக்குறைவு (நிலைகள் 3, 4) உள்ள சிறாரின் % முறையான குறைவை, முதலாவது 35.4%-க்கு மேற்பட்டதிலிருந்து 9.8%-க்கும் பின்னர் குறிப்பிட்டது 12.3%-லிருந்து 0.5% விழுக்காட்டிற்குக் குறைந்தது சிறிதளவு ஊட்டக் குறைவான (நிலை 1) ஏறத்தாழ 33% - 43% ஆகவும் சிறிதளவு ஏற்றப் போக்குடனுமிருந்தது. நிலைகள் 3 மற்றும் 4-லிருந்த சிறார்கள் நிலைகள் 2 மற்றும் இயல்பானதற்கும் முன்னேறியும் நிலை 2-லிருந்தவர்கள் நிலை 1-க்கும் இயல்பானதற்கும் முன்னேறியதை சுட்டிக்காட்டுகிறது. (படம் 4.4)

NIN மற்றும் உட்புறத்திட்ட ஆதாரங்கள், இயல்பான + சிறிதளவு ஊட்டக்குறைவு வகைப்பாடுகளில் ஒரு ஏற்றத்தையும் கடும் ஊட்டச்சத்துக் குறைவில் வகைப்பாடு மற்றும் தரநிலைகளுக்குத் தொடர்பின்றி ஒரு இறக்கத்தை உறுதி செய்கின்றன.

NIN-ஆல் நடத்தப்பட்ட தமிழ்நாடு ஒருங்கிணைந்த ஊட்டச்சத்து திட்ட பகுதி மதிப்பாய்வின் முடிவின் ஒரு பிரிவாக 1997-க்கு ஆண், பெண் மதிப்பீடுகள் செய்யப்பட்டன. இதில் வயதிற்கேற்ற எடையைப் பொறுத்தவரை, பெண்கள், ஆண்களைவிட மோசமாக இல்லை உண்மையில் பெண்களின் விழுக்காடு ஆண்களுடையதை விட்டு சிறிது மேலாக இருக்கிறது. 0-36 மாதங்கள் மற்றும் 36-60 மாதங்கள் வயது தொகுதிகளுக்குத் தனித் தனியாக இது உண்மையாக உள்ளது. பெண்களின் இயல்பான மற்றும் நிலை 1 விழுக்காடு ஆண்களுடையதைக் காட்டிலும் அதிகமானதாக இருக்கிறது. உடனிகழ்வாய் நிலைகள் 3 மற்றும் 4-ன் விழுக்காடுகள் இந்திய சிறார் நோய் மருத்துவக் கல்விக் கழகம் மற்றும் கோமேஸ் வகைப்பாடு ஆகிய இரண்டின் கீழ்க்குறைவாய் உள்ளது. தேசீய அளவிலும்கூட, ஆந்திரப்பிரதேசம், குஜராத், கர்நாடகம், கேரளா, மத்தியப்பிரதேசம், மகாராஷ்ட்ரா, உத்திரப்பிரதேசம், மேற்குவங்கம் மற்றும் தமிழ்நாடு ஆகிய ஒன்பது மாநிலங்களிலிருந்து 1-5 ஆண்டுகள் ஆனவர்கள் குறித்துத் திரட்டப்பட்ட 1996-97ம் ஆண்டுக்கான புள்ளி விவரங்களும் ஆண், பெண் ஊட்டக்குறைவு ஒப்பீட்டுக்குரியவை என்பதைக் காட்டுகிறது. (NIN 1997) வயதுக் கேற்ற எடையில் பெண்களுக்கெதிராய் ஒரு தலைசார்பு ஏதும் காணப்படவில்லை.

ஊட்டச்சத்து நிலைப்படி மாவட்டங்களை படிநிலைப்படுத்த ஒரு முயற்சி மேற்கொள்ளப் பட்டது. 1996-லிருந்து 1999 வரை தமிழ்நாடு ஒருங்கிணைந்த ஊட்டச்சத்து திட்டம் (தற்போது உலக வங்கி (உ.வ.) தேசிய ஒருங்கிணைந்த சிறார் வளர்ச்சி திட்டம் - 3) செயலாக்கத்திலிருக்கும் 19 மாவட்டங்களில்[7] 6-36 வயதுத் தொகுதிப் பங்கேற்பு சிறார் குறித்த அறிவுறுத்தப் புள்ளி விவரங்களின் அடிப்படையில் படிநிலைகள் முடிவு செய்யப்பட்டன. உச்ச 5 மாவட்டங்களில் மொத்த இயல்பான + நிலை வகையில் (கன்னியாகுமரி, கோயம்புத்தூர், வேலூர், தூத்துக்குடி மற்றும் ஈரோடு) உச்சநிலையிலும், 4 நிலைகள் 3 + 4 (கன்னியாகுமரி, ஈரோடு, கோயம்புத்தூர், திண்டுக்கல் மற்றும் வேலூர்)-ன் குறைவான விழுக்காட்டில் உச்சத்தில் உள்ளன. இதன் மூலம் உச்சப் படி நிலைகளில் குறிப்பிடத்தக்க முழு ஒற்றுமையைக் காட்டுகின்றது. அடிமட்டப் படிநிலைகளிலும் முழு ஒற்றுமை காணப்படுகிறது. ஆனால் அது குறிப்பிடத்தக்க அளவுடையதாயில்லை (அட்டவணை 4.5)

[7]மற்ற மாவட்டங்களில் ஒப்பீட்டான விவரங்கள் கிடைக்கப் பெறவில்லை. எனவே ஒப்பீட்டிலிருந்து இம்மாவட்டங்கள் நீக்கப்பட்டுள்ளன.

### அட்டவணை - 4.5 : மாவட்டங்களில் ஊட்டச்சத்து நிலைகள் (மேல்நிலை மற்றும் கீழ்நிலை வகைகள்)

| உச்ச 5 மாவட்டங்கள் | | அடிமட்ட 5 மாவட்டங்கள் | |
|---|---|---|---|
| படிநிலை | மாவட்டங்கள் | மாவட்டங்கள் | படிநிலை |
| இயல்பு+நிலை 1 | | கடலூர் | 19 |
| 1. | கன்னியாகுமரி | நாகப்பட்டினம் | 18 |
| 2. | கோயம்புத்தூர் | விழுப்புரம் | 17 |
| 3. | வேலூர் | ராமநாதபுரம் | 16 |
| 4. | தூத்துக்குடி | திருச்சிராப்பள்ளி | 15 |
| 5. | ஈரோடு | | |
| படிநிலைகள் 3+4 | | | |
| 1. | கன்னியாகுமரி | விருதுநகர் | 19 |
| 2. | ஈரோடு | நாகப்பட்டினம் | 18 |
| 3. | கோயம்புத்தூர் | ராமநாதபுரம் | 17 |
| 4. | திண்டுக்கல் | திருநெல்வேலி | 16 |
| 5 | வேலூர் | திருவண்ணாமலை | 15 |

*ஆதாரம் : த.நா. ஒருங்கிணைந்த ஊட்டச்சத்து திட்ட விவரங்கள்*

கன்னியாகுமரி 1996-2001-ல் மொத்த முதல்படி நிலையைப் பெற்றுள்ளது. பெண் கல்வியறிவு இம்மாவட்டத்தில் மிக உயர்ந்த அளவிலிருப்பது குறிப்பிடத்தக்கது. மக்கட் தொகையின் ஊட்டச்சத்து நிலையை மேம்படுத்துவதில் ஒரு பகுதியாய் மொத்த ம.மே மற்றும் பெண்களுக்கதிகாரமளித்தல் உள்ளிட்ட ஊட்டச்சத்தல்லாத காரணங்களின் முக்கியத்துவத்தை இது கவனத்திற்குக் கொண்டு வருகிறது. மொத்த அளவில் கடலூர் மோசமான மாவட்டமாய் உள்ளது.

மொத்தத்தில், மாவட்டங்களைப் படிநிலைப்படுத்தல் காலப்போக்கில் பெரிய அளவில் மாறவில்லை. இயல்பான + நிலை 1 வகையில், படிநிலைகளில் 5 இடங்களுக்கும் மேலாய், குறிப்பிடத்தக்க மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. திருவண்ணாமலையில் படிநிலை (7-லிருந்து 14-க்குக் குறைவு), விருதுநகரில் படிநிலை (9-லிருந்து 16-க்கு குறைவு), சிகங்கையில் (13-லிருந்து 8-க்கு முன்னேற்றம்), திருநெல்வேலியில் (6-லிருந்து 12-க்குக் குறைவு), சேலம் (12-லிருந்து 6-க்கு முன்னேற்றம்). நிலைகள் 3+4 வகையில் படிநிலைகளில் 5 இடங்களில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. திருநெல்வேலி (9-லிருந்து 18-க்குக் குறைப்பு) சேலம் (14-லிருந்து 2-க்கு முன்னேற்றம்) தருமபுரி (14-லிருந்து 2-க்கு முன்னேற்றம்) திருச்சிராப்பள்ளி (11-லிருந்து 6-க்கு முன்னேற்றம்)

## வயதுக்கேற்ற உயரம்

குறிப்பிட்ட வயதுக்கேற்ற உயரம் இல்லாதிருத்தல் வளர்ச்சி குன்றியிருப்பதன் அளவை சுட்டிக் காட்டுகிறது. வயதுக்கேற்ற எடையையும் நீடித்த ஊட்டக்குறைவையும் ஒப்பிடுகையில், ஒப்பீட்டடிப்படையில் ஒரு நீண்டகால அடிப்படையிலான சுட்டிக்காட்டும் கருவியாமைகிறது. மாநிலங்களில் வளர்ச்சி குன்றிய நிலை (சராசரிக்கும் குறைவான 2 தரநிலை வேறுபாடு) (பொதுச் சேர்மம்), 1975-79-லிருந்து 1996-97 வரை 78.6%-லிருந்து 57.7%-க்கு குறைந்தது. கடும் வளர்ச்சி குன்றிய நிலை (சராசரி 3 தரநிலை வேறுபாடுக்கும் குறைவான) இதேகாலத்தில் 53%-லிருந்து 28.8%-ஆகக் குறைந்தது. உடன் நிகழ்வாக இயல்பான விழுக்காட்டில் (சராசரி -1 தரநிலை வேறுபாடு - சராசரி + சராசரிக்கும் மேலாக) 1975-2001-ல் குறைவான 6.8-லிருந்து 18.1%-க்கு உயர்ந்தது. குறைவு முக்கியமாக கடும் வளர்ச்சி குன்றிய நிலையில் ஏற்பட்டிருந்தது. மிதமான அளவு பெருமளவு மாறாதிருந்தது (தே. ஊ. நி 1999) (அட்டவணை - 4.5)

## உயரத்திற்கேற்ற எடை

இந்த சுட்டிக்காட்டும் குறியீடு வீணாவதைக் காட்டுகிறது (அட்டவணை - 4.5). இது வயதுக்குத் தொடர்பில்லாதது. வயது மதிப்பீடு ஒரு சிக்கலாகயிருக்குமிடங்களில் மக்கட் தொகைகளை எதிர் கொள்வதில் இது பயனுடையதாயிருக்கிறது. எடை மற்றும் உயரம் குறித்த விவரங்களை ஒருங்கிணைக்கும் பயனையும் பெற்றுள்ளது. இருந்த போதிலும் உயரத்திற்கேற்ற எடை சுட்டிக்காட்டும் குறியீட்டை எச்சரிக்கையுடன் பயன்படுத்தப்பட வேண்டும். இந்தியாவில் பெரும்பாலான சமயங்களிலிருப்பதைப் போல உயரங்களும் எடைகளும் குறைவாயிருக்கும்போது, பயனுள்ள விவரங்களை அது அளிக்க முடியாது. உண்மையில், மிகக்கடும் ஊட்டக் குறைவிருக்கையில், அது இயல்பான நிலையிருப்பதாய் முடிவு செய்வதில் கொண்டு விடும். இதேபோல, 1975-79-லிருந்து 1996 வரையிலான காலத்தில் நிகழ்ந்ததைப் போல எடைகளும் உயரங்களும் கிட்டத்தட்ட விகிதாசாரப்படி ஒரே திசையில் நகருகையில் போக்கையறிய அது பயன் உள்ளதாயிராது. எடைகளும் உயரங்களும் ஒரே நிகழ்வான மாற்றங்களைப் பதிவு செய்கையில் இக்காலத்தில் விகிதம் பெரிதாய் மாறவில்லை.

தமிழ்நாட்டில் 1975-79-1996-97-க்கு இடைப்பட்ட காலத்தில் பலவேறான வயதுகளுக்கும் பாலினங்களுக்கும் சராசரி உயரங்களும் எடைகளும் குறிப்பிடத்தக்கவாறு உயரவில்லை என்பதை தே.ஊ.நி புள்ளி விவரங்கள் காட்டுகின்றன. ஒரிசா, குஜராத் (பள்ளி வயது சிறார் மற்றும் வயது வந்தவர்கள்), ஆந்திரப்பிரதேசம், மகாராஷ்ட்ரா மற்றும் கர்நாடகாவுக்கும் இதே நிலைதான் கேரளாவுக்கு மட்டும் எல்லா வயதுப் பிரிவினருக்கும் ஆண்கள் மற்றும் பெண்களிடையில் உயரம் (1-2cm) மற்றும் எடைகளில் (2-3Kg) மொத்தத்தில் உயர்வு இருந்தது. குஜராத்தில் பள்ளி செல்லும் வயதுடைய சிறுவர்களும், சிறுமிகளும், வளரிளம் பெண்களும் உயர்வைக் காட்டினர். இருப்பினும் எல்லா மாநிலங்களிலும், மதிப்புகள் தேசீய சிறார் நலவாழ்வுத்திட்ட தரநிலைகளைவிட (தே.ஊ.வி 1999)-க்கு குறைவாயிருந்தன.

## எடை குறைவான பிறப்புகள்

(எ.கு.பி.) எடை குறைவான பிறப்பு என்பது பிறப்பின்போது எடை 2500 கிராமுக்கும் குறைவாயிருப்பதாகும். பிறப்பு எடைகள் குறிப்பிடத்தக்கவை. ஏனெனில், அவை ஒருவரின் வருங்கால வளர்ச்சியின் மாதிரியை முடிவு செய்யக்கூடியவை. குழந்தை இறப்பு, வயிற்றுப்போக்கு போன்ற நோய்கள் பரவலுக்கும் ஏதுவாயிருப்பவை. 1990-ல் இந்தியாவில் பல மாநிலங்களின் புள்ளி விவரங்கள்

எ.கு.பி. கேரளாவின் புள்ளி விவரங்கள் மிகக் குறைவாக 15.3%-மும் திருவனந்தபுரம், குஜராத்தில் மிக அதிக அளவாக 46.4%-மும் பெற்றிருந்ததைக் காட்டுகின்றன. தமிழ்நாட்டில், மாநிலத்தின் சராசரி பிறப்பு எடை 1995-ல் 2.63 ஆக இருந்தது. 1999-ல் அது 2.75 ஆக அதிகரித்ததன் மூலம் எ.கு.பி. நேர்வுகளின் விழுக்காடு காலப்போக்கில் குறைந்திருந்ததை தெரிவிக்கிறது. (15.34% - 1999-ல்)

எ.கு.பி. (எடை குறைவான பிறப்பு) குறித்த தமிழ்நாடு ஒருங்கிணைந்த ஊட்டச்சத்து திட்ட விவரங்கள், முதல்படி நிலை மாவட்டங்களில் 3.6%-லிருந்து நான்காம் படிநிலை மாவட்டங்களில் 5.3% வரை எனும் அளவில் குறைவான பிறப்பு எடை (கு.பி.எ) நிகழ்வுகளின் மிகக்குறைந்த விழுக்காட்டைக் காட்டுகின்றன. பதிவான எடையில் பொதுச்சேர்ம சராசரி 4.5 விழுக்காடாய் இது இருந்தது. மற்ற விவரங்களுடன் இது இணக்கமாயில்லாததால், உண்மையில் ஏற்புடையதாய் இருக்க முடியாது. முன்னதாக, தமிழ்நாடு ஒருங்கிணைந்த ஊட்டச்சத்து திட்டத்தின் அடிப்படை மற்றும் இடைக்கால மதிப்பாய்வுகள் முறையே 22% மற்றும் 23% எ.கு.பி.-ஐ அளித்தன. (தே.ஊ.நி.) இந்திய மருத்துவ ஆராய்ச்சிக் கழகம், 1998)

### ஊட்டக்குறைவின் மருத்துவ அறிகுறிகள்

1975-79-லிருந்து 1996-97-க் கிடைக்கப்பட்ட காலத்தில் மற்ற மாநிலங்கள் உள்ளிட்ட பொதுச்சேர்மப் புள்ளி விவரங்களுடன் ஒப்பிடுகையில் தமிழ்நாட்டில் பள்ளிப்படிப்புக்கு முந்தைய சிறார்களுக்கிடையே வீக்கம், பெரு இணைப்பு மற்றும் 2 (அ) அதற்கு மேலான புரத சத்து ஆற்றல் ஊட்டக்குறைவு போன்ற ஊட்டக் குறைவுக்கான சில மருத்துவ அறிகுறிகள், குறைவாகவே காணப் பட்டன. இருப்பினும் தமிழ்நாட்டில் ஆங் (Angular Stomatitis) மற்றும் (Bitot's SPOTS) பரவலாயிருந்ததாய்த் தெரிகிறது. (படம் 4.6) இரத்தக்குறைவைப் பொறுத்தவரை தமிழ்நாட்டில் கிட்டத்தட்ட பள்ளிப் படிப்புக்கு முந்தைய வயது சிறார்களில் 30% இரத்தக்குறைவு உடையவராயிருந்தனர்.[8] இது மற்ற மாநிலங்களான குஜராத்தின் 72 சதவிகிதம், மஹாராஷ்டிராவின் 67 சதவிகிதம், உத்தரபிரதேஷின் 63 சதவிகிதம், மேற்கு வங்காளத்தின் 95 சதவிகிதங்களை காணும்போது மேலானதாக உள்ளது.

**அட்டவணை - 4.6 : பள்ளிப்படிப்பு வயதுக்கு முந்தைய சிறார்களிடையில் ஊட்டச்சத்துக் குறைவு அறிகுறிகள்**

(விழுக்காடு)

| ஊட்டச்சத்துக் குறைவின் அறிகுறிகள் | ஆண்டு | கேரளா | தமிழ்நாடு | கர்நாடகா | ஆந்திரப்பிரதேசம் | மகாராஷ்ட்ரா | குஜராத் |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| மருத்துவ முறைப்படி இயல்பான சிறார் | 1975-79 | 91.7 | 84.4 | 71.9 | 79.8 | 86.0 | 79.7 |
| | 1996-97 | 98.6 | 82.1 | 94.5 | 92.0 | 88.2 | 99.2 |
| வீக்கம் (OEDEMA) | 1975-79 | - | - | 0,4 | 0.9 | 0.5 | 0 |
| | 1996-97 | 0 | 0 | 0.1 | 0 | 0.1 | 0 |

(தொடர்ச்சி)

[8] ஒரு டெசிலிட்டருக்கு 11 கிராம்கள் ஹீமோகுளோபின் குறைவு.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|---|---|---|---|
| பெருஇளைப்பு | 1975-79 | 0.2 | 0.6 | 0.9 | 2.0 | 0.8 | 3.8 |
| MARASMUS | 1996-97 | 0 | 0 | 0.5 | 0.2 | 0.2 | 0 |
| இரண்டு (அ) அதற்கும் | 1975-79 | 0.2 | 0.6 | 2.3 | 3.0 | 0.6 | 0.2 |
| மேற்பட்ட புரதசத்து ஊட்டக் | 1996-97 | 0 | 0 | 0.5 | 1.1 | 1.8 | 0.1 |
| குறைவின் அறிகுறிகள் | | | | | | | |
| BITOTS SPOTS | 1975-79 | 0.1 | 2.9 | 11.8 | 3.1 | 0.4 | 0.9 |
| | 1996-97 | 0.5 | 0.7 | 0.5 | 0.8 | 3.0 | 0 |
| ANGULAR STOMATITIS | 1975-79 | 1.6 | 5.0 | 11.8 | 7.9 | 1.0 | 1.5 |
| | 1996-97 | 0 | 10.6 | 0.5 | 3.4 | 1.2 | 0 |

*ஆதாரம் : தேசிய ஊட்டச்சத்து நிறுவனம் - ஹைதராபாத் 1999.*

1996-97-ல் மொத்தத்தில் மருத்துவமுறையில் இயல்பான சிறார்களின் விழுக்காடு 1975-79 லிருந்த 80.7%-லிருந்து 93-க்கு உயர்ந்ததாய், இக்காலப்போக்கு காட்டுகிறது. தமிழ்நாட்டைப் பொறுத்தவரை இந்நிலை தலைகீழாக உள்ளது உள்ளபடியே தமிழ்நாட்டில் மருத்துவ முறையில் இயல்பான நிலை 84.4%-லிருந்து 82%-ஆகக்குறைந்தது. உண்மையில் தமிழ்நாட்டில் 1996-97-ல் அது மிகக் குறைவானதாயிருந்தது. BITOT's SPOT, MARASM-க்கு மற்றும் இரண்டு (அ) அதற்கும் மேலான புரதச்சத்து ஊட்டக்குறைவு நிலையில் தமிழ்நாட்டின் போக்கு இறங்குமுகமாயிருந்தது. ஆனால் ANGULAR STOMATITIS-ல் ஒரு பெரும் முன்னேற்றம் காணப்பட்டது.

**தற்சார்பு ஊட்டச்சத்துக் கண்காணிப்பு**

தற்போது வயதுக்கேற்ற எடை மற்றும் ஏனைய விரிவான நலவாழ்வு, ஊட்டச்சத்துத் தொடர்பான அறிவுறுத்தப் புள்ளி விவரங்கள், திட்டப் பங்கேற்பாளர்களுக்கு மட்டுமே கிடைக்கப் பெறுகிறது. இவை, ஒப்பீட்டடிப்படையில் சமுதாயத்தில் மிக மோசமான பிரிவுகளை சாந்தவர்கள். எனவே மொத்த ஊட்டச்சத்து நிலையைப் பிரதிபலிக்கவில்லை. சிறார் மக்கட் தொகையில் ஏறத்தாழ மூன்றில் இரண்டு பகுதியினர் ஊட்டச்சத்து நிலைக்குட்பட்டிருக்கவில்லை. மேலும் திட்ட விவரங்கள் திட்ட ஆதரவாளர்களாலேயே தயாரிக்கப்பட்டதால், நம்பத்தக்கதா என்ற வினாக்களுக்குட்பட்டதாய் உள்ளன. எனவே, பின் மாறு ஒப்பீடுகளை செய்வதற்கேற்பத் தகுதியான எளிதான ஒரு வடிவமைப்பும் அனைவரையும் உள்ளடக்கும் அடிப்படையிலான தற்சார்புள்ள ஊட்டச்சத்துக் கண்காணிப்பு முறையொன்று மேற்கொள்ளப்படுத்தப்பட வேண்டும். இக்கண்காணிப்பு முறை, அமைவிடம் (கிராமப்புறம் / நகர்ப்புறம்) மாவட்டம், பருவகாலம் (ஆண்டின் காலத்தை மிக நுட்பமாய்க் குறிப்பிடுதல்), பாலினம், பொருளாதார நிலை, பிறப்பு வரிசைமுறை (முன்னதாய் (அ) பின்னதாய் பிறத்தல்) பெற்றோரின் கல்வியறிவு நிலை மற்றும் காலப்போக்குகள் போன்ற தகவல்களைத் திரட்ட வேண்டும்.

மேலும், பிறப்பு முதல் வயதுவரும் பருவம் வரையிலான நிலையைக் கண்காணிக்கத் தகுதியான ஒரு தேர்ந்த பெயர்ப் பட்டியல் தயாரிக்கப்பட வேண்டும். இது கொள்கையில்

உதவுவதோடு மட்டுமின்றி ஒரு தகவல் தொடர்புக்கருவியாகவும் செயல்படும். தற்போது தேசீய ஊட்டச்சத்து அறிவுறுத்த செயலகம், தேசீய மற்றும் மாநிலங்கள் அளவில் ஊட்டச்சத்து தரநிலையைக் கண்காணித்து அறிவுறுத்த முகமையாய் உள்ளது. இருப்பினும் மாநிலங்கள், குறியீட்டுத் திருத்த நடவடிக்கையை மேற்கொள்ள வாய்ப்பாக, மாநில நிலைக்கும் கீழான அடிப்படை விவரங்கள் தேவைப்படுகின்றன.

தேசீய ஊட்டச்சத்து அறிவுறுத்த செயலகத்தின் தொழில்நுட்பப் பணிகள், அத்தகையதொரு முறையை அமைக்கப் பயன்படுத்தப்படலாம். இது, தேசிய அளவில் ஊட்டச்சத்து மீதான கண்காணிப்புக்கும் பொருத்தமாயிருக்கும், ஊட்டச்சத்து திட்டங்களுக்காக தமிழ்நாடு ஒரு மாபெரும் கட்டமைப்பை ஏற்கெனவே பெற்றிருப்பதால் கண்காணிப்புக்கான கூடுதல் செலவுகள் (நிதி மற்றும் நிறுவன) ஒரு சுமையாயிருக்காது.

### நேரடி ஊட்டச்சத்துப் பணிகளுக்கு அரசின் நிதி ஒதுக்கீடு

மிகவும் தொல்நோக்கு மிகுந்த காலத்திலும் கூட நலவாழ்வு மற்றும் ஊட்டச் சத்து நிலையை மேம்படுத்த ஒருதலை முறைக் காலம் ஆகும். மேலான ஊட்டச்சத்து நிலை பொருளாதார வளர்ச்சியைத் தொடர்ந்து வரும். அதற்கு முன்னதாக அல்ல. குறைந்த வருமானம் பெறும் நாடுகளிடையில் குறிப்பாகக் குறிப்பிடும் அளவு ஏற்றத்தாழ்வைக் கொண்டிருக்கும் நாடுகளில் ஊட்டச்சத்துக் குறைவுப் பிரச்சனைக்குத் தீர்வு காண்பதற்காக ஒரு வளர்ச்சிக்காகக் காத்திருக்கும் வழி ஏற்கத்தக்கதல்லாத அளவு நீண்டிருப்பதாய்த் தெரிய வருகிறது. அத்தகைய கால தாமதங்களின் விளைவுகள் உற்பத்தித் திறனில் மட்டுமல்ல மக்களின் நல்வாழ்வுக்கும் கடும் பாதிப்புகளை ஏற்படுத்தக் கூடியவை. ஏனெனில் இவையே முடிவில் வளர்ச்சி திட்டங்களின் நோக்கமாயிருக்கும். நேரடி திட்டங்கள் மேம்பட்ட ஊட்டச்சத்து நிலையை எட்ட எடுத்துக்கொள்ளப்படும் கால அளவைக் குறைக்கும்.

### பசியிலிருந்து ஊட்டச் சத்து நிலைக்கு இடம் மாறல்

உணவு அளிப்பதென்பது, ஊட்டச்சத்தளிப்பதற்கிணையாகாது. நலவாழ்வு, காப்பு, சுற்றுப் புறத்தூய்மை முதலானவை உள்ளிட்ட பல வகையான காரணங்கள் மற்றும் செய்முறைகளுக்கு இடையிலான ஒன்றுக்கொன்றின் எதிர் செயல்களின் விளைவே ஊட்டச்சத்து. வீட்டுக்கு வெளியே சிறார்களுக்கு உணவளிப்பது தமிழ்நாட்டுக்குப் புதிதல்ல. ஏதோ ஒரு உருவில் இது 1956-லிருந்து நடைமுறையிலிருந்து வருகிறது. முக்கியமாய் பசியைத் தணிக்க எனத் தொடங்கப்பட்ட திட்டங்களில் ஊட்டச்சத்து உணர்வு 1980-களின் தொடக்கத்திலிருந்தே, இத்திட்டங்களில் ஒரு பகுதியாயிருந்து வந்திருக்கிறது.

பசியைப் போக்க உணவளிக்கும் திட்டம் கடந்த காலத்தில் தொடங்கப்பட்டிருப்பினும் தமிழ்நாடு அரசு, நலவாழ்வுக் காப்பு, நோய்த்தடைக்காப்பு, வளர்ச்சிக் கண்காணிப்பு, பெண்களுக்குப் பேறுகாலத்திற்கு முந்தைய, பிந்தைய காப்பு, தகவல் தொடர்பு மற்றும் ஊட்டச்சத்துக் கல்வி போன்ற ஏனைய பணிகளை மதிய உணவுதிட்டத்துடன் இணைக்க முனைப்பான முயற்சிகளை மேற்கொண்டது. ஒருங்கிணைந்த சிறார் வளர்ச்சி திட்ட (ஒ.சி.வ.தி)ங்கள் பள்ளி செல்லும் வயதிற்கு முற்பட்டோருக்கான மதிய உணவுக் கட்டமைப்புடன் ஒருங்கிணைந்த தமிழ்நாடு ஊட்டச்சத்து திட்டம் மற்றும் ஒருங்கிணைந்த குழந்தை வளர்ச்சி திட்டம் (பெட்டி 4.4 பார்க்கவும்) போன்ற

திட்டங்களின் மூலம் இது செய்யப்பட்டது. இருப்பினும் மாநில அரசின் ஊட்டச்சத்து நடவடிக்கைகள் உறுதியான உணவு சார்புத் தன்மையதாயிருக்கிறது. கடந்த பல ஆண்டுகளில் நிதி நெருக்கடிகள் திட்ட உள்ளாக்கம் (அ) கலோரி உள்ளடக்கத்தைக் குறைக்கவில்லை.

**பெட்டி 4-4 : மதிய உணவு திட்டம் (ம.உ.தி)**

சூலை 1, 1982-ல் தொடங்கி தமிழ்நாடு மதிய உணவு திட்டம் (ம.உ.தி.) வாயிலாக மிகப்பெரும் படிநிலையான மதிய உணவளிப்பு விரிவாக்கங்களில் ஒன்றின் தொடக்கத்தைக் கண்டது. இது ஒரு பெரும் பசிக் குறைப்புத் திட்டமாகும். முதல் முறையாய், பள்ளிச் செல்லும் வயதுக்கு முந்தைய வயது (2 மேலிருந்து 5 வயது வரை) சிறார்களை சென்றடைவதில் உள்ள சிரமங்களில் அரசு கவனம் செலுத்தியது. செயல்முறையில் உள்ளாக்க இது மிகக்கடினமான வயதுத் தொகுதியாகும். ஊட்டச்சத்துத் திறன்களைப் பொறுத்தவரை வயதான சிறார்களைவிட இது மேலானதே. ஏனெனில் இதில் மாற்ற முடியாத இழப்பீடுகள் ஏற்படுமுன் பிரச்சனைகளுக்குத் தீர்வு காணமுடியும் அடுத்தடுத்தாய் வந்த அரசுகள் இத்திட்டத்திற்கு மாநில வரவு செலவு திட்டத்திலிருந்து மிகக் கணிசமான ஒரு பகுதியைத் தொடர்ந்து அளித்தன. இதன் விளைவாக மிகப்பெரும் செலவில் பணியாளர்களுடன் கூடிய மையங்களின் தொடரமைவுகள் ஏற்படுத்தப்பட்டன. இத்திட்டம் தெளிவான ஒரு உணவு சார்புடைமையைக் கொண்டிருந்தது. 1997-ஆம் ஆண்டிலிருந்து இது இந்திய அரசின் கவனத்தையும் ஈர்க்கத் தொடங்கியது. அதன் விளைவாய் மற்ற மாநிலங்களிலும் இம்மாதிரியான திட்டங்களுக்கு ஆதரவளிக்கத் தொடங்கியுள்ளது.

இத்தகைய பெரும் அளவிலான திட்டம் இதற்கு முன்னர், முயற்சிக்கப்படவில்லை. அந்தந்த இடங்களிலேயே அன்றாடம் தயாரிக்கப்படும் சூடான அரிசிசோறு கிட்டத்தட்ட தினந்தோறும் 8.30 மில்லியனுக்கும் மேற்பட்டவர்களுக்கு வழங்கப்படுகிறது. இம்மாபெரும் திட்டத்தின் செயலாக்கம் மனதை வியக்கவைக்கும். இருந்த போதிலும் இத்திட்டங்கள் கடந்த 20 ஆண்டுகளில் வளர்ந்து நன்கு நிலைபெற்றுவிட்டன. பள்ளிப் பருவத்திற்கு முந்திய வயதுச் சிறார்கள் மற்றும் பள்ளிப் பருவ சிறார்களில் தொடங்கிய இத்திட்டத்தில் இன்று, கருவுற்றப் பெண்களும் ஓய்வூதியதாரர்களும் போன்ற சிலவகை பெரியவர்களும் சேர்க்கப்பட்டுள்ளனர். தற்போது இத்திட்டம் பசி-நலவாழ்வு ஊட்டச்சத்து திட்டங்களோடு முதியோர் ஆதரவற்றவர்கள் மற்றும் விதவைகளுக்கான சமூகப் பாதுகாப்பு ஆகியன ஒருங்கிணைந்த ஒரு திட்டமாகியுள்ளது.

பள்ளிச் சிறார்கள் அவர்களுடைய மதிய உணவைப் பள்ளியிலேயே உண்கின்றனர். பள்ளிப் பருவத்திற்கு முந்தியவர்கள் ஓய்வூதியதாரர்கள் மற்றும் கருவுற்றிருக்கும் பாலூட்டும் பெண்கள் போன்ற மற்ற வகையினர் பள்ளிக்கு முந்தியமையங்களில் உணவு உண்கின்றனர். எல்லாப் பள்ளிக்கு முந்திய மற்றும் பள்ளி மையங்களையும் ஒன்று சேர்த்து 71,100 மதிய உணவு திட்டமையங்களில் 7.7 மில்லியனுக்கும் மேற்பட்ட சிறார்களுக்கும் 0.54 மில்லியன் வயது வந்தோருக்கும் உணவளிக்கப்படுகிறது. இத்திட்டத்தின்கீழ் 6 வயதுக்குட்பட்ட சிறார்களுக்கு பருப்புடன் சமைக்கப்பட்ட அரிசிசோறு சோயாபீன்ஸ் மாவு, காய்கறிகள், எண்ணெய் மற்றும் சுவையூட்டும் பொருட்களுடன் சமைக்கப்பட்ட மதிய உணவாய் அளிக்கப்படுகிறது. பள்ளிப் பருவத்திற்கு முந்தியவர்களுக்கு ஆண்டு முழுவதும் உணவு வழங்கப்படுகிறது.

கிட்டத்தட்ட எல்லாப் பள்ளிக்கும் முந்திய மதிய உணவு திட்ட மையங்களும் தமிழ்நாடு ஒருங்கிணைந்த ஊட்டச்சத்து திட்டம் மற்றும் ஒருங்கிணைந்த சிறார் வளர்ச்சி திட்டம் எனும் மற்ற இரண்டு திட்டங்களுடன் இணைக்கப்பட்டுவிட்டன. மொத்தத்தில் 30,701 பள்ளிக் குழந்தை மதிய உணவு மையங்களில் 13,98,064 சிறார்களும் 5,35,502 வயது வந்தவர்களும் உள்ளனர். முழு மதிய உணவு மையங்கள் (தமிழ்நாடு ஒருங்கிணைந்த ஊட்டச்சத்து திட்ட மற்றும் ஒருங்கிணைந்த சிறார் வளர்ச்சி திட்டமல்லாதவை) ஒரு சில நகர் பகுதிகளில் செயல்படுகின்றன (ஏறத்தாழ 29,309 சிறார்களுடன் 720 மையங்கள்), கிராம அளவில் கழிவு (அ) ஒரே இடத்தில் மற்றொன்று அமையாமல் முழு ஒருங்கிணைப்பு ஏற்பட்டிருந்தாலும் மாவட்ட மற்றும் மாநில அளவில் இது நடக்கவில்லை. ஒரு மாவட்டம் தரநிலை ஒருங்கிணைந்த சிறார் வளர்ச்சித் திட்டம் மற்றும் உலக வங்கியின் ஒருங்கிணைந்த சிறார் வளர்ச்சித் திட்டம் 3 (முன்னர் தமிழ்நாடு ஒருங்கிணைந்த ஊட்டச் சத்து திட்டம்) ஆகிய இரண்டின் அலுவலகங்களையும் பணியாளர்களையும் பெற்றிருக்கலாம். இவை தற்சார்புடையவையாய் இயங்குகின்றன. இத்திட்டங்கள் ஒரு தனித்தொகுதிப் பணியாளரால், நிருவகிக்கப்பட்டால், மக்கள் திறன் வளர்ச்சி மற்றும் பயிற்சிப் புத்தமைப்புகளுக்காக போதிய மனித ஆற்றலை சேமித்துவைக்கலாம். (சாந்தா, 1997)

வருமான வரம்பு இருந்தாலும், நடைமுறையில் தகுதியான வயதுத் தொகுதியில் விருப்பமுள்ள எந்தச் சிறாரும் பங்கேற்க அனுமதிக்கப்படுவர். உண்மையில் ஒப்பீட்டு அடிப்படையில் மக்கட்தொகையில் வறிய பிரிவினரே இத்திட்டத்தில் பங்கேற்கின்றனர். தற்போது, பள்ளிப் பருவத்திற்கு, முந்திய வயதுத் தொகுதியில் 33% உள்ளபடியே இத்திட்டத்தின் பயனைப் பெறுகின்றனர் என ஒரு மதிப்பீடு சுட்டிக்காட்டுகிறது (சாந்தா, 1997) வறுமை நிலையி லிருப்போர், மதிய உணவைப் பயன்படுத்த அதிக வாய்ப்பிருக்கும் உண்மையை ஏற்றுக் கொண்டால் இது உயர்வான விழுக்காடாகும். (ஏழ்மைநிலைக்குக் குறைவான மக்கட்தொகையின் விழுக்காடு, புள்ளி விவரங்கள் ஒப்புக்கொள்ளப்படுவதைப் பொறுத்து 30-40 வரை மாறுபடுகிறது.)

மதிய உணவை ஒரு துணை ஊட்டச்சத்து உள்ளீடு என்பதைவிட, ஒரு மாற்றீடு எனக் குறிப்பிடலாம். ஏனெனில் அது அதற்குக் கூடுதலாயிருப்பதைவிட வீட்டுணவுக்கு பதிலாய் உள்ளது.

தமிழ்நாட்டில் குறிப்பிடும் அளவு ஆதரவைப் பெற்றுள்ள மொத்த சிறார் காப்பு மற்றும் ஊட்டச்சத்து திட்டம், பெண்களின் சுய உதவிக்குழுக்கள் (சு.உ.கு) அமைவாகும். நிதி வசதியில் பெண்களுக்கதிகாரம் அளிப்பதன் மூலம் பெண்களின் சுய உதவிக்குழுக்கள், பெண்களை குறிப்பாய், அவர்களுடைய குடும்பத்திலும் குழந்தைகள் தொடர்பாகவும் அதிகப் பொறுப்புள்ள முடிவுகளை எடுப்பதற்கு உதவி செய்கிறது. (பெட்டி 4-5-ஐப் பார்க்கவும்)

### பெட்டி 4-5 : சுய உதவிக்குழுக்கள் (சு.உ.கு) பெண்களுக்கு அதிகாரம் அளிப்பு

முறைப்படியான சேமிப்பு மற்றும் வருமான உருவாக்கம் மூலம் பெண்களுக்கு அதிகாரம் மற்றும் வறுமைத் தணிப்புடன் ஊட்டச்சத்துக் கல்வி ஒருங்கிணைப்பு முக்கியமானது.

இதனால் அடையப்பெறும் பயன்கள் இரண்டு. பெண்கள் அவர்களைப் பற்றியும், அவர்களுடைய குழந்தைகளின் எதிர்காலம் பற்றியும் நன்கறிந்து ஆர்வம் கொள்கிறார்கள். பொருளாதாரத் தகுதி நிலையோடு அவர்கள் பொருள்களை வாங்கும் சக்தியைப் பெறுகிறார்கள். குடும்பத்திற்குள்ளாக, அவர்களுடைய குழந்தைகளுக்காக பொறுப்பான முடிவுகளை மேற்கொள்ளும் ஆற்றலைப் பெறுகின்றனர். பெண்களுக்குப் பெரிய சிறுகடன் உதவி திட்டம், மகளிர் திட்டம் எனப் பரவலாய் அழைக்கப்படும் தமிழ்நாடு மகளிர் மேம்பாட்டுத் திட்ட விரிவாக்கம் பெண்களுக்கு அதிகாரம் அளிக்க வகை செய்துள்ளது.

இத்திட்டம் பெண்கள் சுய உதவிக் குழுக்களமைப்பதன் மூலம் அவர்களுடைய கூட்டுச் சேமிப்புகளை சுழற்சி முறையில் அவர்களுடைய குடும்பங்களின் அவசரகாலம் மற்றும் பயனீட்டுச் செலவுகளை நிறைவு செய்து கொள்ள சமூக, பொருளாதார அதிகாரமளிக்கிறது. அது, மேலும் பெண்கள் வட்டித் தொழிலாளர்களை நம்பியிருத்தலைக் குறைக்கவும் நிறுவனத்துடன் வசதிகளுக்கு வாய்ப்பும், பெண்களிடம் வருமானம் உருவாக்கவும் உதவுகிறது. இத்திட்டத்தின் முன்னோடி கட்டம், கிராமப்புற ஏழைப் பெண்கள் கடன் பெறத்தகுதியுடையவர்கள் எனவும், பாதி கல்வியறிவு பெற்றிருந்த போதிலும் பண விஷயத்தில் கூர் அறிவுடையவர்களாயிருப்பதையும் எடுத்துக்காட்டுகிறது. டிசம்பர் 2000 வரை தமிழ்நாட்டில் ஏறத்தாழ 9.5 லட்சம் பெண்கள் இத்திட்டத்தில் பங்கேற்றதாய் அறிவிக்கப்படுகிறது. தமிழ்நாடு ஒருங்கிணைந்த ஊட்டச்சத்து திட்டம், பெண்களின் செயற்குழுக்களை வலுப்படுத்தி சுய உதவிக் குழுக்களோடு ஒருங்கிணைத்து இதன் மூலம் பெண்களிடையே நிறுவனப் பொருளாதார அதிகாரமளிப்பு, தனித்தனிப் பிரிவுகளாய் செயலபடுவதைவிட திட்டங்களினூடே பிரிவுகளிடை இணைப்புகளை ஏற்படுத்த உதவும்.

1995-இல் ஐக்கிய நாடுகளின் குழந்தைகள் கல்விநிதியுதவியோடு ஊட்டச்சத்து குறித்த தெளிவான ஒரு மாநில அரசுக் கொள்கை உருவாக்கப்பட்டது. 1993-ஆம் ஆண்டின் தேசிய ஊட்டச்சத்துக் கொள்கையைப் பின்பற்றி அத்தகையதொரு கொள்கையை உருவாக்கியதில் தமிழ்நாடு பெரும்பாலும் முதல் மாநிலமாக இருக்கும். இக்கொள்கை 2002-03-இல் 'ஊட்டச்சத்துக் குறைவில்லாத் தமிழ்நாடு' கொள்கை என மீண்டும் ஒழுங்குமுறைப் படுத்தப்பட்டது. உணவு மட்டுமே ஊட்டச்சத்துக் குறைவை ஒழிக்க முடியாது என்பதை அரசுக்கொள்கையின்படி முதல் முறையாகத் தெளிவாக ஏற்பளித்தது.

### பொதுவினியோக முறை

பொது வினியோக முறை என்பது பலவகைகளில் ஒரு ஊட்டச்சத்து அடிப்படையிலான திட்டமும்கூட என்பதை ஒருவர் மறக்கவும் கூடாது. தமிழ்நாட்டின் பொது வினியோக முறை விலையை ஒருநிலைப்படுத்துவதைக் குறிக்கோளாய்க் கொண்டுள்ளது. அது தேர்வுச் செய்யப்பட்ட ஒரு சில பெரும்பயனீட்டுப் பொருட்களை குறிப்பாக ஊறுபடத்தக்க பிரிவினைச் சேர்ந்தவர்களுக்கு நியாயமான விலைகளில் கிடைக்கப்பெறச் செய்வதை முயற்சிக்கிறது. பொது வினியோக முறை தொடரமைவு 36 நடமாடும் நியாயவிலைக் கடைகள் உள்ளிட்ட 27,848 விற்பனை நிலையங்கள் வரை விரிவாக்கம் செய்யப்பட்டுள்ளது. அரிசி, கோதுமை, சர்க்கரை, சமையல் எண்ணெய்கள் போன்ற

இன்றியமையாப் பண்டங்கள் பயனீட்டாளருக்குச் சந்தை விலைக்குறைவான விலையில் வழங்கப் படுகிறது. உணவுக்காகும் செலவு குடும்பங்களுக்கு ஒரு கணிசமான தொகையாகயிருப்பதால் பொதுவினியோக முறை ஏழைகளின் உண்மையான வருமானம் வீணாய் அழிவதைத்தடுக்கும் அரசின் சேம விலையில் ஒரு இன்றியமையாத அம்சமாய் உள்ளது.

குடும்ப அட்டைகளின் மொத்த எண்ணிக்கை 16 மில்லியன். இதில், 2.5 மில்லியன் அட்டைதாரர்கள் அரிசிக்கு பதிலாய்க் கூடுதல் சர்க்கரை பெறும் விருப்புரிமையளிக்கப்பட்டுள்ளது. இவ்விதம், ஏறத்தாழ 13.6 மில்லியன் அட்டைதாரர்களுக்கு மாதம் ஒன்றுக்கு ஒரு அட்டைக்கு பெருமமாக 20 கிலோ என ஒரே விலையில் அரிசி கிலோ ஒன்றுக்கு ரூ.3.50 வீதமும் பெற உரிமை பெற்றுள்ளனர். தமிழ்நாட்டில் அரிசியின் சில்லறை விற்பனை விலைதான் நாட்டிலேயே மிகக் குறைவானது. ஆண்டொன்றுக்கு மொத்த ஊக்குதவித்தொகையாக ரூ.15,000 மில்லியனுக்கும் அதிகமாய் இதற்காக செலவிடப்படுகிறது.

இருப்பினும் தமிழ்நாட்டில் மற்ற மாநிலங்களில் இல்லாதபடி நேரடி ஊட்டச்சத்தில் நீடித்த பெரும் முதலீடுகள் இருந்த போதிலும் மனித உடல்அளவுகளைச் சுட்டிக் காட்டும் குறியீடுகள் குறிப்பிடத்தக்கதாயில்லை. மற்ற சில மாநிலங்கள், தமிழ்நாட்டைக் காட்டிலும் மேலாக செயலாற்றி யுள்ளன. மற்றவை மோசமாய் செயல்பட்டுள்ளன. ஆனால் மொத்தத்தில் எல்லாமே முன்னேற்றத்தைக் காட்டுகின்றன. தமிழ்நாட்டில் ஊட்டச்சத்து தரநிலையில் முன்னேற்றத்திற்குத் தடைகள் பகுதி யளவிலானதாய் இருக்கும் (அ) வீட்டில் அளிக்கப்படும் உணவுக்கு முழு பதில் வைப்பாயிருக்கும். மையங்களில் உணவளிக்கும்போது மக்களிடையில் ஊட்டச்சத்து பற்றிய கல்வியறிவு போதாமை எதிர்காலத் தாயாகக் கூடிய வளர் இளம் பருவப் பெண்கள்பால் போதிய கவனம் செலுத்தாமை, திட்டங்களில் பரிந்துரைக்கப்படும் மாறிய நடைமுறை வழக்கங்களை மேற்கொள்வதிலிருக்கும் சிரமங்கள் ஏனெனில் அவற்றிற்குக் கால அவகாசமும் வள ஆதாரங்களும் தேவை (அடிக்கடி உணவளித்தல், தண்ணீரைக் கொதிக்க வைக்க எரிபொருள்) ஏற்கனவே ஊட்டக்குறைவானவர்களுக்கு உணவு உள்ளீடுகளை அளிப்பதில் கவனம். இக்கடைசிக் காரணம் தற்போது ஊட்டக் குறைவானவர்களுக்கு உதவினாலும் புதிதாக ஒவ்வொரு ஆண்டும் ஊட்டக்குறைவான தொகுதி சிறார்களை சேர்த்துக் கொள்வதைத் தடுக்கவில்லை.

**ஊட்டச்சத்தின் காரணங்களும் அவற்றின் செயல்விளைவும்**

பல்வேறு ஆய்வுகள் மேம்பட்ட குடிநீர் வழங்கல், தொற்றுநோய்கள் குறைப்பு கிட்டத்தட்ட நாடு முழுவதிலுமான நோய்த்தடைக்காப்பு கூட்ட நோய்த்தடைக்காப்பு அளித்தல் போன்ற காரணங்கள் ஊட்டச்சத்து தரநிலையை மேம்படுத்துவதில் முக்கியத்துவம் வாய்ந்ததாயிருப்பதைக் காட்டுகின்றன. உண்மையில் 1999-ஆம் ஆண்டின் ஊட்டச்சத்தில்லாமைக்கு காரணங்களும் அவற்றின் செயல் விளைவும் *(NIN)* அறிக்கை காட்டுகிறபடி 1975-97-ஆம் ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் ஊட்டச் சத்துக் கொள் அளவில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் காணப்படவில்லை. இருந்தபோதிலும், பள்ளிப் பருவத்திற்கு முந்தைய வயது சிறார்களின் ஊட்டச்சத்து தரநிலையில் ஒரு முன்னேற்றம் காணப்பட்டது.

ஊட்டச்சத்தில்லாத பல காரணங்களுக்குத் தனிப்பட்ட குடும்பங்கள் (அ) சிறார் காப்பு அளிப்பவர்களால் மிகச்சிறு முயற்சியே தேவைப்படும். மிகப் பெரும்பாலானவை, அரசின் அகப்பாட்டெல்லையின் கீழுள்ளன. எனவே சிறார் காப்பளிப்பவர்களால் தனி முயற்சிகள் மேற்கொள்ளும் மேலான அறிவைப்பெறும் மற்றும் ஊட்டச்சத்துக்குகந்த நடைமுறை வழக்கங்கள் ஆகிய நடவடிக்கைகளுக்கெதிராய் ஒப்பிடுகையில் கட்டுப்படுத்த எளிதாயிருக்கும். எடுத்துக்காட்டாக வாய்வழியே நீருட்டு முறையுடன் சிறிதளவு உணவளித்து இத்தகைய நடைமுறை வழக்கங்களைக் குடும்பங்களுக்குள்ளாகப் பின்பற்றச் செய்வதன் மூலம் வயிற்றுப்போக்கை குணமாக்கும் முக்கியத்துவம் பற்றி எல்லாத் தாய்மார்களுக்கும் கற்பிப்பதைவிட ஒரு கிராமத்தில் பாதுகாக்கப்பட்ட குடிநீர்க் குழாய் ஒன்றைப் பொறுத்துவது மிக எளிது.

தண்ணீர், நலவியல் துப்புரவு மற்றும் நலவாழ்வுத் துறைகளுக்கிடையில் துறைகளுக்கிடையிலான ஒருங்கிணைப்பு, நோய்களைத் தடுக்க, குறிப்பாக நீர்மூலம் பரவும் நோய்களைத் தடுக்க மிகவும் முக்கியம் மக்கட்தொகையின் நலவாழ்வு நிலையின்மீது நலவாழ்வை மேம்படுத்தும் காரணங்களின் செயல் விளைவுகள் பற்றி இங்கே விவரிக்கப்படுகிறது.

**தண்ணீரும் துப்புரவும்**

தண்ணீரும் துப்புரவும், ஊட்டச்சத்தின்மீது செயல் விளைவைக் கொண்டிருக்கும் ஊட்டச் சத்தில்லாத காரணக் கூறுகளாம். எனவே தமிழ்நாட்டில் தண்ணீர் மற்றும் துப்புரவு நிலையைப் பற்றி சுருக்கமாய் ஆய்வு செய்ய ஒரு முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. மக்கள் தொகை வளர்ச்சியுடன், நீடித்த அடிப்படையில் தண்ணீர் மற்றும் துப்புரவு வசதிகளையும் செய்துதர வேண்டிய அவசியமும் பெருகிவருகிறது. 'எல்லாருக்கும் நலவாழ்வு' எனும் இலக்கை அடைய அடிப்படையான இவ்வசதிகளை யளிக்க வேண்டியது மிக அவசியமாகிறது. குடிநீர் மற்றும் துப்புரவு வசதிகள் கிடைக்கப்பெறும் மற்றும் அடையப் பெறும் வாய்ப்பு வழிகளைப் பற்றி மதிப்பீடு செய்ய முனைப்பான கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. மாநிலத்திற்குள்ளான ஏற்றத்தாழ்வுகள் பகுப்பாய்வு செய்யப்பட்டுக் கொள்கை திட்டங்கள் முன் வைக்கப்படுகின்றன. விவரங்கள் 2001-இன் மக்கட் தொகைக் கணக்கெடுப்பின் சமூக, பொருளாதார அட்டவணைகள் இன்னும் வெளியிடப்படாததால் மற்றும் ஒரு குறைவான அளவு தேசிய மாதிரி கணக்கெடுப்பு சுற்றுகள் 44 மற்றும் 49-லிருந்தும் பெரும்பாலும் 1991-இன் மக்கட் தொகைக் கணக்கெடுப்பிலிருந்து எடுக்கப் பட்டுள்ளன. (மிக அண்மைக்கால விவரங்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன)

**தண்ணீர் வழங்கல்**

1991-இல் தமிழ்நாட்டில் ஏறத்தாழ 68% குடும்பங்களுக்குப் பாதுகாக்கப்பட்ட குடிநீருக்கான வாய்ப்பு வழியைப் பெற்றிருந்தனர். இது சிறிதளவு தவறான கூற்றாகும். ஏனெனில் மாவட்டங்களிடையில் கிராமப்புறங்களுக்கும் நகர்ப் புறங்களுக்குமிடையில் பெரிய நகரங்களுக்கும் உள்ளாட்சி மன்றங்களுக்கு மிடையிலும் கணிசமான பங்கீட்டு ஏற்றத்தாழ்வுகள் உள்ளன. எடுத்துக்காட்டாய் மதுரையில் 83%-க்கும் மேற்பட்ட குடும்பங்கள் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வசதிபெறும் வழி வாய்ப்புகளைப் பெற்றிருந்தனர். இத்துடன் ஒப்பிடுகையில் இராமநாதபுரத்தில் மட்டுமே இவ்வசதியினைப் பெற்றிருந்தனர். (1991-இல் மக்கட்தொகைக் கணக்கெடுப்பு)

நகர்ப்புற மற்றும் கிராமப்புற நிலைமை குறிப்பிடத்தக்க வகையில் வேறுபட்டுள்ளது. 1999-இல் மாநிலத்தில் 64% நகர்ப்புற மக்கட்தொகை குடிதண்ணீர் வசதி பெற்றனர். இருப்பினும் 50% மட்டுமே குறிப்பிட்ட அளவுப்படித் தண்ணீர் பெற்றனர். மேலும் 40 விழுக்காட்டுக்கும் குறைவான நகராட்சி களில் வசிக்கும் குடும்பங்களும் 24% பேரூராட்சிக்குள் வசிக்கும் குடும்பங்களும் வீட்டில் குழாய் இணைப்பைப் பெற்றனர். மேலும் 35% தண்ணீர் கணக்கில் கொள்ளப்படவில்லை. ஏனெனில் அது உலக அளவான ஏறத்தாழ 10-15% உடன் ஒப்பிடுகையில், இலக்கை அடைந்ததாய்த் தெரியவில்லை.

2001-இன் மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி, பாதுகாக்கப்பட்ட குடிநீர் வசதியைப் பெற்ற குடும்பங்கள் பற்றிய நிலை அட்டவணை 4.7-இல் தரப்பட்டுள்ளது.

**அட்டவணை - 4.7 : பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழி வாய்ப்பைப் பெற்ற குடும்பங்கள் (விழுக்காட்டில்)**

| | மொத்தம் | கட்டிடத்திற்குள் | கட்டிடத்திற்கு வெளியில் |
|---|---|---|---|
| மொத்தம் | 85.5 | 24.6 | 61.0 |
| கிராமப்புறம் | 85.3 | 10.7 | 74.6 |
| நகர்ப்புறம் | 85.9 | 44.0 | 41.9 |




**படம் 4.5 : மாவட்டவாரியாய் குடிநீர் வழங்கும் வாய்ப்பு**

*ஆதாரம் : புள்ளவிவரக் கையேடு, தமிழ்நாடு, 1998*

முறைகள் மற்றும் ஆதாரங்களின் தவறுகையானது உள்ளாட்சி மன்றங்களின் சிறப்பறிவுத் திற மில்லாக் காரணமாய்த் திறமையற்ற செயலாக்கம் மற்றும் பேணுகை, நகர்ப்புறங்களில் தண்ணீர்ப்

பற்றாக்குறைப் பிரச்சனைகளுக்குப் பங்களிக்கின்றன. 1992-ஆம் ஆண்டு மறு கணக்கெடுப்பில் கண்டறியப்பட்ட எல்லா 66,631 ஊரக இருப்பிடங்களும் குடிநீர் வசதிக்குள்ளாக்கப்பட்டன. கிராமப் புறங்களில் குடிநீர் நிலையை மதிப்பிட ஒரு மறு கணக்கெடுப்பு மேற்கொள்ளப்பட்டது. கணக்கெடுப்பு அறிக்கை முடிவுற்றப்பின் உள்ளபடியே உள்ள நிலை தெரியவரும்.

படம் 4.5 தண்ணீர் வழங்கலால் உள்ளடக்கப்பட்ட குடியிருப்பிடங்களின் சாதனையளவு மாவட்டங்களுக்கிடையில் வேறுபடுவதை விளக்குகிறது. முழுமையாய் உள்ளடக்கப்பட்ட குடியிருப்பிடங்களின் விழுக்காடு, கன்னியாகுமரியில் ஏறத்தாழ 41 விழுக்காடிலிருந்து திருவள்ளூர் 78 விழுக்காட்டிற்கு மேல் வரை வேறுபடுகிறது. பகுதியளவில் உள்ளடக்கப்பட்ட குடி யிருப்பிடங்களின் குவிப்பு கன்னியாகுமரியில் அதிகமாயும் (59 விழுக்காடு) அதைத் தொடர்ந்து திண்டுக்கல்லில் 57 விழுக்காடும் இராமநாதபுரத்தில் 53 விழுக்காடும் உள்ளன.

குடிநீருக்கான வழி வாய்ப்பு மட்டுமே ஒரு பிரச்சனையல்ல. தொலைவிடங்களிலிருந்து, தண்ணீரைப் பெறக் கால அவகாசமும் வள ஆதாரங்களும் தேவையாய் உள்ளன. கோடை மாதங்களில் தண்ணீர்பற்றாக்குறைப் பிரச்சனை கடுமையாகிறது. இதனால், மிக அருகிலிருக்கும் நீர் ஆதாரங்களுக்கு நீண்டதூரம் அடிக்கடி சென்றுவர வேண்டியுள்ளது. முக்கியமாக, வீட்டுப் பெண்கள் தண்ணீர் எடுத்துவர வேண்டியுள்ளது. எனவே அடிப்படைப் பணிகளின் மேம்பாடு ஐயமின்றிப் பெண்களுக்குப் பயனளிக்கிறது. உள்ளூர் நீர் வழங்கல், துப்புரவு, சாலைகள் மற்றும் கிராமப்புற மின் திட்டங்கள் இவற்றின் மேம்பாடு, பெண்களின் வேலைப் பளுவைக் குறைத்துப் பெண்கள் மற்றும் குழந்தைகளின் நலவாழ்வு நிலைகளை முன்னேற்றப் பெருமளவு உதவும். அவர்களுடைய கட்டடங்களுக்குள் நீர் ஆதாரம் பெற்றிராத குடும்பங்களுக்கும் முன்னுரிமையளித்து உள்ளடக்கப் படவேண்டும்.

தமிழ்நாடு நீளமான கடற்கரைப் பகுதியைப் பெற்றிருப்பதால் நீர் ஆதாரங்களில் உப்புத்தன்மை கலந்திருப்பது பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்குவதில் ஒரு பிரச்சனையாகி உள்ளது. இராமநாதபுரத்தில் குறிப்பாக இப்பிரச்சனை கடுமையாக உள்ளது. மாவட்டத்தில் குடிப்பதற்குத் தகுதியற்ற உப்புநீரைக் குடிநீராக மாற்ற 11 இடங்களில் உப்புத் தன்மையை நீக்கும் இயந்திரங்கள் பொருத்தப்பட்டுள்ளன. இவற்றில் நரிப்பையூரில் பொருத்தப்பட்டுள்ள இயந்திரமொன்று பெரியதாகும். இது நாளொன்றுக்கு 3.80 மில்லியன் லிட்டர் கடல் நீரைக் குடிநீராக மாற்றும் கொள் திறன் படைத்தது. இது, 345 கிராமப்புறக் குடியிருப்பிடங்களுக்குப் பயனளிக்கும். சென்னையில் நான்கு வெவ்வேறிடங்களில் பொருத்தப்பட்டுள்ள கடல்நீரைக் குடிநீராக மாற்றும் இயந்திரங்களினால் 25,000 பேர் பயனடைவர் என மதிப்பிடப்பட்டுள்ளது.

### துப்புரவு

தமிழ்நாட்டில் (1991) 23% குடும்பங்களுக்கு மட்டுமே குளியலறை வசதிகள் கிடைக்கப் பெறுகின்றன. இது ஒரு நல்ல நிலையல்ல. உலகின் ஏனைய பகுதிகளைப் போலன்றி, குழிக்கழிப்பறைகள் இந்தியாவிலோ, தமிழ்நாட்டிலோ வளர்ச்சி பெறவில்லை. நகர்ப்புறங்களிலும் கூட 1981-இல் இருந்த ஏறத்தாழ 51% உடன் ஒப்பிடுகையில் 58 விழுக்காட்டுக்கும் குறைவான குடும்பங்களே கழிப்பறை வசதிகளைப் பெற்றுள்ளன. பத்தாண்டுகளுக்கு மேலாய், குறிப்பிடத்தக்க

முன்னேற்றமேதுமில்லை எனும் உண்மை கவலையளிப்பதாய் இருக்கிறது. கழிப்பறை வசதிகளைப் பெற்றிருப்பதில் சென்னை மிகப்பெரும் உள்ளடக்கத்தைப் பெற்றுள்ளது. (82%) திருவண்ணாமலை 9%-க்கும் குறைவான விழுக்காட்டுடன் மிகக்குறைவான கழிப்பிட வசதிகளைப் பெற்றதாயிருக்கிறது.

கிராமப்புற நிலை மேலும் மோசமாயிருக்கிறது. கிராமப்புற மக்கட்தொகையில் ஏறத்தாழ 7% மட்டுமே துப்புரவு வசதிகளைப் பெற்றுள்ளது. (1991) 2001 மக்கட் தொகை கணக்கெடுப்புப்படி உள்ளடக்கம் பின்வருமாறு :

| | மொத்தம் | கிராமப்புறம் | நகர்ப்புறம் |
|---|---|---|---|
| கழிப்பிடம் | 35.2 | 14.4 | 64.3 |
| கழிப்பிடமில்லாமை | 64.8 | 85.6 | 35.7 |

இத்துடன் ஒப்பிடுகையில் கேரளாவிலுள்ள குடும்பங்களில் ஏறத்தாழ 67% கழிவறை வசதிகளைப் பெற்றுள்ளது. (தேசீய மாதிரிக் கணக்கெடுப்பு நிறுவனம் 1993). இது கவலைக்குரியது. தமிழ்நாடு அரசு கிராமப்புறங்களில் கழிவறை கட்ட 1986-87-இல் நடவடிக்கைகளைத் தொடங்கினாலும், போதிய தண்ணீர் வசதியின்மை காரணமாய் திட்டம் வெற்றியடையவில்லை. எனவே அண்மை ஆண்டுகளில் தண்ணீர் வசதியுடன் தரமான சமுதாயக் கழிவறைகளைக் கட்ட முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருகிறது. கிராம ஊரூராட்சிப் பகுதிகளில் உலர்வகைப் கழிப்பிடங்கள் இப்போது வழக்கில் இல்லை.

கிராமப்புறங்களில் உறைவிடங்களுக்குள்ளாக (அ) அருகே கழிப்பிடங்கள் என்பன அரிதாகி விட்டன. வெளியிடங்களில் மலக்கழிவு கிராம மக்களிடையே வழக்கமாக உள்ளது. காரணம் இதற்கு மாற்று இல்லாமலிருப்பது மட்டுமல்ல மக்களும் அதையே விரும்புகிறார்கள். கழிப்பறைகளைப் பெற்றுள்ள உயர் வகுப்பினர் குடும்பங்களிலேகூட பெண்கள் மட்டுமே அவற்றைப் பயன்படுத்து கின்றனர். ஆண்கள் தொடர்ந்து வயல்வெளிகளுக்கே செல்கின்றனர். சில கிராமங்களில் கழிப்பிடங்கள், இயங்காமலிருப்பதற்கான காரணம், போதிய தண்ணீர் இல்லாமையே. கிராமப்புறத் துப்புரவு, ஒரு முன்னுரிமைப் பகுதியாய் உள்ளது பத்தாவது திட்டக்காலத்தின் முடிவுக்குள் கிராம மக்கட் தொகையில் குறைந்தது 75%-ஐ துப்புரவு வசதிகளுடன் கூடியதாய் ஆக்குவதே குறிக்கோளாயிருக்கிறது. இது கிராமப் பெண்களின் தன்மானத்தையும் மறைப்பு நிலையையும் நிலை நிறுத்துவதோடு கிராமப் புறத்தின் வாழ்க்கைத் தரத்தையும் மேம்படுத்தும் திறந்தவெளியிலும் வடிகால்களிலும் மலம் கழிப்பதை தடுக்கவும் மக்களிடையே அறிவைப் பரப்பவும் துப்புரவு மற்றும் அவர்களுடைய நலவாழ்வு சுற்றுப்புறத்தில் அதன் செயல் விளைவுகளைப் பற்றி அறிநிலையை உருவாக்கவும் திட்டமிட்ட முயற்சி தேவைப்படுகிறது. பெண்களிடையே இது குறித்து தக்க விழிப்புணர்வு ஊட்டுவதன் மூலம் பெரும் மாற்றங்களை ஏற்படுத்த இயலும்.

**தண்ணீரும், துப்புரவும் - நலவாழ்வின் மீது செயல்விளைவு**

தண்ணீர், துப்புரவு மற்றும் நலவாழ்வு நிலை ஆகியவற்றிற்கிடையேயான தொடர் சிக்கலான ஒன்று இருந்தபோதிலும், இந்த ஊட்டச்சத்தில்லாத காரணக் கூறுகள் ஒரு நல்ல ஊட்டச்சத்து நிலையை அடையத் தனி நபர்கள் மற்றும் குடும்பங்களின் திறமையில் குறிப்பிடத்தக்க ஒரு செயல் விளைவைக் கொண்டிருக்கும். தண்ணீரால் ஏற்படும் நோய்களால் ஆண்டுதோறும் 30 மில்லியனுக்கும் மேற்பட்ட வாழ்க்கை ஆண்டுகள் வீணானதாய் உலக வங்கி மதிப்பீடு செய்துள்ளன. எல்லா நோய்களும் மற்றும் நோய் நிலை நோய்களும் 80% தண்ணீரால் பரப்பப்படுகின்றன. தண்ணீர் தொடர்புடையன. வளரும் நாடுகளில் தண்ணீர்த் தூய்மைக்கேடு, சிறார்களுக்கிடையில் மட்டுமல்லாமல் வயது வந்தவர்களுக்கு இடையிலும் வயிற்றுப்போக்கு நோய் எனும் ஒரு பெரும் பிரச்சனையை உருவாக்குகிறது. இந்நோய்களைப் பரப்புவதை எளிதாக்கும் நிலைமைகள் அனைத்தும் வறுமை மற்றும் அசுத்தமாக வாழும் நிலைமைகளோடு தொடர்புள்ளவை.

இந்தியாவில் வயதுவந்தவர்களிடையில் இறப்புக்குப் பெரிய காரணமாயிருப்பது வயிற்றுப் போக்கு நோய்களே. சொந்தக் கிணறுகளைப் பயன்படுத்துவோர் மற்றும் வீட்டில் குழாய் நீரைப் பயன்படுத்துவோரிடையே வயிற்றுப்போக்கு நோயின் நிகழ்வு நேர்வுகள் குறைவாயிருப்பதாய்த் தெரியவருகிறது. தமிழ்நாட்டில் கடும் வயிற்றுப்போக்கு நோய் நேர்வுகளின் ஒரு பகுப்பாய்வு, திருவண்ணாமலை, இராமநாதபுரம், வேலூர், விருதுநகர் மற்றும் கடலூர் மாவட்டங்களில் உயர் விழுக்காடு அறிவிக்கப்பட்டதென்பதை வெளிப்படுத்துகிறது. இம்மாவட்டங்களில் கட்டிடங் களுக்குள், நீர் ஆதாரங்களைக் கொண்ட குடும்பங்களில் குறைவான விழுக்காட்டைக் கொண்டுள்ளன.

எனவே, இந்நோய்களின் கட்டுப்பாடு, மேம்படுத்தப்பட்ட துப்புரவு மற்றும் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்கல் ஆகியவற்றின் மூலமே செய்யப்பட வேண்டியதாயுள்ளது. இங்கு மீண்டும் தமிழ்நாட்டின் நிலை கடுமையாய் உள்ளது 43% குடும்பங்கள் (கிராமப்புறங்களில் 50%-க்கும் மேலான) குடிநீர், குளியலறை மற்றும் மின்வசதிகளைப் பெற்றிருக்கவில்லை.

போதிய நல்ல வடிகால் வசதியில்லாமையும் தண்ணீரால் பரவும் நோய்கள் ஏற்பட மற்றொரு காரணமாயிருக்கக் கூடும். நடைமுறையில் எந்த நகராட்சியும் நிலத்தடி கழிவுநீர், கற்றுமுறையைப் பெற்றிருக்கவில்லை. நிலத்தடி வடிகால் வசதிகள் 16 நகரங்களில் மட்டுமே முழுமையாக (அ) பகுதியாக செய்யப்பட்டுள்ளன. தற்போதிருக்கும் வடி அமைப்புகளும் குறைபாடுடையவையாய் உள்ளன. கிராமப்புற நகர்ப்புறங்கள் பெரும்பான்மையாய் திறந்தவெளி வடிகால்முறையைப் பெற்றுள்ளன. இவை திறக்குறைவாயிருப்பதால் பரவலாக நிரம்பிவழியும் அடைப்புகள் உள்ள உடைந்துபோன வடிகால்களுக்குக் காரணமாயுள்ளன. 1999-ல் தெரிவிக்கப்பட்ட மொத்த நகர்ப்புற மலேரியா நேர்வுகளில் 70% சென்னையில் இருந்தன.

**நலவாழ்வுப் பணிகளின் பயனீடு - பொது மற்றும் தனியார்**

பொதுமக்களின் நலவாழ்வுக் காப்பில் பொருளியல் கட்டமைப்பிலும் பணியாளர் நிலையிலும் வியக்கத்தக்க வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. அரசு நலவாழ்வுத்துறை தற்போது பல்வகைத் துறை வல்லுநர்கள்

உள்ளடங்கிய ஏறத்தாழ 15,000 மருத்துவர்களையும் எல்லா பக்கங்களிலும் 30,000 மருத்துவத்துறைச் சார்ந்த பணியாளர்களையும் பணியமர்த்தியுள்ளது. கடந்த இரு பத்தாண்டுகளில் தொடக்க நலவாழ்வுக் காப்பில் கவனம் செலுத்தப்பட்டதையடுத்து தொடக்க ஆரம்ப சுகாதார மற்றும் நலவாழ்வு துணை மையங்களில் ஒரு வியக்கத்தக்க அளவு விரிவாக்கம் ஏற்பட்டுள்ளது.

மருத்துவமனை ஒன்றில் சேர்க்கையல்லாத நோய் சிகிச்சைக்காக, பொது மருத்துவ வசதிகளை நம்பியிருப்பது மொத்த நாட்டின் சராசரியோடு ஒப்பிடுகையில் தமிழ்நாட்டில் பொதுவாய் அதிகமாய் உள்ளது. கிராமப்புறங்களில் ஆண்களைவிடப் பெண்கள்தான் மருத்துவமனையில் சேர்க்கையில்லாத காப்புக்கு ஒரு பொதுமருத்துவ வசதியைக் குறிப்பிடத்தக்க அளவு பெருமளவில் விரும்புகின்றனர். நகர்ப்புறத் தமிழ்நாட்டில் இது நேர்மாறாய் உள்ளது. அனைத்திந்தியப் புள்ளிவிவரங்கள், இதில் ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையே மேலும் சிறிய வேறுபாடுகளைக் காட்டுகிறது. பெண்களுக்குத் தமிழ்நாட்டில் கிராமப்புறப் பொது மருத்துவவசதிகள் மிகவும் முக்கியமாய் தோன்றுகின்றன.

உள்ளுறை நோயாளிகளின் காப்பைப் பொறுத்தவரை பொது மற்றும் தனியார் துறைகளின் கலவை மேலும் அதிகமாய் காணப்படுகிறது. தமிழ்நாட்டில் இந்நிலையில், அனைத்திந்திய நிலையைவிட வியக்கத்தக்க வகையில் வேறுபட்டுள்ளது. தமிழ்நாட்டில் உள்ளுறை நோயாளர் களுக்கான தனியார்த்துறை நலவாழ்வு வசதிகள் முறையே 85.4% மற்றும் 56.47% ஆகவும் உள்ளன. இதற்கு ஒத்திசைவான அனைத்திந்திய விவரங்கள் முறையே 38% மற்றும் 40% ஆகும்.

தேசீய மாதிரி கணக்கெடுப்பு நிறுவனம் மற்றும் தேசீய செயல்முறை பொருளாதார ஆராய்ச்சி தேசீய வளர்ச்சிக் குழுவால் மேற்கொள்ளப்பட்ட கணக்கெடுப்புகள் நோயுறு நிலைமையைப் பற்றிய சில அடிப்படை இயல்புகளை வெளிக்கொணருவதோடு குடும்பங்கள் மருத்துவ நலவாழ்வுக் காப்புப் பணிகளைப் பயன்படுத்தி கொள்ளும் வழி வாய்ப்புகள் பற்றிய விவரங்களையும் அளிக்கிறது. பொது மற்றும் தனியார் துறைவசதிகள், விலைகள் மற்றும் நோயுறும் தன்மையின் மாதிரிகள் ஆகியவற்றைப் பற்றிய கண்டுபிடிப்புகள் குறிப்பிடத் தக்கவை.

தே.மா.க (1997 மற்றும் 1998) விவரங்கள் தமிழ்நாட்டில் ஏழை எளிய மக்கள், உள்ளுறை நோயாளர் காப்புக்குத் தனியார் வசதியைவிட ஒரு பொதுவசதியையே பெருமளவில் பயன்படுத்தக் கூடும் எனத் தெரிவிக்கிறது. மிகக் குறைவான வருமானம் பெறுவோரில் 72% உள்ளுறை நோயாளர் நாட்கள் பொதுத்துறை வசதிகளில் உள்ளன. மேல்தட்டு வர்க்கத்தினரைப் பொறுத்தவரை இவ்விகிதம் 27%ஆகக் குறைகிறது. இருப்பினும் உயர்வருமானம் பெறுவோர் ஏழையரைவிட உள்ளுறை நோயாளர் காப்பின் கீழ்க் குறிப்பிடத்தக்க அளவு அதிக நேரத்தை செலவிடுவதில் கவனம் செலுத்துகின்றனர். இதன் விளைவாய் வசதி படைத்தவர்கள் மொத்த உள்ளுறை நோயாளர் நாட்களில் ஏழையரைவிட அதிக அளவில் பொதுநலவாழ்வுக் காப்புவசதிகளைப் பயன் படுத்துகின்றனர்.

தே.மா.க. விவரங்கள் பொதுத்துறையைப் பயன்படுத்தும் எல்லாப் புறநோயாளர்களின் விகிதம், 1986-87 மற்றும் 1995-96-க்கு இடைப்பட்ட காலத்தில் கிராமப்புறங்களிலும், நகர்ப்புறங்களிலும்

குறைந்திருப்பதையும் காட்டுகிறது. அனைத்திந்தியா மற்றும் தமிழ்நாட்டுக்கு மட்டுமின்றி பெரும்பாலான மாநிலங்களுக்கும் உண்மையில் இது பொருந்தும். தேசிய சராசரியோடு ஒப்பிடுகையில் தமிழ்நாடு 1986-87 மற்றும் 1995-96-இல் கிராமப்புறம் மற்றும் நகர்ப்புறங்களில் பொதுத்துறை வசதிகளில் உயர் பயன்பாட்டளவைக் காட்டுகின்றது.

1994-இல் நடத்தப்பட்ட செயல்முறை பொருளாதார ஆராய்ச்சியின் தேசீயக் குழுவின் மிக அண்மைக்காலக் கணக்கெடுப்பு 33,000 கிராமப்புறக் குடும்பங்களின் அனைத்திந்திய மாதிரிகளை உள்ளடக்கியது மற்றும் தமிழ்நாட்டில், நோய்களை அறிவித்த 1294 நபர்களை உள்ளிட்டது (மேல்லானே-2000) மாறுபட்டதொரு நிலையை வெளிப்படுத்துவதாய் உள்ளது. மிக ஏழையான வகுப்பினரிலும்கூட மூன்றிலிரண்டு பங்குகளுக்கு மேற்பட்டோர் அதிகமான செலவிடயிருப்பதாக இருந்தாலும் தனியார் மருத்துவக் காப்பையே விரும்புகின்றனர் என்ற உண்மையை வெளியிடுகிறது.

### ஆரம்ப சுகாதார நிலையங்கள்

சிறுநோய்களுக்கு சிகிச்சை என எடுத்துக் கொண்டால் கிராமப்புற மக்கட்தொகையில் பெரும் பிரிவினருக்கு ஆரம்ப சுகாதார நிலையங்கள் அரும்பணியாற்றுகின்றன. ஆண்டுதோறும் ஆரம்ப சுகாதார நிலையங்களில் ஏறத்தாழ 35 மில்லியன் புறநோயாளருக்கு மருத்துவ உதவி அளிக்கப் படுகிறது. மீண்டும் மீண்டும் வருபவர்களையும் கணக்கில் கொண்டாலும்கூட சிறுநோய்களுக்கு ஆரம்ப சுகாதார நிலையங்களின் பயன்பாட்டின் ஒரு உயர்அளவைக் காட்டுகிறது. (தமிழ்நாட்டின் கிராமப்புற மக்கட் தொகை 45 மில்லியன் எனக் கொண்டால்) கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரியின் சமுதாய மருத்துவத் துறையால் மேற்கொள்ளப்பட்ட ஒரு ஆய்வு. ஆரம்ப சுகாதார நிலையங்களில் நோயாளர் ஒருவருக்கு கலந்தாய்வு நேரம் சராசரியாக 2.78 நிமிடங்கள் மட்டுமே எனக் காட்டுகிறது. தொடக்க நலநிலையங்களில் தற்போதிருக்கும் தவிர்க்கலாகாத புறநோயாளர் அலுவல் நேரங்களை நன்கு செயல்முறைப்படுத்தி கண்டிப்பாய் பின்பற்றுவதன் மூலம் போதிய அளவான புறநோயாளர் பணிகள் உறுதி செய்யப்பட வேண்டியதன் அவசியத்தை சுட்டிக் காட்டுகிறது.

**பெட்டி 4.6 : ஒரு நலவாழ்வு மேலாண்மைத் தகவல்முறையை நோக்கி – தமிழ்நாட்டின் ஒரு தொடக்க முயற்சி**

நலவாழ்வுப் பணியளிப்பின் பயனளிக்கும் மேலாண்மைக்கு நன்கு வடிவமைக்கப்பட்ட மற்றும் பொருத்தமான முறையில் இயங்கும் நலவாழ்வு மேலாண்மைத் தகவல்முறை ஒன்று மிகவும் முக்கியமானது ஆகும். இம்முறையின் முக்கியமானதொரு துணைமுறை நலவாழ்வுப் பணி கண்காணித்தல் தொடர்புடையது. ஆரம்ப சுகாதார நலநிலையங்கள் ஆற்றும் நிறுவனப் பணிகளைக் கண்காணித்து அறிவுறுத்த 'டேனிடா' உதவியுடன் தமிழ்நாடு நலவாழ்வுக் காப்புதிட்டத்தில் மேற்கொள்ளப்பட்ட ஒரு தொடக்க முயற்சி இச்சூழமைவில் பொருத்தமானதாகும். இதில் இரண்டு அம்சங்கள் அடங்கி உள்ளன. ஒன்று ஆரம்ப சுகாதார நலநிலையங்கள் மற்றும் நலவாழ்வுத்துணை மையங்கள் ஆற்றும் நிறுவனப் பணிகளைக் கண்காணித்து அறிவுறுத்தல் செய்தல். மற்றொன்று மேம்பட்ட மேலாண்மையின் பொருட்டு நலவாழ்வு திட்டம் தொடர்பான பணிகளைக் கண்காணித்து

அறிவுறுத்தல். ஆரம்ப சுகாதார நலநிலையங்கள் தொடர்பாக முன்னதாய் குறிப்பிட்டது. அடிப்படை விவரப் பதிவுக்காக Optical Mark Reader (OPR)ஐப் பயன்படுத்தி அமைக்கப் பட்டுள்ளது. தொடக்க நலவாழ்வுக் காப்புக்கான திட்ட மூலவரைவுகளைக் கணக்கில் கொண்டும் தொடக்க நலவாழ்வுக்காப்பில் நிமிர்வுநிலை (Vertical) திட்டங்கள் சிலவற்றை ஒருங்கிணைத்தும் நலவாழ்வு மேலாண்மைத் தகவல் முறை மேம்பாட்டுக்காக, நலவாழ்வுத் துணை மையங்களின் நிறுவனப் பணிகளையும் திட்டத் தொடர்பான பணிகளையும் கண்காணித்து அறிவுறுத்தப் பொருத்தமான ஒரு முறையை இதற்கென அமைக்கப்பட்ட தொழில்நுட்ப செயற்குழுவால் உருவாக்கப்பட்டது.

ஆரம்ப சுகாதார நிலையங்களின் செயலாக்கத்தைக் கண்காணித்து அறிவுறுத்த 'டேனிடா தமிழ்நாடு நலவாழ்வுக் காப்புதிட்ட தொடக்க முயற்சி ஏப்ரல் 1999-இல் தொடங்கியது. ஒரு ஆரம்ப சுகாதார நிலையம் ஆற்றவிருக்கும் 12 வெவ்வேறு பணிகளுக்கான திரட்டிய அடிப்படை விவரங்களும் உருவாக்கப்பட்ட விளைவளவுகளும் ஆர்வமூட்டும் நுண்ணறிவையும் குறிப்புகளையும் (pointers) அளிக்கிறது. மாநிலத்தின் நலவாழ்வு நிருவாகத்தின் பல்வேறு நிலைகளில் விளைவளவுகளின் மீதான விவாதம் மற்றும் அவற்றின் பகிர்வு இந்திய முறை மருந்துகளின் முக்கியத்துவம் மற்றும் பலவிதமான நலவாழ்வுத் பிரச்சனைகளைப் பற்றி நலவாழ்வு அலுவலர்களுக்குக்கூட உயர்வுபெற உதவியது.

ஆரம்ப சுகாதார நல நிலையங்களின் கண்காணிப்பும் அறிவுறுத்தமும் தொடங்கியதி லிருந்து இரு சுட்டிக்காட்டும் குறியீடுகளில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் காணப்பட்டது. அவை என்னவெனில் புறநோயாளர் பணிகள் மற்றும் மகப்பேறுகள்.

கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரியின் ஆய்வு ஒரு ஒற்றைப் பொது நோய்க்கு இரண்டுக்கும் மேற்பட்ட மருந்துகளைக் குறிப்பிட்டுப் பரிந்துரைக்கும் பல்மருந்துப்போக்கையும் சுட்டிக்காட்டுகிறது. தொடக்க நலநிலையத்திலும்கூட நோய் நுண்கொல்லிகளைப் பரிந்துரைக்கும் விழுக்காடு ஏறக்குறைய 54.42-ஆக உள்ளது. கருத்தியலாய் தொடக்க நலவாழ்வுக் காப்புநிலையில் நோய் நுண்கொல்லிகளின் பயன்பாட்டளவு 25 விழுக்காட்டிற்கு மேலிருக்கலாகாது. ஊசி மூலம் மருந்து செலுத்துவதற்கான குறிப்புகளின் எண்ணிக்கை 56.47%-க்குள் இருக்கிறது. இங்கும், கருத்தியலாய் தொடக்க நலக் காப்புநிலையில் மதிப்பு 10 விழுக்காட்டிற்கு மிகைப்படலாகாது. இடைநிலை, மூன்றாவதான நிலையிலும் இம்மாதிரியான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு அதிகப் பகுத்தறிவார்ந்த மருந்துகள் பயன் வலியுறுத்தப்பட வேண்டும். தமிழ்நாடு மருத்துவப் பணிகள் கழகம் மூலம் தடையின்றி எளிதில் கிடைக்கப்பெறும் காரணத்தால் தேவைக்கு அதிக மருந்துகளை எழுதிக் கொடுக்கும் அபாயம் உள்ளது. காப்பின் தரநிலையிலும் இது ஒரு முக்கியப் பிரச்சனையாக உள்ளது.

பொதுநல வாழ்வு துறைக்கும் மக்களுக்குமிடையேயான தொடர்பு காப்பின் தரம் குறித்த வலியுறுத்தலுடன் கணிசமான அளவு வலுப்படுத்தப்பட வேண்டும். மருத்துவர்கள் தனியே தொழில் செய்யும் நடைமுறை வழக்கம் மற்றும் அரசின் நலவாழ்வுப் பணிகளில் அதன் விளைவளவுகளைப் பற்றி விவாதித்துப் பகுப்பாய்வு செய்யப்பட வேண்டும். (பெட்டி 4.6)

### தனியார்துறை

இந்தியாவில் நலவாழ்வுக்காப்பின் மீதான செலவினத்தில் முக்கால் பங்கு மேலான செலவு, தனியார் துறையில் நிகழ்கிறது. நலவாழ்வுக்கான தனியார் பொதுத் துறைகளின் மொத்தச் செலவு 1997-இல் மொத்த உள்நாட்டுப் பொருள் உற்பத்தியில் 5.2%ஆக இருந்தது. மொத்த நலவாழ்வுக்காகும் செலவில் பொதுத்துறையின் செலவு 13%-ஆக மட்டுமாயிருந்தது.

எனவே நாட்டின் நலவாழ்வுக்காப்பு முறையில் தனியார்துறை பெரும் பங்காற்றுவது தெளிவாகிறது. மேற்கோள் ஆண்டு 1995-96-க்குரிய தே.மா.க. 52-ம் சுற்றிலிருந்து எடுக்கப்பட்ட அடிப்படை விவரப்படி எல்லாப் பெரிய மாநிலங்களிலும் தனியார்த்துறையே புறநோயாளர்க்கு காப்பளிப்பதில் பெரும்பங்கு வகிக்கிறது. நகர்ப்புறங்களிலும் கிராமப்புறங்களிலும் இதுவே உண்மையான நிலை. உள்ளுறை நோயாளர் காப்பிலும் 1995-96-இல் 15 பெரிய மாநிலங்களில் 10-இல் கிராமப்புறம், நகர்ப்புறம் ஆகிய இரண்டிலுமே தனியார் துறையே பெரும்பங்கேற்றுள்ளன எனத் தெரிய வருகிறது.

தமிழ்நாட்டில் கிராமப்புறங்களிலும் நகர்ப்புறங்களிலும் 1995-96-ல் மொத்தப் புறநோயாளர் காப்பில் தனியார்துறை முறையே 75%-ம் 72%-ம் பங்கைப் பெற்றிருந்தன. உள் நோயாளிகளுக்கு, இதற்கு ஒத்திசைவான விழுக்காடுகள் முறையே 58.9%-ம் 64.3%-ம் ஆகும். அனைத்திந்திய விழுக்காடுகள் முறையே 54.7%–ம் 56.9%-ம் ஆகும். பஞ்சாப், கர்நாடகா, மகாராஷ்டிரா மற்றும் பீகார் ஆகிய நான்கு மாநிலங்களில் மட்டுமே தனியார்துறையின் நகர்ப்புறங்களில் உள் நோயாளரின் காப்பு விகித மொத்தம் தமிழ்நாட்டிலிருப்பதைவிட அதிகமாய் உள்ளது.

நலவாழ்வுத் துறையில், தனியார்துறை ஒரேவிதமானதாக இல்லை. நலவாழ்வில், தனியாரின் கூட்டாண்மைத்துறை, எண்ணிக்கையில் சிறியதாயிருப்பினும், போக்கு, தரநிலை மற்றும் தரங்களை நிர்ணயிப்பதில் மிகப் பெரும் செல்வாக்கைப் பெற்றுள்ளன. கூட்டாண்மைத் தனியார் நலவாழ்வுக் காப்பு நிலையங்கள், மிகச்சிறந்த தனித்திறம் வாய்ந்த மருத்துவமனைகள் பெருமளவில் பெரு நகர்களிலும் ஏனைய பெரிய நகரங்களிலும் அமையப் பெற்றுள்ளன. நலக்காப்பில் ‘லாபநோக்குடைய பிரிவினரின் வேக வளர்ச்சியாலும், குறிப்பாய், கூட்டாண்மை நலக்காப்பு நிறுவனங்களின் வளர்ச்சியால், நலக்காப்பு உயர்அளவில் வணிக மயமாக்கப்பட்டதோடு, திட்டமிட்டமுறையில் இருமுகத் தன்மையதாக்கப் பட்டுள்ளது. செல்வந்தர்களும் அவர்களைப் பின்பற்றி அவ்வளவு செல்வந்தரல்லாதோரும் புகழ்ப்பெற்ற உலகத்தரம் வாய்ந்த மருத்துவ நிலையங்களில் விலைஉயர்ந்த தனியார் நலக்காப்பை நாடிப் பெறுகின்றனர். இவ்வாறு செய்ய இயலா நிலையில் உள்ள ஏழையர், பொதுத்துறை மருத்துவ நிலையங்களுக்கும் விலைமலிவான தரநிச்சயமில்லாத் தனியார்துறை மருத்துவமனைகளை நாடிச் செல்கின்றனர். சில நேரங்களில் எந்தவிதமான சிகிச்சையும் பெறாமல் தவிர்க்கின்றனர்.

தனியார்துறையிடமிருந்து போட்டி இருந்தபோதிலும் பொதுத்துறை மற்றும் தனியார்துறை மருத்துவமனைகளில் செலவுத் தொகை மிக வேகமாய் அதிகரித்துள்ளன. மருத்துவமனையில் உள்ளுறை நோயாளருக்கான சராசரி செலவு அனைந்திந்திய அளவில் ஒரு நோய் நிகழ்வுக்குப் பொதுத்துறையில் கிராமப்புறங்களில் ரூ. 320/-லிருந்து ரூ. 2080/-வரையிலும் நகர்ப்புறங்களில்

ரூ. 385/-லிருந்து ரூ. 2195/-வரையிலும் மிக அதிகமாய் உயர்ந்துள்ளது. இதே காலத்தில் மருத்துவமனை சிகிச்சைக்கான தனியார்துறையின் சராசரி விலையும் மிக அதிகமாய் உயர்ந்துள்ளது. ஆனால் பொதுத்துறைக் காப்புடன் ஒப்பிடுகையில் தனியார்துறையின் விலைவிகிதம் கிராமப் புறங்களிலும் நகர்ப்புறங்களிலும் முறையே 2.29-லிருந்து 2.07-க்கும் 3.13-லிருந்து 2.43-க்கும் குறைந்தது புற நோயாளர் காப்பு நேர்வுகளில் தனியார் காப்பு வசதிகளின் விலை பொதுத்துறை காப்பு வசதிகளைவிட மிக வேகமாய் அதிகரித்துள்ளது. புறநோயாளர்களாயிருப்பின் தனியார் / பொதுத்துறை விகிதங்கள் 1986-87-இல் கிராமப்புறம் மற்றும் நகர்ப்புறங்களில் முறையே 1.05 மற்றும் 1.08-லிருந்தும் 1995-96-இல் 1.44 மற்றும் 1.20-ஆகக் குறைந்தன. மொத்தத்தில் மருத்துவமனை சிகிச்சை ஒன்றுக்குக் கிராமப்புறங்களில் 132%-ம் நகர்ப்புறங்களில் 146%-ம் அதாவது இரண்டு மடங்குக்கும் அதிகமாய் உயர்ந்தது.

தனியார்துறை மேலான வசதிகளையளிப்பதில் முக்கியப் பணியாற்றினாலும் இது நலவாழ்வில், வழிவாய்ப்புகளைப் பெறுவதில் அதிகரித்த ஒரு ஏற்றத்தாழ்வில் முடிவுற்றது. இது ஒரு சாதி வடிவாயும் உருவெடுத்தது. தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினத்தவர், அவ்வினங்களல்லாத மக்கட்தொகையைவிட மோசமான நலநிலைமையைப் பெற்றுள்ளனர். இதற்கு காரணம் தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடி இனத்தவர் உயர்விலை காரணமாய் தனியார் மருத்துவ வசதிகளுக்கு வழிவாய்ப்புகளைப் பெற்றிருக்கவில்லை. நலவாழ்வில் சமஉரிமை எனும் பிரச்சனை சிக்கலான வினாக்களை எழுப்புகிறது. இது, வகுப்பு, சாதி, பாலினம் மற்றும் மாநிலத்திற்குள்ளாகத் துணைப் பகுதிகள் எனும் பன்முக முறையில் சமாளிக்கப்பட வேணடும்.

சமஉரிமை மட்டுமன்றி, நலக்காப்பில் இம்மாதிரியான இருமுகத் தன்மையோடு ஒழுங்குமுறைப் பிரச்சனையும் எழுகிறது. தனியார்துறைக் கூட்டாண்மை மருத்துவமனைகளுக்கு ஊக்குதவித் தொகைகள் அதிகரித்த போதிலும், நலவாழ்வில் தனியார்துறை பெருமளவில் வழங்குமுறைப் படுத்தப்படாமலிருக்கிறது. தனியார்துறையில் தரம் மற்றும் மருத்துவசெலவு இன்னும் தரப்படுத்தப் படவில்லை என்பது பரவலாய் ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது.

### நோயுறும் தன்மையைக் குறைக்க சிறப்பு திட்டங்கள்

மொத்த நோயுறும் தன்மையைப் பொறுத்தவரை, தேசிய செயல்முறைப் பொருளாதார ஆராய்ச்சிக்குழு 1993-ல் தமிழ்நாடு, கிராமப்புற மற்றும் நகர்ப்புறம் இரண்டிலும் இந்தியாவைவிடக் குறைவான நோயுறும் தன்மை பரவல் வீதத்தை அறிவித்ததாய்க் கண்டறிந்துள்ளது. இதன் விவரங்கள் கிராமப்புறம் 1000-க்கு 78.5 ஆகும் (இந்தியா 106.7) நகர்ப்புறம் 1000-க்கு 75.7 ஆகும். (இந்தியா 103)

அனைத்திந்திய மாதிரிகளை ஒட்டி, நீடித்த நோய்நிலைவீதம், ஒப்பிடுகையில், கிராமப் புறங்களைவிட அதிகமாய் உள்ளது. டைபாயிட், மலேரியா, சின்னம்மை, காலரா, இரைப்பை - குடற்காய்ச்சல், கடும் மஞ்சள்காமாலை, தட்டம்மை, புட்டாளம்மை மற்றும் காசநோய் போன்ற கடும் பரவும் நோய்கள் 1993-இல் தமிழ்நாட்டில் அறிவிக்கப்பட்ட கிராமப்புற நகர்ப்புற நோயுறும் தன்மைகளில் முறையே ஏறத்தாழ 12% மற்றும் 14%ஆக இருந்தன. இவை ஒத்திசைவான அனைத்திந்திய விழுக்காடுகளான 14.5% மற்றும் 13.3%-லிருந்து மிகவும் வேறுபட்டிருக்கவில்லை.

தேசீய செயல்முறைப் பொருளாதார ஆராய்ச்சி குழுவின் கணக்கெடுப்பு, கிராமப்புறம் மற்றும் நகர்ப்புறங்களில் வருமானம் அதிகரிக்கவும், நோயுறும் தன்மை குறைகிறதெனக் கூறுகிறது. குறிப்பாய் கடும் நோய்களும் கடும்பரவும் நோய்களும் குறைவான வருமானம் பெறும் பிரிவினரிடையில் அடிக்கடி தோன்றுவதாய் கூறுகிறது.

## எய்ட்ஸ் கட்டுப்பாடு

இந்தியாவில் முதல் ஹெச்.ஐ.வி. நேர்வு 1986-இல் தமிழ்நாட்டில் அறிவிக்கப்பட்டது. அப்போதிலிருந்து எய்ட்ஸ் நோயைக் கட்டுப்படுத்தப் பல நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. அரசு சாரா அமைப்புகள், சமுதாயம் சார்ந்த அமைப்புகள், தனியார் துறை மற்றும் தேசீய மற்றும் பன்னாட்டு முகமைகளின் கூட்டுறவோடு விரைவு வழிமுறையில் திட்டத்தை செயலாக்க மாநில அளவில் நாட்டில் எய்ட்ஸ் கட்டுப்பாட்டுச் சங்கம் ஒன்றை அமைத்த முதல் மாநிலம் தமிழ்நாடு ஆகும்.

மாநிலத்தின் 29 மாவட்டங்களும் எய்ட்ஸ் நோய் நேர்வுகளை அறிவித்துள்ளன. 3,00,000-லிருந்து 3,50,000 வரை எய்ட்ஸ் பாதித்த நேர்வுகளிலிருக்கக் கூடுமென மதிப்பிடப்பட்டுள்ளது. தமிழ்நாட்டில், எய்ட்ஸ் கொள்ளை நோயை எதிர்த்துப் போரிட ஒரு பெரும் உந்துகை, தகவல், கல்வி மற்றும் தகவல் தொடர்பு துறைகளில் அளிக்கப்பட்டுள்ளது. எய்ட்ஸ் நோயைக் கட்டுப்படுத்தும் திட்டத்தின் மற்ற அம்சங்களில் பின்வருவன அடங்கும். இரத்த வங்கிகளை நவீனப்படுத்தல், தன்னியலான இரத்ததானத்திற்கு ஆதரவு, பாலின நோய்களைக் கட்டுப்படுத்தல், உயர் இன்னல் குழுக்களை மையமாய் கொண்ட திட்டங்கள், கடும் கண்காணிப்புடன் நலவாழ்வுமுறைப் பணியாளருக்குப் பயிற்சி.

பாலின நோய்கள் தடுப்பு (எச்.ஐ.வி / எய்ட்ஸ்) மற்றும் கட்டுப்படுத்துதலில் ஈடுபட்டுள்ள இரு பெரிய முகமைகள் : மாநில எய்ட்ஸ் கட்டுப்பாட்டுச் சங்கம் மற்றும் பன்னாட்டு மேம்பாட்டிற்காக அமெரிக்க நாட்டு முகமையின் நிதியுதவியோடு நிருவகிக்கப்படும் தன்னார்வ நலவாழ்வுப்பணி ஆகியன இரண்டும் அரசுசாரா அமைப்புகளுடன் ஒன்று சேர்ந்து பணியாற்றுகின்றன. இத்திட்டத்தின் செயல்பாடுகளில் முன்னேற்றமும், தகவல், கல்வி மற்றும் தகவல்தொடர்பு சாதனங்கள், நடத்தை மாற்றத் தகவல் அளிப்பு, பாலின நோய்க்காப்புப் பணிகளில் அதிகரித்த தரம், மருத்துவ, மருத்துவம் சாராத பணியாளருக்குப் பயிற்சி, பாலின நோய்கள் / எச்.ஐ.வி / எய்ட்ஸ் நோயாளருக்கு அறிவுரைகள் வழங்கல், துணைவர்களுக்கு சிகிச்சை, ஆணுறைக்கு ஆதரவு முதலானவைகள் அடங்கும். இருப்பினும், மக்கள் பாலின நோய்கள் மற்றும் எச்.ஐ.வி பற்றி நன்கறிந்திருந்தாலும் அதன் இன்னல்களைப் பற்றிக் குறைவாகவே உணர்ந்திருக்கிறார்கள்.

## மலேரியா கட்டுப்பாடு

தேசீய மலேரியா கட்டுப்பாட்டு திட்டம் (தே.ம.க.தி) தமிழ்நாட்டில் 1953-இல் தொடங்கப்பட்டது. அதன் வெற்றியைத் தொடர்ந்து தேசீய மலேரியா ஒழிப்பு திட்டம் (தே.ம.ஒ.தி) 1958-59-இல் தொடங்கப்பட்டது. மலேரியாவை முழுமையாய் ஒழிக்க முடியும் என்ற தொடக்க நம்பிக்கை 1960 ஆண்டின் இடையில் மீண்டும் கிளர்ந்தெழுந்ததன் மூலம் பொய்யானது. மலேரியாவை ஒழிப்பதைவிட அதைக் கட்டுப்படுத்தும் நோக்கத்தோடு ஒரு திருத்தப்பட்ட செயல்திட்டம் 1977-இல் அறிமுகம் செய்து வைக்கப்பட்டது. இத்திட்டம், மலேரிய கட்டுப்பாட்டை மக்கள்

நலவாழ்வுத்துறையின் ஒரு தனிப்பிரிவாக இருப்பதையும் களப்பணிகள் தொ.ந. நிலையங்களின் அகப்பாட்டெல்லைக்கு வெளியிலிருப்பதையும் தவிர்த்து தொடக்கநலக் காப்போடு ஒழுங்கிணை வகைசெய்தது. மாநிலத்தின் பகுதிகள், கொள்ளை நோய்சார்புடையவை ஆகும். மலேரியா நோய் பிரச்சனைகளுடன் கூடிய பழங்குடியினர் வாழும் பகுதிகள் மலேரியா, பிரச்சனைகளுடன் கூடிய நகர்ப்புறப் பகுதிகள் என வகைப் பிரிக்கப்பட்டன. நகர்ப்புற மலேரியா, கடலோர மலேரியா மற்றும் ஆற்றோர மலேரியா என்பன மற்ற வகைப்பாடுகளாம்.

மாநிலத்தில் மலேரியா நிகழ்வுகளின் ஒரு பகுப்பாய்வு மலேரியா ஒரு நகர்ப்புறப் பிரச்சனையாயிருப்பதைக் காட்டுகிறது. மொத்த மலேரியா நிகழ்வு, 1992-93-இல் 1,00,000 நேர்வுகளிலிருந்து 2002-இல் ஏறத்தாழ 35,000-ஆகக் குறைந்திருக்கையில் இதேகாலத்தில் நகர்ப்புற மலேரியாவின் பங்கு 65%-லிருந்து 84%-க்கு உயர்ந்தது. மாநிலத்தில் அறிவிக்கப்பட்ட மொத்த மலேரியா நேர்வுகளில், சென்னையின் பங்கு 1992-இல் 48%-க்கும் 2002-ல் 79%-க்கும் உயர்ந்தது.

சுத்தநீரில் மலேரியா கொசுக்கள் இனப்பெருக்கம் அடைவதால், மேல்நிலைத் தொட்டிகளை இறுக்கமான மூடிகளால் மூடி வைப்பதன் மூலம் சென்னை மற்றும் ஏனைய மாநகரங்கள், நகரங்களில், இதற்கு ஒரு தீர்வுகாண முடியும். கொசு முட்டைகளை அழிப்பதன் மூலம் நோய்க் கிருமிகளைக் கட்டுப்படுத்தல், வீடுவீடாகப் பார்வையிட்டு முனைப்பான கண்காணிப்பும் சிகிச்சையும் மற்றும் தனியார் மருத்துவர்களுக்குப் போதிய அறிவூட்டல் ஆகியன இப்பிரச்சனையை சமாளிக்கத் தேவையான நடவடிக்கைகளாகும்.

## தொழுநோய் ஒழிப்பு

தேசீயத் தொழுநோய் ஒழிப்புத்திட்டம் (தே.தொ.ஒ.தி) 1994-95-இல் தொடங்கப்பட்டது. 1981-இல் பல்மருந்து நோய்த்தீர்வு அறிமுகப்படுத்தப்பட்டதன் விளைவாய் தொழுநோயாளரின் சிகிச்சை மற்றும் மீட்சியில் வியக்கத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. தமிழ்நாட்டில் நோய்ப் பரவல்வீதம் 1983-இல் 10,000 மக்கட் தொகைக்கு 118%-லிருந்து, 2002-ல் வெறும் 2.2%-ஆகக் குறைக்கப்பட்டது. தொழுநோயின் போக்கு மற்றும் உருவடிவின் மாற்றங்களைக் கருத்தில் கொண்டு, மாநில அரசு, தொழுநோய்ப் பணிகளைப் பொதுநலவாழ்வுப் பணிகளோடு ஒருங்கிணைக்க முடிவு செய்தது. தொழுநோய் குணப்படுத்தும் சிகிச்சைகள் தற்போது எல்லாத் தொடக்க நலநிலையங்களிலும் மாநகராட்சி, நகராட்சி மற்றும் அரசு மருத்துவமனைகளிலும் கிடைக்கப் பெறுகின்றன. தமிழ்நாட்டில் இத்திட்டப் பணிகள் நிகழ்வைக் கண்டறிதல், சிகிச்சையும் விடுவிப்பும், ஊனங்களைத் தடுத்து மறுவாழ்வளித்தல், மனித ஆற்றல் மேம்பாடு, தகவல், கல்வியறிவு மற்றும் தகவல் அளிப்பு மற்றும் சமுதாயப் பங்கேற்பு, கண்காணிப்பு, மதிப்பீடு, இவற்றிற்காதரவான நலமுறை ஆராய்ச்சி ஆகியவைகள் ஆகும்.

மொத்தத்தில் தொழுநோயின் பரவல் மாநிலத்தில் குறைந்திருந்தாலும் மாவட்டங்களிடை மாறுபாடுகள் காணப்படுகின்றன. சென்னையும் கன்னியாகுமரியும் 10,000 மக்கட் தொகைக்கு முறையே 0.9 மற்றும் 1.7-ஐ அறிவித்துள்ளன. மிக அதிக வீத நிகழ்வுகள் பெரம்பலூரில் 5.9 மற்றும் திருவண்ணாமலையில் 5.7 ஆகும். சராசரி பரவல் வீதத்திற்கும் மேற்பெற்றிருக்கும் மாவட்டங்கள் தூத்துக்குடி (5.6), நாமக்கல் (5.5) மற்றும் தருமபுரி (5.2) ஆகும்.

### காசநோய்க் கட்டுப்பாடு

தமிழ்நாடு ஏறத்தாழ ஒரு மில்லியன் காசநோயாளர்களைக் கொண்டுள்ளது. இவர்களில் 25% தொற்றுநோய் தன்மை உடையவர்கள். மாநிலத்தில் காசநோய்க் கட்டுப்பாட்டு திட்டம், மாவட்ட அளவுப் பிரிவுகள் மூலம் செயல்படுகிறது அது. மாற்றியமைக்கப்பட்ட தேசீய காசநோய்க் கட்டுப்பாட்டு திட்டத்தின் அடிப்படையில் அமைந்துள்ளது. இத்திட்டம் ஒவ்வொரு மாவட்டத்திலும் மாவட்டமுள்ள காசநோய் மையம் மற்றும் கீழ்மட்டத்தினருக்கும் மருத்துவ மற்றும் நலவாழ்வு நிலையங்களுக்கும் மார்பு நோய்க் குறிகளுடன் வருகைதரும் நோயாளரிடமிருந்து காசநோயாளரைக் கண்டறிந்து சிகிச்சையளிப்பதையும் குறிப்பிட்ட காலத்திற்குப் பயனளிக்கும் தொலைநோக்காய்க் கொண்டுள்ளது. 1998-2002-க்கு இடைப்பட்ட காலத்தில், இலக்குக் குறியீடான 3,33,000-ஐக் குறிப்பிடத்தக்க வித்தியாசத்தில் மிஞ்சி, 3,49,000 புதிய நேர்வுகள் கண்டறியப்பட்டன.

### ஏனைய பொது நலவாழ்வுப் பிரச்சனைகள்

அரசின் தலையீடு மற்றும் கடும் இயக்கங்கள் ஆகிய இரண்டும் தேவைப்படும் மற்ற பொதுநலவாழ்வுப் பிரச்சனைகள் புகைப்பிடித்தல், மது அருந்துதல் மற்றும் போதை மருந்துகள் ஆகும். போதைமருந்துகளும் மதுஅருந்துதலும், அரசின் தலையீடுகளுக்கு அப்பாற்பட்ட (அ) அரசுத் தலையீடுகளுக்குட்படாத சமூகப் பிரச்சனைகளாய் கருதி நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. குடும்ப வன்முறைகளும்கூட ஒரு பொதுநல வாழ்வுப் பிரச்சனையாய் எடுத்துக் கொள்ளப் படுவதில்லை. உண்மையில் இப்பிரச்சனை குடும்பத்திற்குள் எழும் தனிப்பட்ட பிரச்சனையாகவே கருதப்படுகிறது. குடும்ப வன்முறைக்கு நிலைத்த தீர்வு, பெண்களுக்கு ஒட்டுமொத்த அதிகாரமளித்தல் மொத்த மக்களையும் திரட்டக்கூடிய உணர்வு ஏற்படுத்தி, சட்ட மற்றும் அரசு பொதுநல வாழ்வு திட்டங்களாலேயே காணமுடியும்.

மற்றொரு முக்கியக் கொள்கை வாழ்க்கைத் தொழில் சார்ந்த நலவாழ்வு, தொழிலாளர்களை உடல்நல இன்னல்களுக்காட்படுத்தக்கூடிய பல தொழில்கள் உள்ளன. அவை, சிமிட்டி, கல்நார், தோல் பதனிடுதல், சலவை செய்தல், சாயம் தோய்த்தல், மருந்துத் தயாரிப்புகள் மற்றும் வேதியியல் தொழில்கள், நலக்கண்காணிப்பு, நோய் அறுதியிடல், இத்தொழில்களில் தொழிலாளரின் உடல்நலக் காப்புக்கு முன்னுரிமையளிக்கப்பட வேண்டும். மேலும் சுற்றுப்புறக் கணகாணிப்பு, பாதுகாப்பு மற்றும் வாழ்க்கைத் தொழில் நலப் பிரச்சனைகள் நலவாழ்வு கொள்கையில் ஒழுங்குபடுத்தப்பட வேண்டும்.

### துறைவாரியான முதலீடுகள் நலவாழ்வும், ஊட்டச்சத்தும்

நடப்பிலிருக்கும் கட்டமைப்பு சரிகட்டல் மற்றும் பொருளாதார சீர்திருத்தங்களின் சூழமையில், சமூகத்துறை செலவினங்கள் அரசின் நிதி நெருக்கடி காரணமாய் பெருமளவில் இக்கட்டுக் குள்ளாகின்றன. சமுதாயத் துறையின், குறிப்பாக நலவாழ்வின் முக்கியத்துவத்தைக் கருதி, ஒதுக்கப் பட்ட முதலீடுகளை மேலும் திறம்படப் பயன்படுத்துவதில் கவனம் செலுத்தும். அதேசமயம், நலவாழ்வுத் துறைக்கு அரசின் நிதி ஒதுக்கீட்டைப் பாதுகாக்கவும் அதிகரிக்கவும் வழிகளைக் கண்டறிவது மனிதமேம்பாட்டுக்கு முக்கியமானதாகும்.

தமிழ்நாட்டில் நலவாழ்வுத்துறைக்கு அரசின் முதலீடுகள் முக்கியமாய் இரு தலைப்புகளின் கீழ் செய்யப்படுகிறது. i) மருத்துவம் மற்றும் ii) பொது நலவாழ்வு, பல ஆண்டுகளாய், நலவாழ்வுத் துறைக்கு அரசின் நிதி முதலீடுகள், பெயரளவிலும், உண்மையிலும் பெருகி வருகிறது. 1991-2000-க்குட்பட்ட ஆண்டுகளில் மட்டும் மருத்துவம் மற்றும் மக்கள் நலவாழ்வுக்கான நிதி ஒதுக்கீடு நடப்புவிலைகளின்படி, 1991-92-இல் ரூ. 4.11 பில்லியனிலிருந்து 1999-2000-இல் ரூ. 10.51 பில்லியனாக உயர்ந்தது. 1995-96 மற்றும் 1999-2000 நீங்கலாய் முந்தைய ஆண்டைவிடப் பெயரளவிலான முதலீடு உயர்வு 10%-யும் மிஞ்சியது. மிகப்பெரும் உயர்வான 19.8% 1990-91-க்கும் 1991-92-க்கும் இடைப்பட்ட காலத்தில் பதிவாகியது. நலவாழ்வு செலவில் முழுமையான உயர்வுகள் இருந்தபோதிலும் மொத்த செலவில், ஒரு பங்காய் நலவாழ்வுக்கான முதலீடு மாநில அரசின் வரவு செலவு திட்ட வருவாய்கணக்கில் 1990-ஆம் ஆண்டில் ஒரு இறங்குமுகம் போக்கையே காட்டியது.

## கொள்கைக் கட்டாயங்களும் சுருக்கமும்

தமிழ்நாடு மக்கட்தொகை நிலைத்தன்மையை நோக்கி நடைபோடுகிறது. அது கடந்த முப்பதாண்டுகளில் பேறுகால மற்றும் குழந்தை இறப்பைக் கணிசமாய்க் குறைக்க நடவடிக்கை மேற்கொண்டுள்ளது. பொதுத்துறையில், நலவாழ்வு நிலையங்களின் விரிவானதொரு தொடர் அமைவை உருவாக்கி, அவற்றை ஓரளவு எல்லா வசதிகளையும் கொண்டவையாய் ஆக்கியுள்ளது. பேறுகால இறப்பு விகிதத்தை (பே.இ.வீ) குறைத்திடுவதில் முக்கிய மூன்று அம்சங்களான, குடும்பநலதிட்டம், பேறுகாலத்திற்கு முந்திய, பேறுகாலத்திற்குப் பிந்தியக் காப்பு மற்றும் இன்றியமையாத மற்றும் அவசரக்காலப் பேறு மருத்துவக்காப்பு ஆகியவற்றிலும்கூடத் தமிழ்நாடு காலப்போக்கில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் கண்டுள்ளது. சில கூடுதல் வள ஆதாரங்களுடனும், எதிர்கால கொள்கை முயற்சி மற்றும் மக்களின் அதிகரித்த பங்கேற்புடனும், தமிழ்நாடு மேலும் அதிக முன்னேற்றம் பெறலாம்.

அதன் கடந்தகால செயலாக்கத்தை மேம்படுத்த, கவலையளிக்கக்கூடிய துறைகளில் கவனம் செலுத்துவதோடு மட்டுமின்றி, இலக்குகளை அடையும் வழிவகைகளைக் கண்டறிய வேண்டும். முன்னுரிமைக்கான பல கருத்துகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. இவை வருங்காலத்திற்கான சில இலக்குகளை அளிக்கும்.

குழந்தைகளின் இறப்புவீதங்களை குறிப்பாய் பெண்குழந்தை இறப்பு வீதங்களைக் குறைத்தல்.

ஊட்டக்குறைவை, குறிப்பாய், பெண்கள் மற்றும் பேறுகால ஊட்டக் குறைவை வலியுறுத்தல்.

இரத்தக் சோகை குறிப்பாய் குழந்தை பெறும் வயதிற்கும் பெண்களிடையே இரத்தக் குறைவைக் குறைக்க முயற்சிகள் செய்தல்.

ஆரம்ப சுகாதார நிலையங்கள் மற்றும் பேறுகாலத்திற்கு முந்தையக் காப்பின் தர மேம்பாடு.

அவசரப் பேறுகாலப் பணிகளை வலுப்படுத்தல்.

குடும்பநல திட்டத்தைத் தொடர்ந்து வலியுறுத்தல் பிறப்புக்கட்டுப்பாட்டில் குறிப்பாக ஆண்களுக்கு அதிகரித்த தேர்வுரிமை செய்தல்.

பணியளிப்புகளில் மேம்பாடும், தேர்வில் தேர்வுரிமையும் செய்தல்.

மருத்துவ முறையில் கருக்கலைப்புப் பணிகளை அதிகரிக்கவும் மேம்படுத்தவும் ஏற்பாடு செய்தல்.

நலவாழ்வு முறையில் இந்திய மருத்துவ முறைகளுக்கு ஊக்கமளித்தல்.

நலவாழ்வில் பாலின ஊக்கமளித்தல்.

நலக்காப்பு திட்டமிடல் மற்றும் நிருவாகப் பரவலாக்கத்தையும் நலவாழ்வில் மக்கள் பங்கேற்பையும் வலியுறுத்தல்.

கொள்கைக் காரணங்களுக்காக அடிப்படை விவரங்களின் தரத்தை மேம்படுத்தல்.

கண்காணிப்பையும் நலவாழ்வுத் தகவல் முறையையும் வலுப்படுத்தல்.

இத்தகைய மேலான நலவாழ்வு மற்றும் ஊட்டச் சத்துநிலை இலக்குகளையடைய மேலாண்மைக்கு பதிலாய் நோய்க்கட்டுப்பாட்டில், தமிழ்நாடு கவனம் செலுத்த வேண்டும். தமிழ்நாட்டின் ஊட்டச் சத்துக்கொள்கை ஆவணம் ஒரு வழிகாட்டும் குறிப்பை அளிக்கிறதென அதில் கூறப்பட்டுள்ளது. ஏற்கெனவே ஊட்டச்சத்துக் குறைவான சிறார்களுக்கிடையில் ஊட்டச்சத்து நிலையை மேம்படுத்த விழையும் உணவளிக்கும் திட்டங்கள், பயனளிப்பதாய் அமையும் வாய்ப்புக் குறைவு. அவை விலைமதிப்புள்ளவை. அதனால் நீடிக்கத் தக்கதல்ல. அதை மேலாண்மை செய்வதைவிட, ஊட்டக் குறைவைத் தடுப்பதில் முன்னுரிமையளிப்பதால் எதிர்காலத் தலைமுறையினர் மேலான பயனைப் பெறுவர்.

ஊட்டக்குறைவை முழுமையாக ஒழிப்பதே நீண்டகால நோக்கமாயிருக்க வேண்டும். எனவே, குறைவாக நேரடி உணவளித்தல், நல்ல ஊட்டச்சத்து நிலையின் முக்கியத்துவம் மற்றும் விரைவான நடத்தை மாற்றங்களை ஏற்படுத்தும் பொருட்டு நலிவான வளர்ச்சி நேர்வுகளைக் கண்டறியும் திறமையையும் பற்றி மக்களிடையே விரிவான தன்னறிநிலையை உருவாக்க சமுதாயக்கல்வி மற்றும் பங்கேற்புக்கான திட்டங்களின்பால் அதிகரித்த வலியுறுத்தலுடன், ஒருங்கிணைக்கப்படலாம். அதிகஅளவில் வளரிளம் பருவத்தினர் ஆண்கள் மற்றும் பெண்களுக்கேற்ப கவனம் மாறவேண்டும். இவர்கள், எதிர்காலத்தில் பெற்றோராயிருக்கப் போகிறவர்கள். கருவுற்றிருக்கின்ற தாய்மார்களின் பழக்கங்கள் ஏற்கனவே நிலைத்திருக்கும் என்பதால் அத்தாய்மார்களுக்கு வழங்கும் கவனிப்பைவிட வளரும் பருவத்தினர் நன்கு கவனிக்கப்பட வேண்டும்.

# 5. கல்வியறிவும் கல்வியும்







# இயல்

# 5

## கல்வியறிவும் கல்வியும்

தமிழ்நாட்டின் வளமான கல்வி பாரம்பரியத்தின் பின்னணியில் (5.1 பார்க்க) கல்வியறிவு, பள்ளிசேர்க்கை கட்டமைப்பு வழிவாய்ப்புகள் மற்றும் சாதனை போன்ற பல கல்வி சுட்டிக்காட்டிகளில் அது முன்னிடத்தில் இருப்பதில் வியப்பில்லை. கல்வி ஒரு மிகப்பெரிய துறை. எனவே, இவ்வியலுக்குள்ளாக அதன் அனைத்து முகப்புக் கூறுகளையும் விளக்குவது என்பது இயலக் கூடியதல்ல. இவ்வறிக்கையின் நோக்கம், மனித மேம்பாட்டின் மீதாயிருப்பதால் தொடக்க, இடைநிலை மற்றும் இறுதிக்கட்ட கல்வி தற்கால மனித மேம்பாட்டு நிலையை சுட்டிக்காட்டுபவையாக இருப்பது மட்டுமல்லாமல், எதிர்காலத்தில் மேலும் பெரிய அளவில் அடையவேண்டிய மனித மேம்பாட்டுக்கான ஒரு வழியாகவும் ஆய்வு அமையலாம் என்ற கருத்தில் செய்யப்படுகிறது. 1993-ஆம் ஆண்டின் ஆறாவது கல்விக் கணக்கெடுப்பிலிருந்தும் மாநிலக் கல்வித்துறையிலிருந்தும் அடிப்படை விவரங்கள் விரிவாக எடுத்துக் கொள்ளப்பட்டன. மற்ற மாநிலங்களிலிருந்தும் ஒப்பீட்டு அடிப்படை விவரங்கள் இவ்வாய்வில் பயன்படுத்தப் பட்டுள்ளன.

### கல்வியறிவு

### தமிழ்நாட்டில் கல்வியறிவின் நிலை

தமிழ்நாட்டின் கல்வியறிவு வீதம் கிட்டத்தட்ட 1941-ஆம் ஆண்டிலிருந்த அனைத்திந்திய நிலையோடு ஒப்பிடும்படியாயிருந்தாலும், நாட்டின் விடுதலைக்குப் பிந்தைய பத்தாண்டுகளில், மாநிலம் அனைத்திந்தியாவையும்விட முன்னேறியது (படம் 5.1). 2001-ஆம் ஆண்டு மக்கட் தொகைக் கணக்கெடுப்பு, பெரிய மாநிலங்களில், கேரளாவையும், மகாராஷ்ட்டிராவையும் அடுத்து மொத்த மற்றும் பெண் கல்வியறிவில் மூன்றாம் இடத்தைப் பெற்றிருந்ததைக் காட்டியது. 1991-இல் மொத்தக் கல்வியறிவு வீதம் 62.7%-லிருந்து 2001-இல் 73.47%ஆக உயருகையில் ஆண்களின் கல்வியறிவு, 73.75%-லிருந்து 82.33%-ஆக உயர்ந்தது. பெண்கல்வியறிவு வீதம் 1991-இல் 51.33%-லிருந்து 13 புள்ளிகள் அதிகரித்து, 2001-இல் 64.55%-ஆக உயர்ந்தது. ஆண் மற்றும் பெண் கல்வியறிவு விகிதங்கள் 1991-இல் 1.4-லிருந்து, 2001-இல் 1.27 குறைந்து, மாநிலத்தில் குறைந்து வரும் பாலின ஏற்றத்தாழ்வை வெளிப்படுத்தியது.

வளர்ச்சி பெற்று வரும் மற்ற நாடுகளிடையில் தமிழ்நாட்டின் செயலாக்க சூழலை பன்னாடுகளுடன் ஒப்பிடுவது பயனுள்ளதாயிருக்கிறது. படம் 5.2 சீனா உள்ளிட்ட பல பெரிய நாடுகளின் ஆண் மற்றும் பெண் கல்வியறிவு விகிதங்களைக் காட்டுகிறது. ஆண் மற்றும் பெண்

கல்வியறிவு விகிதங்களும் இதில் குறிக்கப்பட்டுள்ளது. இது பாலின ஏற்றத்தாழ்வை அளவிட உதவுகிறது. எல்லாக் கல்வியறிவு சுட்டிக் காட்டும் குறியீடுகளிலும் 1991-இல் தமிழ்நாட்டின் நிலை, பாகிஸ்தான் மற்றும் வங்கதேசம் ஆகிய நாடுகளின் நிலைகளைவிடக் குறிப்பிடும் அளவு மேலானதாயிருப்பினும் மாநிலம், அனைத்து வளர்ச்சி பெறும் நாடுகளின் சராசரி அளவை இன்னும் அடையவில்லை. சீனா, இந்தோனேசியா மற்றும் ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளின் கல்வியறிவின் அளவுகள் மிக அதிகம். ஐக்கிய நாடுகளின் மனித மேம்பாட்டறிக்கையில் விளக்கியுள்ளபடி நடுத்தர மனிதமேம்பாடு நாடுகளின் சராசரி அடைவு அளவுகளையும் சிறிதளவு மிஞ்சியுள்ளது. தமிழ்நாட்டின் பாலின ஏற்றத்தாழ்வுக் குறியீடும், இதே போக்கைப் பின்பற்றி பாகிஸ்தான், வங்கதேசம் மற்றும் இந்தியாவிலிருப்பதைவிட மொத்தத்தில் குறைவாயிருப்பதுடன் வரைகட்டத்தில் காட்டி யுள்ளபடி மற்ற நாடுகளின் அடைவு நிலைகளையும் எட்டத்தவறிவிட்டது. ஆசியப் பகுதிக்குள் ஸ்ரீலங்கா, தென்கொரியா, சீனா, இந்தோனேசியா ஆகிய நாடுகள் வியக்கத்தக்க முன்னேற்றம் கண்டுள்ளன.




**மாவட்ட, பாலின இருப்பிட மற்றும் சமூகத் தொகுதியமைப்பு குறித்த கல்வியறிவு**

1991-ஆம் மக்கட் தொகை கணக்கெடுப்பின் அடிப்படையிலான மேலும் ஒரு விரிவான பகுப்பாய்வு, தமிழ்நாட்டில் மாவட்டங்களில் பரவலான வேறுபாடுகளையும் பாலின, இருப்பிடப் பகுதி மற்றும் சமூகத் தொகுதியமைப்பிலும் பரவலான வேறுபாடுகளைக் காட்டுகிறது. இருப்பினும் பெண் கல்வியறிவு தருமபுரியில் 34.23 விழுக்காட்டிலிருந்து, கன்னியாகுமரியில் 78.30% வரை மிகபெரும் அளவில் பரவலாயிருப்பதாய் அமைந்துள்ளது. மொத்தத்தில் கல்வியில், தமிழ்நாடு மேலான செயலாக்க மாநிலங்களில் ஒன்றாயிருந்தபோதிலும், தருமபுரி, ஒருங்கிணைந்த தென்னாற்காடு மற்றும் திருவண்ணாமலை மாவட்டங்கள் பெண் கல்வியறிவு வீதங்களில் தேசிய சராசரிக்கு நிகராய் (அ) அதற்கு குறைவாய் உள்ளது.




1991-இல் கல்வியறிவு வீதத்தில் நகர்ப்புற கிராமப்புற வேறுபாடுகளின் ஒரு பகுப்பாய்வுபடி நகர்ப்புற ஆண்களின் கல்வியறிவு அளவு 86.06%-ஆகவும், கிராமப்புறப் பெண்களின் கல்வியறிவின் அளவு 41.84%-ஆகவும் இருந்ததாய் காட்டுகிறது. மேலும் நகர்ப்புறங்களில் ஆண்பெண் கல்வியறிவு விகிதம் 1:2-ஆகவும் கிராமப்புறங்களில் 1:6-ஆகவும் இருந்தது. இதன் மூலம் பாலின வேறுபாடு கிராமப்புறங்களில் அதிகமாயிருந்ததைக் காட்டுகிறது. மேலும், கிட்டத்தட்ட எல்லா மாவட்டங்களிலும் நகர்ப்புறக் கல்வியறிவு வீதங்கள் 70-80 விழுக்காட்டளவுக்குள்ளாக ஏறியும் இறங்கியுமிருக்கையில், கிராமப்புறக் கல்வியறிவு வீதங்கள், மட்டும் தருமபுரியில் மிகக் குறைவான 43.32 விழுக்காட்டிலிருந்து மிக அதிகமாய் கன்னியாகுமரியில் 80.76%-ஆகவும் இருந்தது. எல்லா மாவட்டங்களிலும் மொத்த மக்கட்தொகைக் கல்வியறிவைவிட தாழ்த்தப்பட்டோர் மக்கட்தொகையின் கல்வியறிவு வீதம், தொடர்ந்து குறிப்பிடத்தக்க அளவு குறைவாகவேயிருக்கிறது. தாழ்த்தப்பட்ட மக்கட்தொகையின் மாநிலக் கல்வியறிவு வீதம் 46.74% இதில், மொத்தக் கல்வியறிவில் தாழ்த்தப்பட்டோரின் கல்வியறிவு 1.34 ஆகும். தா.வ. பெண்களின் கல்வியறிவு வீதம் 34.89% ஆகும். இதற்கு ஒப்பீடான மொத்த தா.வ. பெண்களின் கல்வியறிவு விகிதம் மேலும் மோசமாக 1.56 அளவில் உள்ளது. மற்ற வளர்ச்சி அளவுகள் சராசரிக்கும் மேலாயிருக்கும் ஈரோடு, கோயம்புத்தூர் போன்ற மாவட்டங்களில் தா.வ. பெண்கள் கல்வியறிவு புள்ளிவிவரங்கள் 30 விழுக்காட்டிற்கும் குறைவாயிருப்பது, மிகவும் கவலையளிப்பதாய் உள்ளது.

### இளைஞர் கல்வியறிவு வீதங்கள்

பன்னாட்டுத் தரநிலைப்படி 15-24 வயதுக்குட்பட்டோரின் கல்வியறிவு வீதம் முந்திய பத்தாண்டில் தொடக்கக் கல்விப்பங்கேற்பு அளவினை சுட்டிக்காட்டும் கருவியாய் அமைகிறது. 1991-இல் மக்கட்தொகைக் கணக்கெடுப்பு இந்த வயதுத் தொகுதியின் மொத்தக் கல்வியறிவு வீதம் 72.7%-ஆகவும், இதில் ஆண்கள் கல்வியறிவு 81.8%-ஆகவும் பெண்களின் கல்வியறிவு வீதம்

63.9%-ஆகவுமிருப்பதை சுட்டிக்காட்டுகிறது. இங்கு இரண்டு தன்மைகள் குறிப்பிடத்தக்கவை. கடந்த பத்தாண்டில் தமிழ்நாட்டில் இவ்வயதுத் தொகுதி பெண்கல்வியறிவு வீதங்கள் நாட்டின் சராசரி அளவான 22.4 விழுக்காட்டைவிட 29.5% அளவு அதிகரித்தது. இது தொடக்கக் கல்வியில் பெருகிவரும் பெண்கள் பங்கேற்பின் ஓரளவு வெற்றியைக் காட்டுகிறது. இவ்வயது தொகுதியில் பாலின ஏற்றத்தாழ்வு விகிதம் 1:31-ஆக இருக்கையில் இந்த விகிதம் நகர்ப்புறங்களில் 1:1-ஆகக் குறைந்தது. இங்கு ஆண் கல்வியறிவு வீதம் 90.0-ஆகவும் பெண்கல்வியறிவு வீதம் 80.7-ஆகவும் உள்ளது. இப்புள்ளிவிவரங்கள், 1980 ஆண்டுகளில் நகர்ப்புறத் தொடக்கப்பள்ளி வருகையையும், சாதனையையும் தெளிவாய் சுட்டிக்காட்டுகின்றன.

## தொடக்கக் கல்வி

அரசியலமைப்புச் சட்ட ஆணைகளின்படி, தமிழ்நாடு அரசு, 14 வயதுக்குட்பட்ட அனைத்துச் சிறார்களுக்கும் தொடக்கக் கல்வியை அளிப்பதை ஒரு ஒப்பிய கடமையாகக் கொண்டுள்ளது. இதை அடைவதில் மாநில அரசின் வெற்றியை, மூன்று விரிவான அளவுகோல்களைப் பகுப்பாய்வு செய்வதன் மூலம் ஆய்வு செய்யலாம்.

- 6 வயதுக்கும் 14 வயதுக்கும் உட்பட்ட எல்லா சிறார்களையும் தொடக்க மற்றும் நடுநிலைப் பள்ளிகளில் சேர்க்கைச் செய்தல்.
- படிப்பைப் பாதியில் விட்டுச் செல்லும் மற்றும் மீண்டும் தொடரும் வீதத்தில் தொடக்க, நடுநிலைப்பள்ளிகளில் சிறார்களை நிறுத்தி வைத்தல்.
- அடிப்படை மொழி மற்றும் எண் தேர்ச்சித் திறத்தில் தரமான கல்வி அளித்தல்.

## முதன்மைக் கல்வி

### தொடக்கக்கல்வி சேர்க்கையின் போக்குகள்

அட்டவணை 5.1, 1975-76-லிருந்து தற்போது வரை பாலின சேர்க்கையின் போக்குகளைக் காட்டுகிறது. தொடக்க வகுப்புகளின் சேர்க்கையில் சேர்க்கையின் உயர்வு 27.6% தற்போதிருக்கும் சாதனையளவு, 1980-81-லேயே எட்டப்பட்டுவிட்டது. இருப்பினும், பாலின இடைவெளி தெளிவாகக் குறைந்து வருகிறது. 1990-ஆம் ஆண்டில் சேர்க்கையில் குறைவு, பிறப்பு வீதத்தில் ஏற்பட்ட குறைவின் காரணமாயிருக்கலாம்.

**அட்டவணை 5.1 : தொடக்க நிலையில் பாலினவாரியான சேர்க்கை**

(லட்சங்களில்)

| ஆண்டு | தொடக்கம் (I-V) | | | உயர்தொடக்கம் (VI-VII) | | | தொடக்க நிலை (I-VIII) | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | மொத்தம் | ஆண் | பெண் | மொத்தம் | ஆண் | பெண் | மொத்தம் |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| 1975-76 | 30.01 | 23.39 | 53.40 | 8.69 | 5.04 | 13.73 | 38.69 | 28.44 | 67.13 |
| 1980-81 | 34.80 | 28.66 | 63.46 | 11.48 | 6.94 | 18.42 | 46.28 | 35.60 | 81.88 |

(தொடர்ச்சி)

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1985-88 | 38.90 | 33.03 | 71.93 | 14.69 | 9.98 | 24.67 | 53.59 | 43.01 | 96.60 |
| 1990-91 | 41.82 | 35.81 | 77.63 | 18.14 | 13.44 | 31.58 | 59.96 | 49.25 | 109.21 |
| 1995-96 | 43.89 | 38.06 | 81.95 | 21.02 | 16.80 | 37.82 | 64.91 | 54.86 | 119.77 |
| 1997-98 | 35.18 | 32.95 | 68.14 | 19.30 | 16.63 | 35.93 | 54.48 | 49.58 | 104.07 |

*ஆதாரம் : கல்வி மற்றும் திட்டமிடுதலுக்கான தேசீய நிலையம்*

நடுநிலை வகுப்புகளில் இதே காலத்தில் வளர்ச்சி ஏறத்தாழ 161% அதிகரித்தது. பாலின விகிதமும் 1.72-லிருந்து 1.16-க்கு முன்னேறியது. 1990-ஆம் ஆண்டு சேர்க்கையில் ஆண்டு வளர்ச்சி வீதங்கள் கணிசமாய் குறைந்திருப்பது கவலையளிப்பதாயிருக்கிறது. இந்நிகழ்வின் ஒரு பகுதியை பிறப்பு வீதத்தில், குறைவினால் விளக்கலாம். ஆனால் குறைந்து வரும் வளர்ச்சி, சரி பார்க்கப்படவேண்டும். அப்போதுதான் நடுநிலைப்பள்ளிகளில் 100% சேர்க்கையை அடைய முடியும்.

### பெட்டி 5.1 - தமிழ்நாட்டில் தொடக்கக் கல்வியின் வரலாறு

**மாநிலத்தின் கல்வித்துறையில் மிகத் தொடக்க முன்னேற்றம் 18-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில், கிறித்தவ சமயப் பரப்பாளரின் வருகையால் கொண்டுவரப்பட்டது. ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியார் அவர்களுடைய சொந்தப் பணியாளர்களின் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கும் பொருட்டு, செயின்ட் ஜார்ஜ்கோட்டையில் 1673-ம் ஆண்டில் ஒரு பள்ளியைத் தொடங்கியும் உள்ளூர் மக்களிடையே கல்வியைப் பரப்பக் காரணமாயிருந்தது, சமயப் பரப்பாளர்களே.**

**சென்னை மாகாணத்தின் தொடக்கக் கல்வி கணக்கெடுப்பு அறிக்கை 1925-இல் மாநிலத்தின் தொடக்கக் கல்வியின் வரலாறு மற்றும் முன்னேற்றம் குறித்த ஆர்வமான நுண்ணறிவையளித்தது. மாகாணத்தில் தொடக்கப் பள்ளிகளை மேலாண்மை செய்யப் பின்வரும் மூன்று முகமைகளிலிருந்ததைச் சுட்டிக்காட்டுகிறது. i) தனியார் அமைப்புகள், தனிநபர்கள் மற்றும் ஆசிரியர் மேலாளர்கள் உள்ளிட்ட சமய, சமயச்சார்பற்றோர், ii) உள்ளாட்சி மன்றங்கள் மற்றும் நகராட்சி மன்றங்கள் மற்றும் iii) அரசு மாகாணத்தில் தொடக்கக் கல்வியைப் பரப்புவதில் தெளிவான மூன்றுகால கட்டங்களிலிருந்தும் தெரிய வருதல். i) 1910 வரையிலான தொடக்ககாலம் ii) 1911-20 வரையிலான இடைக்காலம் மற்றும் iii) 1921 காலத்திலிருந்து.**

**மிகத் தொடக்கக் காலம் பயிற்றுமொழி, தொடக்கப் பள்ளியைத் தொடங்கி நடத்தும் முகமை மற்றும் உதவிபெறும் நிறுவனங்களுக்கு நிதியளிக்கும் முறை தொடர்பான பெரும் கொள்கை மாற்றங்கள் நிறைந்தவையாய் இருந்தது.**

**1820-ஆம் ஆண்டின் மன்றோ நடவடிக்கைக் குறிப்புகள் போன்ற தொடக்க முயற்சிகளால் நாட்டுமொழிக் கல்வியில் ஓரளவு முன்னேற்றம் காணப்பட்டாலும், ஆங்கிலத்தைப் பயிற்று**

மொழியாய் கொள்ளவேண்டும் எனும் மெக்காலேயின் ஆணைகள் போன்ற முரண்பாடான கொள்கைகளால் முன்னேற்றம் அடிக்கடி தடைபட்டது. 1854-இல் 'உட்'டின் அனுப்புகைக்குப் (Wood's Despoteh) பின்னர் முன்னேற்றம் காணப்பட்டது. இது, தொடக்கக் கல்வியில் தனியாரின் பங்கேற்பை ஊக்குவிக்க உதவி மானிய முறையை அறிமுகப்படுத்தியது.

கோபாலகிருஷ்ண கோகலே போன்ற தலைவர்களின் கீழ்த்தொடங்கப்பட்ட தேசீய இயக்கங்களால் தூண்டப்பட்டு, 1910-ஆம் ஆண்டிலிருந்து அரசின் கல்விக் கொள்கையில் ஒரு குறிப்பிடத்தக்க மாற்றம் ஏற்பட்டது. இது, சென்னை மாகாணத்தில் கல்வி வளர்ச்சியில் இரண்டாவது கால கட்டத்தைக் குறிப்பதாய் அமைந்தது. 500-க்குமேல் குடியிருப்பாளர் களைக் கொண்ட ஒவ்வொரு கிராமத்திலும் தொடக்கப் பள்ளிகளைத் திறக்க ஊக்குதவித் தொகையளிக்க இந்திய அரசு ஒப்புக் கொண்டது. இக்கொள்கையை தொடர்ந்து, பேரரசின் ஊக்குதவித் தொகையிலிருந்து தாரா‌ள தொடரும் மானியமாய் ரூ. 5 மிலியன் வழங்கப் பட்டது. மாநில அரசு, அத்தகைய புதிய பள்ளிகளைத் திறக்க மாவட்டக் கழகங்களுக்கு ஊக்குதவித் தொகையளிக்க வகை செய்தது.

கல்வியைப் பரப்புவதில் மூன்றாவதாய் பெரிய முன்னேற்றம், சென்னை தொடக்கக்கல்விச் சட்டம் 1920, நிறைவேற்றத்துடன் வந்தது. இச்சட்டத்தின்கீழ் உள்ளாட்சி மன்றங்களுக்குத் தொடக்கக் கல்விக்கான பொறுப்பு அளிக்கப்பட்டுள்ளது. கல்விக்காக நிதிதிரட்ட சிறப்பு மேல்வரிகளை விதிக்கும் அதிகாரங்களுக்கும் அவற்றிற்கு அளிக்கப்பட்டுள்ளன. அவற்றின் நிதிநிலைக்கேற்ப தேர்வுசெய்யப்பட்ட பகுதிகளில் கட்டாயத் தொடக்கக் கல்வியை அறிமுகப்படுத்தவும், இச்சட்டம் உள்ளாட்சி மன்றங்களுக்கு ஆணையிட்டுள்ளது.

பெண்களின் கல்விநிலை பற்றி அண்மைக் கட்டுரையொன்று அக்கறையான சிறப்பம்சங்களை வெளியிட்டுள்ளது. இதன்படி தொடக்கக் கல்வியில் பெண்களோடு ஆண்களின் விகிதம் 1911-12-இல் 4:1-லிருந்து 1926-27-இல் 4:1-க்கு மாறியுள்ளது. பெண்கல்வியின் வளர்ச்சி (1929) மீது வெளியிடப்பட்ட ஒரு அறிக்கை பெண் கல்விக் கெதிரான தடைகளைத் தெரிவிக்கிறது. மொத்தத்தில் மக்கள் குறிப்பாய் பிற்பட்ட வகுப்பினர், ஆண், பெண் இணைக் கல்விமுறையை ஏற்காததால் பெண்களுக்கு வழிவாய்ப்புகளை உறுதிச் செய்யும் பொருட்டுப் பெண்களுக்கு அதிகப் பள்ளிகளைத் திறக்கும் தேவை ஏற்பட்டது.

ஆண்களுக்குப் பள்ளிகள் திறக்கவேண்டும் அவற்றை மேம்படுத்த வேண்டும் எனப் பொது மக்களிடமிருந்து கோரிக்கையும் ஆதரவும் இருந்த காரணத்தால் கல்விக்கான அளவான நிதி ஆண்களுக்கான பள்ளிகள் திறப்பதற்கும் அவற்றை மேம்படுத்தவும் பயன்படுத்தபட்டன. உதவிபெறும் தனியார் முகமைகளும்கூட, அதிக வரையிட்ட சிறார் தொகுதிக்கு மட்டுமே பயன்படக்கூடிய பெண்கள் பள்ளிகளைத் திறக்க ஆர்வம் காட்டவில்லை. மேலும், பெண்கல்வியின் பரவல் பயிற்சி பெற்ற பெண் ஆசிரியைகள் குறிப்பாக இந்து மற்றும் முஸ்லிம் பெண்கள் கிடைக்கப் பெறாமையால் ஏற்கெனவே கடுமையாகத் தடைபட்டிருந்தது. மார்ச் 1972-இல் உயர் மற்றும் கீழ்த் தொடக்க நிலைகளில் 39,000 ஆண் ஆசிரியர்களுக்கெதிராய், 6,000 பெண் ஆசிரியைகள் மட்டுமே இருந்தனர். இதுவே அதிகாரிகளால் அக்காலத்தில் திருப்தியானதாய் கருதப்பட்டது.

**மாவட்ட அளவு பகுப்பாய்வு**

மொத்த சேர்க்கை விகிதத்தில் மாவட்ட அளவிலான வேறுபாடுகள், 1998-99-க்கான பள்ளிக் கல்வித் துறையின் அடிப்படை விவரங்களைப் பயன்படுத்தி ஆய்வு செய்யப்படும். தொடக்க நிலையில், 1998-99-ஆம் ஆண்டில் மொத்த சேர்க்கை 105.21%-ஆக இருந்தது. ஆண்களின் சேர்க்கை 106.37%-ம் பெண்களின் சேர்க்கை 104.01%-ஆகவும் இருந்தது தொடக்க வகுப்புகளில் மொத்தச் சேர்க்கை விகிதம் (மொ.சே.வி) மாவட்டங்களுக்கிடையில் பெரும் வேறுபாட்டைக் காட்டுகிறது. விழுப்புரத்தில் 85.86%-லிருந்து கோயம்புத்தூரில் 114.40%-ஆக உள்ளது. மாவட்ட வாரியான பெண்கள் சேர்க்கையும்கூட இதே மாதிரியான முறையையே வெளிப்படுத்துகிறது. மாவட்டங் களிடையில் மொத்த பெண்கள் சேர்க்கைக்கும், குறைவான பெண்கள் சேர்க்கைக்கும் தெளிவான ஒரு ஒப்புமைத் தொடர்பு உள்ளது. பெண்களின் மொத்தச் சேர்க்கை விகிதம் (மொ.சே.வி) எட்டு மாவட்டங்களில் 100%-க்கும் குறைவாயிருந்தது. தருமபுரியும் விழுப்புரமும் பெண்களுக்கு 90%-க்கும் குறைவான மொத்தச் சேர்க்கை விகிதத்தைப் பெற்றிருந்தன. எட்டு மாவட்டங்களில் ஆறு உலக வங்கியின் நிதியுதவியுடன்கூடிய மாவட்டத் தொடக்கக்கல்வித் திட்டத்தின் (மா.தொ.க.தி) கீழ் உள்ளடக்கப்பட்டுள்ளன. மற்ற இரண்டில் சேலம் மற்றும் நாமக்கல்லில் பள்ளி செல்லும் வயதுப் பெண்களின் மக்கட்தொகையின் மதிப்பீடு உள்ளபடியேயான புள்ளவிவரங்களைவிட சிறிதளவு அதிகமாயிருக்கக்கூடும். ஒரு உயர் குழந்தை சிறப்புவிகிதமும் வேகமாய் குறைந்து வரும் பாலின விகிதமும், மொத்த சேர்க்கை வீதத்தைத் திரித்துக்கூறி, அது உண்மையாயிருப்பதைக் காட்டிலும் குறைவாயிருப்பதுபோல் தோன்றச் செய்கிறது.

மொத்தப் பாலின ஏற்றத்தாழ்வு குறிப்பிடத் தக்கதாயிராத போதிலும் பாலின வேறுபாடு குறைவான செயலாக்கமுள்ள கடலூர், விழுப்புரம், பெரம்பலூர், புதுக்கோட்டை மாவட்டங்களில் மிகவும் வெளிப்படையாகத் தெரிகிறது. ஏனைய சில மாவட்டங்களில் பெண்களின் மொத்தச் சேர்க்கை விகிதம் ஆண்களுடையதற்கு இணையாய் (அ) அதைவிடச் சிறிதளவு அதிகமாகவும் இருக்கிறது. தொடக்கப்பள்ளி நிலையில், பெண்களுக்கு வழிவாய்ப்பினை உறுதிப்படுத்துவதில் மாநிலம் சிறிதளவு முன்னேற்றம் கண்டுள்ளதையே இது காட்டுகிறது.

தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் பழங்குடியின வகுப்பினருக்கும் தனித்தனியாய் மாவட்டஅளவு மொத்த சேர்க்கை விகிதம் கிடைக்கப் பெறவில்லை. இருப்பினும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் மற்றும் பழங்குடியினச் சிறாரின் சேர்க்கை 1998-99-இல் மொத்த சேர்க்கையில் 24%-ஆக இருந்தது. இது மாநிலத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மற்றும் பழங்குடியின வகுப்பினரின் விழுக்காட்டைவிட அதிகம் (19.2%) மாவட்டத் தொடக்கக்கல்வித் திட்டத்தில் உள்ளடக்கப்பட்ட மாவட்டங்களின் அடிப்படை விவரங்கள் தொடக்க வகுப்புகளில் தாழ்த்தப்பட்ட மாணவரின் சேர்க்கை விகிதத்தில் இதே போக்கிலிருப்பதை உறுதிசெய்கிறது. இது எல்லா வகுப்பினரையும் ஒன்று சேர்த்திருப்பதைவிட உயர்வாயிருக்கிறது.

**பெட்டி 5.2 சேர்க்கைக்கு ஊக்கம்**

தொடக்கக்கல்வியில் மாணவரின் சேர்க்கையை அதிகரிக்கச் செய்யப் பல்வேறு திட்டங்களை அறிமுகப்படுத்தியதில் தமிழ்நாடு ஒரு முன்னோடியாயிருந்து வருகிறது.

இவற்றில் மிக முக்கியமானது மதிய உணவுதிட்டம் சூலை 1982-இல் 2-9 வயது தொகுதியிலிருக்கும் எல்லா கிராமப்புற சிறார்களும் பயன்பெறும் வகையில் மாபெரும் இத்திட்டத்தை அரசு அறிமுகப்படுத்தியது. செப்டம்பர் 1984-இல் இத்திட்டம் நகர்ப் புறங்களுக்கும் 10-15 வயது தொகுதி சிறார்களுக்கும் (கிராமப்புற / நகர்ப்புற ஆகிய இரண்டும்) அதாவது 10-ஆம் வகுப்பு வரை விரிவுபடுத்தப்பட்டது. இத்திட்டத்தின் முக்கிய நோக்கம் சிறார்களுக்கு ஊட்டச்சத்து ஆதரவளிப்பது மட்டுமின்றி தொடக்கப்பள்ளியில் அனைவரின் சேர்க்கை மற்றும் தொடர்ந்திருப்பதை அடைந்திட ஒரு பயனளிக்கும் ஊக்குதவியாயுமிருந்தது 40,437 பள்ளி உணவு மையங்களில், 5-14 வயதுத் தொகுதியிலிருக்கும் ஏறத்தாழ 6.4 மில்லியன் சிறார்கள் பயன்பெறுகின்றனர்.

மாநில அரசானது அரசு மற்றும் அரசு உதவிப் பெறும் பள்ளிகளில் எட்டாம் வகுப்பு வரை பயிலும் எல்லாச் சிறார்களுக்கும் இலவசப்பாட புத்தகங்களை வழங்குகிறது. ஒரு குழந்தையைப் பள்ளிக்கனுப்பும் பணச்செலவைக் குறைப்பதை நோக்கமாகக் கொண்ட மற்றொரு திட்டம் மத்திய உணவு திட்டத்தின் மூலம் பயன்பெறும் அனைவருக்கும் இலவச சீருடை வழங்கும் திட்டமாகும். இத்திட்டத்தின் கீழ் 6.04 மிலியன் பயனாளிகள் பயனடை கின்றனர். இதற்கு வரவுசெலவு திட்ட ஒதுக்கீடு ரூ. 250 மில்லியன்கள் ஆகும். இத்திட்டங்கள் தொடங்கப் பட்டபின் மாணவர் வருகையில் முன்னேற்றமும் படிப்பைப் பாதியில் விட்டுச் செல்வோர் எண்ணிக்கைவீதம் குறைந்தபோதிலும், எல்லாருக்கும் கல்வியில் இத்திட்டங்களின் பயன் எந்த அளவுக்கு என்பதை மதிப்பீடு செய்ய அறிவியலான ஆய்வுகள் ஏதுமில்லை.

### தொடக்க மற்றும் நடுநிலைப் பள்ளிகளில் வருகை

கல்வி 'வசதிகளின் பயனீடு' மீதான தே.மா.க. நிறுவனத்தின் 52-ஆவது சுற்றில் அளவையின்படி தொடக்க, நடுநிலைப்பள்ளி நிலைகளில் பள்ளி வருகை அடைவு தொடர்பான பல்வேறு இந்திய மாநிலங்களின் செயலாக்கத்தின் ஒப்பீட்டுப் பகுப்பாய்வை அட்டவணை 5.2-இல் காணலாம். மொத்த வருகை விகிதம் (மொ.வ.வி.) 6-10 வயதுத் தொகுதியில் 98% மற்றும் 11-14 வயதுத் தொகுதியில் 80%-உடனும் நாட்டில் மேலான செயலாக்க மாநிலங்களில் தமிழ்நாடு ஒன்றாய் விளங்குகிறது. கேரளாவும் இமாசலப் பிரதேசமும் மிகச் சிறப்பான புள்ளிவிவரங்களைப் பெற்றுள்ளன. இருப்பினும் பஞ்சாப், அரியானா மற்றும் மகாராஷ்ட்ரா போன்ற மாநிலங்கள், தொடக்க மற்றும் நடுநிலைப்பள்ளி நிலைகளில் இணையான (அ) உயர் வருகை அளவுகளுடன் முன்னிலையை நோக்கி நடைபோடுகின்றன. இப்போட்டியில் முந்திட தமிழ்நாடு அதன் கல்வி முறையை செம்மைப்படுத்த வேண்டும் என்பது தெளிவு.

**அட்டவணை - 5.2 : மொத்த வருகை விகிதம்**

மொ.வ.வி

| | 1-5 | 6-8 |
|---|---|---|
| ஆந்திரப்பிரதேசம் | 86 | 58 |
| கர்நாடகம் | 87 | 61 |

*(தொடர்ச்சி)*

| | 1-5 | 6-8 |
|---|---|---|
| கேரளா | 109 | 97 |
| மகாராஷ்ட்ரா | 106 | 80 |
| அரியானா | 106 | 86 |
| தமிழ்நாடு | 98 | 80 |
| பீகார் | 54 | 51 |
| மொத்த இந்தியா | 85 | 65 |

*ஆதாரம் : தேசிய மாநில கல்வி திட்டம் 1995-96*

## தொடக்கப் பள்ளிகளில் நிறுத்தி வைத்தல்

கல்வித்துறையின் புள்ளிவிவரங்கள், தொடக்கநிலையில் பள்ளிப்படிப்பைப் பாதியில் விட்டுச் செல்பவர்களின் வீதங்களில், கடந்த பத்தாண்டுகளில் ஒரு நிலைத்த குறைவைக் காட்டுகிறது. 14.52% ஆண்களின் விகிதம் 12.98% பெண்களின் விகிதம் 16.15% இருப்பினும் இவ்விகிதம் படிப்பைப் பாதியில் விட்டுச் செல்லும் விகிதங்களின் மாவட்டவாரியான பகுப்பாய்வு அதிக மாறுபாட்டைக் காட்டாத காரணத்தால் இயலாதிருக்கிறது. வழக்கமான இவ்வீதக் கணக்கீட்டுமுறை அடிப்படை விவரங்களின் தரம் மற்றும் திரட்டுமுறையைப் பொறுத்தமையும்.

ஆறாவது கல்விக் கணக்கெடுப்பு மாவட்டவாரியான நீடித்திருப்பு விவரங்களையும் அளிக்கிறது. இக்கணக்கெடுப்பில் 1-ஆம் வகுப்பு சேர்க்கையின் ஒரு விழுக்காடாய் 5-ஆம் வகுப்பு சேர்க்கையின் விழுக்காடு ஆய்வு செய்யப்பட்டுள்ளது. இவ்விவரங்கள் சில தகவல்களைத் தெரிவிப்பதாய் அமைகிறது. 5-ஆம் வகுப்பின் மொத்தசேர்க்கை, அதே ஆண்டில் 1-ஆம் வகுப்பு சேர்க்கையில் 84.98%-ஆக இருப்பினும், துறையின் படிப்பைப் பாதியில் விட்டுச் செல்லும் வீதப்படி, மாவட்டங்களிடையில் பெரும் மாறுபாடுகள் காணப்படுகின்றன. மறுபடியும் தருமபுரியே பின்னாலிருப்பதை 74.79%-உடன் மட்டுமே மேலே கொண்டு வருகிறது. சென்னை, நீலகிரி, கன்னியாகுமரி ஆகிய மூன்று மாவட்டங்களில் விகிதங்கள் 100%-க்கு அதிகமாயுள்ளன. மொத்தத்தில் மாநிலத்தில், ஆண்களுக்கும் பெண்களுக்கும் புள்ளிவிவரங்கள் நடைமுறையில் சரிசம நிலையில் உள்ளன. தருமபுரி, கடலூர், விழுப்புரம், புதுக்கோட்டை மற்றும் ஈரோடு ஆகிய சில மாவட்டங்களில் ஆண்-பெண் இடைவெளி மிகவும் குறிப்பிடத்தக்க அளவில் உள்ளது.

இவ்விதம் படிப்பைப் பாதியில் விட்டுச் செல்வோர் வீதம் எனக் கூறப்படும் வீதங்கள் உள்ளபடியே பள்ளி முறைவிட்டுச் செல்லும் சிறார்களின் உள்ளபடியேயான விழுக்காட்டின் அளவல்ல. ஆனால் அவை 5-ஆம் வகுப்பில் சேர்க்கை எண்ணிக்கை விவரங்களில் ஒரு பகுதியாய் அமைந்த மீண்டும் மீண்டும் வந்து சேருவோரின் விழுக்காட்டையும் உள்ளடக்கியதாகும்.

மீண்டும் மீண்டும் வந்து சேருகையின் நிகழ்வு ஆறாவது கல்விக் கணக்கெடுப்பிலிருந்து எடுக்கப்பட்ட புள்ளிவிவரங்களில் விளக்கப்பட்டுள்ளது. இதன்படி மீண்டும் சேருவோர் தொடக்க

வகுப்புகளில் சேர்க்கையில் 14.31% ஈடுசெய்கின்றனர். 11-ஆம் வகுப்பில் 15.92%-ம் 2-ம் வகுப்பில் 13.14%-ம் சிறார்களை முதல் இருவகுப்புகளில் நிறுத்தி வைத்திருப்பதற்கான காரணங்கள் முழுமையாய்ப் பகுப்பாய்வு செய்யப்பட வேண்டும்.

**அட்டவணை - 5-3 : மாவட்டத் தொடக்கக் கல்வித்திட்டம் (மா.தொ.க.தி) முடிப்புவீதம், பாதியில் விட்டுச் செல்கைவீதம் மற்றும் மீண்டும் சேருவோரின் விழுக்காடு**

| மாவட்டத்தின் பெயர் | முடிப்பு வீதம் | பாதியில் விட்டுச் செல்லும் விதம் | மீண்டும் சேருவோரின் விழுக்காடு |
|---|---|---|---|
| படிநிலை - 1 மாவட்டங்கள் | | | |
| தருமபுரி | 50.74 | 21.93 | 27.34 |
| கடலூர் | 57.27 | 13.54 | 29.19 |
| திருவண்ணாமலை | 60.44 | 14.63 | 24.93 |
| விழுப்புரம் | 56.44 | 17.95 | 25.61 |
| படிநிலை - 2 மாவட்டங்கள் | | | |
| புதுக்கோட்டை | 53.72 | 17.67 | 28.62 |
| பெரம்பலூர் | 52.05 | 18.47 | 29.48 |
| இராமநாதபுரம் | 52.26 | 17.78 | 29.96 |
| மா.தொ.க.தி. மாவட்டங்களின் சராசரி | 55.01 | 17.57 | 27.41 |

ஆதாரம் : *மா.தொ.க.தி. MAS*

மாவட்டத் தொடக்கக் கல்வித் திட்டத்தின் கீழான ஆய்வுகள் (பெட்டி 5.3-ஐ பார்க்கவும்) பள்ளிமுறையின் உட்புறத்திறமை மீண்டும் சேருகையின் உயர்அளவால் தூண்டுவிக்கப்படும் என்பதை வெளிப்படுத்துகிறது. அனைத்து 7 மாவட்டத் தொடக்கக் கல்வித் திட்ட மாவட்டங்களில் 1994-95-ஆண்டுகளிலிருந்து 1998-99 வரையிலான காலத்திற்கு மேற்கொள்ளப்பட்ட ஒருங்கிணைந்த விரிவான ஒரு ஆய்வு தொடக்க வகுப்புகளில் உள்ளபடியேயான முடிப்புவீதம் (உ.மு.வீ) 55-01% மட்டுமே எனக் காட்டுகிறது. அதாவது 55% சிறார்கள் மட்டுமே 5 ஆண்டுகளின் முடிவில் தொடக்கப்பள்ளிப் படிப்பை முடிக்கிறார்கள். (அட்டவணை - 5-3) இந்த மோசமான முடிப்புவீதம் அச்சம்தரும் மீண்டும் சேருகையின் உயர் விழுக்காட்டில் (27.41%) மேலும் கூடுதலாக்கப்பட்ட படிப்பைப் பாதியில் கைவிடும் சராசரியான 17.51%-ன் காரணத்தால் ஏற்பட்டது. ஆய்வு செய்யப்பட்ட 7 மாவட்டங்களில் திருவண்ணாமலை மிக உயர்வாக 60.44% உள்ளபடியேயான முடிப்பு வீதத்தைக் (உ.மு.வீ) காட்டுகிறது. தருமபுரி மிகக் குறைவாக 50.74%-ஐக் காட்டுகிறது.

**பெட்டி 5.3 - தொடக்கக் கல்வியில் தரமேம்பாடு : மாவட்டத் தொடக்கக் கல்வித் திட்டம் (மா.தெ.க.தி.)**

வெளிப்புற உதவியுடனான மாவட்டத் தொடக்கக் கல்வித் திட்டம் 1993-94- ஆண்டுகளிலிருந்து தேர்வு செய்யப்பட்ட பிற்பட்ட மாவட்டங்களில் செயலாக்கப் படுகிறது. அனைவருக்கும் தொடக்கக் கல்வி எனும் குறிக்கோளை அடைவதை நோக்கமாய் கொண்ட இத்திட்டம் தொடக்க வகுப்புகளில் கல்வியின் தரமேம்பாடு மற்றும் பள்ளிகளுக்கும் மாவட்டங்களுக்குமிடையே சமச்சீர் நிலை இருக்கவேண்டும் என்பதில் கவனம் செலுத்துகிறது. இத்திட்டத்தில் உள்ளடக்கப்பட்ட மாவட்டங்கள் முதலாவது படிநிலையில் தருமபுரி, திருவண்ணாமலை, கடலூர் மற்றும் விழுப்புரம் இரண்டாவது படிநிலையில் புதுக்கோட்டை, பெரம்பலூர், அரியலூர் மற்றும் இராமநாதபுரம் ஆகும்.

இத்திட்டத்தின்கீழ், தொடக்க வகுப்புகளில் பணியாற்றும் ஆசிரியர்களால் சிறார்களை மையமாய் கொண்ட நடவடிக்கைகளின் அடிப்படையாய்க் கொண்டு பாடபுத்தகங்களும் செய்முறைப் புத்தகங்களும் உருவாக்கப்படுகின்றன. ஒன்றிய வள ஆதார மையங்கள் அமைப்பதன் மூலம் ஆசிரியர்களுக்குத் தொடர்ச்சியான பணியிடைப் பயிற்சிக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது.

பள்ளிக்கட்டிடங்கள், கழிவறைகள் போன்ற கட்டமைப்பு வசதிகளை அளிப்பதோடு கூடுதலாய் பள்ளிப்படிப்பை இடையில் கைவிட்டவர்களுக்கு மாற்றுப் பள்ளிகள், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மற்றும் பழங்குடியினப் பெண்களுக்குத் தனிப்பயிற்சி வகுப்புகள் போன்ற புதிய பகுதிகளையும் இத்திட்டம் அளிக்கிறது. 42 ஒன்றியங்களில் செயலாக்கப் பட்டுவரும், ஊனமுற்றோருக்கான ஒருங்கிணைந்த கல்வி திட்டம் மற்றொரு வெற்றிகரமாய் செயல்படுத்தப்படும் திட்டமாகும். அரசு சாராத அமைப்புகள், வழக்கமான பள்ளிகளில் பயிலும் சிறிதளவு ஊனமுற்ற சிறார்களுக்கு ஒருங்கிணைந்த கல்வியளிக்க ஆசிரியர்களுக்குப் பயிற்சியளிக்கப் பயன்படுத்தப்படுகின்றன. மாவட்டத் தொடக்கக் கல்விதிட்டம், பொதுமக்களின் உறுதியான பங்கேற்பு திட்டத்தையும் தன்னுட் கொண்டுள்ளது. பொதுமக்களின் பங்கேற்பு மூலம் 94 பள்ளிக்கட்டிடங்கள் கட்டப்பட்டுள்ளன.

மீண்டும் சேர்க்கை மற்றும் மாணவர் பள்ளிப்படிப்பை இடையில் கைவிடல் போன்றவற்றால் ஏற்படும் கழிவு, தனி ஒரு மாணவருக்குக் கல்வியளிக்கும் செலவை அதிகரிக்கச் செய்கிறது. இதன்மூலம் அரிதாய்கிடைக்கும் வளஆதாரங்களை இந்நோக்கத்திற்கு மாற்றுகிறது. மேலும், அதிக அளவிலான கழிவுகள், மோசமான தரக்கல்வியுடன் நெருக்கமாய் ஒப்புமைத் தொடர்பு செய்யப்படுகிறது. பள்ளிக்குத் தொடர்புள்ள செயலாக்கத்தைக் கண்காணித்து மேம்படுத்தப் பயன்படுத்தக்கூடிய நல்ல சுட்டிக்காட்டிகளாகும்.

**சாதனை**

பள்ளிப்படிப்பு முறையில் வழிவாய்ப்பு மற்றும் நிறுத்தி வைத்தலில் தொடக்க முன்னுரிமைகள் காரணமாய் தொடக்கக்கல்வியில் தரம் மற்றும் சாதனைத் தொடர்பான வரலாற்றுப் போக்குகள்

தயாராய் கிடைக்கப் பெறவில்லை இருப்பினும், மாவட்டத் தொடக்கக் கல்வித்திட்ட (மா. தொ. க. தி.) மாவட்டங்களில் இடைக்கால மதிப்பீட்டின்போது மேற்கொண்ட கணிதம் மற்றும் மொழிச் சாதனையின் அடிப்படையிலான ஆய்வுகளிலிருந்து சில முடிவுகளை எட்ட இயலக்கூடும். முதல் வகுப்பில் மொழியில் சராசரி செயலாக்கம். திருவண்ணாமலையில் 56.34%-லிருந்து விழுப்புரத்தில் 79.4% வரையிலும் கணிதத்தில் திருவண்ணாமலையில் 52.27%-லிருந்து விழுப்புரத்தில் 77.6% வரை மாறுபடுகிறது.

நான்காம் வகுப்புத்தேர்வில் மொழியில் மாவட்டங்களின் செயலாக்கம் திருவண்ணாமலையில் 43%-லிருந்து கடலூரில் 59.7%-வரை மாறுபடுகிறது. கணிதத்தில், மிகச்சிறந்த செயலாக்கம், 50.98% விழுப்புரத்தில் காணப்படுகிறது. இவ்வாய்வின்போது வெளிப்பட்ட மற்றொரு முடிவு, முதலாம் வகுப்பில் சாதனையில் பாலினப்பாகுபாடு 5%-க்கும் குறைவாகக் குறைக்கப்பட்டதே. நான்காம் வகுப்பில் ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையில் குறிப்பிடத்தக்க வேறுபாடு ஏதும் காணப்படவில்லை.

**படம் 5.3 : முதல் வகுப்பு மாணவர்கள் சாதனையின் சராசரி விழுக்காடு**




| | அசாம் | அரியானா | கர்நாடகா | கேரளா | தமிழ்நாடு |
|---|---|---|---|---|---|
| மொழி | 73.27 | 69.46 | 70.03 | 76.41 | 65.52 |
| கணிதம் | 74.45 | 76.48 | 71.78 | 72.91 | 61.66 |

*ஆதாரம் : மா.தொ.க.தி - MAS*

தமிழ்நாட்டிலும் மற்ற மாநிலங்களிலிருக்கும் மா.தொ.க.தி. மாவட்டங்களின் சராசரி புள்ளிவிவரங்களின் ஒப்பீடு படங்கள் 5.3 மற்றும் 5.4-இல் அளிக்கப்பட்டுள்ளது. மாநிலத்தின் செயலாக்கம் 1-ம் வகுப்புக்கு மொழி, கணிதமிரண்டிலும் பின்தங்கியிருந்தாலும், 4-ம் வகுப்பு மாணவர்களின் மொழியில் செயலாக்கம் மற்ற மாநிலங்களிலிருப்பதைவிட மேலானதாயிருக்கிறது. கணிதத்தில் 4-ஆம் வகுப்பு மாணவர்களின் செயலாக்கம் மத்தியப்பிரதேசத்திலிருக்கும் மாணவர்களின் செயலாக்கத்தைவிட மேலானதாயிருக்கிறது. மாவட்டத் தொடக்கக் கல்வித் திட்டத்தின் முதல்படியில் உள்ளடங்கிய மாவட்டங்கள் மாநிலத்தில் கல்வியில் மிகப் பின்தங்கிய மாவட்டங்களாயிருப்பதால் அவற்றின் செயலாக்கம் மாநிலத்தின் மற்ற மாவட்டங்களிலிருப்பதைக் காட்டிலும் சிறிதளவு மோசமாயிருக்கலாம்.

**படம் 5.4 : 4ம் வகுப்பு மாணவர்களின் சாதனையின் சராசரி விழுக்காடு**




*ஆதாரம் : மா.தொ.க.தி - MAS*

வீட்டுக்குத் தொடர்பான காரணங்கள் மட்டுமே பெரியதொரு செயல் விளைவைப் பெற முடியாது. தொடக்கப்பள்ளிகளிலேயே நல்ல உள்ளீடுகள் அவற்றைப் பின்தொடர்ந்து வரவேண்டும். தொடக்கக் கல்வி நிலையை நன்கு புரிந்துகொள்ள, கல்வித்துறை தொடக்கக் கல்வியின் தரத்தையும் சிறாரின் சாதனையளவுகளை ஆய்வு செய்ய ஒரு நுட்பக்குழு அமைப்பை ஏற்படுத்த வேண்டும்.

## தொடக்கப் பள்ளிக் கட்டமைப்பு

தமிழ்நாட்டிலும் மற்றும் பொதுவாக ஏனைய மாவட்டங்களிலும் கல்வியின் பயிற்றுவிக்கும் முறை மற்றும் விளைவு குறித்து ஆய்வு செய்தான பின்னர், இத்தகைய அடைவு நிலைகளை அடைய இயல்விக்கும் (அ) உண்மையில் உயர் அடைவு நிலைகளை அடையப் பல்வேறு கட்டமைப்பு முதலீடுகளைப் பற்றித் தற்போது அறிய வேண்டியதவசியமாகிறது.

## தொடக்கப் பள்ளிகளின் கிடைக்கப் பெறும் நிலை

300-ம் அதற்கும் மேற்பட்ட மக்கட் தொகையைப் பெற்றிருக்கும் ஒவ்வொரு குடியிருப்பிடமும், ஒரு கிலோ மீட்டர் தொலைவுக்குள் ஒரு பள்ளியைக் கொண்டிருக்க வேண்டும் என்பது அரசின் கொள்கை. 1993-94-ல் மேற்கொள்ளப்பட்ட ஆறாவது கல்விக் கணக்கெடுப்பின்படி 45139 குடியிருப்பிடங்களில் 44516 (300-க்கும் மேற்பட்ட மக்கட்தொகையைக் கொண்டவை) இந்த அளவைகளுக்கேற்ப அமைந்திருக்கின்றன. அடுத்துவரும் ஆண்டுகளில், மாநில அரசு கணக்கெடுப்பில் கண்டறியப்பட்ட 603 குடியிருப்பிடங்களில் மட்டுமில்லாமல் அடுத்ததாக மக்கட்தொகையைப் பெறும் இடங்களிலும் கூடப் புதிய தொடக்கப் பள்ளிகளைத் திறந்துள்ளது.

## அடிப்படைக் கட்டமைப்பு கிடைக்கப்பெறும் நிலை

தமிழ் நாட்டிலிருக்கும் தொடக்கப் பள்ளிகள் 62.34% குடிநீர் வசதியையும் 19.97% சிறுநீர்க் கழிப்பிடங்களையும் 12.57% கழிப்பிட வசதிகளையும் பெற்றுள்ளன. இது ஒப்பிட்டடிப்படையில்

தமிழ்நாட்டை அனைத்திந்தியச் சராசரியைவிட மேலான இடத்தில் வைத்தபோதிலும் 76.16% தொடக்கப் பள்ளிகள் குடிநீர் வசதியைப் பெற்றிருக்கும் கேரளா போன்ற மாநிலங்கள் மிகச் சிறப்பாக செயல்படுகின்றன. இந்த அளவுகளுக்குள்ளான உள்ளடக்கம் பஞ்சாப், அரியானா போன்ற மாநிலங்களிலும் சிறந்துள்ளன.

**அட்டவணை - 5.4 : அடிப்படைக் கட்டமைப்பு தேர்வு செய்த மாநிலங்கள்**

| மாநிலம் | குடிநீர் | சிறுநீர்க் கழிப்பிடம் | கழிப்பறை |
|---|---|---|---|
| கேரளா | 76.16 | 81.38 | 40.29 |
| தமிழ்நாடு | 62.34 | 19.97 | 12.57 |
| அரியானா | 76.95 | 56.30 | 15.7 |
| ஆந்திரப்பிரதேசம் | 31.42 | 7.34 | 6.01 |
| கர்நாடகா | 23.94 | 4.57 | 3.31 |
| பஞ்சாப் | 87.72 | 52.49 | 20.87 |
| அனைத்திந்தியா | 44.23 | 18.93 | 10.86 |

*ஆதாரம்: ஆறாவது கல்விக் களஆய்வு*

கல்விக் கட்டமைப்பைப் பொறுத்தவரை 232 பள்ளிகள் மட்டுமே கரும்பலகைகளைப் பெற்றிருக்கவில்லை என அறிவித்துள்ளன. அறிவித்த 34,000 பள்ளிகளில் ஏறத்தாழ 24,000 பள்ளிகள் கணிதம் மற்றும் அறிவியல் கருவிகலப் பெட்டிகளைப் பெற்றுள்ளன. இவை கரும்பலகை இயக்கம் (Operation Black Board) மூலம் வழங்கப்பட்டிருக்கலாம். 18,069 பள்ளிகளில் ஒளியிழைப் பதிவகங்கள் இருப்பது ஆய்ந்தறியப்பட்டுள்ளது. 17,990 பள்ளிகளில் விளையாட்டுக் கருவிகள் கிடைக்கப்பெறுகிறது. இருப்பினும் ஒப்பீட்டடிப்படையில், கணக்கெடுப்பு நல்லதொரு நிலையைத் தெரிவித்த போதிலும், முடிவுகள் சரி பார்க்கப்பட வேண்டும். அதாவது இவ்வனைத்துப் பொருட்களும் உள்ளபடியே பயன்படுத்தப்படுகின்றனவா (அ) பயன்படுத்தத்தக்க நிலையிலாவது உள்ளனவா என்பதை சரிபார்க்க வேண்டும்.

**அட்டவணை - 5.5 : மாணவர் - ஆசிரியர் விகிதம்**

| மாநிலம் | தொடக்க | நடுநிலை |
|---|---|---|
| 1 | 2 | 3 |
| ஆந்திரப்பிரதேசம் | 49.26 | 44.71 |
| பீகார் | 49.58 | 42.99 |
| கேரளா | 31.05 | 30.10 |

*(தொடர்ச்சி)*

| 1 | 2 | 3 |
|---|---|---|
| தமிழ்நாடு | 37.19 | 42.22 |
| மகாராஷ்ட்ரா | 37.47 | 38.10 |
| அனைத்திந்தியா | 40.00 | 36.07 |
| குஜராத் | 35.98 | 41.08 |
| ராஜஸ்தான் | 36.73 | 29.09 |
| ஒரிசா | 37.50 | 31.49 |
| அசாம் | 34.80 | 19.77 |

*ஆதாரம்: ஆறாவது கல்விக் கணக்கெடுப்பு*

**ஆசிரியர்கள் கிடைக்கப்பெறும் நிலை**

மாநில முழுமைக்கும் தொடக்கப்பள்ளிகளுக்கான மாணவர் - ஆசிரியர் விகிதம் 38. இது அனைத்திந்திய சராசரியான 40-ஐ விட மேலானது. மாணவர் ஆசிரியர் விகிதத்தின் மாநில வாரியான நோக்கில் தெரிய வருவதென்னவென்றால், இந்த விகிதத்திற்கும், செயலாக்கத்திற்குமிடையில் சரி நுட்பமான ஒப்புமைத் தொடர்பு ஏதுமில்லை என்பதைக் காட்டுகிறது. தமிழ்நாட்டின் விகிதம் இடைநிலை அளவில் அமைந்திருக்கிறது. இது கேரளாவின் மதிப்புக்கு (31.05) மேலாகவும், ஆந்திரப் பிரதேசம் மற்றும் பீகாரின் மதிப்புகளுக்கும் (முறையே 49.26 மற்றும் 49.58) மிகக் குறைவாய் உள்ளது. கல்வியில் பின்தங்கியுள்ள ஒரிசா, ராஜஸ்தான், அசாம் போன்ற மாநிலங்களிலும் கூடத் தொடக்க நிலையில் தமிழ்நாட்டுடன் ஒப்பிடக்கூடிய அளவு மாணவர் ஆசிரியர் விகிதங்களைப் பெற்றுள்ளன. ஆசிரியர்களின் பரவலான பங்கீடு மட்டுமல்லாமல், ஏனைய கட்டமைப்பு அளவைகள் கல்வி செயலாக்கத்தினைச் சுட்டிக் காட்டும் ஒரு கருவியாயிருக்கும் என்ற கருத்து ஆய்ந்தறியப்படுகிறது.

மாணவர்-ஆசிரியர் விகிதம் தமிழ்நாட்டிலுள்ள மாவட்டங்களிடையே குறிப்பிடத்தக்க வகையில் அளவு வேறுபடுகிறது 6-வது கல்விக் கணக்கெடுப்பின் அடிப்படை விவரங்கள், மாணவர், ஆசிரியர் விகிதம் தருமபுரியில் 56 ஆகவும், நீலகிரியில் 26 ஆகவும் வேறுபடுகிறது. பின்னர் தொடர்ந்து வருகின்ற நிலையில் ஆசிரியர் பணிக்காலியிடங்கள் முறைப்படி நிரப்பப்பட்டுள்ளன. மேலும் மாணவர், ஆசிரியர் அதிக விகிதாச்சாரமுள்ள மாவட்டங்கள் மா.தொ.க. திட்டத்தில் உள்ளடக்கப்பட்டுள்ளன. மொத்தத்தில் உள்ள ஏற்றத்தாழ்வினைக் குறைக்க உதவியது. 1998-99ல் புள்ளிவிவரங்களில் இது பிரதிபலிக்கிறது. தொடக்கப் பள்ளிகளில் மொத்த விகிதம் 38 ஆகத் தொடர்ந்திருக்கையில் கல்வியில் பின்தங்கியுள்ள 33,40,41 மற்றும் 41 விகிதங்கள் முறையே கொண்டுள்ள திருவண்ணாமலை, கடலூர், தருமபுரி மற்றம் விழுப்புரம் மாவட்டங்களில் ஓரளவு முன்னேற்றம் காணப்படுகிறது. இருப்பினும் புதுக்கோட்டையில் 54-லிருந்து, திண்டுக்கல்லில் 29 வரை மதிப்புகளில் இன்னும் விரிவான பரவல் காணப்படுகிறது. மாவட்டங்களிடையே கிடைக்கப்பெறும் ஆசிரியர்களை மறுபங்கீடு செய்ய முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

ஒவ்வொரு மாவட்டத்திலும் மாணவர் - ஆசிரியர் விகிதமும், தொடக்கப்பள்ளிகளில் ஆசிரியர் நியமனத்திற்கான அலகு, ஒன்றியமாயிருக்கும் காரணத்தால் தனியாகப் பிரிக்கப்பட்டு ஆய்வு செய்யப்படவேண்டும். தருமபுரி மற்றும் திருவண்ணாமலை ஆகிய இரண்டு மாவட்ட்ங்களின் மாணவர் ஆசிரியர் விகிதம் மாவட்ட நிலையிலான விகிதம், வெளிக்காட்டுவதைவிட அதிகம் மறைக்கின்றது என்பதையே காட்டுகிறது. தருமபுரியில் உள்ள ஒரு ஒன்றியம் மாணவர் ஆசிரியர் விகிதமாய் 32.8-ஐப் பெற்றிருக்கையில் 60-க்கு மேற்பட்ட விகிதங்களைப் பெற்ற ஒன்றியங்கள் 7 உள்ளன. இதேபோன்று. திருவண்ணாமலையில் இரு ஒன்றியங்கள் 32-க்கும் குறைவான விகிதங்களையும் 4 ஒன்றியங்கள் 50-க்கு மிகையான விகிதங்களைப் பெற்றுள்ளன. கிட்டத்தட்ட எல்லா மாவட்டங்களிலும் இதே மாதிரியான நிலை காணப்படுகிறது. மேலும் கல்வி மற்றும் ஏனைய கட்டமைப்பு வசதிகளைக் குறைவாய் பெற்றிருக்கும் பகுதிகளில் மிக அதிக விகிதங்கள் காணப்படுகின்றன. மாநிலத்தில் ஆசிரியர்கள் கிடைக்கப்பெறுநிலையை செம்மைப்படுத்திடும் வழிகளை வகுத்திடப் புதிய திட்டங்கள் தீட்டப்பட வேண்டும்.

### கட்டாயக் கல்வி சட்டம்

அனைவருக்கும் கல்வியளிக்கும் வகையில் மேற்கொள்ளப்பட்ட சட்ட முயற்சியே ‘தமிழ் நாடு கட்டாயக் கல்வி சட்டம் 1994-ன் அறிமுகம். கட்டாயக் கல்வியையளிக்கும் ஏற்பாடுகள், தமிழ் தொடக்கக்கல்வி சட்டம் 1920-ல் செய்யப்பட்டிருந்த போதிலும் இவை கட்டாயமாக்கப்படவில்லை. பெரும்பாலும் தனிப்பட்ட உள்ளாட்சி மன்றங்களின் முயற்சிகளுக்கு விடப்பட்டன.

1994-ம் ஆண்டு சட்டத்தின்கீழ் அனைவருக்கும் தொடக்கக் கல்வியளிக்கத் தேவையான கட்டமைப்பு (பள்ளிகளும், ஆசிரியர்களும்) வசதிகளையளிக்கும் அரசின் கடமை வரையறுக்கப் பட்டது. இதேபோன்று, பள்ளி செல்லும் வயதுடைய ஒவ்வொரு குழந்தையையும் பள்ளிக்கனுப்பப் பெற்றோரின் கடமையும் திட்ட வட்டமாய் அறிவிக்கப்பட்டது.

குழந்தைகளைப் பள்ளிக்கனுப்பாத பெற்றோருக்கு அபராதம் விதிக்கும் அதிகரத்தைக் கல்வி அலுவலர்களுக்களிக்கும் விதிகளை இச்சட்டத்தின் கீழ் மாநில அரசு வெளியிட்டது. இருப்பினும் இச்சட்டத்தை செயலாக்குவதில் சிக்கல்கள் இருந்தன. மிகவும் பலவீனமான நிலையிலுள்ள குடும்பங்களை சேர்ந்த குழந்தைகளே அடிக்கடி பள்ளிக்கு செல்லாமலிருந்தனர். (பெரும்பாலும் ஒற்றையான) ஏற்கெனவே, வறுமையிலும், கல்வியறிவில்லாதிருந்ததாலும் அவர்களே முழுக்காரணம் என்று கூறமுடியாத ஒரு நிலைக்கு அவர்களை மீண்டும் தண்டிக்க இயலாத நிலையிருந்தது.

### நடுநிலைப் பள்ளிக்கல்வி

### நடுநிலைப் பள்ளிகளில் மாணவர் சேர்க்கை

தொடக்கக் கல்வி நிலையில் மேம்பட்ட வளர்ச்சிச் சுட்டிக்காட்டிகளுக்கும் கல்விக்குமிடையே தொடர்பிருப்பதை ஆய்வுகள் ஏற்கனவே உறுதிப்படுத்தியுள்ளன. மாநில அரசின் 14 வயதுக்குட்பட்ட அனைவருக்கும் கல்வி எனும் ஒப்பிய பொறுப்பை ஏற்றுள்ள நிலையில் உயர் தொடக்கக் கல்வி செய்முறை சுட்டிக்காட்டும். மாநிலம் முழுவதற்கும் மட்டுமல்லாமல் மாவட்டங் களிடையே வேறுபாடுகள் பாலின் உள்ளிட்ட பகுதி மற்றும் சாதி குறித்த பகுப்பாய்வு செய்யப்படலாம்.

1998-99-க்குக் கல்வித் துறைப் புள்ளிவிவரப்படி, 6-லிருந்து 8-வது வகுப்புகளில் மொத்த சேர்க்கை விகிதம் (மொ.சே.வி.) 89.25% ஆகும். மோசமான செயலாக்க மாவட்டங்களில் மொ.சே.வி.மான 73.33% ஐக் கொண்ட கல்வியில் பின்தங்கியுள்ள தருமபுரி மாவட்டமும் அடங்கும். விளக்கப்படாத சில குறைவான புள்ளி விவரங்கள் நீலகிரியிலும், கரூரிலும் காணப்படுகின்றன. (மொ.சே.வி. முறையே 75.96 மற்றும் 72.69%) உயர்நிலை முனையில் மதுரையும், தூத்துக்குடியும் மொ.சே.வி. முறையே 100.4% மற்றும் 99.33% உடனும் உள்ளன.

பெண்களின் சேர்க்கை விவரங்களைப் பார்க்கையில், ஆண்களுக்கு ஆதரவான ஒரு தெளிவான ஒருதலை சார்புத்தன்மை காணப்படுகிறது. பெரும்பாலான மாவட்டங்களில் வேறுபாடு தொடக்கப் பள்ளி சேர்க்கையில் காணப்படுவதைவிடப் பரவலாய் உள்ளது. நீலகிரி, பெரம்பலூர், ராமநாதபுரம் மற்றும் விருதுநகரில் ஆண்களின் குறைவான சேர்க்கை விகிதம் போன்ற சில முரண்பாடான விவரங்களின் காரணங்களைக் கண்டறிய மேலும் பகுப்பாய்வு தேவையாயிருக்கிறது.

தொடக்கப் பள்ளி சேர்க்கையிலிருப்பதைப் போலன்றி மாவட்டங்களுக்கும் பாலினச் சமசீரின்மைக்கு மிடையில் நேரடியான ஒப்புமைத் தொடர்பு ஏதும் இல்லை என்பது கவனத்திற்குரிய விஷயம். ஆண்களின் மொ.சே.வி. (நீலகிரி நீங்கலாய்) மிகக் குறுகிய குழுவில் 84.54% மற்றும் 105.28%-க்குள்ளாக இருக்கின்றன. ஆனால் பெண்களின் மொ.சே.வி. மேலும் பெரிய வேறுபாட்டைக் காட்டுகிறது.

ஆண்களின் மொத்த சேர்க்கை விகிதம் (மொ.சே.வி) ஏறத்தாழ மாநில சராசரிக்குள் மற்றும் அதற்கு மிகையாயும் பெற்றுள்ள தஞ்சாவூர், நாகப்பட்டினம் மற்றும் கோயம்புத்தூர் போன்ற மாவட்டங்கள் குறைவான பெண்களின் மொ.சே.வி.ஐக் காட்டுகின்றன. இந்த வயது தொகுதியில் பெண்களுக்கான வழிவாய்ப்பினை உறுதி செய்வதில் மேலான செயலாக்கக் கல்விக் கட்டமைப்புகளைக் கொண்டிருக்கும் மாவட்டங்களிலும்கூட தடையாக சில குறிப்பிட்ட பிரச்சனைகளிருப்பதை இது தெளிவாய் சுட்டிக் காட்டுகிறது.

இப்பிரச்சனைகளைக் கண்டறிந்து நேருக்கு நேராய் அவற்றை எதிர்த்து சமாளித்திட நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

சமூக ஒருதலைசார்புத் தன்மையைப் பார்க்க வேண்டுமாயின், இதற்கு நம்பகமானவை ஆறாவது கல்விக் கணக்கெடுப்பின் புள்ளி விவரங்களாகும். இந்த வயது தொகுதியில் எல்லா வகுப்பினருடையதையும்விட (87.7) தா.ப.வ.ன் மொ.சே.வி. முரண்படும் வகையில் அதிகமாயுள்ளது. (119.1) ப.கு.யினரின் விவரங்கள் மாநில முழுமைக்குமாய் நம்பிக்கையிழக்கும் வகையில் குறைவாய் (51.9) உள்ளது. 6-8-ம் வகுப்புகளில் மொத்த சேர்க்கையில் தா.வ.ன் சேர்க்கை 18.61% ஆக உள்ளது. இது மொத்த தா.வ. மக்கட்தொகையான 19.2%க்கேற்ப அமைந்துள்ளது. இருப்பினும் மொத்த சேர்க்கையில் ப.கு.வரின் சேர்க்கை விகிதம் 0.78% ஆக உள்ளது. இது ப.கு.வ.ரின் மக்கட்தொகை விழுக்காட்டைவிடச் சிறிதளவே குறைவாய் உள்ளது என்று கல்வித்துறையின் புள்ளி விவரங்கள் தெரிவிக்கின்றது.

## நடுநிலைப்பள்ளிகளில் நிறுத்தி வைத்தல்

நடுநிலைப்பள்ளி நிலையில் படிப்பைப் பாதியில் கைவிடும் வீதம் 35.23% பெண்களின் வீதம் 33.3% ஆண்களின் வீதம் 36.85% 1998-99-ல் நடுநிலைப்பள்ளிகளில் ஆண்களின் படிப்பைப் பாதியில் கைவிடும் வீதத்தில் அசாதாரணமான வளர்ச்சி நிலை காணப்பட்டது. இதனால் பெண்களின் படிப்பைப் பாதியில் கைவிடல் வீதம் சிறிதளவு குறைந்தது. இது தற்போதிருக்கும் போக்குகளுக்கு மாறானதாயிருக்கிறது. மற்றும் பெண்கள் பூப்பெய்துவதன் காரணமாய் பாதியில் கைவிட்டு விடுவர் என்ற எதிர்பார்ப்பையும் இது பொய்யாக்குகிறது.

படிப்பைப் பாதியில் கைவிடும் வீதத்தில மிகப்பெருமளவு கடலூர் மற்றும் விழுப்புரம் மாவட்டங்களில் 40.39-%ம் காஞ்சிபுரத்தில் 42.72-%ம் பதிவாகியுள்ளது. சேலம் மற்றும் நாமக்கல் மாவட்டங்களில் தொடக்க நிலையில் சராசரியான படிப்பைப் பாதியில் கைவிடும் வீதத்தைப் பெற்றிருப்பவை, நடுநிலைப் பள்ளிநிலையில் மிகக்குறைவான படிப்பைப் பாதியில் கைவிடும் வீதமாய் 21.65% ஐப் பெற்றுள்ளன என்பது கவனிக்கத்தக்கது.

ஏற்கனவே விவாதித்தபடிப் படிப்பைப் பாதியில் கைவிடும் வீதத்தைக் கணக்கிடும் தற்போதைய முறை தொடக்க ஆண்டுகளின் அடிப்படை விவரங்களால் உறுதியாய் தூண்டப்பட்டவை.

முறைகளின் மாற்றங்கள் மற்றும் சரிநிலையான அடிப்படை விவரத்திரட்டல் காரணமாய் குறைபாடுடையனவாய் இருக்கலாம். மாவட்டவாரியான பகுப்பாய்வுக்கு 1993-94-ல் ஆறாவது கல்விக் கணக்கெடுப்பில் ஆய்வு செய்தவாறு, முதலாம் வகுப்பு சிறார்களுக்கு எட்டாம் வகுப்பு சிறார்களின் விழுக்காட்டைப் பார்ப்பதே நம்பகமான ஒரு சுட்டிக்காட்டியாக அமையும். இதில் முதலாம் வகுப்புப் புள்ளிவிவரங்களில் 65.7% எட்டாம் வகுப்பில் மாணவர்களின் சேர்க்கை விதமாய் இருந்ததாயும், பெண்களின் விழுக்காடு 60.59% ஆக இருந்தாயும் காட்டுகிறது. போக்குகள், எதிர்பார்த்தபடியே உள்ளன சென்னையும் நீலகிரியும் முறையே 110 மற்றும் 96 விழுக்காடுகளைப் பெற்றுப் பட்டியலின் முதலிடத்தில் உள்ளன. கல்வியில் பின்தங்கிய மாவட்டங்களான தருமபுரியும், இராமநாதபுரமும் முறையே 43.55% மற்றும் 42.40%-ஐப் பெற்றுக் கடைசியில் உள்ளன. மற்ற கல்வி அளவைகள் சாதகமாயிருக்கும் திருநெல்வேலி மாவட்டத்தில் அத்தகைய முரண்பாடான குறைவான விழுக்காடு (45.51) உள்ளமை மேலும் பகுப்பாய்வுக்குரியதாகும்.

ஏற்கெனவே கூறியபடி நடுநிலைப் பள்ளிமுறையில் கழிவினை ஆய்வு செய்ய மனநிறைவையளிக்கக்கூடிய ஒரேவழி இத்துடன் இணைந்த குழு ஒன்றினை அமைத்து இந்நிலையை முழுமையாக ஆய்வு செய்யவேண்டும். இது இன்னும் செய்யப்படவில்லை. இவ்வகுப்புகளில் நிறுத்தி வைத்தல் நிகழ்வுகள், 6-வது கல்விக் கணக்கெடுப்பில் ஆய்வு செய்யப்பட்டுவிட்டது. நடுநிலைப் பள்ளி வகுப்புகளில் மீண்டும் சேர்ந்து படிப்போரின் சராசரி விழுக்காடு 15.17% ஆகும். மிக உயர்வான 19.55%. ஆறாம் வகுப்புக்குரியதாயிருந்தது இது. ஆறாம் வகுப்பில் சேர்க்கையில் கல்வித்தகுதித் திறமையை சரிக்கட்டுவதில் உள்ள பிரச்சனைகளைத் தெளிவாய் காட்டுகிறது. இதற்கான காரணம் மேலும் விரிவாய் செய்யப்பட வேண்டும்.

### நடுநிலைப்பள்ளி சாதனை

வகுப்புகள் - 6-8-ல் சாதனை பற்றிய குறிப்பிடத்தக்க ஆய்வு ஏதும் இல்லாததால், மாவட்ட அளவு சாதனைகளைப் பற்றிக் விளக்கக் குறிப்புகளை கூற இயலவில்லை. இருப்பினும் பள்ளி இறுதித் தேர்வுகளில் வெற்றி வீதம் 'இடைநிலைப் பள்ளி கல்வி' எனும் பிரிவின் கீழ் ஆய்வு செய்யப்படுகிறது. இது மாவட்டத்தில் 'இடைநிலைப்பள்ளிக் கல்வி'யின் தரத்தைப் பற்றி ஓரளவு சுட்டிக்காட்டுகிறது.

### நடுநிலைப் பள்ளிக்கட்டமைப்பு

### அடிப்படைக் கட்டமைப்புக் கிடைக்கப்பெறும் நிலை

குடிநீர், கழிப்பிட வசதிகள் போன்ற அடிப்படை வசதிகள் கிடைக்கப்பெறும் நிலை, தொடக்கப் பள்ளிகளுக்கிருப்பதைப் போன்றே உள்ளன. நடுநிலைப் பள்ளிகளில் 75% குடிநீர் வசதியைப் பெற்றிருக்கையில் 51.9% மட்டுமே கழிப்பிட வசதிகளையும் 27.5% பெண்களுக்குத் தனிக் கழிப்பறைகளையும் பெற்றுள்ளன. அனைத்திந்திய நிலை மற்றும் பெரும்பாலான மற்ற மாநிலங்களோடு ஒப்பிடுகையில் தமிழ்நாட்டின் செயலாக்கம் மேலானாதாயும் உள்ளது. எதிர்பார்த்தபடி இவ்வினத்தில் கேரளாவின் செயலாக்கம் குறிப்பிடத்தக்க அளவு மேலானதாய் குறைந்தது, குடிநீர் மற்றும் கழிப்பிட வசதிகளில் உள்ளது. பஞ்சாப் மற்றும் அரியானா ஆகிய இருமாநிலங்களும் அனைத்திந்திய சராசரிக்கும் மிக மேலாய் உள்ளன.

**அத்தகைய அடிப்படைக் கட்டமைப்பு வசதியளித்தல் ஒரு மிக முக்கியத் தேவையாகும். அனைவருக்கும் கல்வி மற்றும் நடுநிலைப்பள்ளி சிறார்களை குறிப்பாய் பெண்களைத் தொடர்ந்திருக்கச் செய்ய அரசு இதில் கவனம் செலுத்த வேண்டும்.**

### ஆசிரியர்கள் கிடைக்கப்பெறும் நிலை

ஆறாவது கல்விக் கணக்கெடுப்பின்போது தொடக்கப் பள்ளி வகுப்புகளில் மாணவர்-ஆசிரியர் விகிதம் அனைத்திந்திய விகிதத்தை விட தமிழ்நாடு 42.22 அதிகமாக இருந்தது. **40-க்கும் அதிகமான மாணவர்-ஆசிரியர் வீதங்களைப் பெற்றிருக்கும் மாநிலங்களாவன. ஆந்திரப்பிரதேசம், பீகார், குஜராத், அரியானா மற்றும் கர்நாடகம். இவை நிச்சயமாய் கல்வியில் மிகப் பின்தங்கிய நிலையில் இல்லாதவை** மாநிலங்களிடையில் மதிப்புகளின் அளவு மிகக் குறைவான பஞ்சாபில் 22.85-லிருந்து மிக அதிக அளவாய் கர்நாடகாவில் 54.31 வரை விரிவாய் மாறுபட்டிருந்ததது. தமிழ்நாட்டில் மாவட்ட வாரியான வேறுபாடுகள் குறிப்பிடத் தக்கதாயிருந்தன. மாணவர்-ஆசிரியர் விகிதம் நீலகிரியில் 30 ஆக இருந்தபோது, விழுப்புரத்தில் அதிக அளவாய் 57 ஆக இருக்கிறது. அர்த்தமுள்ள பகுப்பாய்வுக்காக இவ்விகிதங்களை மேலும் தனியாகப் பிரிக்க வேண்டும் எனும் வாதங்கள், தொடக்கக் கல்விக்காக ஏற்கெனவே விவாதிக்கப்பட்டவையே எனினும் 1998-99-க்கான துறைப் புள்ளி விவரங்களின் ஒரு தெளிவான இயல்பு, கிட்டத்தட்ட எல்லா மாவட்டங்களிலும் விகிதம் 36-க்கும் குறைவாயிருக்கும் தெளிவானதொரு முன்னேற்றத்தைக் காட்டுவதே.

## பெட்டி 5.4 தொடக்கக் கல்வியில் ஆசிரியர்கள்

ஆறாவது கல்விக் கணக்கெடுப்பின்படி தமிழ் நாட்டில், தொடக்கப் பள்ளிகளில் 1,44,000 ஆசிரியர்களும், உயர் தொடக்கப் பள்ளிகளில் 63,371 ஆசிரியர்களுமிருந்தனர். கிட்டத்தட்ட எல்லா ஆசிரியர்களும் பயிற்சி பெற்றவர்களே. தொடக்கப்பள்ளிகளில் 7.6%-ம் உயர் தொடக்கப் பள்ளிகளில் 6.97% மட்டுமே பயிற்சி பெறாதவர்கள் பட்டப்படிப்பு தகுதிகளைப் பெற்றிருந்த ஆசிரியர்களின் விகிதம், தொடக்கப் பிரிவுகளில் 14.63%-ம் உயர்தொடக்க வகுப்புகளில் 34.87%-ம் ஆக இருந்தது. எட்டாம் வகுப்புக்குக் குறிப்பிட்ட கல்வித்தகுதி பள்ளி இறுதி வகுப்பும் இரண்டாண்டு ஆசிரியர் பயிற்சியுமாயிருந்த போதிலும் அதிகரித்து வரும் விகிதத்தில் பட்டதாரிகள் (அ) பட்டம் பெறுவோர், கல்வியின் தரத்தை உயர்த்த குறிப்பாய் 6-ம் வகுப்புக்கு மேல் ஒரு தெளிவான செயல் விளைவைப் பெறுகின்றனர்.

ஆசிரியர் சமுதாயத்தில் பாலினக் கூட்டமைவு தொடக்க நிலையில், 48.9% ஆசிரியர்கள் பெண்கள் என்பதை வெளிப்படுத்துகிறது. மேலாண்மை வாரியாய் பள்ளிகள் பகுப்பாய்வு செய்யப்பட்டபோது தனியார், உதவிபெறும் பள்ளிகள் மற்றும் தனியார் உதவிபெறாத பள்ளிகள் மிகப் பெரும்பான்மையான பெண் ஆசிரியர்களைப் பெற்றிருந்தது. முறையே 63.27%-ம் 78.27%-ம்) தெரிய வந்தது. உள்ளாட்சி மன்றப் பள்ளிகள் மிகக்குறைவாக 42.34% மட்டுமே பெற்றிருந்தன. இதேபோக்கு உயர்தொடக்கப்பள்ளிகளிலும் காணப்பட்டது. பெண் ஆசிரியர்களின் விகிதம் 56.22% தனியார் உதவிபெறும் மற்றும் உதவிபெறாத பள்ளிகள் மிகப்பெரும்பான்மையான பெண் ஆசிரியைகளின் விழுக்காட்டைப் பெற்றிருந்தன. தொடக்க மற்றும் உயர்தொடக்கப் பள்ளிகளின் அனைத்திந்தியப் பெண் ஆசிரியைகளின் விழுக்காடுகள் முறையே 31.6 மற்றும் 35.97 ஆகும். பெண் ஆசிரியைகளின் உயர்விகிதத்திற்கும், மேலான பள்ளி செயலாக்கத்திற்கு மிடையே சிறிதளவு ஒப்புமைத் தொடர்பு, கேரளா, கோவா மற்றும் மைய ஆட்சிப்பகுதிகளான டில்லி போன்றவை 60%-க்கு மிகையான பெண் ஆசிரியைகளின் விகிதத்தைப் பெற்றிருப்பதிலிருந்தும், கல்வியில் பின்தங்கியுள்ள, உத்திரப் பிரதேசம் போன்ற மாநிலங்கள் 25%-க்கும் குறைவான விகிதப் பெண் ஆசிரியைகளைப் பெற்றிருக்கும் உண்மையிலிருந்தும் புலனாகிறது. அரசு மற்றும் ஊராட்சி ஒன்றியப் பள்ளிப் பணியிடங்களில் குறைந்த அளவாய் 50%-ல் பெண்களைப் பணியமர்த்துவதைக் மாநில அரசு கொள்கையாய் கொண்டுள்ளது.

மாநிலம் தொடக்கப்பள்ளிகளில் 16.15% தா.வ. ஆசிரியர்களைப் பெற்றுள்ளது. இது கிட்டத்தட்ட மாநிலத்தின் தா.வ.ரின் மக்கட் தொகை விழுக்காட்டிற்கு சற்று ஏறக்குறைய அமைந்துள்ளது. இருப்பினும் மேலாண்மைவாரியான விவரக்கூறுகள், தனியார் உதவியைப் பெறும் மற்றும் தனியார் உதவிபெறாத பள்ளிகள் இதற்கும் குறைவான விகிதத்தைப் பெற்றிருப்பதைக் காட்டுகிறது. ஆனால், அரசுப் பள்ளிகளில் 41.46% ஆசிரியர்கள் தா.வ. சேர்ந்தவர்களாய் உள்ளனர். இதற்கு முக்கியக் காரணம், பெரும்பாலான அரசுத்தொடக்கப் பள்ளிகள் ஆதிதிராவிடர் நலத்துறையால் நடத்தப்படுவதும். தா.வ. சேர்ந்தவர் களுக்காதரவானதே ஒரு ஆசிரியர் பணியமர்த்த கொள்கையாக கொண்டிருக்கிறது. நடுநிலைப்பள்ளிகளிலும் இதே மாதிரியான நிலையே காணப்படுகிறது.

பெட்டி 5.5 கவனம் செலுத்தப்பட உள்ள இனங்கள் மற்றும் தமிழ்நாட்டில் எல்லாருக்கும் கல்வி என்பதற்குத் தேவையான நடவடிக்கைகளின் சுருக்கமாகும். இதில் காட்டியுள்ளபடி, சேர்க்கை, தங்கி படிப்பைப் பாதியில் கைவிடல் மற்றும் தேவைப்படும் முயற்சிகளின் சிறப்பம்சங்கள் தொடர்பான கவனம் செலுத்த வேண்டிய இனங்கள் உள்ளன. முறைசாராக் கல்விக்கான ஒரு தெளிவான ஒரு திட்டத்தை வகுப்பதற்கும் பாடத்திட்டம் கற்பிக்கும் தளவாடங்கள் மற்றும் கட்டமைப்பு ஆகிய வற்றில் கல்வியின் தரத்தை மேம்படுத்துவதில் கவனம் செலுத்துவதையும் வலியுறுத்தப்படுகிறது.

**பெட்டி 5.5 : தொடக்கக் கல்வி கவனத்திற்குரிய இனங்களும் தேவைப்படும் முயற்சிகளும்**

| கவனத்திற்குரிய இனங்கள் | தேவைப்படும் முயற்சிகள் |
|---|---|
| | **சேர்க்கை** |
| • மாவட்டங்களிடையில் குறிப்பாய் பின்தங்கிய மாவட்டங்களில் சேர்க்கையில் வேறுபாடுகள் | • மாவட்டங்களின் வரலாற்றுப் பின்தங்கிய நிலையை உடைத்தெறிந்து எல்லோரையும் சேர்க்க உதவும் திட்டங்களை வகுக்கப்பட வேண்டும். |
| • சேர்க்கைக்குட்படாத பகுதிகளைக் கண்டறிந்து விடுபட்ட சிறார்களை சேர்த்தல் | • சிறுகுடும்பங்களில் கணக்கெடுப்பு செய்தல் சேர்க்கைக்குட்படாத பகுதிகளைக் கண்டறிந்தல் விடுபட்ட சிறார்களைத் தொடக்கப்பள்ளி முறைக்குக் கொண்டு வருதல். |
| • நடுநிலைப் பள்ளி சேர்க்கையில் பாலின சமச்சீரின்மை | • அனைவருக்கும் நடுநிலைப் பள்ளிகளில் (பெண்களுக்கென வழிவாய்ப்பளிக்கும் நோக்கில் தெளிவான திட்டங்களை வகுத்தல். |
| | **நிறுத்தி வைத்தல்** |
| • மீண்டும் சேர்க்கை வீதத்தைக் குறிப்பாய், முதலாம், இரண்டாம் வகுப்புகளில் குறைத்தல் | • தொடர்ச்சியான கண்காணித்தல் பெற்றோர் ஆசிரியர் குழுக்களின் அறிவுரை மூலம் சிறாரின் ஒழுங்கற்ற வருகைகளைக் குறைத்தல் - பள்ளிக் கல்வியி தரத்தை மேம்படுத்துதல். |
| | **படிப்பைப் பாதியில் கைவிடல்கள்** |
| • சிறாரிடையே படிப்பைப் பாதியில் கைவிடலின் உயர்வீதம் | • வறுமையும் குறைவான கல்வியறிவு நிலை களே இதற்குக் காரணமாயிருப்பதால் அம் மாதிரியான சிறார்களுக்கும் ஆசிரியர்களுக்கும் ஊக்குவிக்கும் முறைகளை உருவாக்கி பள்ளி களுக்கு ஒழுங்காக வருகைதர உதவிகள். |
| | **முறைசாராக்கல்வி** |
| • மாநிலத்தில் 9-15 வயதுத் தொகுதியில் படிப்பைப் பாதியில் கைவிட்டவர்களின் எண்ணிக்கை 15.0 லட்சத்திற்கும் அதிகம். | • இவ்வனைத்துச் சிறார்களையும் உள்ளடக்கி அவர்களை முறைப்படியான பள்ளிகளில் இணைக்கத் தெளிவான திட்டங்கள் வகுக்கப் பட்ட வேண்டும். பாதியில் பள்ளிப் படிப்பைக் கைவிட்ட அனைவரையும் உள்ளடங்கியதாய் |

முறைசாராக் கல்வி திட்டங்கள் விரிவாக்கப்பட வேண்டும்.

**கல்வியின் தரம்**

- **கற்பிக்கும் தளவாடங்களும், கட்டமைப்புகளும் போதாமை.**

- அடிப்படைக் கட்டமைப்பு மற்றும் வரைபடங்கள் விளக்கப்படங்கள் முதலான கற்பிக்கும், கற்கும் தளவாடங்களைக் கிடைக்கப் பெற செய்தல். மேலும் தற்போதிருக்கும் அடிப்படைக் கட்டமைப்புகளை முழுமையாய் பயன்படுத்திக் கொள்ளல். பள்ளிகளில் தற்போதிருக்கும் கட்டமைப்பு வசதிகளின் தரத்தை மேம் படுத்துதல். எடுத்துக்காட்டுகள். செயல் முறை கரும்பலகைகள். பள்ளி நிலையில் கற்பிக்கும் தரத்தை மேம்படுத்த உரிய முறைகளை உருவாக்குதல்.

- **பாடத்திட்ட அடிப்படையிலான கற்பிப்பு.**

- மகிழ்வுடன் கற்றலை நிலைபெற செய்ய ஆசிரியர் பயிற்சித் திட்டம். மகிழ்வுடன் கற்றலில் சிறாரை மையமாய் கொண்டு பாட புத்தகங்களைப் புதிதாய் வடிவமைத்தல்.

- **சிறிய பள்ளி அளவு (ஆசிரியர்கள்)**

- தொடக்க நிலையில் உயர்தரக் கற்பித்தல் நிலையை எட்ட பன்னிலைக் கற்பித்தலில் சிறிய பள்ளி ஆசிரியர்களுக்குச் சிறப்புப் பயிற்சியளித்தல் வேண்டும்

**ஆசிரியர்கள்**

- **சரியான முறையில் ஆசிரியர் பங்கீடு**

- மாநில மாவட்ட அளவில் மாணவர் ஆசிரியர் விகிதம் குறிப்பிட்ட தரநிலைப்படியிருப்பினும் அளவுக்கதிகமாய் ஆசிரியர்கள் பணியமர்த்தப் பட்டுள்ள பள்ளிகளிலிருந்து, ஆசிரியர்கள் குறைவாய் பணியமர்த்தப்பட்டுள்ள பள்ளிகளுக்கு ஆசிரியர்களை மறுபணியமர்த்தம் செய்யும் வகையில் உரிய மாறுதல் கொள்கைகள் வகுக்கப்பட வேண்டும். பணியமர்த்தம் மற்றும் உரிய காலத்தில் பணியில் சேர்க்கைகளில் குறிப்பாய், தொலைதூர இடங்களில் காலதாமதம் தவிர்க்கப் படவேண்டும்.

- **ஆசிரியர்களிடம் ஆர்வமின்மை**

- நன்கு செயல்படும் ஆசிரியர்களுக்குப் பரிசுகளும் நன்கு செயல்படாதவர்களுக்கு ஊக்கத் தடைகளுமளிக்கும் வகையில் பள்ளி நிருவாக முறை வடிவமைக்கப்பட வேண்டும். கல்வி கற்பிப்பதிலும் நிருவாகத்திலும் தலைமையாசிரியர்கள் அதிக ஆதரவான நிலையை மேற்கொள்ள வேண்டும்.

**சமுதாய பங்கேற்பு**

- பெற்றோரிடையே குறைந்த ஈடுபாடு
- தொடக்கப்பள்ளி நிலையில் பெற்றோர், ஆசிரியர் சங்கங்கள் மிகவும் முனைப்பாயில்லை. பெற்றோரும் ஆசிரியர்களும் அடிக்கடி ஒன்று கூடிப் பெற்றோருக்கு அவர்களுடைய குழந்தை களின் முன்னேற்றம் குறித்து காலமுறை தோறும் அறிவுரை வழங்குதல் அவசியமா கின்றது. தொடக்கக் கல்வியில் பொது நிதி வசதிக்குட்பட்டு கிராம மக்களுக்கு அதிகார மளிக்க வகை செய்தல். கிராமக் கல்விக் குழுக்கள் அமைப்பு போன்ற புதிய முறைகள்)

**உள்ளாட்சி மன்றங்களின் பங்கு**

- தொடக்கக் கல்வியில் உள்ளாட்சி மன்றங்களின் அதிகப் பங்கு
- இதற்குப் பெரும் கொள்கை மாற்றம் தேவை. இதற்கிடையில் சிறிதளவு அதிகாரப் பரவலாக்கம் ஆசிரியர்களின் பொறுப்புடைமையையும், திறமையையும் நிச்சயமாய் அதிகரிக்கச் செய்யும். ஊராட்சி மன்றங்களின் பொறுப்புடைமையை அதிகரிக்க, தொடக்கப்பள்ளி நிலையை பகுதி நிகர் நிலையாக்கச் சிந்திக்கப்பட வேண்டும்.

## இடைநிலைக் கல்வி

இப்பிரிவில் இடைநிலைக் கல்விப் பிரச்சனைகள் (அதாவது 9-ம் வகுப்பும் அதற்கும் மேற்பட்ட) பற்றி விளக்கப்பட்டுள்ளது. இவற்றில் சேர்க்கையில் மிகுந்த வீழ்ச்சி, பாலினப் பாகுபாடு கல்வியின் தரம் மற்றும் கட்டமைப்பில் சமச்சீரின்மைகள் உள்ளடங்கும். மாவட்டங்களிடை ஏற்றத்தாழ்வுகள் இவற்றிற்கான காரண காரணிகள் ஆகியனவும் பகுப்பாய்வு செய்யப்பட்டுள்ளன.

**அட்டவணை - 5.6 : முதலாம் வகுப்பின் சேர்க்கையின்படி 9 மற்றும் 10-ம் வகுப்பில் மாநில வாரியான சேர்க்கை விழுக்காடு**

| மாநிலம் | இடைநிலைப் பள்ளிகள் | |
|---|---|---|
| | 9 | 10 |
| 1 | 2 | 3 |
| ஆந்திரப்பிரதேசம் | 22.00 | 19.68 |
| தமிழ்நாடு | 53.90 | 37.22 |
| கேரளா | 100.46 | 79.22 |
| கர்நாடகம் | 29.96 | 26.26 |
| அரியானா | 40.42 | 39.81 |

*(தொடர்ச்சி)*

| 1 | 2 | 3 |
|---|---|---|
| பீகார் | 16.57 | 14.59 |
| மகாராஷ்ட்ரா | 42.77 | 33.26 |
| பஞ்சாப் | 43.90 | 42.80 |
| ராஜஸ்தான் | 21.69 | 13.89 |
| உத்திரபிரதேசம் | 28.52 | 27.68 |
| மேற்குவங்கம் | 22.24 | 13.81 |
| மத்தியப்பிரதேசம் | 30.90 | 22.87 |
| அனைத்திந்தியா | 31.06 | 25.03 |

*ஆதாரம் : ஆறாவது அனைத்திந்தியக் கல்விக் களஆய்வு*

**மாநிலங்களிடையான ஒப்பீடு**

எட்டாம் வகுப்பு வரை இலவச மதிய உணவு இலவச சீருடைகள் மற்றும் இலவசப் பாடப்புத்தகங்கள் போன்ற ஊக்குதவி திட்டங்களிருந்த போதிலும் மாநிலத்தில் 9-ம் வகுப்பில் சேர்க்கை விகிதம் குறிப்பிடத்தக்க அளவில் இல்லாமை தமிழ்நாட்டின் கல்வி முறையில் ஒரு புரியாத புதிராய் உள்ளது. மாநிலம் அனைத்திந்திய நிலையில் பத்தாம் வகுப்பு சேர்க்கையில் 37% உடன் 5-ம் நிலையில் உள்ளது. அண்டைக் கேரளம், இத்தகைய ஊக்குதவிகள் ஏதுமின்றி முதல் நிலையில் உள்ளது. இது 79% சேர்க்கை விகிதத்தைப் பெற்றுள்ளது. (அட்டவணை - 5.6)

பெண்களின் சேர்க்கையில் கேரளாவுக்கு நெருக்கமான (51.42%) தமிழ்நாடு மூன்றாவதிடத்தில் (45%) உள்ளது. அரியானா பஞ்சாப் மற்றும் இமாசலபிரதேசத்திற்கு முன்னாலிருக்கிறது. (6-வது கல்விக் கணக்கெடுப்பு 1993)

சமூகக் குழுவாரியான சேர்க்கையில் மொத்த தா.வ.சேர்க்கையில் தா.வ. பெண்களின் சேர்க்கை விழுக்காடு 43.7% இது மொத்த மாநில சேர்க்கைப் புள்ளிவிவரத்திற்கு மிக நெருக்கமாய் உள்ளது. IX-X-ம் வகுப்பில் தா.வ. சேர்க்கையில் பஞ்சாபுக்கு அடுத்ததாய் இரண்டாமிடத்தில் உள்ளது. X-XII-ம் வகுப்புகளில் தமிழ்நாடு முதலாமிடத்தில் உள்ளது. எனவே, ஒப்பீட்டடிப்படையில் 9-10-ம் வகுப்புகளில் மொத்தத்தில் சேர்க்கை குறைவாயிருந்த போதிலும் பெண்களின் மொத்த சேர்க்கை மற்றும் தா.வ. பெண்களின் சேர்க்கையில் தமிழ் நாட்டின் செயலாக்கம் மிகவும் குறிப்பிடத் தக்க வகையில் உள்ளது. மாநில அளவில் கிராமப்புற நகர்ப்புற வேறுபாடு. உயர்நிலைப் பள்ளிகளில் மிகக்குறைவாகவும் (6%) மேல்நிலைப் பள்ளிகளில் மிக அதிகமாய் உயர்ந்துள்ளது. இதில் வேறுபாடு 23% வரை அதிகமாயுள்ளது. இது, தமிழ்நாட்டில் கிராமப்புறங்களில் பெற்றோர்கள் 10-ம் வகுப்புக்கு மேல் அவர்களுடைய குழந்தைகளைப் பள்ளிக்கனுப்ப விரும்பாததைக் காட்டுவதாய் உள்ளது.

## சேர்க்கை விகிதமும் மாவட்டங்களிடையே ஏற்றத்தாழ்வுகளும்

நடுநிலைப் பள்ளியிலிருந்து உயர்நிலைப் பள்ளிகளுக்கும் உயர்நிலைப் பள்ளிகளிலிருந்து மேல்நிலைப் பள்ளிகளுக்கும் மாணவர்கள் மாறுகையில் மாவட்டங்களில் மொ.சே.வி.களில் ஒரு உணர்ந்தறியக் கூடிய ஒரு குறைவு காணப்படுகிறது. 1988-99-ல் மொ.சே.வி.நடுநிலைப்பள்ளி நிலையில் 89.25%-லிருந்து உயர்நிலைப் பள்ளி நிலையில் 66.53%-க்கும் மேல்நிலைப்பள்ளி நிலையில் அரை மடங்கிற்கும் மேலாய் 30.33%-க்கு மேலும் குறைந்தது. மாவட்ட அளவில் மொ.சே.வி. கடலூர், திருவண்ணாமலை, சேலம், தருமபுரி, ஈரோடு, கோவை, பெரம்பலூர், புதுக்கோட்டை, திண்டுக்கல் மற்றும் விருதுநகரில் உயர்நிலைப்பள்ளி மற்றும் மேல்நிலைப்பள்ளி நிலைகளில் மாநில சராசரியைக் காட்டிலும் குறைவாய் உள்ளது.

சேர்க்கையில் பாலின இடைவெளி குறித்த ஒரு பகுப்பாய்வு, 1998-99-ல் உயர்நிலைப் பள்ளி நிலையில் (14-16 வயது) பாலின வேறுபாடு 7% ஆக இருந்ததாயும், மேல்நிலைப் பள்ளி நிலையில் வெறும் 1.3% ஆக இருந்ததைக் காட்டுகிறது. இவ்விதம், மாநில நிலையில் பாலின வேறுபாடு அதிகமாயில்லை. மாவட்ட வாரியான புள்ளி விவரப்படி பெண்கள் மற்றும் ஆண்களின் சேர்க்கையில் பெரும் வேறுபாடுகளிருப்பது தெளிவாகிறது. சில மாவட்டங்களில் ஆண்கள் மற்றும் பெண்களுக்கிடையிலான அகன்ற வேறுபாடுகள் மாநில சராசரியை சரிப்படுத்தி மொத்த மனநிறைவளிக்கும் ஒரு விவரத்தையளிக்கிறது. இதற்க மாறாய், மேல்நிலைப் பள்ளி நிலையில், திருவண்ணாமலை, ஈரோடு, நீலகிரி, மதுரை, திருநெல்வேலி மற்றும் தூத்துக்குடி மாவட்டங்கள் பெண்களுக்காதரவான ஒரு அகன்ற பாலின இடைவெளியைக் காட்டுகிறது. இங்கு பெண்களின் மொ.சே.வி. ஆண்களின் மொ.சே.வி.ஐ விட 5% லிருந்து16% வரை உயர்வாய் உள்ளது.

எனவே, மாநிலத்திற்குள்ளான சேர்க்கையில் காணப்படும் வேறுபாடுகள் பள்ளிக்கல்வி முறையில் இயல்பானதென்றும் சேர்க்கையில் மாவட்ட நிலையிலான பாலின வேறுபாடுகள் சமூக மற்றும் பள்ளி தொடர்பான காரணங்களால் ஏற்படுவதென்றும் தோன்றுகிறது. உயர்நிலைப்பள்ளி நிலையில் சேர்க்கையில் பெண்களின் கல்வியறிவு, வறுமை மற்றும் பாலின இடைவெளி ஆகியவற்றின் செயல்விளைவு அட்டவணை 5.7-ல் பகுப்பாய்வு செய்யப்பட்டுள்ளது.

## பெண்கல்விநிலை, சேர்க்கை வறுமை மற்றும் பாலின இடைவெளி

வறுமை, பெண் கல்வியறிவு, மற்றும் பாலின இடைவெளிக்கிடையிலான தொடர்பு அண்மைக்காலத்தில் கடும் விவாதத்திற்குள்ளான விஷயமாகியுள்ளது. உயர் மற்றும் குறைவான செயலாக்க மாவட்டங்களின் ஒரு ஒப்பீடு, வறுமைக்கும் பெண் கல்வியறிவுக்குமிடையில் நிச்சயமான ஒரு தொடர்பிருப்பதைக் காட்டுகிறது. இந்த வாதம், பெண்களின் சேர்க்கைக்கும் நன்கு பொருந்தும், மிக ஏழையரான 40% குடும்பங்களிலிருந்து 9.5% பெண்கள் மட்டுமே நடுநிலைப் பள்ளிப்படிப்பை முடிக்கிறார்கள். 20% உயர் வர்க்க குடும்பங்களில் 85% ஆண்களும், 80% பெண்களும் இதே போன்று நடுநிலைப் பள்ளிப்படிப்பை முடிக்கின்றனர். (உலக வங்கி 1998)

அட்டவணை - 5.7-ல் மாநிலத்தின் 29 மாவட்டங்களில் 20-ல் உயர்நிலைப் பள்ளி நிலையில் மொ.சே.வி. பெண் கல்வியறிவு வறுமை ஆகியவற்றிற்கிடையிலான ஒப்புமைத் தொடர்பு பகுப்பாய்வு செய்யப்பட்டது. இப்பகுப்பாய்வு மூன்று சுட்டிக்காட்டும் கருவிகளுக்கிடையில்

## அட்டவணை - 5.7 : பெண்கல்வியறிவு - வறுமை சேர்க்கை மற்றும் பாலின இடைவெளி - உயர்நிலைப் பள்ளி

14-16 வயது தொகுதி

| | மாவட்டம் | பொ. கல்வி யறிவு % | பொ.சே.வி. ஆண்கள் | பொ.சே.வி. பெண்கள் | பாலின வேறுபாடு | வறுமைக் கோட்டுக்கும் கீழான மக்கட்தொகை % |
|---|---|---|---|---|---|---|
| 1. | காஞ்சிபுரம் | 55.2 | 65.0 | 51.7 | -13.3 | 27.0 |
| 2. | திருவள்ளூர் | 55.2 | 82.2 | 81.7 | -0.6 | 27.0 |
| 3. | விழுப்புரம் | 39.7 | 76.7 | 64.4 | -12.3 | 50.9 |
| 4. | கடலூர் | 39.7 | 57.5 | 53.7 | -3.9 | 50.9 |
| 5. | வேலூர் | 48.6 | 70.0 | 75.0 | 5.0 | 36.6 |
| 6. | திருவண்ணாமலை | 39.3 | 56.5 | 46.9 | -9.6 | 42.2 |
| 7. | கோயம்புத்தூர் | 55.7 | 44.6 | 54.2 | 9.6 | 25.8 |
| 8. | நீலகிரி | 61.5 | 82.4 | 69.7 | -12.7 | 21.2 |
| 9. | திருச்சிராப்பள்ளி | 48.5 | 62.5 | 84.3 | 21.8 | 21.6 |
| 10 | சேலம் | 41.5 | 55.4 | 50.6 | -4.9 | 30.1 |
| 11. | நாகப்பட்டினம் | 54.8 | 50.5 | 58.6 | 8.1 | 20.2 |
| 12. | திருவாரூர் | 54.8 | 48.4 | 60.1 | 11.6 | 20.2 |
| 13. | மதுரை | 54.7 | 94.2 | 75.2 | -19.0 | 30.4 |
| 14 | திண்டுக்கல் | 43.9 | 65.0 | 46.5 | -18.5 | 46.3 |
| 15 | விருதுநகர் | 50.2 | 38.4 | 53.6 | 15.2 | 26.2 |
| 16 | சிவகங்கை | 49.7 | 86.1 | 58.1 | -28.0 | 26.6 |
| 17. | திருநெல்வேலி* | 54.2 | 111.4 | 54.7 | -56.7 | 44.1 |
| 18. | தூத்துக்குடி* | 64.6 | 109.5 | 55.9 | -53.6 | 47.0 |
| 19. | நாகர்கோயில் | 78.4 | 70.2 | 81.8 | 11.6 | 48.6 |
| 20. | புதுக்கோட்டை | 43.6 | 50.3 | 43.2 | -7.1 | 26.9 |
| | அனைத்திந்தியா | 51.3 | 69.9 | 63.0 | -7.0 | 31.7 |

குறிப்பு*: மொ.சே.வி 100-க்கு மிகையாயிருக்கும் ஏனெனில் சில மாணவர் உயர்நிலைப்பள்ளி வயதுவரம்பு 14-16 ஆண்டுகளைவிட இளையவர்களாகவோ, மூத்தவர்களாகவோ இருக்கின்றனர்.

ஆதாரம் : 1. மக்கட் தொகைக் கணக்கெடுப்பு 1991
2. மாநிலப் பள்ளிக் கல்வித்துறை, 1998-99
3. பொருளாதார மற்றும் புள்ளியியல் இயக்ககம் 1993-94

நிச்சயமானதொரு ஒப்புமைத் தொடர்பைக் காட்டுகிறது. எஞ்சியிருக்கும் 9 மாவட்டங்களில் (சென்னை உள்ளிட்ட) ஒப்புமைத் தொடர்பு நன்கு உறுதி செய்யப்படவில்லை.

**எனவே, பெண்களின் கல்வியில் வறுமை ஒரு குறிப்பிடத்தக்க செயல் விளைவை ஏற்படுத்துகிறது என்பது தெளிவு. இதற்கு மாறாய், உயர்கல்வி நிலைகள் வறுமையைக் குறைப்பதில் ஒரு தெளிவான செயல் விளைவைப் பெற்றுள்ளதென்பதும் உண்மையே குடும்ப வருமானம் ஒரு வரையறைக்குட்பட்டிருப்பதால் பள்ளிக்கல்வியில் ஆண்களுக்குப் பெண்களைவிட முன்னுரிமையளிக்கப்படுகிறது. வருமானம் குறையும் போது அவர்களுடைய மகள்களைப் பள்ளிக்கனுப்ப வேண்டும் என்ற விருப்பத்தைவிட வேகமாகக் குறைந்து வருவதாய் உலக வங்கியின் ஆய்வு ஒன்று (1996) தெரிவிக்கிறது.**

மேலே பகுப்பாய்வு செய்யப்பட்ட 20 மாவட்டங்களில் 13 மாவட்டங்களில் பெண்கள் கல்வியில் பாதிப்பிற்குள்ளாகின்றனர். வறுமையான நிலையில் குடும்பத்தின் பிழைப்பே கவலைக்குரிய தாயிருக்கும் குடும்பங்களில் பெண்களுக்குக் கல்வி எனும் பிரச்சனைக்கு அதிக முன்னுரிமை யளிக்கப் படுவதில்லை. பெண் கல்வி இலவசமாயிருந்தாலும், போக்குவரத்து, கற்பிக்கும்பொருட்கள், பள்ளியில் பாடத்திட்டம் சாராச் செயல்களில் பங்கேற்பு முதலானவற்றிற்காகும் மற்ற செலவுகள் உள்ளன. பெண்கள் வீட்டு வேலைகளில் உதவியாக (அ) வருமானம் ஈட்டும் தொழில்களில் ஈடுபட்டிருக்கும்போது அவற்றை இழந்து பெண்களைப் பள்ளிக்கனுப்புவதென்பது மேலும் சிக்கலாகிறது. பெண்களைப் பள்ளிக்கனுப்பும் செலவு அதிகமாயிருப்பதன் காரணமாய் வயதான பெண்களிடையே, பள்ளிப் படிப்பைப் பாதியில் கைவிடும் வீதம் அதிகமாயிருப்பதை ஓரளவு விளக்குகிறது.

கல்வி வழங்கு காரணிகளான, அதாவது வசதியான இடங்களில், பள்ளிகள் அமைந்திராமை, பெண் ஆசிரியைகள் கிடைக்கப் பெறாமை ஓரினப் பாலர் பயிலும் பள்ளிகள் இல்லாமை போன்றவை, உயர்நிலைப் பள்ளிகளில் பெண்களின் சேர்க்கையைத் தடை செய்வதில் பெரும்பங்கு வகிக்கின்றன. பல பெற்றோர் குறிப்பாய் கிராமப்புறங்களிருப்போர். வளரிளம் பருவப் பெண்களுக்கு போதிய பெண் ஆசிரியர்கள் இல்லா ஆண், பெண் இணைக் கல்வி முறைப் பள்ளிகளுக்கம் அனுப்புவதில் உள்ள சமூக இன்னல்கள் குறித்து அச்சப்படுகின்றனர். பெற்றோரின் ஒரு பொதுவான பயம். அது ஒரு தேவையற்ற இன்னல். அது அவர்களுடைய பெண்களின் எதிர்காலத் திருமண வாய்ப்புகளைப் பாதிக்கக் கூடியது. குடும்பப் பெயரிழப்பை ஈடுசெய்ய ஒருவேளை பெருந்தொகையை வரதட்சணையாய் கொடுக்கும் கட்டாயம் ஏற்படும் என்பதே. மேலும் கல்வி ஒரு பெண்ணைத் தற்சார்புடையவளாக்கிடும். அதன் காரணமாய் பிறந்த வீட்டிலும் திருமணத்திற்குப் பின் புகுந்த வீட்டிலும் கீழ்ப்படிந்திருக்க மாட்டாள் என்றொரு அச்சமும் பெற்றோரிடம் உள்ளது. மேலும் பெண்களின் கல்விக்காக செய்யப்படும் முதலீடு லாபகரமானதல்ல. அவர்களுக்குத் திருமணம் ஆன பின் பல வேறு சமூகக் காரணங்களுக்காகவும், குடும்ப வரையறை காரணமாயும் அவர்களிடமிருந்து எந்தவிதமான உதவியும் எதிர்பார்க்க முடியாதென்கிற அச்சமும் ஒரு காரணம். இவ்விதமான தடைகளிருந்த போதிலும் கல்வியறிவு பெற்ற தாய்மார்கள் தம் மகள்களைப் பள்ளிகளுக்குச் செல்ல பெருமளவில் தூண்டுகிறார்கள். கோவை, திருச்சிராப்பள்ளி, நாகப்பட்டினம், திருவாரூர் மற்றும் விருதுநகர் போன்ற மாவட்டங்களில் பெண்களின் அதிகமான சேர்க்கையிலிருந்து உய்த்துணர முடிகிறது.

உயர்நிலைப் பள்ளி மற்றும் மேல்நிலைப் பள்ளி நிலைகளில் கல்வியில் பாலின பாகுபாட்டைக் குறைத்திட ஒரு பன்முனை திட்டம் தேவைப்படுகிறது. இதில்,

(அ) பெண்கள் கல்வியின் பொருளாதார மற்றும் சமூகப் பயன்கள் பற்றிப் பெற்றோருக்கு அறிவித்தல்

(ஆ) பெண்கல்வி வாய்ப்புக்காகும் செலவைக் குறைத்தல்.

(இ) இலவசக் கல்வி

(ஈ) இடைநிலைப் பள்ளியில் கல்வியைத் தொடர ஆர்வமூட்டப் பெண்களுக்குக் கல்வி உதவித் தொகை வழங்கல்.

(உ) பள்ளிச்சீருடைகளின் அவசியத்தை நீக்கல்.

(ஊ) இளம் வயதினருக்குப் பகல் நேரக் காப்பு வசதிகள்

(எ) கல்வித்திட்டம் மற்றும் வளர்ச்சியில் மக்களையும் ஈடுபடுத்தல்.

(ஏ) பாடத்திட்டத்தை அதிக பாலின ஏற்புடையதாக்கல்.

(ஐ) அதிக எண்ணிக்கையில் பெண் ஆசிரியைகளைப் பணியமர்த்தல். இறுதியாக, பெற்றோர் தம் பெண்களைப் பள்ளிகளுக்கனுப்ப ஆதரவான சூழ்நிலையை உருவாக்குவதில் ஆசிரியர்களுக்கு உரிய பயிற்சியளித்தல்.

**குறைவான தங்குகை**

உயர்நிலைப்பள்ளி நிலையில் படிப்பைப் பாதியில் கைவிடல் வீதம் 1998-99-ல் 58% இருந்தது. மாவட்டங்களிடை ஏற்றத்தாழ்வுகளும் பாலின வேறுபாடும் உயர்நிலைப் பள்ளி நிலையில் மிக அதிகமாயில்லை. மேல்நிலைப்பள்ளி நிலையில் மாநில முழுமைக்குமாய் படிப்பைப் பாதியில் கைவிடல் வீதம், 1998-99-ல் 81.49%-ஆக இருந்தது. கன்னியாகுமரி, மதுரை, தேனி மாவட்டங்கள் நீங்கலாய், மற்ற மாவட்டங்களில் இவ்வீதம் 80%-க்கும் மிகையாய் பெற்றுள்ளது. பாலினப்பிரிவு அதிகமாயில்லை. பெண்கள், ஆண்களைவிட சிறிதளவே படிப்பைப் பாதியில் கைவிடல் வீதத்தைப் பெற்றிருந்தனர்.

**சாதனை**

1998-99-ம் ஆண்டு 10-ம் வகுப்பு மற்றும் 12-ம் வகுப்புப் பொதுத் தேர்வுகளில் தேர்ச்சி விழுக்காட்டு விவரங்களின் பகுப்பாய்வு, இரு தேர்வுகளிலும், ஆண்களைவிடப் பெண்கள் நன்கு செய்தமையைக் காட்டுகிறது. 10-ம் வகுப்புத் தேர்வில் மாநிலத்தின் தேர்ச்சி விழுக்காடு 67.9% (பாலின வேறுபாடு 9%) மேல்நிலைத் தேர்வில் தேர்ச்சியின் விழுக்காடு 79.3% (பாலின வேறுபாடு 10%) விழுப்புரம், கடலூர் மற்றும் திருவண்ணாமலை மாவட்டங்கள் உயர்நிலை மற்றும் மேல்நிலை ஆகிய இரு தேர்வுகளிலும் தொடர்ந்து ஒரு குறைவான செயலாக்கத்தையே பெற்றன.

**கல்வியின் தரமும் கட்டமைப்பு ஏற்றத்தாழ்வுகளும்**

உயர்நிலை மற்றும் மேல்நிலைப் பள்ளிகளில் வழி வாய்ப்புகளை அதிகரிப்பதற்கான முதல் படி. போதிய பள்ளிகள், வகுப்பறைகள் மற்றும் ஆசிரியர்களை வழங்குவதே. 6-வது கல்விக் கணக்கெடுப்பின்படித் தமிழ்நாட்டில் 85% குடியிருப்பிடங்களில் ஏற்றுக்கொண்ட அளவுப்படி 5 கி.மீ தொலைவுக்குள் இடைநிலைப் பள்ளி வசதிகள் அளிக்கப்பட்டுள்ளன. இது பெரும்பாலான

மாநிலங்களில் இருப்பதைவிடக் குறிப்பிடத்தக்க அளவு உயர்வாய் உள்ளது. கேரளாவிலும்கூட 67.64% குடியிருப்பிடங்கள் மட்டுமே விரும்பத்தக்க 5 கி.மீ. தொலைவுக்குள்ளாய், ஒரு உயர்நிலைப் பள்ளியைப் பெற்றுள்ளன.

மாவட்டங்களிடை ஒப்பீடுகள் திண்டுக்கல்லில் மிகக் குறைவான அளவாய் 70% குடியிருப்பிடங்கள் மட்டுமே 5 கி.மீ. தொலைவுக்குள்ளாய் ஒரு உயர்நிலைப் பள்ளியையும் அதைத் தொடர்ந்து புதுக்கோட்டை (74.69%) ராமநாதபுரம் (74.64%)ம் பெற்றிருந்ததைக் காட்டுகிறது. தருமபுரி, கடலூர், ஈரோடு, புதுக்கோட்டை, ராமநாதபுரம் 15% குடியிருப்பிடங்களில் மட்டுமே ஒரு உயர்நிலைப் பள்ளியைப் பெற்றுள்ளன. இவ்வனைத்து மாவட்டங்களும் மாநில சராசரியைக் காட்டிலும் குறைவான மொ.சே.வி.ஐப் பெற்றுள்ளன. தா.வ.குடியிருப்பிடங்களைப் பொறுத்தவரை, 13.61% குடியிருப்பிடங்களுக்குள்ளாக ஒரு உயர்நிலைப் பள்ளியைப் பெற்றுள்ளன. இது பொது மக்கட்தொகையின் மாநில சராசரியைவிடக் குறைவாகும்.

மேல்நிலைப் பள்ளிகளைப் பொறுத்தவரை. தமிழ்நாடு இரண்டாம் இடத்தில் உள்ளது. அனைத்திந்திய சராசரியான 63.60%க் கெதிராய், தமிழ்நாடு 82% குடியிருப்பிடங்களில் ஏற்கப்பட்ட அளவுப்படி 8 கி.மீ. தொலைவுக்குள் ஒரு மேல்நிலைப் பள்ளியைக் கொண்டுள்ளது. (படம் 5.5) திண்டுக்கல், இராமநாதபுரம் மாவட்டங்களில் சிறிதளவு பள்ளிகளே உள்ளன.




*ஆதாரம் : 6-வது அனைத்திந்தியக் கல்விக் கணக்கெடுப்பு*

ஆசிரியர்களின்றிப் பள்ளிகள் செயல்பட முடியாது. ஆகவே தற்போதிருக்கும் மற்றும் புதிய பள்ளிகளில் ஆசிரியர்கள் தேவைப்படுகின்றனர். இருப்பினும் மாநிலத்திலிருக்கும் இடைநிலைப் பள்ளிகள் மற்றும் மேல்நிலைப்பள்ளிகளில் மாணவர்-ஆசிரியர் விகிதம் ஒரு குழப்பமான உரு வடிவைத் தெரிவிக்கின்றன. 6-வது அனைத்திந்திய கல்விக் கணக்கெடுப்பின்படி இடைநிலைப் பள்ளிகளின் மாணவர் ஆசிரியர் விகிதம் 37.63% (அனைத்திந்திய சராசரி 30) மேல்நிலைப் பள்ளிகளில் 39.69 அனைத்திந்திய சராசரி 34.21)

கேரளா, கர்நாடகா, ஆந்திரப்பிரதேசம் போன்ற தென்மாநிலங்கள் மற்றும் மகாராஷ்ட்ரா, பஞ்சாப், ராஜஸ்தான் உத்திரப்பிரதேசம் மாநிலங்களைவிட மிகவும் பின் தங்கியுள்ளது.

இடைநிலை மற்றும் மேல்நிலைப்பள்ளி முறையைப் பொறுத்தவரை இது ஒரு இடைநிலைப் பகுதியாகும்.

புதுக்கோட்டை (46.21) ஈரோடு (41.51), திருவண்ணாமலை (55.62) தருமபுரி (50.58), விழுப்புரம் 48.42) மிக உயர் மாணவர் - ஆசிரியர் விகிதத்தைப் பெற்றுள்ளன. மிக உயர்வான மாணவர் - ஆசிரியர் விகிதத்தின் குறிப்பிடத்தக்க இயல்பு நகர்ப்புறங்களைக் காட்டிலும் கிராமப்புறங்களில் மிகத் தெளிவாய் தெரிகிறது. நகர்ப்புறங்களின் மேலான வாழ்க்கைத் தரம் காரணமாய் ஆசிரியர்களிடையில் நகர்ப்புறப் பள்ளிகளில் பணியமர்த்தம் பெற வெளிப்படையான ஆர்வமும் அதற்கான நிர்பந்த முயற்சிகளும் காணப்படுகிறது. கிராமப்பகுதியில் உள்ள உள்ளாட்சி மன்றப் பள்ளிகளில் இவ்விகிதம் 59 வரை உயர்வாயும் நகர்ப்புறங்களில் 35 மட்டுமாக உள்ளது. இதற்கு மாறாய், உதவிபெறாத பள்ளிகளில் மாணவர் - ஆசிரியர் விகிதம் 23-ஆக மட்டுமே உள்ளது. வட்ட நிலையில் மாணவர் - ஆசிரியர் விகிதத்தை ஆய்வு செய்ய வேண்டிய தவிர்க்க முடியாத தேவை ஏற்பட்டுள்ளது. அப்போதுதான் ஆசிரியர்களை சரியான முறையில் பங்கீடு செய்து கிராமங்களில் தற்போதிருக்கும் உயர் விகிதங்களைக் கணிசமாய் குறைத்திட முடியும்.

### கொள்கைக்கான பாடங்கள்

மேற்சொன்ன விவாதம், எதிர்காலத்தில் இடைநிலை கல்விக்கான பல திட்டங்களைப் பற்றி விளக்குகிறது.

- தமிழ்நாடு போதிய கட்டமைப்பு வசதிகளுடன் கூடிய உயர்நிலைப் பள்ளிகளையும் மேல்நிலைப் பள்ளிகளையும் பெருமளவில் பெற்றிருக்கும் காரணத்தால் மோசமான கட்டமைப்புக் குறைந்து வரும் சேர்க்கை வீதங்களுக்குக் காரணம் என விளக்க முடியாது.

- சில மாவட்டங்களில் இடைநிலைப் பள்ளிகளில் குறைந்து வரும் சேர்க்கை விகிதங்களுக்கு முக்கியக் காரணம் 9-14 வயதுத் தொகுதியில் வேலைவாய்ப்பிற்குக் கிட்டும் அதிகக் கேட்பு ஆகும். மாநிலத்திலிருக்கும் மொத்த தீப்பெட்டித் தொழிற்சாலைகளில் 60 விழுக்காட்டைப் பெற்றும், சிறார் தொழிலாளரைப் பெருமளவில் பெற்றிருக்கும் விருதுநகர் மாவட்டம் மாநில சராசரியான 66.53% க் கெதிராய் மொத்த சேர்க்கை விகிதமாய் 45.7% ஐ மட்டுமே பெற்றுள்ளது. இதேபோன்று, ஆண்டு முழுவதும் வேளாண்மை நடவடிக்கைகளுடன் மாநிலத்தின் நெற் களஞ்சியமாய் விளங்கும் நாகப்பட்டினம் மற்றும் திருவாரூர் மாவட்டங்கள் ஒருங்கிணைந்த

மொத்த சேர்க்கை விகிதங்களாய் முறையே 54.52% மற்றும் 54.19 விழுக்காடுகளைப் பெற்றுள்ள வேளாண்துறையிலும் வயல்களிலும் உயர்வீதங்களில் சிறார்த் தொழிலாளர்கள் ஈடுபட்டிருப்பதைக் காட்டுகிறது.

- பொருளாதாரக் காரணங்களால், 5-8 கிலோ மீட்டர் தொலைவிலிருக்கும் உயர்நிலைப் பள்ளி மற்றும் மேல்நிலைப் பள்ளிகளுக்குத் தம் குழந்தைகளை அனுப்பப் போக்குவரத்துச் செலவுகளை ஏற்கப் பெற்றோர் விரும்பவில்லை.

- பெண்களைப் பொறுத்தவரை மக்களின் மனங்களில் சமுதாய இன்னல்களைப் பற்றிய அச்சங்களும் இதன் பங்களிப்புக்குக் காரணங்களாய் உள்ளன.

- உயர் மாணவர் - ஆசிரியர் விகிதங்களும், குழந்தைகளைப் பள்ளிகளுக்கனுப்புவதன் மூலம் அவர்கள் ஒன்றையும் கற்றக்கொள்ள முடியாது என்று எண்ணுமளவு ஒரு ஊக்கத்தடையாக அமைந்துள்ளது.

இவையனைத்தும் இடைநிலைப் பள்ளிகளில் சேர்க்கை வீதங்களை மேம்படுத்தப் பல தரப்பட்ட முயற்சிகள் தேவைப்படுவதை உணர்த்துகின்றன. குறிப்பிட்ட பகுதிகளில் கூடுதலான பள்ளிகள் தேவைப்பட்டாலும் உள்ளபடியே, எந்தப் பகுதிகளில் அதிகப் பள்ளிகள் தேவைப் படுகின்றன என்பதை மதிப்பீடு செய்த பின்னரே, இதை செய்ய இயலும். உள்ளூர் மக்கட்தொகை நெருக்கம் மற்றும் எட்டாம் வகுப்பில் மொ.சே.வி.களுக்கேற்ப மிக நியாயமான பள்ளிகளின் அமைவிடங்கள் மற்றும் உயர்நிலைப்பள்ளிகளையும் மேல்நிலைப் பள்ளிகளையும் திறந்திடும் பொருட்டுப் பள்ளிகளின் மிக உன்னிப்பான வரைபடம் தயாரிப்பது தவிர்க்க முடியாததாய் உள்ளது.

மேலும் புதிய பள்ளிகளைத் திறப்பதுடன் மற்ற எண்ணற்ற முயற்சிகளும் தேவைப்படுகின்றன. பள்ளிப்படிப்பைப் பாதியில் கைவிடுவதைத் தடுக்க குழந்தைகளைப் பள்ளிக்கனுப்புவதற்காகும். செலவைக் குறைத்திடுவதை இலக்காய்க் கொண்டு திட்டங்கள் மேற்கொள்ளப் படவேண்டும். இரண்டாவதாக தற்போது மாணவர் - ஆசிரியர் விகிதங்கள் அதிகமாயிருக்கும் பகுதிகளில் அதைக் குறைத்திட திட்டமிட்ட முயற்சிகள் செய்யப்பட வேண்டும். மூன்றாவதாக, பொருளாதார மற்றும் சமூகக் காரணங்களுக்காகப் பெண்களுக்குக் கல்வி கற்பிப்பது முக்கியம் என்பதைப் பெற்றோருக்குப் புரியவைத்துப் பெண்களைத் தொடர்ந்து பள்ளிக்கு வருகைத் தருவதை வலியுறுத்த வேண்டும். பெண் கல்வியின் மதிப்புக்கு முக்கியத்துவம் அளிக்க தவறும் மனப்போக்கை மாற்றிட ஒரு நீண்ட காலத்திட்டம் தேவைப்படுகிறது.

ஓரளவு கவனத்திற்குரிய இறுதியான பிரச்சனை கல்வியைப் பரவலாக்குவதே. அரசமைப்புச் சட்ட 73-வது திருத்தத்தின் விளைவாய் ஊராட்சிகளுக்கு அதிக அதிகாரமளிக்கப்பட்டதையடுத்து, எதிர்காலத்தில் இவ்ஊராட்சி அமைப்புகள் மேலும் முக்கியப் பணியாற்ற உள்ளன. நல்ல பள்ளிகள் மற்றும் போதிய ஆசிரியர்களைப் பெற்றிராத பகுதிகளைப் பற்றிய மேற்கூறிய பிரச்சனைகளை பள்ளிகள் நடத்துவதில் ஊராட்சிகளுக்கு மேலும் அதிகாரங்கள் அளிப்பதன் மூலம் சரிசெய்யலாம். பெட்டி 5-6-ல் விளக்கியுள்ளபடி கடந்த காலத்தைவிடத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஊராட்சிப் பிரதிநிதிகள் அதிக கல்வியறிவு பெற்றவராய் உள்ளனர். தீர்வு காணப்பட வேண்டிய குறிப்பான உள்ளூர்த் தேவைகளைப் பற்றியும் அவர்கள் அதிகம் அறிந்துள்ளார்கள். எனவே, எதிர்காலத்தில்

கல்வியைப் பரவலாக்குவதிலும் கல்வி பற்றிய பிரச்சனைகளில் தீர்வு காண்பதில் உள்ளாட்சி மன்றங்களுக்கு அதிக அதிகாரமளிப்பதில் மேலும் கவனம் செலுத்தப்பட வேண்டும்.

**பெட்டி 5.6 : கல்வியும் ஊராட்சியும்**

1996-ல் கிராம ஊராட்சித் தலைவர்களாக ஊராட்சி ஒன்றியங்களின் தலைவர்களாக மற்றும் மாவட்ட ஊராட்சி கழகத் தலைவர்களாய் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் கல்வித் தகுதிகள் பற்றிய ஒரு ஆய்வு ஆர்வமூட்டுவதாய் உள்ளது. 12,609 ஊராட்சிகளில் 3,500 தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்கள் தொடக்கப் பள்ளிவரையிலும் 6,200 பேர் உயர்நிலைப் பள்ளிக் கல்வித்தகுதிகளையும் பெற்றுள்ளனர். 1200-க்கும் மேற்பட்ட ஊராட்சித் தலைவர்கள் மேல்நிலைப் பள்ளித் தேர்ச்சியும் 1600 தலைவர்கள் பட்டதாரிகளாகவோ (அ) முதுகலைப் பட்டதாரிகளாகவோ உள்ளனர். எனவே, நடைமுறையில் உள்ளாட்சித் தலைவர்களிடையே கல்வியறிவற்றவர் யாருமிருக்கவில்லை என்பது தெளிவாகிறது. கல்விப் பரவலையடுத்து கிராமநிலையில் நிருவாகத்தில் பங்கேற்க கிராமங்களில் ஒரு விழிப்புணர்வு ஏற்பட்டுள்ளதாய் தோன்றுகிறது. பெண் ஊராட்சித் தலைவர்கள் 34% ஆகியுள்ளனர். இவர்களில் ஏறத்தாழ 50% உயர்நிலைப் பள்ளிக் கல்வியைப் பெற்றுள்ளனர். பெண் ஊராட்சித் தலைவர்களில் ஏறத்தாழ 5% பட்டதாரிகளாய் (அ) முதுகலைப் பட்டதாரிகளாய் உள்ளனர். மற்றொரு 8% மேல்நிலைப் பள்ளித் தகுதியைப் பெற்றவராவர். எனவே நிருவாகத்தில் பாலின சமஉரிமையைத் தவிர உள்ளாட்சி மன்ற நிருவாகத்தில் கல்வி கற்ற பெண்களின் பங்கேற்பு எனும் ஒரு புதிய போக்கும் பெருகிவருகிறது. ஒன்றிய மற்றும் மாவட்ட ஊராட்சி நிலையில் ஊராட்சி மன்ற நிருவாகத்தின் இரண்டாம் மற்றும் மூன்றாம் நிலைகளில், தலைவர்களின் கல்வியடைவு நிலை வியக்கத்தக்க வகையில் உள்ளது.

எனவே மாவட்ட ஊராட்சி ஒன்றிய நிலைகளில் கல்வியைப் பரவலாக்கலின் நன்மை, தீமைகள் எவ்விதமாயிருப்பதாய் கூறப்பட்டாலும், மாநிலத்தில் ஊராட்சி மன்றங்களின் நிருவாகப் பொறுப்பில் போதிய கல்வியறிவைப் பெற்ற ஒரு புதிய தலைமுறையை சேர்ந்த மக்கள் உள்ளார்கள் என்பதில் ஐயப்பாடேதுமில்லை. பரவலாக்கப்பட்ட திட்டமிடுதலால் புதிய கருத்துக்களை அறிமுகப்படுத்துவதில் இவர்கள் பயனுள்ள பங்காற்றுவதன் மூலம் வளர்ச்சியில் ஒரு புதிய வரலாற்றைப் படைக்க உதவுவார்கள் என்பதிலும் ஐயப்பாடேதும் இல்லை.

### வாழ்க்கைத் தொழிற் கல்வி

ஜுன் 1978-லிருந்து தமிழ் நாட்டில் அறிமுகப்படுத்தப்பட்ட வாழ்க்கைத் தொழிற்கல்விப் பிரிவு உள்ளிட்ட புதிய அனைத்திந்தியக் கல்வி முறை (திட்டம்) (10+2+3) மக்களின் தேவைகள் மற்றும் பேரார்வங்களுக்கேற்பப் பள்ளிக் கல்வியில் பெரும் மாற்றங்களை ஏற்படுத்தியுள்ளது. பள்ளியளவில் திருத்திய கல்வி முறைத்தயாரிப்பு ஒரு தீவிரமான செய்முறையாயிருந்தது. 1972-ல் தொடங்கிய இது பல மாற்றங்களுக்குப் பின் இறுதியாய் 1978-ல் நடைமுறைக்கு வந்தது. புகுமுகவகுப்பு எனவும் அழைக்கப்பட்ட தொழில் முறை நுழைவு வகுப்பு, பெரும்பாலும் நகர் புறங்களில் பல்கலைக்கழக

நிலையில் 88 கல்லூரிகளில் கற்பிக்கப்பட்டது. பிறகு இம்முறை ஒழிக்கப்பட்டு அதற்கு பதிலாய் ஐந்து முக்கிய பாடப்பிரிவுகளில் இரண்டாண்டுக்கால மேல்நிலைக்கல்வி, பள்ளிநிலைகளிலேயே, 1927-ல் பள்ளிகளில் தொடங்கப்பட்டது. இதன் மூலம் தொலைதூர உள்புறக் கிராமப் புறங்களில்கூட மேல்நிலைக்கல்வி விரிவாக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு ஊராட்சி ஒன்றியத்திலும் ஒவ்வொரு நகராட்சியிலும் குறைந்தது. ஒரு பள்ளியாயிருக்கும் வகையில் மேல்நிலைப் பள்ளிகள் தொடங்கப்பட்டன. தொழிற்கல்வியில் ஒரு முன்னோடியாய் தமிழ்நாடு விளங்குகிறது. இன்றைய நிலவரப்படி வேளாண்மை, மனையியல், வணிகம், பொறியல் மற்றும் தொழில் நுட்பவியல், நல்வாழ்வு மற்றும் ஏனைய மாபெரும் பிரிவுகளின் கீழ் 66 தொழிற் கல்விப் பாடப்பிரிவுகள், மேல்நிலைப் பள்ளி நிலையில் கற்பிக்கப் படுகின்றன. 2493 அரசு மற்றும் உதவிபெறும் உயர்நிலை பள்ளிகளில் 1389 பள்ளிகளில் (47%) வாழ்க்கைத் தொழில் படிப்புக் கல்வி அறிமுகப்படுத்தப் பட்டுள்ளது. மொத்தமுள்ள 6,94,000 மாணவர்களில் 1,09,000 மாணவர்கள் (16%) மாநிலத்தில் வாழ்க்கைத் தொழில் படிப்புப் பிரிவில் பயிலுகின்றனர்.

மாநிலத்திலுள்ள மேல்நிலைப் பள்ளிகளில் 3,366 வாழ்க்கைத் தொழிற்கல்விப் பயிற்றுநர்கள் பணியில் உள்ளனர். 1999-2000-ம் ஆண்டில், மேலும் 100 மேல்நிலைப் பள்ளிகளில் வேளாண் மற்றும் தொடர்புகள் படிப்புப் பிரிவுகள் அறிமுகப்படுத்தப்பட்டன. மேல்நிலைப் பள்ளிநிலையில் ஒரு பிரிவும் 100 வாழ்க்கைத் தொழில்படிப்புப் பயிற்றுநர் பணியிடங்களும் உருவாக்கப்பட்டன. மேலும், மேல்நிலைப் பள்ளிகளில் வாழ்க்கைத் தொழிற்கல்விப் படிப்புகளுக்கும் விருப்புரிமையை ஊக்குவிக்க, அரசு, அரசுப் பொறியியற் கல்லூரிகளிலும் அரசின் உதவி பெறும் பொறியியல் கல்லூரிகளிலும் 100 இடங்களையும் தனியார் பொறியியற் கல்லூரிகளில் பொறியியல் மற்றும் தொழில் நுட்பவியல் மாணவர்களுக்காக 600 இடங்களையும் ஒதுக்கியுள்ளது.

இருப்பினும், வாழ்க்கைத் தொழிற்கல்வியில் பிரச்சனைகளும் உள்ளன. எடுத்துக்காட்டாய் வேளாண்மையில் மாநிலத்தின் மொத்த நிகர உற்பத்தியின் பங்கு குறைந்து வருகையில் வேளாண்மையில் வாழ்க்கைத் தொழிற்கல்வியின் பொருத்தம் சரியா எனத் தெளிவாய் தெரியவில்லை. தாங்கள் பெற்ற அடிப்படைத் திறமைகளைப் பயன்படுத்தி மாணவர்கள் வேலை வாய்ப்புகளைப் பெறும் வகையில் வாழ்க்கைத் தொழில் படிப்பு முறைகள் மாற்றியமைக்கப்பட வேண்டும். கணினிக் கல்வி அறிமுகத்திற்குப்பின் (பெட்டி 5-8-ஐப் பார்க்கவும்) பள்ளிகளில் வாழ்க்கைத் தொழிற் கல்வியின் மீதான கவர்ச்சி, உரிய முறையில் மாற்றியமைக்கப்படாவிட்டால் குறைந்துவிடும். மேலும், தற்போது கற்பிக்கப்பட்டு வரும் 66 வாழ்க்கைத் தொழிற்படிப்புப் பிரிவுகளின் பயன்பாடுகள் பற்றி மதிப்பாய்வு ஏதும் செய்யப்பட்டதாய் தெரியவில்லை. ஏற்கனவே பணியமர்த்தப்பட்டுள்ள வாழ்க்கைத் தொழிற்படிப்புப் பயிற்றுநர்களை வேறு இடங்களில் பணியமர்த்த இயலாமை (அ) வேறு வகைகளில் பயன்படுத்த இயலாமை காரணமாய் இப்படிப்புப் பிரிவுகள் பெரும்பாலும் தொடர்ந்து கற்பிக்கப்பட்டு வருதாய் தெரிகிறது. வாழ்க்கைத் தொழிற்கல்வியை சீரமைக்கும் பொருட்டு 1993–ல் அளிக்கப்பட்ட லாரன்ஸ் குழுவினரின் பரிந்துரைகள் ஆய்வு செய்யப்பட்டு அவற்றை செயலாக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.

**மூன்றாவதான கல்வி**

கடந்த பத்தாண்டில், உயர்கல்வியில் தொழிற்பயிற்சிப் பள்ளிகள், பல்தொழில்நுட்பப் பயிலகங்களிலிருந்து, கலை, அறிவியல் மற்றும் பொறியியல் கல்லூரிகளின் எண்ணிக்கையில் வேகமான வளர்ச்சியைத் தமிழ்நாடு கண்டது. மாநிலத்தின் ஒன்பதாவது திட்டம், நிறுவனத் தொடரமைவு மற்றும் பல்கலைக்கழக மற்றும் திறந்தவெளிப் பல்கலைக்கழக முறையின் வரையறுக்கப்பட்ட விரிவாக்கம் மூலம், தற்போதிருக்கும் கட்டமைப்புகளை ஒருங்கிணைத்துப் பெருமமான பயனீட்டளவைப் பெற வேண்டுமென வலியுறுத்துகிறது.

**பெட்டி 5.7 : கல்வியில் தகவல் தொழில் நுட்பவியல் தொடக்க முயற்சிகள்**

தமிழ்நாடு, தகவல் தொழில்நுட்பத் துறையில் முன்னிலை வகிக்கிறது. மிகுந்த பயனளிக்கும் தொழில்துறைக்கு இணக்கமானதொரு தகவல் தொழில்நுட்பக் கொள்கையை அறிவிப்பதிலும் அதை செயலாக்க ஒரு சிறப்புப் பணிப்பிரிவை அமைத்தலிலும் முதன்மையான மாநிலங்களில் ஒன்றாய் தமிழ்நாடு விளங்குகிறது. பள்ளிப்படிப்பை முடித்து வெளியேறுபவர்கள் கணினிக் கல்வியறிவு பெற்றவர்களாயிருக்கப் பள்ளிநிலையில் கணினிக் கல்வி இன்றியமையாதது என்பதையும் கணினி பற்றிய அடிப்படையறிவைப் பெற்றிருத்தல் வேலைவாய்ப்புப் பெறுவதில் (அ) மேல்படிப்பைத் தொடருவதில் அவர்களுக்குப் பயனளிப்பதாய் அமையும் என்பதை அரசு உணர்ந்திருந்தது. இதற்கேற்ப அரசு, கணினி அறிவியலை ஒரு தேர்வுப் பாடமாய் நாட்டிலுள்ள எல்லா 1200 மேல்நிலைப் பள்ளிகளிலும் 1999–2000 மற்றும் 2000–01-ல் ஒரு படிநிலையில் அறிமுகப்படுத்தியது. சராசரியாய் 10 மாணவர்கள் வீதம் ஒவ்வொரு ஆண்டிலும் மேல்நிலைத் தேர்வுகளில் தேர்ச்சிபெறும் 48,000 மாணவர்கள் அடிப்படைக் கணினிக்கல்வியும், கணினிகளில் நேரடிப் பயிற்சியனுபவமும் பெற்றுள்ளனர். இப்படிப்புப் பிரிவுகள் வல்லுநர்களால் வடிவமைக்கப்பட்ட பாடத்திட்டங்களை அடிப்படையாய் கொண்டவை. 2000–01-ம் ஆண்டிலிருந்து 9 மற்றும் 10-ம் வகுப்புகளில் கணினிக் கல்வி அறிமுகப்படுத்தப்பட்டது. இவ்விரண்டு வகுப்புகளுக்கும் ஒரு நடைமுறை வழிகாட்டி (செய்முறை மூலம் கற்றல்) எனும் வடிவில் ஒரு ஒற்றைப் பாடபுத்தகம் கொண்டு வரப்பட்டுள்ளது. 11 மற்றும் 12-ம் வகுப்புகளுக்கான கணினி அறிவியல் பாடத்திட்டமும், கணிணி அறிவியல் துறையில் ஏற்படும் முன்னேற்றங்களைக் கருத்தில் கொண்டு மாற்றியமைக்கப்படுகிறது.

**தொழிற்பயிற்சி நிலையங்கள் (தொ.ப.நி)**

மாநிலத்தின் தொழில் முன்னேற்றம் தனித்திறம் வாய்ந்த மனித ஆற்றலை சார்ந்திருக்கிறதென்பதை உணர்ந்த அரசு, தமிழ்நாடு முழுவதும், பரவலான தொழிற்பயிற்சி நிலையங்களின் ஒரு தொடரமைவை அமைத்துள்ளது. தமிழ்நாடெங்கும் பரவலாயமைந்திருக்கும் 53 தொ.நு.ப.நி.கள் 36 பொறியியல் மற்றும் 15 பொறியியல் அல்லாத தொழில்களில் பயிற்சியளித்து வருகின்றன.

இம்முயற்சிகளின் தொடர்ச்சியாய், தொழிற்சாலைகளுக்குத் தேவைப்படும் தேர்ச்சித் திறம் பெற்ற கைவினைஞர்களை உருவாக்க தொழிற்பயிற்சியில்லாத எல்லா 218 ஒன்றியங்களிலும் புதிய தொ.ப.நி.களைத் திறந்து கிராமப்புற இளைஞர்கள் தொழிற்பயிற்சி பயனைப் பெற அனுமதிக்கும்

வகையில் ஒரு முன்னோடி திட்டம் 1996–97–ல் அறிமுகப்படுத்தப்பட்டது. கடந்த மூன்றாண்டுகளில் 15 புதிய தனியார் தொ.ப.நி.கள் தொடங்கப்பட்டன. இதன் மூலம் தனியார் தொ.ப.நி.களின் மொத்த எண்ணிக்கை 6075 பயிற்சியாளர்களை எடுத்துக்கொண்டதில் 590 ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

இருப்பினும் பயிற்சி மற்றும் வேலை வாய்ப்புக்கிடையில் சமநிலையற்ற நிலையைத் தடுத்து சரியான திசையில் பயிற்சி முன்னுரிமைகளையும் திட்டங்களையும் வழிப்படுத்திட, தொழிலாளர் சந்தையில் காணப்படும் போக்குகளின் பகுப்பாய்வை சார்ந்திருக்கும் சந்தை சார்ந்த ஒரு திட்ட அணுகுமுறை மேற்கொள்ளப்பட வேண்டும். இது வேலையளிப்பவர்களின் எதிர்பார்ப்புகள் மற்றும் வருங்கால திட்டங்கள் பற்றிக் கண்டறியும் பயனுள்ள கருவிகளாயுள்ள விரிவான கணக்கெடுப்பும் வரைபட ஆய்வுகள் நடத்துவதன் மூலம் செய்யப்படும். அத்தகைய கணக்கெடுப்பகளும் ஆய்வுகளும் தேவைப்படும் இடைவேளைகளில் இன்றைய நிலைக்கேற்பச் செய்யப்படவேண்டும். தொழில்நுட்பத் தேர்ச்சித் திறன்கள் கவர்ச்சிகரமான சம்பளங்களில் சந்தையில் விரைவாக ஈர்க்கப்பட வேண்டுமாயின் அளிக்கப்பட்ட தொழில்நுட்பப் பயிற்சி, சந்தைத் தேவைகளுக்கேற்ப இருக்கச் செய்யும் வகையில், உருவாகக்கூடிய சந்தைத் தேவைகள் நிலையாய் ஆய்வு செய்யப்பட வேண்டும்.

## கலை மற்றும் அறிவியல் கல்லூரிகள்

மாநிலத்தில் கலை மற்றும் அறிவியல் படிப்புப் பிரிவுகளையளிக்கும் கல்லூரிகள் வேகமாய் விரிவடைந்து வருகின்றன. தற்போது, 422 கலை மற்றும் அறிவியல் கல்லூரிகள் உள்ளன. இவற்றில் 67 அரசுக் கல்லூரிகள். 161 நிதியுதவி பெறும் கல்லூரிகள், 194 சுயநிதிக் கல்லூரிகள். (படம் 5.6)

சுயநிதிக் கலை மற்றும் அறிவியல் கல்லூரிகளின் திறப்பு மாநிலத்தில் 1984–85–ல் தொடங்கியது. 1991 வரை 27 சுயநிதிக் கலை மற்றும் அறிவியல் கல்லூரிகள் திறக்கப்பட்டன. அடுத்து வந்த பத்து ஆண்டில் (1991–2000) 167 சுயநிதிக் கல்லூரிகள் திறக்கப்பட்டன.




ஆதாரம் : தமிழ்நாடு அரசின் உயர்கல்வி மீதான கொள்கைக் குறிப்பு

## பெட்டி 5.8 : மூன்றாம் பிரிவுக் கல்வியில் பெண்கள்

அரசு மற்றும் தனியார்த் துறைகளின் ஆதரவின் கீழ்ப் பெண்களுக்கான கல்வி நிலையங்களைத் தொடங்க அளிக்கப்படும் ஊக்கத்திலிருந்து பெண்களுக்கு அதிகாரமளிப்பதில் அரசு கொண்டுள்ள அக்கறை புலனாகும். இதுவரை 120 கலை மற்றும் அறிவியல் கல்லூரிகள் குறிப்பாய் பெண்களுக்கெனத் தொடங்கப்பட்டுள்ளன. பெண்கள் கல்லூரிகளில்லாத இடங்களில், அப்பகுதிகளிலிருக்கும் கல்லூரிகளில் மொத்த சேர்க்கை அளவில், 30% பெண்கள் சேர்க்கப்படுகின்றனர். அடிப்படைத் தொழில்நுட்பத் தேர்ச்சி திறங்களைக் கற்பிக்கத் தொடங்கப்பட்ட 53, அரசுக்கல்லூரிகளில் 10, முழுமையாய் பெண்களுக்கெனத் தனியே உள்ளன. தொழில்நுட்பக் கல்விக்கென 11 பெண்கள் பல்தொழில்நுட்பப் பயிலகங்களும், 2 பெண்கள் பொறியியல் கல்லூரிகளும் உள்ளன. 1999–2000-ல் பொறியியல் கல்லூரிகளில் அனுமதிக்கப்பட்ட மொத்த மாணவரில் (25,119) 7,856 பேர் பெண்கள். இது மொத்த சேர்க்கையளவில் 31% ஆகும்.

பல்கலைக்கழகக் கல்வியைப் பொறுத்தவரை, ஆராய்ச்சி மற்றும் கல்வி மூலம் பெண்களின் முன்னேற்றத்தை விரைவுபடுத்தும் சீரிய நோக்கத்தோடு பெண்களுக்கென்றே தனியாக, 1980-களில் கொடைக்கானலில் அன்னை தெரசா பல்கலைக்கழகம் நிறுவப்பட்டது. கோவையில் உள்ள அவினாசிலிங்கம் பெண்கள் மனையியில் மற்றும் மேல்நிலைக்கல்வி நிலையம் ஒரு முதனிலைக் கல்வி நிலையமாய் அமைந்துள்ளது. இதற்கு நிகர்நிலை பல்கலைக்கழகத் தகுதி நிலை வழங்கப்பட்டுள்ளது. 20,648 கல்லூரி ஆசிரியர்களில் 8,897 பேர் பெண்கள். இது மாநிலத்தின் ஆசிரியர் எண்ணிக்கையில் 43% விழுக்காடாகும். எனவே பெண்கள் கல்வியில் மாநில அரசு தீவிர அக்கறை கொண்டுள்ளதென்பதும் அதன் கொள்கைகள், பெண்களின் கல்வி முன்னேற்றதிற்கான அனைத்து வழிகளிலும் இயன்றவழி வாய்ப்புகளை அளிப்பதாயும் உள்ளதெனத் தெளிவாகிறது.

சுயநிதிக் கல்லூரிகளுக்கு ஊக்கமளிப்பதில் 10-ம் வகுப்பு மற்றும் 12-வகுப்புகளில் பயிலும் 4,50,000 மாணவர்களில் 80% கலை அறிவியல் மற்றும் வணிகவியலைத் தேர்வு செய்வர் என்ற உண்மையை அரசு கவனத்தில் கொண்டுள்ளது. வேலை வாய்ப்பு சார்ந்த படிப்புப் பிரிவுகளில், அரசு கொள்கைப்படி, கணினி அறிவியல், உயிர் வேதியியல், நுண்ணுயிரியல், வணிக நிர்வாகம் மற்றும் உணவாக்கம் போன்ற முக்கியப் படிப்புப் பிரிவுகள், சுயநிதிக் கல்லூரிகளில் மட்டுமின்றி அரசுக் கல்லூரிகளிலும் கற்பிக்கப்படுகிறது. கலை மற்றும் அறிவியல் கல்லூரிகளில் 35% பெண்கள் கல்லூரிகளாயிருப்பதால் பெண்கள் உயர்கல்வியைத் தொடர ஏராள வாய்ப்புகள் உள்ளன. இருப்பினும், சுயநிதிக் கல்லூரிகளில் அளிக்கப்படும் கல்வியின் தரம் உன்னிப்பாய் கண்காணிக்கப்பட வேண்டும்

### தொழில்நுட்பக் கல்வி

கடந்த பத்தாண்டு காலத்தில் பொறியியல் கல்வி நிலையங்களின் வளர்ச்சியில் வேகமான முன்னேற்றத்தைப் பெற்றுள்ளது. தமிழ்நாடு மாநிலத்தில் தற்போது 123 பொறியியல் கல்லூரிகள் உள்ளன. இவற்றில் 113 சுயநிதிக் கல்லூரிகளாகும். மாநிலத்திலிருக்கும் 202 பல்தொழில்நுட்பப் பயிலகங்களில் 145, சுயநிதிப் பயிலகங்களாகும். (படம். 5.7) கடந்த சில ஆண்டுகளில்

பொறியியல் கல்லூரிகள் மற்றும் பல்தொழில்நுட்பப் பயிலகங்களில் மாணவர்களின் சேர்க்கை அளவு வேகமாய் உயர்ந்துள்ளது. 1999–2000-ல் பொறியியல் கல்லூரிகளில் 25,119 மாணவர்கள் சேர்க்கப்பட்டனர்.

இதில் 20,411 பேர் சுயநிதிப் பொறியியற் கல்லூரிகளில் சேர்க்கப்பட்டிருந்தனர். சேர்க்கப்பட்ட பெண்களின் விழுக்காடு 31%. 1998–99-ல் பல்தொழில்நுட்பப் பயிலகங்களில் சேர்க்கப்பட்ட மாணவரின் எண்ணிக்கை 29,346. இருப்பினும் பல்தொழில்நுட்பப் பயிலகங்களில் பெண்களின் சேர்க்கை அளவு 14.4% மட்டுமே. (பெட்டி 5.7ஐப் பார்க்க) அரசுப் பல்தொழில்நுட்பப் பயிலகங்களில் பெண்களின் சேர்க்கையளவு 32.77% ஆகவும் சுயநிதிப் பல்தொழில்நுட்பப் பயிலகங்களில் இது 8.72% மட்டுமே இருந்தது குறிப்பிடத்தக்கது.

**படம் 5.7 : பொறியியல் கல்லூரி மற்றும் பல்தொழில்நுட்பப் பயிலகங்களின் வளர்ச்சி, 1991–2000**




*ஆதாரம் : தொழில்நுட்பக் கல்வி இயக்ககம்*

மாநிலத்தில் தொழில்நுட்பக் கல்வி 1990-ல் வேகமாய் வளர்ச்சிபெற்றது. இது, அதனளவில் ஊக்கமப்பதாயிருந்தாலும். வேலைவாய்ப்புகளின் சூழ்நிலையில் இதைப்பார்க்க வேண்டும். தற்போதைய போக்கின்படி, ஆண்டு ஒன்றுக்கு பொறியியல் பட்டதாரிகளின் எண்ணிக்கை 25,000-ஆக இருக்கும். மாநிலத்தின் முதன்மை தொழில்நுட்பக் பல்கலைக்கழகமான அண்ணா பல்கலைக்கழகத்தின் பணியமர்த்தம் குறித்த புள்ளி விவரங்கள் பொறியியலின் பல்வேறு பிரிவுகளைச் சேர்ந்த மாணவர்களில் 60-லிருந்து 85% மாணவர்கள், அந்தந்தக் கல்லூரி வளாகப் பணியமர்த்தம் மூலம் பணியமர்த்தப் படுவதைச் சுட்டிக்காட்டுகிறது. எஞ்சியுள்ளோர் வழக்கமாய் உயர்படிப்புக்காக வெளிநாடுகளுக்கு செல்லுகின்றனர். இருப்பினும் மகிழ்ச்சியளிக்கக் கூடிய இந்நிலைமை மாநிலத்தினருக்கும் மற்ற பொறியியல் கல்லூரிகளைப் பொறுத்தவரை

உண்மையாயில்லை. பொறியியல் கல்லூரி மாணவர்களின் பணியமர்த்தம் குறித்து (அண்ணா பல்கலைக்கழகம் அல்லாத) புள்ளி விவரங்கள் கிடைக்கப்பெறாவிட்டாலும் சென்னை மற்றும் கோவையில் உள்ள ஒரு சில முதன்மைதனியார் பொ.இ.க.-களைத்தவிர, மற்ற பொ.இ.க.–களிலிருந்து போதிய அளவில் பொ.இ.பட்டதாரிகள் தொழில்களில் பணியமர்த்தம் பெற்றதாய்த் தெரியவில்லை. இதற்குக் காரணம் தரமான கற்பிப்பது இல்லாமையும், இதன் விளைவாய் இக்கல்லூரிகளிலிருந்து பட்டம்பெற்று வெளிவரும் தரம் குறைந்த மாணவர்களுமே இது கவலையளிக்கக் கூடிய நிலை. அரசு எதிர்காலத்தில் மாநிலத்தில் புதிய பொ.இ.க.–களை நிறுவ அனுமதி அளிக்கும் அதன் கொள்கையை மறுஆய்வு செய்ய வேண்டியதாயிருக்கும்.

### கல்விக்காகும் பொதுச்செலவு

கல்விக்காகும் செலவினத்தை ஆய்வு செய்வதுடன் இவ்வியல் முடிவுபெறுகிறது. 1999–2000ம் ஆண்டில், மாநிலத்தில் பொதுக்கல்விக்கான மொத்த செலவு ரூ. 41.39 பில்லியன்கள் இது. வருவாய் செலவினமான ரூ. 207.03 பில்லியனில் 19.9% ஆகும். முந்தைய ஆண்டிலிருந்த 20.7% உடன் ஒப்பிடுகையில் ஒரு சிறு இறக்கம் காணப்படுகிறது. இது ஒருவேளை 1998–99–ல் சம்பளக்குழுவின் பெரும் செயல்விளைவின் காரணமாயிருக்கலாம் எனவும் கூறலாம்.

கல்வி தொடர்பாய் செலவுகள் செய்யப்படும் பல்வேறு மற்ற இனங்களும் உள்ளன. சில முதலீடுகள் வெளிப்படையானவை. பள்ளிக் கட்டடங்கள் கட்டுதல் மற்றும் பேணுகைப்பராமரிப்பு ஆதிதிராவிடர் குழந்தைகளுக்காகப் பள்ளி நடத்துதல் போன்றவை. ஊராட்சி ஒன்றியப் பள்ளி ஆசிரியர்கள் மற்றும் அரசுப் பள்ளி ஆசிரியர்களுக்கான ஓய்வூதியம் மொத்த ஓய்வூதிய செலவினத்தோடு சேர்க்கப்பட்டு இருப்பதால் இவற்றை வேறுபடுத்திக் காட்ட இயலாதநிலை. உடனடியாய்க் கண்டறியக் கூடிய செலவினத்தை சேர்த்தால் கல்வியின் மொத்த முதலீட்டை ரூ. 1.18 பில்லியனுக்கு அதிகரிக்கச் செய்கிறது. இது மாநிலத்தின் வருவாய் செலவினத்தில் 22.9% ஆக அமைகிறது. வருவாய்க் கணக்கு மீதான செலவினம் மொத்த செலவினத்தில் 97%–க்கு மேல் ஆன செலவை ஈடு செய்கிறதெனவும் தெரியவருகிறது. இது நாடெங்கிலும் காணப்படும் போக்குக்கேற்பவே உள்ளது.

மாநிலத்தில் கல்வி மீதான பொதுச் செலவினம் பற்றிய ஒரு எண்ணத்தை அளிக்கும் கட்டிடத்தை கட்டும் கருவிகளாவன. தனி ஒருவருக்காகும் செலவு மற்றும் கல்வியில் பல்வேறு நிலைகளில் ஒரு மாணவருக்கான செலவு ஆகியன. தமிழ்நாட்டில், 1997–98–ல் தனி ஒருவருக்கான செலவு (தற்போதைய நிலவரப்படி) ரூ. 575.5 ஆக இருந்தது. இது அனைத்திந்திய சராசரியான ரூ. 525.7ஐ விட அதிகம் மிக அதிக புள்ளிவிவரங்களை ரூ. 754.3 கேரளாவிலும் மிகக் குறைவாக, பீகாரில் ரூ. 297/-ம், உத்திரபிரதேசத்தில் ரூ. 316.4-ம் உள்ளது. இதிலிருந்து கல்வியின் செயலாக்கத்திற்கும் அரசின் தனிஒருவரின் செலவுக்குமிடையே ஒரு ஒப்புமைத் தொடர்பு காணப்படுகிறது. தமிழ்நாட்டின் செலவினம் மிக அதிகமாயில்லாவிட்டாலும், தற்போதிருக்கும் கட்டமைப்பு அளவுகளாலும் வளமை மிக்கத் தனியார் துறை அமைவினாலும் குறிப்பாக, உயர்கல்வியில் அதன் செயலாக்கத்தில் ஓரளவு உறுதிப்பாட்டைப் பெற்றுள்ளது.

பல்வேறு நிலைகளில் அரசின் தனிஒரு மாநிலமாயில்லாவிட்டாலும், தற்போதிருக்கும் கட்டமைப்பு அளவுகளாலும் வளமை மிக்கத் தனியார் துறை அமைவினாலும் குறிப்பாக, உயர்கல்வியில் அதன் செயலாக்கத்தில் ஓரளவு உறுதிப்பாட்டைப் பெற்றுள்ளது.

பல்வேறு நிலைகளில் அரசின் தனி ஒரு மாணவரின் செலவினம், தொடக்க மற்றும் இடைநிலைக்கல்வி நிலைகளில், அது அனைத்திந்திய அளவுகளுக்கு நிகராயிருக்கையில் கல்லூரி அளவில், செலவினம் மிகக் குறைவாகவே உள்ளதைக் காட்டுகிறது. இந்நிலை உயர்கல்வியில் வளமைமிக்கத் தனியார் துறையின் இருக்கையை மீண்டும் உறுதிப்படுத்துகிறது. கல்விக்குப் பன்னாட்டு நிதியுதவியும், குறிப்பிடத்தக்க அளவுபெருகி வருகிறது.

### பெட்டி 5–9 : தொடக்கக் கல்விக்கு வெளிநாட்டு உதவி

**கல்வியின் செலவினத்திற்கு குறிப்பாய் அடிப்படைக் கல்வித்துறையில் நிதியுதவிக்கான வளஆதாரங்களைக் கண்டறிவது ஒரு பிரச்சனைக்குரிய விஷயமாய் இருந்து வருகிறது. இருப்பினும், 1990–ல் ஜோம்டியன் மாநாடு அனைவருக்கும் அடிப்படைக்கல்வி எனும் இலக்கை அடைய வெளிநாடுகளின் உதவியைப் பெற குறிப்பாய் இம்மாநாடு உலகவங்கி அனைத்திந்திய நாடுகளின் வளர்ச்சி திட்டம் ஐக்கிய நாடுகளின் குழந்தைகள் கல்வி நிதி (யூனிசெப்) மற்றும் அனைத்திந்திய நாடுகளின் கல்வி, அறிவியல் மற்றும் பண்பாட்டு நிறுவனம் (யுனெஸ்கோ) போன்ற நான்கு நிதி உதவியளிக்கும் முதன்மைகளின் இணைந்த ஆதரவுடன் நடத்தப்பட்டதால் ஒரு பெரும் உத்வேகத்தைப் பெற்றது. கல்விக்கு உலக வங்கியின் உதவியின் மூலம் 1985–90–ல் தொடக்கக் கல்வி 25% உதவியைப் பெற்ற போதிலும் அதில் இந்தியா மகிச்சிறிதளவான பங்கையே பெற்றது. 1990–களில் மூன்றாவதான துறையில் (Tertiary level) தமிழ்நாடு பெற்ற உலகவங்கி உதவிபெற்ற ஒரே திட்டம் உலகவங்கியில் தொழில்நுட்பக் கல்விதிட்டம் ஆகும்.**

**இத்திட்டம், முக்கியமாய் அரசால் நடத்தப்படும் பல் தொழில்நுட்பப் பயிலகங்களில் கட்டமைப்பு மற்றும் தளவாடங்கள் நவீனமயமாக்கலை பலப்படுத்துவதற்காக ஏற்படுத்தப் பட்டது. இதைத்தவிர, கடந்த 20 ஆண்டுகளில் பன்னாட்டு நிறுவனங்களின் நிதியுதவி மூலம் மாநிலம் கல்விக்காக எந்தப் பயனையும் பெறவில்லை. 1980-களிலிருந்து அடிப்படைக் கல்விக்காக பன்னாட்டு நிறுவனங்களின் ஒப்பிய பொறுப்பு, அடிப்படைக் கல்விக்கான நிதிக்கு முக்கிய ஆதாரமாயிருப்பது வெளிநாட்டு உதவியே எனத் தெரிகிறது. 1993–ல் ஐரோப்பியக் கூட்டமைப்பு உலக வங்கி கடல்கடந்த வளர்ச்சி முகமை முதலானவற்றின் மாவட்டத் தொடக்கக்கல்வித் திட்டம் அடிப்படைக் கல்வியை விரிவாக்கும் ஒரு பெரும்திட்டமாகும். இது, நாட்டிலிருக்கும் மற்ற மாநிலங்களோடு தமிழ்நாட்டுக்கும் ஒப்பளிக்கப்பட்ட திட்டமாகும். மாவட்டத் தொடக்கக் கல்வித்திட்டம் மூலமாய் அடிப்படைக் கல்விக்கு அளிக்கப்படும் தனிப்பட்ட கவனம், பயன்களை அளிக்கத் தொடங்கியுள்ளது. எட்டாம் வகுப்பு வரை, அனைவருக்கும் கட்டாயக் கல்வி எனும் இலக்கை அடைய வெளிநாட்டு உதவியைப் பெறும் வகையில் அடிப்படைக் கல்விக்கான திட்டங்களை முன்மொழிவதற்கான அவசியம் உள்ளது. அடிப்படைக் கல்வியை விரிவுபடுத்தும் புதிய**

திட்டங்கள், பன்னாட்டு நிதி முகமைகளின் கவனத்தை ஈர்க்கும் உயர்கல்வியைத் தனியார்மயமாக்கம், வேகமாய் நடைபெறும் இவ்வேளையில் அடிப்படைக்கல்வி, குறிப்பாக கிராமப்புறங்களில் மாநிலத்தின் பொறுப்பாய் தொடர்ந்திருக்கும். அனைவருக்கும் தொடக்கக் கல்வியை விரிவுபடுத்த நிதி ஆதாரங்களைக் கண்டறிய வெளிநாடுகளிலிருந்து நிதியுதவிகோரும் திட்டங்கள் தயாரித்துப் பன்னாட்டு முகமைகளுக்கு அனுப்பப்பட வேண்டும். அத்தகைய திட்டங்கள், ஆசிரியரின் தரம் கற்பிப்பதற்குத் தேவையான தளவாடங்கள் வகுப்பறைக் கட்டமைப்புகள் ஆகியவற்றின் தரங்களை மேம்படுத்துவதோடு பெற்றோரிடையில் அவர்களது குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்க வேண்டும் எனும் ஒரு விழிப்புணர்வை உருவாக்குவதையும் முக்கிய நோக்கமாய் கொண்டிருக்க வேண்டும்.

# இயல்

# 6

## பாலினம்

மனித மேம்பாட்டில் பாலின ஏற்றத்தாழ்வுகளைத் தெளிவாய் விளக்கி இவற்றிற்குத் தீர்வுகாணும் முயற்சிகளின் வலிமை மற்றும் பலவீனங்கள் ஆகியவற்றைப் பகுத்தாய்ந்து எதிர்காலத்தில் பாலின ஏற்றத்தாழ்வை நீக்கக்கூடிய திட்டங்களை வெளியிட்டாலன்றி மனித மேம்பாடு குறித்த எந்த ஒரு அறிக்கையும் முழுமையாயிராது. தமிழ் நாட்டில், பெண்கள் கல்வியறிவு, பெண் சிசு இறப்புவீதம், பெண்களின் ஆயுட்கால எதிர்பார்ப்பு மற்றும் கருவள வீதங்களின் செயலாக்கத்தில் பெண்களின் தகுதி நிலை, கேரளா நீங்கலாக மற்ற மாநிலங்களைக் காட்டிலும் உயர்வாக உள்ளது. இருப்பினும் கல்வியறிவு, மாணவிகள் சேர்க்கை மற்றும் ஆயுட்கால எதிர்பார்ப்பு ஆகியவற்றில் பெண்கள் மொத்தத்தில் முன்னேற்றம் கண்டிருந்தாலும் ஆண்களோடு ஒப்பிடுகையில் அவர்களுடைய நிலை மாறுதலின்றி உள்ளது. (எடுத்துக்காட்டாக கல்வியறிவில் தொடர்ந்திருக்கும் ஏற்றத்தாழ்வு) அல்லது பலவகைகளில் மேலும் மோசமடைந்துள்ளது. (எடுத்துக்காட்டாகக் குறைந்து வரும் பாலின விகிதம்) நற்பேறற்ற விதமாய் தமிழ்நாட்டில் பாலினப் பிரச்சனைகள் பால் கவனம் செலுத்தப்படுவதைச் சுட்டிக்காட்டும் மிகப் பெரும்பாலான பாலின உருவளவைகளைப் பொருத்தவரை, பெண்களின் நல்வாழ்வு நிலை பற்றி (மொத்த மற்றும் ஆண்களோடு ஒப்பீட்டடிப்படை நிலைகளில்) அடிப்படை விவரங்களோ, நாளிதுவரையிலான ஆய்வோ தற்போதில்லை. ஆகையினால் இவ்வியலின் முதல் பிரிவு சமுதாயத்தில் பெண்களின் நிலையைப் பற்றியும், இரண்டாவது பிரிவு அரசியல் கட்சிகளுக்குள்ளாகவும், மாநில சட்டமன்ற மற்றும் ஏனைய தேர்ந்தெடுக்கப்படும், தேர்ந்தெடுக்கப்படாத அமைப்புகளில், முடிவுகள் மேற்கொள்ளும் செய்முறையில் பெண்களின் பங்கு ஆகியவற்றையும் கவனத்தில் கொண்டுள்ளன. இறுதிப்பிரிவில் பாலினப் பாகுபாடுகளைச் சீர்செய்யும் நிறுவனத் தலையீடுகள் பற்றியும் கவனம் செலுத்தப்பட்டுள்ளது.

### தமிழ்நாட்டில் பாலின சமூகக் கட்டமைப்பு

பாலின அடிப்படையில் பிரிக்கப்பட்டிருக்கும் கடமைகள், பொறுப்புகள், உடைமைகள் மற்றும் அதிகாரம், பதிலுக்கு குடும்பம், திருமணம், சமயம், பள்ளிகள், சந்தைகள் மற்றும் அரசு எனப் பலவகை நிறுவனங்களால் தீர்மானிக்கப்படுகின்றன. இந்நிறுவனங்களில் விதிமுறைகள் நாட்டுக்கு நாடு சமுதாயத்திற்குச் சமுதாயம் மாறுபடுகிறது. எனவே, தற்போதிருக்கும் தமிழ்நாட்டின் சூழலமைவிற்கேற்ப இந்நிறுவனங்களின் சில சிறப்பியல்புகளை, விரிவாக விளக்குவதவசியமாகிறது. (வரலாற்று மொத்தச் சுருக்கத்திற்குப் பெட்டி 6.1ப் பார்க்கவும்)

### குடும்பம், திருமணம் மற்றும் சமயம்

தற்போதைய தமிழ்நாட்டின் பெரும்பாலான பகுதிகளில் குடும்பம் பெரும்பாலும் தந்தை வழியிலானது. அதாவது, மரபுவழியும் மரபுவழியாய் அடைதலும் தந்தையிலிருந்து மகனுக்கு உரியதாகும். மற்றும் ஒரு ஆணின் குடும்பத்தில் பெண், மணமகளாகக் கொண்டு வரப்படுகிறாள், வழக்கமாக ஒரு ஆணே குடும்பத் தலைவராயிருப்பார். இறப்பு, மணவிலக்கு (சட்டப்படி) நோயுற்றிருத்தல் அல்லது இடம் மாறுதல் போன்ற காரணங்களால் மட்டுமே ஒரு பெண், குடும்பத் தலைமைப் பொறுப்பை ஏற்கிறார். கடந்த காலத்தில், தமிழ்நாட்டில் பெரும்பாலான பெண்கள் அவர்கள் பிறந்த குடும்பத்திலிருந்தே மிக அருகிலிருக்கும் மிக நெருக்கமான ஒரு உறவினரையே திருமணம் செய்தனர். இவ்வழக்கம் இன்னும் பொதுவானதாகி இருந்தாலும் குறைந்து வருகிறது. இந்த நடைமுறையின் பயனாகத் தமிழ்நாட்டில் பெண்கள் தாங்கள் பிறந்த குடும்பங்களின் பேராதரவைப் பெற்றனர். வேறிடங்களிலிருக்கும் பெண்களுடன் ஒப்பிடுகையில், முடிவுகள் எடுப்பதில் பெரும் உரிமையைப் பெற்றுள்ளனர். எடுத்துக்காட்டாகத் தென்மேற்கிந்தியா (டைசன் மற்றும் மூர் 1983) இருப்பினும். எந்த ஆண் உறவினரை மணப்பது. எந்த வயதில் என்பதை முடிவு செய்யும் சுதந்திரம் பெரும்பாலான பெண்களுக்குக் கிடைக்கப் பெறவில்லை. கடந்த காலத்தில் சீதனம் தரும் வழக்கம் முக்கியமாக, மேல்சாதியினரிடையே வழக்கிலிருந்தது. கடந்த இரண்டு (அ) மூன்று பத்தாண்டுகளில் சீதனமுறை, நகைகள், பணம், ஊர்திகள் மற்றும் பயன்படு பொருட்கள் உருவில் தமிழ் நாட்டிலுள்ள பெரும்பாலான சாதியினரிடையே பரவிவிட்டது. தமிழ்நாட்டில் பெண்களின் புனிதத் திருமண அடையாளக்குறி தாலியாகும். இது ஆண் பெண் இருவரையும் பிணைக்கும் ஒரு உறவாகிறது. இந்த உறவை விட்டு விலக அவர்கள் அஞ்சுகின்றனர். ஆண்களிடையில் இருதார மணம் அல்லது வேறொரு பெண்ணுடன் உறவு கொண்டிருத்தல் மன்னிக்க கூடியதாயிருக்கிறது. ஆனால் பெண்களின் இதே மாதிரியான நடத்தை அவர்களைச் சமூகத்தில் இருந்து ஒதுக்கி வைப்பதற்குள்ளாக்குகிறது. இந்தியாவின் மற்ற பகுதிகளிலிருப்பதைப் போன்றே தமிழ்நாட்டிலும் பெண்கள் ஒரு ஆண்குழந்தையைப் பெற வேண்டும் என்ற உறுதியான கண்டிப்பு காணப்படுகிறது.

**பெட்டி 6.1 : சமுதாயப் பண்பாட்டு நெறிமுறைகளும் அதை மாற்றுவதற்குரிய முயற்சிகளும் - ஒரு வரலாற்று விளக்க வரைபடம்**

வரலாற்றுப்படியே தமிழ்நாட்டில் பெண்களின் சமுதாய நிலையில் வீட்டு வேலைகளைச் செய்வதும் குழந்தைகளைப் பெறுவதுமே வலியுறுத்தப்பட்டது. ஒரு குறுந்தொகைப் பாடல் ''ஆண்கள்தம் செயல்கள் மூலம் வாழுகிறார்கள். பெண்கள் தம் வீட்டின் சுற்றடைப்பு களுக்குள்ளாக ஆண்களுக்காக வாழ்கிறார்கள்'' என்கிறது. சங்க காலத்தில் பெண்கள் வாழ்க்கைத் துணைவர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமையைப் பெற்றிருந்தனர். திருமணம் ஒரு ஒப்பந்தமாயிருந்தது; சமய வினையாயல்ல. சங்க காலத்திற்குப் பிந்தையகாலம், சாதிப் பிரிவுகளின் அறிமுகக் காலமாயிருந்தது. சடங்குகள், திருமணத்தை ஒரு சமய வினையாக மாற்றியது. இதைத் தனியாகப் பிரிப்பது இயலாததாயிற்று. திருமணமான பெண்களுக்குக் கற்பு ஒரு கட்டாயக் கடமையாயிற்று. விதவைத் தன்மை தனிமையும் சடங்குகளும் இணைந்த ஒரு தண்டனையாயிற்று. இடைக்காலம், இலக்கியத்திலும் சமயத்திலும்

புகழ்பெற்ற காரைக்கால் அம்மையார் மற்றும் ஆண்டாள் போன்ற ஒரு சில பெண்களைக் கண்டது. பக்தி இயக்கத்தின் எழுச்சி, சில பெண்களின் விடுதலைக்கு வழிவகுத்தது. ஆனால், மற்றொரு வகைப் பெண்களின் 'தேவதாசிகள்' தோற்றத்திற்குக் காரணமாய் அமைந்தது. நாயக்க வம்ச மன்னர்களின் ஆட்சியின் பிந்தைய காலத்தில் பலதார மணம் பொதுவான நடைமுறையாக மாறியதன் விளைவாகப் பெண்களின் தரம் மேலும் தாழ்ந்தது. (சத்தியநாத அய்யர், 1956)

ஆங்கிலேயரின் ஆட்சி, பெண்களின் சமஉரிமைக்குத் தடையாயிருந்த சில பண்பாட்டுப் படிநிலைகளை வலுவிழக்கச் செய்தது. 1821–ல் சென்னையில் முதலாவது பெண்கள் பள்ளி திறக்கப்பட்டது. 1897–ல் சென்னைப் பல்கலைக்கழகத்தால் முதல்முதலாகப் பெண்கள் பல்கலைக்கழகத் தேர்வுகளை எழுத அனுமதிக்கப்பட்டனர். பெண் ஆசிரியர்களைப் பணியமர்த்த ஒரு முயற்சியும் மேற்கொள்ளப்பட்டது. இருந்தபோதிலும் மற்ற மாநிலங்களைவிடச் சென்னையிலிருந்த பள்ளிகளில் பெண்களின் சேர்க்கை விழுக்காடு அதிகமாயிருந்தபோதிலும், பள்ளிகளிலும், பல்கலைக்கழகங்களிலும், பெண்கள் சேர்க்கை விழுக்காடு மிகக் குறைவாகவே இருந்தது. இதே காலத்திற்குள் தமிழ்நாட்டில் சமூகச் சீர்திருத்தாளரான பெரியார் ஈ.வெ.இராமசாமி நாயக்கரால் தொடங்கப்பட்ட சமூகநீதிச் சீர்திருத்த இயக்கம் திருமண வழக்காறுகள், விதவையர் மறுமணம், சிறார் திருமணம், சதி முதலானவற்றில் மக்கள் சிந்தனையைத் தூண்டுவதில் ஒரு முக்கியப் பங்காற்றியது. மற்றொரு செல்வாக்கு மிக்க சிந்தனையாளர் டாக்டர் முத்துலட்சுமி ரெட்டியாவார். இவர் 1929-ல் சிறார் திருமணத் தடைசட்டம் மற்றும் தேவதாசி ஒழிப்புச் சட்டம் (1927–இல் சட்டமன்றத்தில் தாக்கல் செய்து 1947–இல் சட்டமாக்கப்பட்டவை) ஆகிய சட்டங்களை நிறைவேற்றுவதில் முக்கிய பணியாற்றினார். டாக்டர் அன்னிபெசன்ட் அம்மையாரால் தொடங்கப்பட்ட சென்னை இந்திய மகளிர் சங்கமும் 1921-ல் சென்னை சட்டமன்றத்தால் மகளிருக்கு வாக்கு அளிக்கும் உரிமை வழங்கியதில் முக்கிய பங்காற்றியது. சட்டமன்ற மேலவையில் இடம்பெற்ற முதல் பெண் உறுப்பினர் டாக்டர் முத்துலட்சுமி ரெட்டியாவார். அவ்வாறிருப்பினும், செல்வப் பிரிவினரிடையே, விடுதலைப் போராட்டத்தில் பங்கேற்பும் பாலினப் பாகுபாடுகளையும் கடந்து காணப்பட்டது.

## கல்வி

சமூக நிலையமைப்பில் கல்வி ஒரு பெரும்பங்காற்றுகிறது. கடந்த காலத்தில் பள்ளிப்பாடப் புத்தகங்களில் பாலின மற்றும் வகுப்பு ஒருதலை சார்பை வெளிப்படுத்துவதாக அமைந்தன. பெண்களைப் பெரும்பாலும் வீட்டுவேலைகளைச் செய்பவராயும், ஆண்களை, அதிகாரிகளாக, உழவர்களாக கடை உரிமதாரர்களாகக் காட்டின. 1990-களில் பள்ளிப்பாடப் புத்தகங்களில், பாலின மற்றும் சமுதாய நோக்கில் அதிகக் கூர்உணர்வுடைய சீர்திருத்தங்கள் காணப்பட்டன. இருப்பினும் செய்யவேண்டியவைகள் இன்னும் ஏராளமாக உள்ளன. இன்றும்கூட ஆண்களையும் பெண்களையும் பள்ளிகளில் தனித்தனியாகப் பிரித்து வைக்கும் நடைமுறை வழக்கில் உள்ளது. பள்ளி சீருடைகளில் வேறுபாடுகளும், பெண்கள் பூப்பெய்தியதும், அவர்கள் அணியும் சீருடைகளில் மாற்றங்களும் பொதுவாக உள்ளன. ஆண்களுக்கும் பெண்களுக்கும் வெவ்வேறான பாடத்திட்டம் சாராச் செயல்கள்

மற்றும் போட்டி விளையாட்டுகளும்கூட இளம் வயதிலிருந்தே மாணவர்களிடையில் பாலினப் பாகுபாடுகளைத் தூண்டும். சமுதாய நிலையில் முக்கியப் பங்காற்றும் ஆசிரியகளிடையில் பாலின ஒருதலைச் சார்பு பொதுவாகக் காணப்படுகிறது.

## தமிழ்நாட்டில் பெண்களின் தகுதி நிலை

வழக்கமாக நலவாழ்வு[1] கல்வி, வருமானம் மற்றும் சமூகக் குறியீட்டுக் கருவிகளில் ஆண்களோடு ஒப்பிடுகையில் மொத்தத்தில் பெண்களின் நிலை எவ்வாறு உள்ளது என ஆய்வு செய்யப்படுகிறது. இப்பிரிவு, சமுதாயத்தில் பெண்களின் நிலை மீது அதிக கவனம் செலுத்துகிறது. அதாவது, ஆண்களோடு ஒப்பிடுகையில் அவர்களது நிலையில் இரண்டாவதாகச் சுட்டிக்காட்டும் குறியீடுகளைத் தேர்வு செய்கையில் உரிமைகள் மற்றும் முன்னேற்றக் கட்டமைப்பு ஆகிய இரண்டையும் ஒருங்கிணைக்கிறது.

## பாலினம் மற்றும் தொழில் செய்திடவும் வாழ்க்கை நடத்துவதற்குமான உரிமைகள்

தமிழ்நாட்டில் பெண்களின் இரண்டாம் தரநிலை, மற்றவற்றிற்கிடையில், பெண்கள் அவர்களுடைய சொந்த வேலையில், வேலை செய்வதா, என்ன வேலை செய்வது, எவ்வளவு கூலி பெறுவது? எந்த விதமான சமூக நிலைகளில் என்பனவற்றில் பெண்கள் பெற்றிருக்கும் உரிமை எந்தளவுக்குப் பிரதிபலிக்கிறது. வேலையில் பங்கேற்பு, பாலினக் கலவை மற்றும் வேலையின் தன்மை முதலானவை 'தொழில்' எனும் இயலின்கீழ் விளக்கப்படுகிறது'.

## தொழிலில் பாலினப் பிரிவினை

தொழிலில் பாலினப் பிரிவினை முதன்மையாக உள்ளது. வேலை ஒதுக்கீடு செய்யப்படுவதை ஒரு நபரின் தகுதியுடைமை மற்றும் விருப்பத்தைக் காட்டிலும் இவையே நிர்ணயிக்கின்றன. தமிழ்நாட்டில் தயாரிப்பு மற்றும் பணித்துறைகளைவிட வேளாண்துறையில் ஆண்கள் பெண்கள் ஆகிய இரு பாலரும் அதிகமாகக் காணப்பட்ட போதிலும் வேளாண் துறையில் மொத்தத்தில் தொழிலாளர்களில் அதிகம் பெண்பாலராகவும், தயாரிப்பு மற்றும் பணித்துறைகளில் அதிகம் ஆண்பாலராகவும் இருப்பது காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக தயாரிப்பு மற்றும் பணித்துறையில் தொழில்நுட்ப மற்றும் தொழிற்கல்விப் பணியாளரில் பெண்கள் 25% மட்டுமே உள்ளனர் (1991). 1981–இல் இருந்ததை விட இது ஓரளவே அதிகரித்துள்ளது (20.5%) நிருவாக / மேலாண்மைப் பணித் தொழிலாளர்களுள் பெண்களின் பங்கு 1981–இல் 2.3% ஆகவும், 1991–இல் 4.4% ஆகவுமிகுந்தது. (தமிழ்நாடு அரசு 1998) இதற்கு மாறாக வேளாண் தொழிலாளர்களில் 50%–க்கு மேல் பெண்களே உள்ளனர்.

### பெட்டி 6.2 : காலப் பயன் ஆய்வுகள்

அண்மையில் தமிழ்நாட்டின் 11 மாவட்டங்களில் வேலை செய்யும் நேரம் குறித்து மேற்கொண்ட கணக்கெடுப்பு தொழிலாளர் பரவலாகப் பிரிந்து இருக்கும் தன்மையை சுட்டிக்காட்டுவதாக அமைந்துள்ளது. தேசீய கணக்குகள் முறைப்படியும் (தே.க.மு) மற்றும்

[1] எடுத்துக்காட்டாக நலவாழ்வு சுட்டிக்காட்டும் குறியீடுகள். நலவாழ்வுக் காப்பு வழிவாய்ப்புகளில் பாலின ஏற்றத் தாழ்வுகளை உள்ளடக்கியது மட்டுமில்லாமல் இனப்பெருக்கம் மற்றும் பாலின உறவுக்கான உரிமைகளையும் உள்ளடக்கியதாயுள்ளன.

தே.க.மு. விரிவாக்க நடவடிக்கைகளின் மீது ஆண்கள் செலவிட்ட சராசரி நேரம், 25.32 மணிகளும் 1.90 மணிகளுமாகும். இது பெண்களுடையது முறையே 11.29 மற்றும் 18.13 மணிகளாயிருந்தது. தே.க.மு.–யின் விரிவாக்க நடவடிக்கைகள், பெண்களைப் பொருளாதார நடவடிக்கைகளின் முக்கியப் பகுதிகளிலிருந்து (விற்பனை, வணிகம், வங்கித் தொழில்) விலக்கி வைத்து, அவர்களுடைய இடம் பெயர் ஆற்றலைக் குறைத்திருப்பதாகத் தெரிகிறது. இவ்விவரங்கள், தமிழ்நாட்டில் பெண்கள் குறைவாக வேலைக்கமர்த்தப்பட்டிருப்பதை (உற்பத்தித் திறனுடைய)த் தெரிவிக்கிறது. அத்தகைய தே.க.மு. (அ) உற்பத்தித் திறனுடன் கூடிய நடவடிக்கைகளிலும் கூடத் தொழிலில் ஒரு குறிப்பிடும்படியான பாலினப் பிரிவு காணப்படுகிறது.

இம்மாதிரியான பிரிவுகளோடு பணியை மதிப்பீடு செய்வதிலும் வேறுபாடு காணப்படுகிறது. ஆண்களைவிடப் பெண்களின் வேலைத் திறன் குறைவாக மதிப்பிடப்படுகிறது. தயாரிப்பு மற்றும் மூன்றாவதான பிரிவுகளில், அத்தகைய வேலைப்பிரிவுகள் பொதுவாகக் காணப்படுகிறது. பணித் துறைப் பிரிவுகளில் எடுத்துக்காட்டாகப் பெண்கள், வீட்டுவேலை, கற்பித்தல், செவிலியர் மற்றும் செயலகப் பணிகள் போன்ற குறைவாகப் பயனளிக்கும் வேலைகளில் அதிகமாகக் காணப்பட்டனர். விளம்பரத்துறை முதலான உயர்பயனளிக்கும் வேலைகளை ஆண்களே செய்தனர். இதே நிலைதான் தயாரிப்புத் துறையிலும் காணப்படுகிறது. பீடித் தயாரிப்பு, பருத்தி நெசவு உடைகள் தயாரிப்பு, முந்திரி பதப்படுத்துதல், மீன் மற்றும் உணவுப் பதனிடுதல் மற்றும் தீப்பெட்டித் தொழில் போன்றவற்றில் உடலுழைப்புடன் கூடிய தாழ்வான வேலைகளிலேயே பெண்கள் ஈடுபட்டிருந்தனர். (பெட்டி 6.2 ஐப் பார்க்க)

**பெண்களின் வேலைக்குரிய விதிமுறைகளும் வரையறைகளும்**

முறைப்படியல்லாத துறையில் பெண்களின் பணியமர்த்தம், நாட்கூலியடிப்படையில் இயல்புடையதாகவே உள்ளது. பெண்கள் பெரும்பாலும் மிகக் குறைந்த கூலியில் சில்லறை வேலைகளைச் செய்பவர்களாகவோ (அ) அவர்களாகவே முன்வந்து கட்டுப்படியாகாத சம்பளங்களில் வேலை செய்பவர்களாகவோ உள்ளனர். கூலித் தொழிலாளர்களைப் பொருத்தவரை, நீண்டநேர வேலை, மனநிறைவளிக்காத பணிநிலைமைகள் மற்றும் உடல்நல இன்னல்கள் ஆகிய உருவில் தொழிலாளர்களைத் தன்னலத்திற்காகப் பயன்படுத்தல் மிகவும் பொதுவானதாக இருக்கின்றது. ஏனெனில் தேவைக்கு மிக அதிகமாகத் தொழிலாளர்கள் உள்ளனர். குறிப்பிடத்தக்க எடுத்துக்காட்டுகள். பீடி மற்றும் தீப்பெட்டித் தொழில்களில் வீடுகளிலேயே பெண் தொழிலாளர்களைத் துணை ஒப்பந்தத்தின் பேரில் பணிக்கமர்த்தல்.

முறைப்படியான மற்றும் முறைப்படியல்லாத துறைகள் இரண்டிலும் பாலியல் தொல்லைகள் பரவலாக உள்ளன. ஆனால் முறைப்படியல்லாத துறையில் அவை அதிகமாய் உள்ளன. வேலையளிப்பவர்களிடமிருந்து அத்தகைய தொல்லைகளை எதிர்கொள்ளும்போது ஏழைப் பெண்கள் அவற்றிற்குப் பலியாகி விடுகிறார்கள் (அ) அவர்களுடைய வேலைகளை இழக்கிறார்கள். கிராமப் புறங்களில் சாதியும் பாலினமும் ஒன்றோடொன்று பிணைந்திருக்கின்றன. இதனால், மற்ற வகுப்புகளைச் சேர்ந்த தொழிலாளர்களைக் காட்டிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த பெண் தொழிலாளர்கள்

பெருமளவுத் தொல்லைகளுக்காளாகின்றனர். கலப்பு வகைத் தொழிற்சங்கங்களில் தலைமைப் பதிவுகளில் காணப்படும் ஒரு சில பெண்கள் மற்றும் அனைத்து மகளிர் தொழிற்சங்கங்கள் மற்றும் சங்கங்களில் ஒரு சில பெண்கள் காணப்படுவதன் காரணமாகப் பெண்கள் அத்தகைய தொல்லைகளுக் கெதிராகப் போரிடுவதிலிருந்து பெண்களைத் தடுக்கிறது.

## பெண் சிறார் தொழிலாளர்

கிராமப்புறத் தொழிலாளர்களில் பெண்சிறார் தொழிலாளர்கள் கணிசமான அளவில் உள்ளனர். 1991–ஆம் ஆண்டு மக்கட் தொகைக் கணக்கெடுப்பு விவரங்கள் முக்கியமான மற்றும் சிறிதளவான தொழில் வகைகளில் 6,06,000–க்கு மேற்பட்ட சிறார் தொழிலாளர்களில் பெரும்பான்மையானோர் பெண்களாக உள்ளமையைச் சுட்டிக்காட்டுகிறது. நகர்ப்புறங்களைவிட கிராமப்புறங்களிலிருக்கும் பெண்கள், சிறார் தொழில்களுக்கு ஆளாக்கப்படுகிறார்கள். குறிப்பாக தாழ்த்தப்பட்ட வகுப்புகளைச் சேர்ந்த பெண்களிடையே இதுவே உண்மையான நிலையாக உள்ளது. கிராமப்புறங்களில் 5–14 வயதுக்குட்பட்ட தொழிலாளர்களில் 10% பெண்சிறார் தொழிலாளர்களாக உள்ளனர். ஆண் சிறார் தொழிலாளர் 4% உள்ளனர். (தேசீய மாதிரிக் கணக்கெடுப்பு நிறுவனம், 49-வது சுற்று) நகர்ப் புறங்களில், 5–14 வயதுக்குட்பட்டவர்களில் 2.4% பெண் சிறார்கள் தொழிலாளர்களாக வகைப் படுத்தப்பட்டுள்ளனர். ஆண்கள் 5.9% ஆகும். மேலும் கணக்கெடுக்கப்பட்ட சிறார் தொழிலாளர்களைத் தவிர கண்களுக்குத் தென்படாத ஒரு வகைச் சிறார் தொழிலாளருள் குறிப்பாகப் பெண் சிறார்கள் உள்ளனர். இவர்கள் இடையில் நின்றுவிட்டவர்களெனப் பரவலாக அறியப் பட்டாலும் உண்மையில் வீடுகளில் தொழிலாளர்களாகவே உள்ளனர். 10–14 வயதுக்குட்பட்ட பெண்களில் 50% இவ்வகையை சேர்ந்தவர்களாவர்.

வடஆற்காடு அல்லது விருதுநகர் பகுதிகளில் சிறார் தொழிலாளர் குவிந்துள்ளனர் என்னும் பரவலான கருத்துக்கு அண்மைக்கால ஆய்வுகள் முரண்படுகின்றன. இந்நிலை மாநில முழுவதும் பரவலாகக் காணப்படுகிறது. தருமபுரி, சேலம், பெரியார், மதுரை மற்றும் ஒருங்கிணைந்த வட ஆற்காடு போன்ற மாவட்டங்களில் அதிக அளவில் பெண்சிறார் தொழிலாளர்களிருப்பதைக் காட்டுகிறது. (ஜெயராஜ் et al 1997)[2] பீடி சுற்றுதல், மணிக்கற்கள் வெட்டுதல் மற்றும் கைத்தறி முதலான குடிசைத் தொழில்களில் பெரும்பான்மையான பெண்சிறார்கள் வேலை செய்கின்றனர். பெற்றோர்கள் பெற்ற கடன்களை அடைக்கும் பொருட்டு அவர்களுடைய குழந்தைகள், பிணைத் தொழிலாளர்களாக வேலை செய்யும் கட்டாயத்திற்கு உட்படுத்தப்பட்ட நிகழ்வுகளும் உள்ளன.

## வளஆதாரங்கள் மீதான வழிவாய்ப்பும் கட்டுப்பாடும்

### சொத்துடைமைகள்

நிலஉடைமை உரிமை குறித்து தேசீய (அ) மாநில அளவு புள்ளி விவரங்கள் ஏதும் கிடைக்கப் பெறவில்லை. சென்னையில் உள்ள எம்.எஸ். சுவாமிநாதன் ஆராய்ச்சி[3]. நிலையம் திண்டுக்கல் மாவட்டத்தில் 161 குடும்பங்களுக்கிடையில் நிலஉடைமை குறித்து மேற்கொள்ளப்பட்ட ஆய்வு ஒன்று, 94% குடும்பங்களில் ஆண்களே நிலங்களின் உரிமை பெற்றிருந்ததை வெளிப்படுத்துகிறது.

---

[2]வடாற்காடு மாவட்டம் இரண்டாய்ப் பிரிக்கப்பட்டு விட்டபடியால் வடஆற்காடு மாவட்டம் எனத் தற்போதில்லை.

[3]எம்.எஸ். சுவாமிநாதன் ஆராய்ச்சி நிலையம், சென்னை.

நில உடைமை பெற்றிருந்த பெண்கள் பெரும்பாலும் குடும்பத் தலைவர்களாக (அ) அவர்களுடைய பெற்றோருக்கு ஒரே குழந்தையாக இருந்தவர்களாகவே இருந்தனர் (மூர்த்தி 2000) இது குறித்த பாலினவாரியாகப் பிரிக்கப்பட்ட புள்ளி விவரங்கள் கிடைக்கப் பெறவில்லை. தந்தைவழியிலான வாரிசுரிமை முறையும், தந்தைவழித் திருமண முறையும், அவர்களுடைய உரிமைகள் பற்றிய போதிய அறிவின்மையும், திருமண வாழ்க்கையில் சச்சரவு போன்ற நிகழ்வுகளில் ஆண் உறவினர்களைப் பெண்கள் நம்பியிருத்தல் ஆகிய இவையாவும் பெண்கள். அவர்களுடைய உரிமைகளைக் கோரிப் பெறத் தடையாயிருந்தன (அகர்வால், 1994).

**கடனும் சந்தைகளும்**

பணம் அளிக்கும் வேலையில் பெண்கள் குறைவாக ஈடுபடுவதும் ஆண்களைக் காட்டிலும் பெண்களுக்கு முறைப்படியான கல்விக்கு வழி வாய்ப்பினை பெற்றிருப்பதாலும், அவர்கள் கடன் வசதி பெறும் வழிவாய்ப்புகளைப் பெறும் திறமைக்கு இடையூறாக உள்ளன. கடன்பெறும் தகுதியைப் பெறுமளவு அவர்களிடம் சுதந்திரமான மதிப்புள்ள சொத்துக்கள் இல்லை. கடன்பெறத் தடையாயிருக்கும் மற்ற காரணங்கள் தொலைவிடங்களில் வங்கிகள் அமைந்திருத்தல், வங்கியாளரிடம் காணப்படும் பாலினப் பாகுபாடு, வங்கிகளின் வேலை நேரங்கள் மற்றும் விதிமுறைகளைப் பின்பற்றப் போதிய நிதி வசதியின்மை.

**பெட்டி 6.3 : தமிழ்நாடு மகளிர் மேம்பாட்டுத் திட்டம் (மகளிர் திட்டம்)**

தமிழ்நாடு மகளிர் திட்டம் வேளாண் வளர்ச்சிக்குப் பன்னாட்டு நிதியுதவியுடன் 1989–90–ல் தொடங்கப்பட்டது. தொடக்கத்தில் 8 மாவட்டங்களில் (அப்போது 5 மாவட்டங்களில்) இது தொடங்கி வைக்கப்பட்டது. ஏழைப் பெண்களின் பொருளாதார நிலையை உயர்த்தும் பொருட்டு சுயஉதவிக் குழுக்களை அமைப்பதில் கவனம் செலுத்தப்பட்டது. இத்திட்டத்தின் வெற்றி காரணமாக 1996–ல் மகளிர் திட்டத்தை ஒரு (ம.தி) படிநிலையான முறையில் மாநிலம் முழுவதிலும் விரிவுபடுத்த அறிவிக்கப்பட்டது. தற்போது, மாநிலத்தில் சென்னையைத் தவிர ஏனைய 28 மாவட்டங்களின் கிராமப் பகுதிகளுக்கு விரிவுபடுத்தப்பட்டுள்ளது. 2000–01 வரவு செலவு திட்டத்தில் அனைத்து மாவட்டங்களிலும் உள்ள பேரூராட்சிகள் மற்றும் நகராட்சிகள் அனைத்தையும் உள்ளடக்கியதாய் விரிவுபடுத்தப் பட்டுள்ளது.

இத்திட்டம், மாநில அரசு, அரசு சாரா அமைப்புகள் மற்றும் வேளாண் மற்றும் ஊரக வளர்ச்சிக்கான தேசீய வங்கி (வே.ஊ.வ.தே.வ.) மற்ற வங்கிகளும், நிதி நிறுவனங்களும் ஆகிய மூன்று முகமைகளுக்கிடையில், ஒரு நீண்டகால கூட்டாண்மையின் அடிப்படையில் அமைந்துள்ளது. அண்மையில் இத்திட்டம், மறைந்த முதல்வர் அறிஞர் அண்ணாவின் அன்னையின் நினைவாகப் ‘பங்காரு அம்மையார் நினைவு மகளிர் திட்டம்’ என மறுபெயர் சூட்டப்பட்டது.

இத்திட்டம் மக்களின் பங்கேற்பை மையமாகக் கொண்ட செய்முறை சார்ந்த திட்டமாகும். இது, குடும்ப சமுதாய கிராம நிலையில் சம அந்தஸ்து மற்றும் மக்களாட்சி அமைப்புகளில் உயரிய சமுதாயப் படிநிலையோடு, சமூக, பண்பாட்டு மற்றும் சமயத் தடைகளை

வெற்றிகரமாக எதிர்கொள்ள, உதவ ஏழை மற்றும் பயன்பெறாத பெண்களுக்கு சமூக அதிகாரமளிப்பதை நோக்கமாகக் கொண்டுள்ளது. மேலும், இத்திட்டம், மகளிருக்கு நிதித் தன்னிறைவு, நிதி வள ஆதாரங்களுக்கு அதிக வழிவாய்ப்புகள் மற்றும் பஞ்சம், வெள்ளம் மற்றும் கலவரங்கள் முதலான நெருக்கடி நிலைகளுக்கு ஊறுபடும் தன்மைக் குறைப்பு ஆகியவை மூலம் பொருளாதார மேம்பாட்டுக்கு வகை செய்கிறது. நலக்காப்பு, கல்வி, சுற்றுச்சூழல் மற்றும் சட்ட உரிமைகள் மேலான தகவல் தொடர்பு திறமைகள் மற்றும் மேலான தலைமைக்கு உரிய திறமைகள் பற்றி மேலான விழிப்புணர்வு மூலம் திறமை வளர்ச்சியுடன் சமூக மற்றும் பொருளாதார அதிகாரமளிப்பும் இணைந்துள்ளது.

மார்ச்ச 31, 2000 நிலவரப்படி 28 மாவட்டங்களில் 0.4 மில்லியன் மகளிர் மற்றும் ரூ. 334.3 மில்லியன் சேமிப்புடன் கூடிய 26,220 மகளிர் சுயஉதவிக் குழுக்கள் அமைக்கப்பட்டன.

5 ஆண்டு காலத்தில் 60,000 தன்னிறைவுடனான வலுவான சுயஉதவிக் குழுக்கள் மூலம் ஒரு மில்லியன் ஏழை மகளிருக்குப் பயனளிக்கச் செய்வதே குறிக்கோள். மார்ச் 2003 வரை, 2.15 மில்லியன் பெண் உறுப்பினர்களைக் கொண்ட 1,26,100 அனைத்து மகளிர் சுயஉதவிக் குழுக்கள் இயங்கி வந்தன. மகளிர் திட்டத்தின் வருங்கால திட்டங்களில் சுயஉதவிக் குழுக்களை ஒருங்கிணைத்தல், பயனடையாத குடியிருப்பிடங்களை சேர்த்தல், அரசு சாரா அமைப்புப் பணியாளரை வலுப்படுத்தல் மற்றும் அவர் தொழில் முனைவர் முயற்சியில் பயிற்சியளித்தல் முதலானவை உள்ளடங்கும்.

*ஆதாரம் : http://www.tamilnaduworkers.org*

கடந்த காலத்தில் ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சி திட்டம் போன்ற குடும்பத்தை மையமாகக் கொண்ட வறுமைக்குறைப்புத் திட்டங்கள், கடனில் 50%-ஐ மகளிருக்கு ஒதுக்கீடு செய்ய வகை செய்தது. இந்த இலக்குக்கெதிராக 1998–99–இல் ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சி திட்டக் கடன்களில் 38.46% பெண்களுக்கு அளிக்கப்பட்டது. இருப்பினும் கடன் வசதிக்குப் பெண்களுக்கான வழிவாய்ப்புகளில் பெண்கள் எப்போதுமே கட்டுப்பாட்டை செலுத்தியதாகக் கூறமுடியாது. பல நேர்வுகளில், மனைவி மூலமாகப் பெற்ற மானிய உதவிக் கடனை, அவளுடைய கணவனே பயன்படுத்திக் கொண்டார் (கபீர் மற்றும் மூர்த்தி, 1997) பல நேர்வுகளில் பெண்கள் அவர்களுடைய பெயரில் பெற்ற கடன்களை அவர்களுடைய கணவரால் பயன்படுத்திய அல்லது தவறான வழியில் பயன்படுத்திய கடன்களைத் திரும்பச் செலுத்தப் போராட வேண்டியிருந்தது. கடந்தகால அனுபவங்களைக் கருத்தில் கொண்டு, தமிழ்நாடு அரசு, தமிழ்நாடு மகளிர் மேம்பாட்டுத் திட்டத்தை (ம.தி) உருவாக்கியது இது. சுயஉதவிக்குழுவை அடிப்படையாகக் கொண்ட ஒரு திட்டம் இது மகளிருக்குப் பொருளாதார அதிகாரமளிப்பதை மையமாகக் கொண்டுள்ளது.

சந்தைகளில் வழிவாய்ப்புகளைப் பொறுத்தவரை உற்பத்தி பொருட்களின் விற்பனை வேளாண்மை, குடும்பத்தொழில் (அ) பணியைப் பொறுத்தவரை, பெரும்பாலும் கணவரே இவற்றில் ஈடுபடுத்தப் படுகிறார். இதன் விளைவாகத் தகவல் விலை நிர்ணய ஆற்றல், தரம், விற்பனை முறைகள் முதலானவை உள்ளிட்ட சந்தைகளைப் பற்றிய அறிவைப் பெண்கள் பெறாமலிருக்கின்றனர்.

**வருமானம்**

பெண்கள் (அ) அவர்களுடைய குடும்ப வருமானத்தின் மீது, பெண்கள் கொண்டிருக்கும் கட்டுப்பாடு பற்றிய பெரிய அளவிலான புள்ளி விவரங்கள் ஏதுமில்லை. 1999–இல், தமிழ்நாடு மகளிர் மேம்பாட்டு திட்டத்தின் பன்னாட்டு வேளாண் மேம்பாட்டு நிதியத்தின் தூதுக்குழுவால் மூன்று மாவட்டங்களிலிருக்கும் 34 குடும்பங்களில் ஒரு சிறு அளவிலான ஆய்வு மேற்கொள்ளப் பட்டது. இவ்வாய்வு, வருமானத்தின் மீதான பெண்களின் கட்டுப்பாடு, அவர்களுடைய வயது, குடும்பத் தலைமை மற்றும் நடவடிக்கைகளின் இயல்புக்கேற்ப மாறுபடுவதைத் தெரிவிக்கிறது. (ப.வே.மே.நி. 2000) பெண்களின் வருமானம் மீதான அவர்களுடைய கட்டுப்பாடு, அவர்கள் கூலித்தொழிலில் ஈடுபட்டிருக்கும்போது (அ) விற்பனை, அவர்களுடைய கட்டுப்பாட்டின் கீழ் இருக்கும்போது உயர்வாயிருக்கிறது. எடுத்துக்காட்டாக பால், பூ மற்றும் மீன் விற்பனை விற்பனை ஆண்களின் கட்டுப்பாட்டின் கீழ் இருக்கும்போது இது குறைவாக உள்ளது. இருப்பினும், பெண்கள் ஈட்டும் பணத்தில் அவர்கள் கட்டுப்பாட்டைக் கொண்டிருக்கையில், அவர்களுடைய கணவன்மார்களைப் போலன்றி வருமானத்தின் பெரும்பகுதியைக் குடும்பத்தின் அடிப்படைத் தேவைகளான உணவு, நலக்காப்பு மற்றும் கல்விக்காக செலவழிக்கின்றனர். மேலும் குடும்ப வருமானம் மீதான கட்டுப்பாடு, பெண்கள் (குறிப்பாக கருவுற்றிருக்கும் பெண்கள்), இளம் சிறார் மற்றும் குழந்தைகளின் ஊட்டச்சத்து நிலைகள் மற்றும் பொதுவான குடும்ப நல்வாழ்க்கையைப் பாதிக்கக்கூடிய ஒரு முக்கியக் காரணமாக அமைகிறது.

**பொதுச்சொத்து ஆதாரங்கள்**

உலகின் மற்ற எல்லா வளரும் நாடுகளிலிருப்பதைப் போன்றே தமிழ்நாட்டிலும் பெண்கள், சுற்றுப்புற விளைவெதிர்விளைவில் குறிப்பிட்ட பாலின அமைப்பைப் பெற்றுள்ளனர். சமூக நியதிகளின்படி, பெண்கள் குடும்ப நிருவாகம் மற்றும் காப்புக்குப் பொறுப்பாளர்களாக உள்ளனர். தண்ணீர்ப் பற்றாக்குறை, தூய்மைக்கேடு மற்றும் எரிபொருள் பற்றாக்குறை, வசதி பெற்றிருப்பவர் களைவிட ஏழைகளையே அதிகமாகப் பாதிக்கிறது. ஏழைகளிலும், ஏழை ஆண்களை விட ஏழைப் பெண்களையே அதிகம் பாதிக்கிறது. நீலகிரியில் மசினகுடி ஒன்றியத்தில் மேற்கொள்ளப்பட்ட சிறிய அளவிலான ஆய்வுகள், அன்னியர் ஆட்சிக் காலத்தில் கானக உற்பத்திப் பொருட்களில் பழங்குடியினரின் மரபுவழியான உரிமைகளின் அழிப்புகள், பழங்குடிக் குடும்பங்களின் உணவுப் பாதுகாப்பில் ஒரு வீழ்ச்சியை ஏற்படுத்தின (குறிப்பாகப் பெண்கள் மற்றும் பெண் சிறார்கள்). நாட்டின் விடுதலைக்குப் பிந்தைய காலத்திலும்கூட, பொதுவான சொத்துரிமைகளில் பல மறுக்கப் பட்டாலும் கானக உற்பத்திப் பொருட்களைத் திரட்டப் பழங்குடி வகுப்பினருக்கு அனுமதிச் சீட்டுகள் வழங்க 1990–களில் பிறப்பிக்கப்பட்ட ஒரு ஒற்றைச்சட்டம் பெண்களின் வருமானம் மற்றும் உணவுப் பாதுகாப்பை விரிவாக்கியது. (MYUA 2001)

**வறுமையின் பெண் மயமாக்கம், வறுமையில் ஆண்/பெண்களின் எண்ணிக்கை**

உலகின் பெரும்பாலான பகுதிகளைப் போன்றே தமிழ்நாட்டிலும் ஆண்களைவிடப் பெண்களே வறுமையில் வாடுகின்றனர். வறுமையின் மதிப்பீடுகள் குடும்பத்தை, ஒரு அலகாகக் கொண்டி ருப்பதால், வறுமையில் ஆண்களுக்கு நேர் எதிராக உள்ள பெண்களின் எண்ணிக்கை பற்றிய பெரிய அளவு மதிப்பீடு ஏதுமில்லை. மதுரை, இராமநாதபுரம், தருமபுரி மற்றும் திண்டுக்கல் ஆகிய

மாவட்டங்களிலிருந்து சிறிய அளவிலான சான்றுகள், பெண்களைத் தலைவர்களாகக் கொண்ட குடும்பங்களின் வறுமை விகிதம், ஆண்களைத் தலைவர்களாகக் கொண்ட குடும்பங்களின் வறுமை விகிதத்தைவிட அதிகமாயிருக்கிறது என்பதைச் சுட்டிக் காட்டுகிறது.[4] (வே.மே.ப.நி. 2000).

பெண்களைத் தலைவராகக் கொண்ட குடும்பங்களின் விழுக்காட்டில் இந்தியாவில் தமிழ்நாடு (வேளாண் மேம்பாட்டுக்கான பன்னாட்டு நிதியம், 2000) நான்காமிடத்தில் உள்ளது. குடிப்பெயர்ச்சி கணவர்களின் நோய் நிலை மற்றும் மதுவருந்துதல் போன்றவற்றால் பெண்களை இன்னல்களுக் குள்ளாக்கிய மெய்யான காரணங்களைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாததால், இம்மதிப்பீடு குறைவாகவும் இருக்கலாம். வறுமையில் உள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பினப் பெண்கள் மற்றும் பெண் வேளாண் தொழிலாளரின் விகிதம் (அடிக்கடி இரண்டும் பகுதி ஒத்திருந்து) வறுமையிலிருக்கும் மற்ற சாதிக் குழுக்களின் விகிதத்தைவிட மிகவும் அதிகமாக உள்ளது.

## வறுமையின் மாறுபட்ட செயல் விளைவு

ஒரே மாதிரியான வறிய குடும்பத்தில் உள்ள ஆண்களையும் சிறுவர்களையும்விட மகளிரும் சிறுமிகளுமே மிகவும் கடுமையாய் வறுமையை அனுபவிக்கின்றனர். இதற்கான காரணம் குடும்பத்திற் குள்ளாக உணவு, நலக்காப்புக் கல்வி மற்றும் ஏனையவற்றிற்கான வழிவாய்ப்புகளில் காணப்படும் ஏற்றத்தாழ்வே. திண்டுக்கல் மாவட்டத்தில் 161 குடும்பங்களுக்கிடையே மேற்கொள்ளப்பட்ட ஒரு ஆய்வு 60% குடும்பங்களில், உணவுக்கான வழிவாய்ப்புகளில் பாலின ஏற்றத்தாழ்வுகள் இருந்தமையைச் சுட்டிக் காட்டியது. தொடக்க நலவாழ்வுக்காப்பு மற்றும் தொடக்கக் கல்வியிலும் ஒரு குறைவான அளவு பாலின ஏற்றத்தாழ்வு நிலவியது. எதிர்பார்த்தபடியே, உயர்கல்வியைப் பொறுத்தவரை 60% குடும்பங்களில் பாலின ஏற்றத்தாழ்வு காணப்பட்டது. ஏழைப் பெண்கள் மற்றும் ஆண்களுக் கிடையிலும், வேலைச் சுமையிலும் ஏற்றத்தாழ்விருந்தது. ஏழைப் பெண்களுக்கு நாள் ஒன்றில் ஓய்வெடுக்கக்கூட நேரம் கிடைப்பதில்லை. இதற்கு மாறாக ஆண்களுக்குக் குறைந்த அளவாக இரண்டிலிருந்து மூன்று மணிநேரம் ஓய்வு கிடைக்கிறது (மூர்த்தி, 2000) குடும்பத் தலைமைப் பொறுப்பிலிருப்பவரின் பாலினம் அடிப்படைத் தேவைகள் ஏற்றத்தாழ்வின் அளவில் எந்தவித மாறுபாட்டையும் ஏற்படுத்தவில்லை என்பது ஒரு வியக்கத்தக்க கண்டுபிடிப்பாகும். வறுமையின் காரணமாகப் பெண்கள் அடிக்கடி அவர்களுக்காகப் புதிய ஆடைகள் வாங்குவதைக் குறைத்து கொண்டு அவர்களுடைய நகைகளை அடமானம் வைத்தல், அவர்களுடைய மகள்களை வயதானவர்களுக்கு இரண்டாம் தாரமாக மணமுடித்தல் ஆகியன உள்ளடங்கிய பாலினத்திற்கு குறிப்பான எதிர்மறையான திட்டங்களைப் பெண்கள் மேற்கொள்ளுகின்றனர். (Dew-forthcoming) இறுதியாக மற்ற இடங்களைப் போலத் தமிழ்நாட்டிலும், பாலினத்திற்கே உரிய வழிகளில் வறுமையில் வீழ்கிறார்கள். பாலினத்திற்குரிய காரணங்கள் அவர்களை வறுமையிலிருந்து மீள்வதைத் தடுக்கிறது. சீதனத்திற்காக ஏழையர் குடும்பத்தில் திருமணம், திருமண முறிவு ஆகியவை பெண்கள் வறுமைக்குள்ளாக்கப் படுவதற்கான பாலினத்திற்குரிய இரு காரணங்களாகும். நிலம், வீடு இனப்பெருக்கம் மீது பெண்களுக்கு சுதந்திரமான உரிமைகள் இல்லாமை, தொழிலாளர் சந்தையைப் பாலின அடிப்படையில் பிரித்து வைத்தல், பெண்கள் கூலி வேலையை அதிகமாக நம்பியிருத்தல், ஆண்களுடன் ஒப்பிடுகையில் குறைவான கூலி குடும்ப வருமானத்தில்

[4]பெண்களைத் தலைவராய் கொண்ட குடும்பங்கள் எல்லாமே வறுமையில் இல்லாதிருக்கும் வரையறைக்குட்பட்டு.

குறைவான வழிவாய்ப்பு, முறைப்படியான கடன் வசதிக்கு குறைவான வழிவாய்ப்பு இவை யனைத்தும் சேர்ந்து அவர்கள் வறுமையை எதிர்கொண்டு வெற்றிபெறத் தடையாக உள்ளன. பெண்களைத் தலைவர்களாகக் கொண்ட குடும்பங்கள் இத்தகைய இடையூறுகளில் பலவற்றை எதிர்கொள்வது மட்டுமின்றி ஒரு சிறிய அளவுக்குடும்பம் பெரிய ஆள் வேலைக்குரிய வழிவாய்ப்புக் குறைவு மற்றும் சமூக ஆதரவு குறிப்பாக அவர்களுடைய கணவரின் உறவினரிடமிருந்து போதிய ஆதரவு கிடைக்காமை ஆகியவற்றையும் கூட அவர்கள் எதிர்கொள்ளுகின்றனர்.

## பாலினமும் நலவாழ்வுக்குரிய உரிமைகளும்

இறப்பில் பாலின வேறுபாடுகள் தமிழ்நாட்டில் மகன் வேண்டும் எனும் அதிக முன்னுரிமை பெண்களின் தாழ்வான தகுதி நிலையுமே காரணமெனச் சொல்லலாம். இதன் விளைவாக உணவு மற்றும் நலக்காப்பில் வழிவாய்ப்புகளில் குறிப்பிடத்தக்க ஏற்றத்தாழ்வுகள் காணப்படுகின்றன. பல நேர்வுகளில் பெண் சிசுக்கருக்களும் குழந்தைகளும் கொல்லப்படவும் செய்கின்றனர். சிறிய அளவிலான ஆய்வுகள் பெண்களின் விரும்பத்தக்க மற்றும் உள்ளபடியான திருமண வயதுக்கும் கணிசமாக வேறுபாடிருப்பதை சுட்டிக்காட்டுகின்றன. ஒரு அரைப்பங்கு பெண்கள் 18 வயதிலோ (அ) அதற்கு முன்பாகவோ, திருமணம் செய்து கொள்கின்றனர். அவர்கள் யாரைத் திருமணம் செய்ய விரும்புகிறார்கள் என்பதை முடிவு செய்யும் உரிமை அவர்களுக்கில்லை. தமிழ்நாட்டிலிருக்கும் 25% பெண்கள் முதல் அத்தை / மாமன் மகன்களை மணக்கின்றனர். குறைந்தது 50% பெண்கள் ஒன்று அல்லது வேறு ஒரு உறவினரை மணக்கின்றனர். மணத்தொடர்புக்குத் தகாத உறவுகளில் பிறந்த குழந்தைகளுக்கிடையில் பிறப்புக்குப் பிந்தைய இறப்புகள் அதிகம் காணப்படுகிறது. எனவே, இப்பழக்கம் ஒரு உடல் நலம் தொடர்பான பிரச்சனையாக உள்ளது. இந்தியாவின் வடக்கு மற்றும் மேற்குப் பகுதிகளிலிருக்கும் பெண்களோடு ஒப்பிடுகையில் ஒப்பீட்டடிப்படையில் அத்தகைய திருமணங்கள் பெண்களுக்கு மணவாழ்க்கைப் பிரச்சனைகளிலிருந்து பெருமளவில் ஒரு பாதுகாப்பை யளிக்கிறது. மற்றொரு கவலையளிக்கும் விசயம் தமிழ்நாட்டில் மாதிரிப் பதிவுமுறை மதிப்பீடுகளி(1994)ன்படிப் பெண்களின் கருத்தரிப்பில் 39.6%, 15-19 வயதுத் தொகுதிக்குள் நிகழ்கிறதென்பதே. இதனால் தாய், சேய் இருவருக்குமே ஆபத்துகள் ஏற்படுகிறது. படம் 6.1 தென்மாநிலங்களில், திருமண வயதைக் காட்டுகிறது.

## பாலின, நோயுறும் தன்மை உருவடிவும் நலக்காப்பு வழி வாய்ப்பும்

ஆண், பெண்களின் நோயுறும் தன்மையின் உருவடிவம் பாலின வேறுபாடுகள் உள்ளன. தமிழ்நாட்டில் 15-49 தொகுதிக்குட்பட்ட பெண்களில் 56% ரத்தசோகை நோய் உடையவராய் உள்ளனர். கேரளாவிலும், கர்நாடகாவிலும் இது முறையே 22% மற்றும் 42% ஆக உள்ளது. (தேசீயக் குடும்ப நலவாழ்வுக் கணக்கெடுப்பு, 1998-99)

மூச்சுவிடுதலில் பிரச்சனைகள், இனப்பெருக்க, உடல்நலப் பிரச்சனைகள் மற்றும் புற்றுநோய், ஆண்களைவிடப் பெண்களிடம் அதிகமாகக் காணப்படுகிறது. இதய நோய்கள், பெண்களைவிட ஆண்களிடையே அதிகமாயுள்ளது. இவ்வேறுபாடுகளுக்கு ஒரு பகுதி, பாலின அடிப்படையில் வேலைப்பிரிவையும் ஒரு பகுதி, பெண்களுக்கு இனப்பெருக்கம் மற்றும் பாலுணர்வு உறவில் போதிய உரிமைகளில்லாதிருப்பதையும் காரணமாய் கூறலாம். பெண்கள் உணவு சமைக்கப் பொறுப்பாயிருப்பதாலும் விறகு ஒரு பெரும் எரிபொருள் ஆதாரமாயிருப்பதாலும் சுவாசப்பை

**படம் 6.1 திருமணமானவர்களின் விழுக்காடு - தென் மாநிலங்கள்**




*ஆதாரம் : தேசிய குடும்பநலவாழ்வுக் கணக்கெடுப்பு (1998-99)*

நோய்களும் புற்றுநோயும் பெண்களிடையே இதனால் ஏற்படும் சில பொதுவான விளைவுகளாய் உள்ளன (சுவாமிநாதன், 1997) நாற்றுநடவு, களை பிடுங்கல் போன்ற வேலைகளில் ஈடுபட்டுள்ள பெண்களின் உடலுழைப்பும் பலவகையான உடல் நலப்பிரச்சனைகளுக்குக் காரணமாய் உள்ளது. பீடி சுற்றுதல், இழை பின்னுதல் மற்றும் அகர்பத்தித் தயாரிப்பு போன்ற முறை சாராத துறையில் ஈடுபட்டுள்ள பெண்கள் பலவகைக் கண்நோய்களால் அவதிப்படுவது தெரிய வருகிறது. மேலும் பீடி செய்யும் பிரிவுகள், சாயத்தொழில் மற்றும் கற்குடைவுத் தொழில்களில் ஈடுபட்டிருப்போர் பலவகையான மூச்சு விடும் பிரச்சனைகள் மற்றும் தோல் நோய்களால் அவதிப்படுகிறார்கள். எல்லா நிகழ்வுகளிலும் மற்றவர்களைக் காட்டிலும் கருவுற்றிருக்கும் பெண்களே அதிகம் ஊறுபடத்தக்க நிலையில் உள்ளனர். இதனால் கருச்சிதைவடையும் வாய்ப்புகள் ஏற்படுகின்றன. மேலும் ஆண்களை விடப் பெண்களுக்கு தரமான நலக்காப்பு வசதிக்கு வழிவாய்ப்புக் குறைவாக இருப்பதால், ஆண்களைவிடப் பெண்களிடையே நோயுறும் தன்மையின் அளவுகள் அதிகமாயுள்ளன.

## பெட்டி 6.4 சென்னையில் மனைவியரைத் தாக்குதல்

சென்னை பெருநகரில் தாக்குதலுக்குள்ளான 90 மகளிர் குறித்த ஆய்வு மேற்கொண்டதில் கல்வி (அ) சாதிப் பின்னணிகளைப் பொருட்படுத்தாமலே எல்லாப் பெண்களும் கடும் உடலியலிலிருந்து மனவியலாகவும், பாலினப் பலாத்காரம் வரையில் பலவகை வன்முறை களை அனுபவித்தனர் எனத் தெரிகிறது. தவறாகப் பயன்படுத்திய மொத்த நேர்வுகளில் 50% உடலியலான வன்முறையும் மனவியலான வன்முறை 48% ஆகவுமிருந்தன. இவற்றில் பொருளாதார உரிமைகள் பறிப்பு, கைவிடுதல் இடம் பெயர்ந்து செல்லத் தடை போன்றவை அடங்கும். சராசரியாக ஒவ்வொரு பெண்ணும் மாறுபட்ட கால அளவுகளில்

வெவ்வேறான 12 வகையான வன்முறைகளை அனுபவிக்கின்றனர். கிட்டத்தட்ட எல்லாப் பெண்களுமே மற்றவர்களுக்கு முன்பு அறையப்பட்டு / அடிக்கப்பட்டு / உதைக்கப்பட்டு அவமதிக்கப் பட்டதாகத் தெரிவிக்கப்பட்டது. பெண்களில் 79% பேர் தினந்தோறும் வன்முறைக்குள்ளாக்கப்பட்டனர். பெரும்பாலும் எப்போதும் தாக்குதலுக்கான காரணம் பலவாயிருந்தது. ஒழுக்கத்தில் சந்தேகம், மதுவுக்கடிமையாதல், சீதனம், மாமன் மாமியார்களின் தூண்டுதல் போன்றவை, பெரும்பாலானவர்களின் நேர்வில் வன்முறைக்கான முக்கியக் காரணமாயிருந்தது. வாய் மூலமாய் எதிர்த்தாக்குதல் சுதந்திரம் மற்றும் சில பெண்களின் தன்னம்பிக்கை, ஆண்களுக்கு ஒரு உண்மையான அச்சுறுத்தலாய் அமைந்தது இதன் விளைவாக அதிகமான வன்முறைக்கு அவர்கள் ஆட்பட நேர்ந்தது. குறிப்பிட்டுக் கூறும்படியாக இவர்கள் விரும்பி ஏற்ற திருமண வகை, தாக்குதல், காலஅளவு மற்றும் வன்முறைக்கான காரணத்திற்கு எந்த வகையிலும் தொடர்புடையதாயிருக்கவில்லை.

*ஆதாரம் : பெண்களுக்கெதிரான வன்முறை. சென்னையில் மனைவியர் மீது தாக்குதல், பொருளாதார மற்றும் அரசியல் வார இதழ், 17 - 24, ஏப்ரல், 1999.*

## பாலினமும் உடல் பாதுக்காப்புரிமைகளும்

### பெண்களுக்கெதிரான வன்முறை நிகழ்வுகள்

தமிழ்நாட்டில் பெண்கள் பலவாறான வன்முறையை எதிர்கொள்கிறார்கள். இவற்றில் சில, உலகெங்கிலும் இருப்பதைப் போன்றே உள்ளன. அவை, பெண்சிசுக் கொலை, பெண் சிசுக்கருக் கலைப்பு, வன்புணர்ச்சி, மனைவியர் மீது தாக்குதல், பெண்களைக் கேலி செய்தல், தொல்லைப் படுத்தல், ஆபாசம் மற்றும் பெண்களை விபசாரத்தில் ஈடுபடுத்தல். மற்றவை இந்திய மற்றும் தெற்காசிய சூழமைவுக்கே உரித்தான பெண்சிசுக் கொலை, கருக்கலைப்பு, சிறார் திருமணம், கட்டாயத் திருமணம், சீதனம் தொடர்பான கொடுமைகள் மற்றும் பொய்ப் பிரச்சாரம் ஆகியன. இவ்வாறான வன்முறைகள் பலவாறான நிறுவனச் சூழமைவுகளில் நிகழ்கின்றன. அவை, குடும்பம், வேலை பார்க்குமிடம், பள்ளிகள், கல்லூரிகள், கோயில்கள், சாலைகள், மருத்துவமனைகள் மற்றும் சிறைகளும்கூட. பாதிக்கப்பட்டவர்களையே துயருக்குள்ளாக்கும் சமூக மனப்போக்குக் காரணமாய் பெண்களுக்கு எதிரான வன்முறை பெருமளவில் குறைவாகவே அறிவிக்கப்படுகிறது. மேலும் குடும்பத்திற்குள்ளாக நிகழும் வன்முறை ஒரு சொந்தப் பிரச்சனை என நினைக்கப்படுகிறது. இதன் விளைவாக வன்முறை பற்றிய புள்ளி விவரங்கள், பாலினத்திற்குரித்தான வன்முறையின் உண்மையான அளவு ஒருவேளை குறைவாகவே மதிப்பிடப்படுகிறது. மேலும், திருமணத்திற்குப் பிந்தைய வன்புணர்ச்சி போன்ற சிலவகை வன்முறை சட்டப்படி வன்முறையென ஏற்கப் படுவதில்லை. எனவே அரசு அலுவலக ஆவணங்களில் எல்லா வகையான வன்முறைகளும் உள்ளடங்கியிருப்பதில்லை. காவல்துறை இயக்குநரின் ஆவணங்களின்படி பெண்களுக் கெதிராக அறிவிக்கப்பட்ட வன்முறைக் குற்றங்களின் நிகழ்வு, 1990-இல் 2494-ஆக இருந்தது, 1998-இல் 5074-ஆக உயர்ந்தது. இவ்வுயர்வு குறிப்பாக வரதட்சணை இறப்புகள். தொல்லைகள், பெண்களைத் தொந்தரவு செய்தல், சித்திரவதை, பெண்களைக் கடத்திச் செல்லல் முதலான வழக்குகளின் எண்ணிக்கையில் மிக அதிகமாகக் காணப்படுகின்றது. பெண்களுக்கெதிராக அறிவிக்கப்பட்ட குற்றங்களில் உடலுணர்வுத் தொல்லைகள் மற்றும் பெண்களைத் தொந்தரவு செய்தல் ஆகியன

65% ஆகும். நற்பேறற்ற வெவ்வேறான வகைக் குற்ற நிகழ்வுகள் பற்றிய தனித்தனியான புள்ளிவிவரங்கள் கிடைக்கப் பெறவில்லை.

**பாலின அடிப்படை வன்முறைக்கான காரணங்களும் விளைவுகளும்**

பெண்களுக்கெதிரான வன்முறைக்குப் பலகாரணங்கள் உள்ளன. திருமணத்திற்குப் பின் பெண்கள், அவர்களுடைய கணவர்மார்களின் சொத்து என்ற எண்ணம் தமிழ்நாட்டில் வேரூன்றிள்ளது. ஒழுக்கத்தில் சந்தேகம், மலட்டுத்தன்மை (கணவன், மனைவி இருவருடைய) மதுப்பழக்கம், வரதட்சணை, மாமன் மாமியாரின் தூண்டுதல்கள் ஆகியன. பெண்களுக்கெதிரான வன்முறைக்கு உடனடியான காரணங்களில் சிலவாகும். இவை சமுதாயத்தில் வேரூன்றியிருக்கும் ஆணாதிக்க உரிமைகளின் அறிகுறிகளாகக் கருதப்படுகின்றன. இதன் விளைவாக, மனைவியை அடிப்பது, பெண்களாலேயே சாதாரணமானதெனக் கருதப்படுகிறது. ஊடகங்களில் பெண்களைப் பாலுணர்வுப் பொருள்களாகச் சித்தரிப்பதும் திரைப்படங்களில் பல்வேறு வகையான வன்முறைகளும் குடும்பத்திற்குள்ளும் வெளியிலும் அதிகரித்த வன்முறையை நிலைத்திருக்கச் செய்வதில் பெரும் பங்கை வகித்தன. வன்முறை பெண்களின் உளவியல் மற்றும் உடல் நலத்திலும் கணிசமான விளைவுகளை ஏற்படுத்தின. தமிழ்நாட்டில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகள் பெண்கள் மீதான தாக்குதல்கள் காரணமாகவே அடிக்கடிக் கருச்சிதைவுகள் ஏற்படுகின்றன எனக் காட்டுகிறது. (ஜீஜி பாய், 1998) இருப்பினும் தமிழ்நாட்டில் இது, ஒரு பொது நலவாழ்வுப் பிரச்சனையாக இன்னும் ஏற்கப்படவில்லை. வன்முறை பெண்களுக்கு வருவாய் இழப்பை ஏற்படுத்துவதோடு, குடும்பங்களை உடைக்கவும் செய்கிறது. இவை, குழந்தைகளைக் கடுமையாகப் பாதிக்கிறது.

**முடிவெடுத்தலும், பங்கேற்றலும்**

மனித மேம்பாட்டின் அடிப்படை நோக்கங்களில் ஒன்று, விருப்பேற்புகளை விரிவுப்படுத்துவதும், எல்லாப் பிரிவு மக்களுக்கும் அப்படிச் செய்வதுமாகும். இதன் மற்றொரு முக்கிய இயல்பு மக்கட்தொகையின் எல்லாப் பிரிவினரையும், நிருவாக மற்றும் பொருளாதார முடிவு எடுப்பதில் பங்கேற்கச் செய்வதே. சமுதாயப் பாலினக் கட்டமைப்பு (மேலே விளக்கியுள்ளபடி) காரணமாக அத்தகைய பங்கேற்பு, குறுகிய காலத்தில் நிகழாதெனினும் நீண்டகால அடிப்படையில் அது ஒரு முக்கியப் பங்காற்றக் கூடும். தமிழ்நாட்டில் முடிவெடுப்பதும் பங்கேற்பதும் எந்த அளவு பரவியுள்ளது, எந்த அளவு, ஆண்களைப் போன்றே பெண்களும் வாய்ப்புகளை அனுபவிக்கிறார்கள் என்பதை ஆராயும் தேர்வு செய்த சுட்டிக்காட்டும் குறியீடுகளைப் பற்றி இப்பிரிவு விளக்குகிறது. இயலக்கூடிய இடங்களில் அனைத்திந்திய நிலை மற்றும் மற்ற நாடுகளுடனும் ஒப்புமைகள் செய்யப்பட்டுள்ளன.

உலகின் பெரும்பாலான நாடுகளிலிருந்து அனுபவங்கள், முடிவுகள் எடுப்பதில் அதிகப் பரவலான பங்கேற்பு ஒரு தெளிவான வழியில் முடிவுகள் எடுக்கத் தூண்டுகிறது. இருப்பினும் உலகெங்கிலும், பாலின வேறுபாடுகள் தொடர்ந்திருக்கின்றன. சில வகைகளில் உண்மையில் அரசமைப்புச் சட்ட மற்றும் சட்டப்படியான முயற்சிகளைப் பொறுத்தவரை இந்தியா, வழிகாட்டியாக உள்ளது. எடுத்துக்காட்டாக, அடிமட்டங்களில் மக்களாட்சியில் மக்களின் அண்மைக்காலத்தில் மிக அதிக அளவிலான பங்கேற்பு, அவர்களுடைய குறைகளை எடுத்துரைக்க, அவர்களுடைய வீடுகளுக்கு

வெளியே, அதிகரித்த இடம் பெயர்ந்து செல்லும் ஆற்றலான ஒரு இடத்தை உருவாக்க வழி வகுத்துள்ளது. முழுப் பங்கேற்புக்கு இன்னும் கால அவகாசம் தேவைப்பட்டாலும் உள்ளாட்சி மன்றங்களில் மூன்றில் ஒரு பங்கு பெண்களுக்கு இடஒதுக்கீட்டுக்கு வகை செய்யும் 73 மற்றும் 74-வது அரசமைப்பு சட்ட திருத்தங்கள், பெண்கள் அரசியல் செய்முறையில் பங்கேற்க வசதி செய்துள்ளது. இருப்பினும், பெண்களின் பேரார்வங்களுக்கும் முன்னுரிமைகளுக்கும் ஒரு கூர் உணர்வை உருவாக்கி அவர்களை ஒதுக்கி வைக்காமல், அரசியல், சமுதாய நீரோட்டத்தில் ஒரு முக்கியப் பணியாற்றச் செய்யும், நிருவாக மற்றும் அரசியல் அமைப்பு தேவைப்படுகிறது.

## அரசியல் பங்கேற்பில் நிலைகளும், போக்குகளும்

### வாக்குப்பதிவு

வாக்குப்பதிவுப் போக்குகள் அரசியல் செய்முறையில் பங்கேற்புக்கான ஒரு சுட்டிக்காட்டும் குறியீடாகும். கடந்த 15 ஆண்டுகளாக சட்டமன்றத்திற்கான பொதுத் தேர்தல்கள் 1984, 1989, 1991 மற்றும் 1996-ல் நடைபெற்றன. நாடாளுமன்றத் தேர்தல்கள் சட்டமன்றத் தேர்தல்களுடன் நிகழ்ந்ததால் சட்டமன்றத்திற்கும் மட்டும் நடைபெற்ற வாக்குப்பதிவின் போக்குகள் ஆய்வு செய்யப்பட்டன. மாநிலத்தில், 1984-ல் 31.14 மில்லியன் நபர்கள் (ஊரக மற்றும் நகர்ப்புறமிரண்டிலும்) வாக்காளர்களாகப் பட்டியலிடப்பட்டனர். 1996-இல் இவ்வெண்ணிக்கை 41.93 ஆக உயர்ந்தது. (அட்டவணை - 6.1-ஐப் பார்க்கவும்)

**அட்டவணை - 6.1 : தமிழ்நாட்டில் வாக்காளர்களின் எண்ணிக்கை**

(மில்லியன்களில்)

| ஆண்டு | கிராமப்புறம் | | | நகர்ப்புறம் | | | மொத்தம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | மொத்தம் | ஆண் | பெண் | மொத்தம் | ஆண் | பெண் | மொத்தம் |
| 1984 | 7.35 | 7.38 | 14.73 | 8.29 | 8.09 | 16.38 | 15.64 | 15.47 | 31.11 |
| 1989 | 8.43 | 8.40 | 16.83 | 9.51 | 9.13 | 18.64 | 17.94 | 17.53 | 35.47 |
| 1991 | 9.50 | 9.44 | 18.94 | 10.72 | 10.26 | 20.98 | 20.21 | 19.70 | 39.91 |
| 1996 | 9.58 | 9.60 | 19.18 | 11.57 | 11.18 | 22.75 | 21.15 | 20.78 | 41.93 |

*ஆதாரம் : தமிழ்நாடு அரசு தேர்தல் துறை*

தமிழ்நாட்டில் கடந்த 4 சட்டமன்றத் தேர்தல்களில் வாக்காளரின் எண்ணிக்கை, வாக்களிப்பு விழுக்காடு விவரங்கள் இருப்பிட (கிராமப்புற / நகர்ப்புற) வாரியாகவும், பாலின (ஆண் / பெண்) மற்றும் மாவட்டவாரியாகவும் அட்டவணைப் படுத்தப்பட்டுள்ளன. கடந்த நான்கு சட்டமன்றத் தேர்தல்களில் வாக்குப் பதிவுப் போக்கின் ஒரு பகுப்பாய்வு, பெண்களின் வாக்குப்பதிவு விழுக்காடும் ஆண்களின் வாக்குப்பதிவு விழுக்காடும் ஒரே மாதிரியாக இருப்பதைக் காட்டுகிறது. ஆண்களின் வாக்குப் பதிவு விழுக்காடு 65.29 மற்றும் 74.36 விழுக்காடுகளுக்கிடையிலும் பெண்களின் வாக்குப் பதிவு விழுக்காடு 63.85 மற்றும் 73.03%-க்கு இடையிலும் உள்ளன. ஆண்கள், பெண்கள் ஆகிய இருவரின் மொத்த வாக்களிப்பு விழுக்காடு, 1984-இல் இருந்து 1991 வரை குறைந்து மீண்டும் 1991

மற்றும் 1996-க்கிடையில் அதிகரித்தது. கிராமப்புறம் நகர்ப்புறம் ஆகிய இரண்டிலும் இதே மாதிரி நிலையே காணப்பட்டது (அட்டவணை - 6.2)

**அட்டவணை - 6.2 : வாக்காளர் வாக்குப் பதிவு**

| ஆண்டு | கிராமப்புறம் | | | நகர்ப்புறம் | | |
|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | மொத்தம் | ஆண் | பெண் | மொத்தம் |
| 1984 | 73.8 | 71.2 | 72.5 | 74.8 | 72.2 | 73.5 |
| 1989 | 75.0 | 70.0 | 72.7 | 72.6 | 68.4 | 71.1 |
| 1991 | 66.0 | 63.0 | 64.5 | 64.5 | 61.8 | 63.1 |
| 1996 | 70.4 | 66.6 | 68.5 | 67.5 | 63.0 | 65.3 |

*ஆதாரம் : தமிழ்நாடு அரசு தேர்தல் துறை*

தமிழ்நாடு அரசு தேர்தல் துறையின் புள்ளி விவரங்கள். மாவட்டங்களுக்கிடையில் மட்டுமின்றிக் குறுகிய கால பெரும் மாறுபாடுகளிருந்ததைக் காட்டுகிறது. நாகபட்டிணம் போன்ற சில மாவட்டங்களில், 1980-களில் 80%-க்கு மேற்பட்டவர்கள் வாக்குப்பதிவு செய்து இருப்பினும் பெரும்பான்மை, மாநில சராசரி வாக்குப்பதிவையே பெற்றிருந்தன. சென்னை மற்றும் கோயம்புத்தூர் போன்ற பெரும் நகர்ப்புற மையங்களைக் கொண்ட மாவட்டங்கள் தொடர்ந்து சராசரிக்கும் குறைவான பதிவையே கொண்டிருந்தன என்பது கவனத்திற்குரியது. நகர்ப்புற வாக்காளரிடையே ஆர்வமின்மை, ஒருவேளை காரணமாயிருக்கலாம். கிராமப்புறங்களில் அதிகமான வாக்குப்பதிவு விழுக்காடு பதிவாகியிருந்தது (அட்டவணை - 6.3).

**அட்டவணை - 6.3 : மாவட்டவாரியான வாக்குப்பதிவு விழுக்காடுகள்**

| மாவட்டம் | வாக்குப்பதிவு செய்தோர் கிராமப்புறம் பெண்கள் | | | | வாக்குப்பதிவு செய்தோர் நகர்ப்புறம் பெண்கள் | | | | வாக்குப்பதிவு விழுக்காடு மொத்தம் | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1984 | 1989 | 1991 | 1996 | 1984 | 1989 | 1991 | 1996 | 1984 | 1989 | 1991 | 1996 |
| சென்னை | | | | | 62.1 | 57.4 | 51.5 | 54.9 | 61.8 | 60.0 | 53.7 | 57.8 |
| காஞ்சிபுரம் | 72.6 | 82.5 | 60.4 | 65.0 | 72.0 | 67.4 | 53.1 | 51.7 | 72.8 | 74.8 | 60.5 | 62.4 |
| திருவள்ளூர் | 74.8 | 67.4 | 64.1 | 67.0 | 70.2 | 55.0 | 59.3 | 56.7 | 75.0 | 70.6 | 63.7 | 65.8 |
| வேலூர் | 75.2 | 73.4 | 65.2 | 67.6 | 75.9 | 72.3 | 61.8 | 65.0 | 76.5 | 75.4 | 65.5 | 68.5 |
| திருவண்ணாமலை | 74.7 | 74.9 | 69.3 | 69.8 | 76.7 | 77.2 | 70.0 | 69.8 | 77.1 | 76.6 | 70.5 | 71.9 |
| விழுப்புரம் | 73.8 | 72.6 | 67.0 | 68.6 | 73.6 | 74.9 | 65.2 | 67.1 | 74.4 | 76.0 | 67.4 | 69.0 |
| கடலூர் | 73.7 | 74.9 | 68.3 | 68.8 | 77.6 | 75.4 | 67.2 | 69.4 | 76.4 | 77.0 | 68.9 | 70.0 |
| சேலம் | 67.2 | 65.6 | 63.6 | 64.5 | 72.5 | 66.3 | 60.0 | 63.0 | 71.7 | 69.8 | 64.6 | 66.2 |

(தொடர்ச்சி)

| மாவட்டம் | வாக்குப்பதிவு செய்தோர் கிராமப்புறம் பெண்கள் | | | | வாக்குப்பதிவு செய்தோர் நகர்ப்புறம் பெண்கள் | | | | வாக்குப்பதிவு விழுக்காடு மொத்தம் | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1984 | 1989 | 1991 | 1996 | 1984 | 1989 | 1991 | 1996 | 1984 | 1989 | 1991 | 1996 |
| நாமக்கல் | 61.2 | 64.3 | 59.5 | 61.6 | 70.7 | 66.0 | 58.7 | 62.4 | 69.9 | 68.8 | 62.5 | 66.0 |
| தருமபுரி | 67.4 | 70.1 | 58.1 | 61.1 | 69.3 | 66.9 | 59.7 | 61.7 | 70.2 | 72.2 | 62.2 | 65.2 |
| கோயம்புத்தூர் | 58.8 | 59.0 | 61.9 | 64.6 | 84.7 | 79.4 | 60.0 | 63.0 | 72.9 | 71.9 | 63.8 | 68.2 |
| ஈரோடு | 64.6 | 63.9 | 64.9 | 63.3 | 87.7 | 81.7 | 61.6 | 65.0 | 79.3 | 77.2 | 66.4 | 68.8 |
| திருச்சிராப்பள்ளி | 0 | | | | 74.5 | 66.5 | 57.8 | 61.4 | 38.0 | 35.1 | 30.3 | 32.2 |
| கரூர் | 75.1 | 73.1 | 61.7 | 66.3 | 76.7 | 75.3 | 58.6 | 65.3 | 77.8 | 76.3 | 62.2 | 67.7 |
| பெரம்பலூர் | 77.2 | 79.3 | 57.8 | 64.2 | 75.2 | 70.8 | 59.3 | 65.3 | 77.1 | 76.0 | 61.5 | 67.1 |
| புதுக்கோட்டை | 79.3 | 77.7 | 59.1 | 64.7 | | | 50.7 | 57.6 | 39.7 | 39.2 | 57.9 | 63.4 |
| தஞ்சாவூர் | 75.5 | 78.8 | 62.7 | 67.0 | 75.1 | 68.6 | 66.3 | 68.6 | 78.4 | 76.7 | 66,3 | 70.4 |
| திருவாரூர் | 81.3 | 77.2 | 66.4 | 74.7 | 80.2 | 75.2 | - | - | 80.9 | 76.3 | 34.7 | 37.3 |
| நாகப்பட்டினம் | 82.7 | 82.4 | 68.5 | 73.1 | 83.6 | 81.3 | 59.4 | 66.6 | 83.9 | 83.7 | 66.4 | 70.1 |
| மதுரை | 72.0 | 65.4 | 62.5 | - | 69.4 | 57.8 | 58.3 | 73.6 | 71.3 | 65.6 | 62.9 | 30.2 |
| தேனி | 69.3 | 65.9 | 70.5 | 70.4 | 71.2 | 67.1 | 69.9 | 71.8 | 71.0 | 69.6 | 75.5 | 73.4 |
| திண்டுக்கல் | 70.5 | 69.6 | 72.0 | 74.0 | 71.3 | 68.7 | 61.5 | 67.6 | 69.8 | 71.6 | 68.7 | 72.3 |
| இராமநாதபுரம் | 68.0 | 64.4 | 66.9 | 72.6 | 77.9 | 73.6 | - | - | 72.4 | 68.6 | 34.8 | 36.0 |
| விருதுநகர் | 71.1 | 67.0 | 63.8 | 66.8 | 73.5 | 68.9 | 63.5 | 65.7 | 73.1 | 70.1 | 62.5 | - |
| நீலகிரி | 0.0 | - | 55.9 | 60.1 | 68.4 | 65.1 | 62.0 | 67.1 | 35.3 | 34.3 | 57.9 | 61.5 |
| சிவகங்கை | 71.1 | 71.4 | 61.9 | 68.7 | 74.7 | 69.9 | 61.8 | 67.0 | 72.1 | 69.4 | 64.1 | 69.8 |
| தூத்துக்குடி | 70.9 | 67.5 | 55.6 | 60.2 | 73.7 | 68.5 | 56.2 | 63.3 | 72.7 | 69.9 | 57.6 | 63.5 |
| திருநெல்வேலி | 67.6 | 63.8 | 60.3 | 65.3 | 35.7 | 61.2 | 62.7 | 66.4 | 58.4 | 65.5 | 63.2 | 67.3 |
| கன்னியாகுமரி | 66.3 | 66.3 | 57.8 | 58.2 | 66.6 | 64.7 | 56.6 | 60.1 | 68.3 | 65.8 | 58.6 | 60.9 |
| தமிழ்நாடு | 71.2 | 70.4 | 63.0 | 66.6 | 72.2 | 68.4 | 61.8 | 63.0 | 73.0 | 71.9 | 63.8 | 66.9 |

*ஆதாரம் : தேர்தல் துறை, தமிழ்நாடு அரசு*

## முடிவுகள் எடுத்தல் நாடாளுமன்றமும் சட்டமன்றமும்

உலக மக்கட்தொகையில் கிட்டத்தட்டப் பாதியளவு பெண்களாயிருப்பதால், பொது ஆட்சி நடவடிக்கைகளில் முடிவு மேற்கொள்வதில் வழிவாய்ப்புகளில் ஏற்றத்தாழ்விருப்பதை எதிர்த்துப் போரிடுவதில் குறிப்பிடத்தக்க மாற்றத்தை ஏற்படுத்தக்கூடிய தேர்ந்தெடுக்கப்பட்ட பதவிகளில் பெண்களின் தொடக்கப் பங்கை மதிப்பீடு செய்யும் பன்னாட்டு முயற்சிகளை எண்ணிப் பார்ப்பது முக்கியமாய் உள்ளது. ஐக்கிய நாடுகளின் வளர்ச்சி திட்ட மனித மேம்பாட்டறிக்கை குறுமமாய் 30% இருக்க வேண்டுமென நிர்ணயித்துள்ளது. (ஐக்கிய நாடுகளின் வளர்ச்சி திட்டம், 1995) மிகச்சில

நாடுகளே கிட்டத்தட்ட இக்குறு இலக்கை எட்ட முயன்றுள்ளன. ஜெர்மானிய இனத்தை சார்ந்த நாடுகள் இத்தொடர்பில் வழிகாட்டுகின்றன. எடுத்துக்காட்டாக டென்மார்க், நெதர்லாந்து, நார்வே மற்றும் சுவீடன் போன்ற நாடுகளில் நாடாளுமன்ற அல்லது அமைச்சரவை நிலையில் தொடக்கத்தில் 30 விழுக்காட்டை மிஞ்சியுள்ளன. இருப்பினும் தமிழ்நாட்டைப் பொறுத்தவரை (ஐயப்பாட்டுக்கிடமின்றி மற்ற மாநிலங்களிலும்கூட) நிலைமை மிகவும் மாறுபட்டுள்ளது.

வாக்களிப்பில் பங்கேற்பதில் ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையில் வேறுபாடு குறிப்பிடும் படியாயில்லாத போதிலும், தேர்தல்கள் மூலம் அதிகாரமளிக்கும் பதவிகளை அடைவதில், பாலின வேறுபாடு மிக அதிகமாகக் காணப்படுகின்றது. அட்டவணை - 6.4 கடந்த காலத்தில் நாடாளுமன்றம் மற்றும் தமிழ்நாடு சட்ட மன்றத்தில் பெண் உறுப்பினர்கள் தொடர்பான போக்கைக் காட்டுகிறது. அட்டவணையில் கண்டுள்ளபடி, நாடாளுமன்றத்தில் பெண் உறுப்பினர்களின் விழுக்காடு தொடர்ந்து 8%-க்கும் குறைவாகவே இருந்து வருகிறது. காலம் கழிந்தும் முன்னேற்றம் ஏதும் காணப்படவில்லை. அனைத்திந்திய அளவிலும் பாலினப் பாகுபாட்டின் இடைவெளி ஒழுங்கற்றுள்ளது. பெண் விழுக்காடுகள் நுணுகிக் காணக்கூடிய எவ்விதப் போக்குமின்றி, 1996-இல் குறைவான 2.5%-இல் இருந்து (1996) உயர்வான 9.09% (1984) வரை காணப்படுகிறது. 1984-இல் மத்திய அரசில் தமிழ்நாட்டிலிருந்து ஒரே ஒரு பெண் அமைச்சர் மட்டுமே இருந்தார்.

**அட்டவணை - 6.4 : நாடாளுமன்றம் மற்றும் அமைச்சரவையில் உறுப்பினர் பதவி**

| ஆண்டு | நாடாளுமன்ற உறுப்பினர்கள் | | | | அமைச்சரவையில் அமைச்சர்கள் | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | மொத்தம் | பெண்கள் % | ஆண் | பெண் | மொத்தம் | பெண்கள் % |
| 1984 | 500 | 42 | 542 | 7.75 | 40 | 4 | 44 | 9.09 |
| 1989 | 502 | 27 | 529 | 5.10 | 39 | 2 | 41 | 4.88 |
| 1991 | 484 | 37 | 521 | 7.10 | 52 | 6 | 58 | 10.34 |
| 1996 | 503 | 40 | 543 | 7.37 | 39 | 1 | 40 | 2.50 |
| 1998 | 496 | 43 | 539 | 7.98 | 42 | 4 | 46 | 8.70 |

*ஆதாரம் : த.நா. அரசு தேர்தல் துறை*

அட்டவணை-6.5, இதே ஆண்டுகளுக்குத் தமிழ்நாடு சட்டமன்றத்திற்கான புள்ளி விவரங்களை அளிக்கிறது. மொத்தத்தில் நிலைமை ஒரே மாதிரியாக இருந்தாலும் 1991 சட்ட மன்றத்தில் 13.25% அல்லது 31 பெண் உறுப்பினர்களைக் கொண்டிருந்தது. பெண் அமைச்சர்களின் விழுக்காடு அவர்களுடைய உறுப்பினர் பதவிகளின் எண்ணிக்கையைவிட சராசரியாக அதிகமாக இருந்தது. 1989-இல் 5.56% ஆகவிருந்தது, 1996-இல் 7.41% ஆக உயர்ந்தது. பெண்களின் மாவட்ட வாரியான பிரதிநிதித்துவம் பற்றிய ஆய்வு திருவண்ணாமலை, நீலகிரி, கரூர், பெரம்பலூர், நாகப்பட்டினம், புதுக்கோட்டை, தேனி மற்றும் இராமநாதபுரம் மாவட்டங்கள் கடந்த நான்கு தேர்தல்களில் சட்டமன்றத்திற்கு பெண் உறுப்பினர் ஒருவரைக்கூட அனுப்பவில்லை என்பதைக் காட்டுகிறது.

**அட்டவணை-6.5 : தமிழ்நாடு சட்டமன்றம் மற்றும் அமைச்சரவையில் உறுப்பினர்**

| ஆண்டு | தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் | | | | அமைச்சரவையில் எண்ணிக்கை | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | மொத்தம் | பெண் % | ஆண் | பெண் | மொத்தம் | பெண் % |
| 1984 | 226 | 8 | 234 | 3.4 | 22 | 2 | 24 | 8.3 |
| 1989 | 224 | 10 | 234 | 4.3 | 17 | 1 | 18 | 5.6 |
| 1991 | 203 | 31 | 234 | 13.2 | 25 | 2 | 27 | 7.4 |
| 1996 | 224 | 10 | 234 | 4.7 | 25 | 2 | 27 | 7.4 |

*ஆதாரம் : த.நா. அரசு தேர்தல் துறை*

**முடிவு எடுத்தல் : உள்ளாட்சி மன்றங்கள்**

உள்ளாட்சி மன்றங்களில் அரசியல் பங்கேற்பைப் பொறுத்தவரை பெண்களின் பங்கேற்புக்கு மிகவும் ஆதரவான நிலைமை உள்ளது. 1992-இல் கொண்டு வரப்பட்ட 73 மற்றும் 74-ஆவது அரசமைப்புச் சட்டத்திருத்தங்கள் இந்தியாவில், மக்களாட்சியைப் பரவலாக்குவதில் ஒரு புத்துயிர் ஊட்டுவதில் பேருதவியாய் அமைந்தன. உள்ளாட்சி மன்றங்களில் மூன்றில் ஒரு பங்கு இடங்களைப் பெண்களுக்கு ஒதுக்கீடு செய்வதை அவை தவிர்க்கலாகாததாய் செய்தன. இது, அரசியல் செய்முறையில் பெண்கள் தீவிரப் பங்கேற்க வெறும் செயலற்ற வாக்காளர்களாகவோ, கட்சித் தொண்டர்களாகவோ இல்லாமல் வேட்பாளர்களாயும் பங்கேற்க வழி வகுத்தது.

தமிழ்நாட்டில் 1996-இல் கிராமப்புற மற்றும் நகர்ப்புறங்களில் உள்ளாட்சி மன்றத் தேர்தல்கள் நடைபெற்றன. அட்டவணை - 6.6, கிராமப்புற உள்ளாட்சி மன்றங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட மொத்த வேட்பாளர்களின் எண்ணிக்கை 19,448 எனக் காட்டுகிறது. (மாவட்ட நிலை ஊராட்சி இடங்கள் 620, வட்டார நிலை ஊராட்சி ஒன்றிய இடங்கள் 6395 மற்றும் கிராம ஊராட்சி இடங்கள் 12,433) இவற்றில் 7040 பேர் பெண்கள். இது மொத்தத்தில் 36.20% விழுக்காடு ஆக அமைந்திருக்கிறது. (மாவட்ட ஊராட்சிகளுக்கு 37.26%, ஊராட்சி ஒன்றியங்களுக்கு 37.90% கிராம ஊராட்சிகளுக்கு 35.27%)

நகர்ப்புற ஊராட்சி மன்றங்களிலும் இதே நிலைதான். மொத்த இடங்களின் எண்ணிக்கை 3919 (நகராட்சிகளுக்கு 3445 இடங்களும் மாநகராட்சிகளுக்கு 474 இடங்களும்) இவற்றில் 1311 இடங்கள் பெண்களுக்கு சென்றன. இது 33.45%-ஆகும். (நகராட்சிகளில் 1151 33.41%, மாநகராட்சிகளில் 160 இடங்கள் - 33.76%)

**அட்டவணை-6.6 : தமிழ்நாட்டில் கிராமப்புற மற்றும் நகர்ப்புற உள்ளாட்சி மன்றங்களில் பிரதிநிதித்துவம் - 1996**

| பகுதிகள் | பெண் | ஆண் | மொத்த இடங்கள் | பெண் விழுக்காடு |
|---|---|---|---|---|
| **கிராமப்புறம்** | | | | |
| மாவட்ட ஊராட்சி (தொகுதி உறுப்பினர்கள்) | 231 | 389 | 620 | 37.26 |
| வட்டார நிலை ஊராட்சி ஒன்றியம் (தொகுதி உறுப்பினர்கள்) | 2424 | 3971 | 6395 | 37.90 |

(தொடர்ச்சி)

| பகுதிகள் | பெண் | ஆண் | மொத்த இடங்கள் | பெண் விழுக்காடு |
|---|---|---|---|---|
| கிராம ஊராட்சிகள் (தலைவர்கள்) | 4385 | 8048 | 12433 | 35.27 |
| மொத்த கிராமப்புறம் | 7040 | 12408 | 19448 | 36.20 |
| நகர்ப்புறம் | | | | |
| நகராட்சிகள் (மன்ற உறுப்பினர்கள்) | 1151 | 1294 | 3445 | 33.41 |
| மாநகராட்சிகள் (மன்ற உறுப்பினர்கள்) | 160 | 314 | 474 | 33,76 |
| மொத்த நகர்ப்புறம் | 1311 | 1608 | 3919 | 33.45 |

*ஆதாரம் : தமிழ்நாடு அரசு மாநில தேர்தல் துறை*

## தேர்வுத்தகுதி

போட்டியிட்ட புள்ளி விவரங்களுடன் தேர்வு செய்த புள்ளி விவரங்களை ஒப்பிடுவது தேர்வுத் தகுதி அல்லது கழிவைச் சுட்டிக்காட்டுகிறது. சட்டமன்றத் தேர்தல்களுக்குக் கிடைக்கப் பெறும் புள்ளி விவரங்கள் அட்டவணை - 6.7-இல் கொடுக்கப்பட்டுள்ளன. சராசரியாக மொத்தத்தில் போட்டியிட்டவர்களில் உள்ளபடியே தேர்ந்தெடுக்கப்பட்டோர் 4.72% ஆகும். பாலின விவரக்கூறுகள் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆண்களின் விழுக்காடு 4.66 எனவும் பெண்களின் விழுக்காடு 6.67 எனவும் காட்டுகிறது (1996). கிராமப்புற நகர்ப்புற விவரக் கூறுகள் பின்வருமாறு. நகர்ப்புறங்களில் ஆண்களுக்கதிகமாயும் (ஆண்களுக்கு 6.27%-ம், பெண்களுக்கு 3.80%-ம்) கிராமப்புறங்களில் இதற்கு நேர்மாறாய் (ஆண்களுக்கு 3.62%-ம் பெண்களுக்கு 9.86%-ம்) உள்ளன. இவ்விதம் மொத்தத்தில் பெண்கள் ஆண்களைவிடத் தேர்வுத் தகுதியில் குறைந்தவர்களாயில்லை.

### அட்டவணை - 6.7 சட்டமன்றத் தேர்தல்களில் போட்டியிட்டு வெற்றி பெற்ற நபர்கள் (பாலினவாரியாய்) - 1984 - 1996

| ஆண்டு | போட்டியிட்டவர்கள் | | | தேர்வு | | | தேர்வில் % | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | மொத்தம் | ஆண் | பெண் | மொத்தம் | ஆண் | பெண் | மொத்தம் |
| 1984 | 1815 | 57 | 1872 | 226 | 8 | 234 | 12.45 | 14.04 | 12.50 |
| 1989 | 2261 | 105 | 2366 | 224 | 10 | 234 | 9.91 | 9.52 | 9.89 |
| 1991 | 1347 | 37 | 1384 | 203 | 31 | 234 | 15.07 | 83.78 | 16.91 |
| 1996 | 4808 | 150 | 4958 | 224 | 10 | 234 | 4.66 | 6.67 | 4.72 |

*ஆதாரம் : தமிழ்நாடு அரசு தேர்தல் துறை*

## வேலைவாய்ப்பின் போக்கு

### அரசு

அரசில் பெண்களின் பங்கேற்பு முடிவுகளை மேற்கொள்ளும் அதிகாரம் மற்றும் பங்கேற்பு குறியீடு எப்போதும் அதிகமாகவே பயன்படுத்தப்படுகிறது. தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகளில் அரசுப் பணியாளர்களில் பெண்கள் 13% ஆக அமைந்திருக்கின்றனர். மத்திய அரசுப் பணியாளர்கள்

பற்றிய அனைத்திந்தியப் புள்ளிவிவரங்கள், வளர்ச்சி பெற்ற நாடுகளுடன் ஒப்பிடுகையில் பெண்களின் விழுக்காட்டில் ஒரு ஏற்றப் போக்கைக் காட்டுகிறது. 1990-இல் இருந்து 1998 வரை 10.34ஆக இருந்து 13.44க்கு உயர்ந்துள்ளது. தமிழ்நாட்டின் சூழமைவில் (படம் 6.2) பெண்களின்

படம் 6.2 : மத்திய அரசில் வேலைவாய்ப்பு




*ஆதாரம் : வேலைவாய்ப்பு மற்றும் பயிற்சி இயக்குநர், தமிழ்நாடு அரசு*

படம் 6.3 : மாநில அரசில் வேலைவாய்ப்பு




*ஆதாரம் : வேலைவாய்ப்பு மற்றும் பயிற்சி இயக்குநர், தமிழ்நாடு அரசு*

வேலைவாய்ப்பு மேலும் அதிகமாக, 1990-இல் 17% ஆகவும் 1998-இல் 24% ஆகவும் இருந்தது. உள்ளாட்சி மன்றங்களில் பெண்களின் வேலைவாய்ப்பு விவரங்கள் 1990-இல் கிட்டத்தட்ட 45%-இல் இருந்து, 1998-இல் 59%-க்கு மேல் உயர்ந்தது. (அட்டவணை - 6.8) தமிழ்நாட்டில் இத்தகைய கணிசமாக அதிக விழுக்காடுகளுக்குக் காரணம், அனைத்திந்திய நிலைமையுடன் ஒப்பிடுகையில் கல்வி நிறுவனங்களிலும் மற்றும் குறிப்பாக நலப்பணிகளிலும் பெண்கள் அதிகமாகப் பணியமர்த்த செய்யப்பட்டதே ஆகும்.

### அட்டவணை - 6.8 : மத்திய / மாநில / உள்ளாட்சி மன்றங்களில் பெண்கள் வேலைவாய்ப்புப் போக்கு

| ஆண்டு | மத்திய அரசு பணி அமர்த்தப்பட்ட நபர்களின் எண்ணிக்கை (லட்சங்களில்) | | | பெண்களின் % | மாநில அரசு பணி அமர்த்தப்பட்ட நபர்களின் எண்ணிக்கை (லட்சங்களில்) | | | பெண்களின் % | உள்ளாட்சி மன்றங்கள் பணியமர்த்தப்பட்ட நபர்களின் எண்ணிக்கை (லட்சங்களில்) | | | பெண்களின் % |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | மொத்தம் | | ஆண் | பெண் | மொத்தம் | | ஆண் | பெண் | மொத்தம் | |
| 1990 | 3.89 | 0.45 | 4.34 | 10.34 | 7.90 | 1.66 | 9.56 | 17.40 | 0.85 | 0.70 | 1.55 | 44.99 |
| 1991 | 3.83 | 0.47 | 4.30 | 10.93 | 8.00 | 1.80 | 9.80 | 18.39 | 0.73 | 0.96 | 1.69 | 56.87 |
| 1992 | 3.84 | 0.50 | 4.34 | 11.53 | 7.39 | 1.79 | 9.18 | 19.48 | 0.76 | 1.06 | 1.82 | 58.09 |
| 1993 | 3.78 | 0.50 | 4.28 | 11.60 | 7.99 | 2.03 | 10.02 | 20.29 | 0.71 | 1.00 | 1.71 | 58.21 |
| 1994 | 3.73 | 0.52 | 4.25 | 12.17 | 7.87 | 2.26 | 10.13 | 22.31 | 0.73 | 1.00 | 1.73 | 58.11 |
| 1995 | 3.71 | 0.53 | 4.24 | 12.49 | 8.00 | 2.37 | 10.37 | 22.83 | 0.71 | 1.01 | 1.72 | 58.72 |
| 1996 | 2.99 | 0.50 | 3.49 | 14.24 | 7.74 | 2.80 | 10.54 | 26.59 | 1.32 | 1.10 | 2.42 | 45.54 |
| 1997 | 3.65 | 0.55 | 4.20 | 13.14 | 8.07 | 2.48 | 10.55 | 23.48 | 0.72 | 0.99 | 1.71 | 58.13 |
| 1998 | 3.56 | 0.55 | 4.11 | 13.44 | 7.95 | 2.52 | 10.47 | 24.09 | 0.70 | 1.00 | 1.70 | 59.14 |

*ஆதாரம் : வேலைவாய்ப்பு மற்றும் பயிற்சி இயக்ககம், தமிழ்நாடு அரசு*

**கூட்டுறவு சங்கங்கள்**

கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளர் புள்ளிவிவரப்படி, தமிழ்நாட்டில் 357 கூட்டுறவுச் சங்கங்கள் இயங்கி வருகின்றன. இவற்றில் தேர்ந்தெடுக்கப்பட்ட மொத்த உறுப்பினர் பதவி 3061 ஆகும். இதில் 1158 பேர் பெண்கள். பெண்களின் விழுக்காடு 38 ஆகும். மூன்றில் ஒரு பங்கு பெண்களுக்கு ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளதும் சில கூட்டுறவுச் சங்கங்கள் அனைத்து மகளிர் சங்கங்களாயிருப்பதும் இதற்கு காரணம். சில மாவட்டங்கள் மேலும் சிறப்பாக செயல்படுகின்றன. அவை தருமபுரி - (56.76%) புதுக்கோட்டை - (68%) நாகப்பட்டினம் - (64.29%) மற்றும் தேனி (52.86%) இம்மாவட்டங்களில் பெரும் எண்ணிக்கையில் பெண்கள் பணியமர்த்தப்பட்டுள்ள தையல் மற்றும் தாய்ப்பால் மறக்கடிப்பு உணவுகள் போன்றவற்றுக்கான சிறப்புக் கூட்டுறவு சங்கங்கள் ஏராளமாயிருப்பதும் பெரும்பாலும் காரணமாயிருக்கலாம்.

இருப்பினும் அலுவலகப் பொறுப்பாளர் பற்றிய விவரங்கள் அலுவலகப் பொறுப்பாளர்களில் 21.15% மட்டுமே பெண்களாக இருப்பதைக் காட்டுகிறது. இருந்த போதிலும் மொத்த நிலைமை

ஊக்கமளிப்பதாய் உள்ளது. கூட்டுறவுச் சங்கங்களின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் பதவி மற்றும் அலுவலகப் பொறுப்பாளர்களைப் பொறுத்தவரை, பெண்கள், முக்கியமற்றப் பங்காற்றுவதாகத் தற்போது சொல்வதற்கில்லை. ஆண், பெண் உறுப்பினர்கள் மற்றும் அலுவலகப் பொறுப்பாளர் பற்றிய அதிக விரிவான ஆழமான ஆய்வு ஒன்று மேற்கொள்ளுவது நன்மை பயக்கும்.

## தொழிற்சங்கங்கள்

ஒப்பீட்டளவில் கூட்டுறவுச் சங்கங்களில் பெண்களின் பங்கு அதிகமாயிருப்பதைப் போலன்றி, தொழிற்சங்கங்களில் பெரும்பாலும் ஆண்களே ஆதிக்கம் செலுத்துகின்றனர். தொழிலாளர் ஆணையரிடமிருந்து கிடைக்கப் பெற்ற புள்ளிவிவரங்கள். மொத்தமுள்ள 16,36,042 உறுப்பினர்களில் (7035 தொழிற்சங்கங்களில்) பெண்கள் 17.72% மட்டுமே உள்ளனர். அதாவது 2,89,949 பெண் உறுப்பினர்கள் மட்டுமே உள்ளதாகக் காட்டுகிறது. ஆண்களோடு ஒப்பிடுகையில் மொத்த தொழிலாளர் எண்ணிக்கையில் பெண்களின் பங்களிப்பு ஒரு சிறு அளவாயிருப்பதே ஒரு பகுதி இதற்குக் காரணமாயிருக்கும் என விளக்கினாலும் பணிபுரியும் பெண்கள், தொழிற்சங்க உறுப்பினர்களாகக் கூடாது என்ற தடைகளிருப்பதையும் இது எடுத்துக் கூறுகிறது. மேலும், தொழிற்சங்கங்களில் பெண்களுக்கு இடஒதுக்கீடு இல்லை.

## சமுதாயக் குழுக்களில் பங்கேற்பு

ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் ஆகிய நலிவுற்ற பிரிவினரின் நிலையை மதிப்பிட சமுதாயப் பிரிவுகளின் முடிவெடுத்தல் மற்றும் பங்கேற்பைப் பகுத்தாய்வு செய்வது போன்றவை உகந்ததாயிருக்கும். இவ்வகுப்பின் தமிழ்நாட்டின் உள்ள மொத்த மக்கட்தொகையில் ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் முறையே 16.7% ஆகவும் உள்ளனர் (1991) ஆனால் அண்மைக்காலப் புள்ளிவிவரம் ஏதும் கிடைக்கப் பெறவில்லை.

## சுயஉதவிக் குழுக்கள்

தமிழ்நாட்டில் கிராமங்களில் சுயஉதவிக்குழுக்கள் முக்கிய உள்ளூர் அமைப்புகளாய் உருப்பெற்றுள்ளன. ஒரே மாதிரியான பொருளாதார வகுப்பு பொதுவாக ஏழை பெரும்பாலும் பெண்கள் கூட்டு நடவடிக்கை மூலமாய் அவர்களுடைய சமூக பொருளாதார நிலையை மேம்படுத்த 10, 20 நபர்களடங்கிய ஒத்திசைவான ஒரு தொகுதியாக ஒருங்கிணைகின்றனர். வேளாண் வளர்ச்சிக்கான பன்னாட்டு நிதியத்தின் உதவியுடன் மகளிர் மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ்த் தேர்வாய்வு அடிப்படையில் 1989-இல் இத்திட்டம் தொடங்கப்பட்டது. இப்போது, சுயஉதவிக் குழுக்கள் தமிழ்நாட்டில் அனைத்து ஊரக மாவட்டங்களிலும் செயல்படுகிறது. அரசு சாராத அமைப்பு போன்ற வெளியிட வினையூக்கி ஒன்று, அரசின் நிருவாக மற்றும் நிதியுதவியோடு மக்களைத் திரட்டி சுயஉதவிக் குழுக்களை அமைத்துப் பேணி வளர்ப்பதில் உதவியாய் உள்ளது. இவ்வியக்கம் வலுப்பெற்றதையடுத்து சில வங்கிகளும் அரசு சாராத அமைப்புகளும் அவர்களாக முன் வந்து அவர்களுக்குள்ளாக சொந்தமாகக் குழுக்களை அமைத்துக் கொண்டுள்ளனர். சுயஉதவிக் குழுக்கள், உறுதியாக உள்ளூர் நிறுவனங்களாக வளர்ந்து வருகின்றன. அவை உறுப்பினர்களுக்குப் பொது வாழ்வில் அவர்கள் வீடுகளுக்கப்பால் பயிற்சி, வங்கியில் பணிகள் மற்றும் அரசுத் திட்டங்கள் முதலானவற்றின் முதலீடுகளின் வழிவாய்ப்புகளுக்கு சட்டப்படியான வாய்ப்பினையளிக்கின்றன.

மார்ச் 2003 வரை, ஏறத்தாழ 2.15 மில்லியன் பெண்களை உறுப்பினர்களாகக் கொண்ட 126,100-க்கும் மேற்பட்ட பெண்களுக்கு மட்டுமான சுயஉதவிக்குழுக்கள் இயங்கி வந்தன.

ஆதி திராவிடர் மற்றும் பழங்குடியினத்தவருக்கு வெளிப்படையான இட ஒதுக்கீடு இல்லா விட்டாலும்கூட, சுயஉதவிக்குழுக்களில் அவர்களுடைய விழுக்காடு 40%-க்கு அதிகமாகவே உள்ளது. இதற்கு காரணம், திட்ட மேலாண்மை, அண்மை ஆண்டுகளில் மக்கட்தொகையில் மிக மோசமான மிகவும் வழுபடத்தக்க பிரிவினரின்பால் கவனம் செலுத்துவதில் எடுத்துக் கொண்ட தீவிர முயற்சிகளே ஆகும். சுயஉதவிக் குழுக்கள் பெண்களுக்கிடையே உடலளவில் மிகப் பெரும் இடம் பெயர் ஆற்றலுக்கு உதவுகின்றன. அவர்களுடைய பேரம்பேசும் திறமைகள், தன்னம்பிக்கை கணக்குகள் பராமரிப்பு, நிதி மேலாண்மை, சிக்கனம் மற்றும் கடன்வசதி போன்ற வாழ்க்கைத் தேர்ச்சித் திறமைகளை அதிகரிக்கச் செய்வதோடு உடல்நலம் பற்றிய விழிப்புணர்வு, ஊட்டச்சத்து, நோய்த் தடைக்காப்பு, கல்வி மற்றும் இன்ன பிறவற்றையும் உயர்த்த உதவுகிறது. முறைப்படியான சேமிப்பு மற்றும் உட்புற சுழற்சி முறை மூலம் உருவாக்கிய குழுவின் பொதுநிதி மூலம் விருப்பப் பொதுச்சேர்ம நிதியாதாரத்திற்கு ஏற்பாடு செய்து குடும்பங்கள் உள்ளூர் வட்டித்தொழிலரை நம்பியிருப்பதைக் குறைத்திட வகை செய்கிறது. மேலும் சுயநிதிக் குழுக்கள், குடிப்பழக்கம், குடும்ப வன்முறை, கைவிடுதல், வரதட்சணை மற்றும் பெண் சிசுக்கொலை போன்ற முக்கிய சமூகப் பிரச்சனைகளை எதிர்கொண்டு சமாளிக்க அதிகாரமளித்துள்ளன.

இவையன்றிக் கடன் வழங்கத் தகுதியற்றவர் என இதுகாறும் கருதப்பட்ட தனிப்பட்ட பெண்கள் நல்ல வங்கியல் நடவடிக்கைகளுக்குள்ளாக்கப் பட்டனர். ஆண் உறுப்பினர்களின் தொடக்க விருப்பமின்மை, முழுக்குடும்பப் பயன்களுக்காதரவாய் மாறியது. வங்கித்துறையில் ஏழையருக்கு அதிகமான நிதியுதவியளிக்கும் எண்ணத்தைத் தூண்டப் பெண்களால் முடிந்தது. இரண்டும் ஒன்றுக் கொன்று தவிர்ப்பதாயிராவிட்டாலும் அரசின் கடன் வழங்கு திட்டங்களைவிட, சுயஉதவிக் குழுக்கள் மேலானதொரு தேர்வு நிலையாயிருப்பதாகத் தோன்றுகிறது.

## எதிர்காலத்தில் பெண்களின் பங்கேற்பை மேம்படுத்தல்

அனைவரும் அதிக சரி ஒப்பியப் பங்கேற்க, ஆண்களைவிடப் பெண்கள் எதிர்கொள்ளவிருக்கும் தடைகளைப் புரிந்து கொள்வதில் அரசு, முன்மாதிரியாயிருக்க வேண்டும். பொதுவாழ்க்கையில், பெண்களின் அதிகமான பங்கேற்புக்கு இது வழிவகுக்கும் என்பதில் ஐயமில்லை. இவ்வியலின் தொடக்கத்தில் கூறியபடி, இந்தியா முழுமையிலும் குறிப்பாகத் தமிழ்நாட்டில் சமூகப் பாலின அமைப்பு மிக உறுதியாய் உள்ளது. இது பல தடைகளுக்கு வழி வகுக்கிறது வெளிப்படையான சில சமுதாய அமைப்பு, குடும்பத்து ஆண்களின் போக்குகள், சிறுமிகள் மற்றும் பெண்களின் தாழ்வான நிலை (அவர்களுடைய பிறந்த மற்றும் திருமணம் புரிந்த குடும்பங்கள் ஆகிய இரண்டிலும்) சம்பளமில்லாக் குடும்ப வேலையின் சுமை, குழந்தையின் காப்பு (கணவர்களால் சிறிதளவே பகிர்ந்து கொள்ளப்படுவது), பாலினக் கவலையற்ற பணியிடங்கள் மற்றும் இன்னபிற உயர்கல்விக்கான வழிவாய்ப்பு சமமாயிராவிட்டால் அதன் விளைவாக வேலைவாய்ப்பில் சமமின்மை இருப்பதில் வியப்பேதுமில்லை. உயர்கல்விக்கான போதிய வழிவாய்ப்புப் பேறினைப் பெற்றவர்களுக்கு, மற்ற குடும்ப உறுப்பினர்கள் குறிப்பாக அவர்களுடைய கணவர்கள் சம்பளமில்லா வீட்டுவேலைகளைப் பகிர்ந்து

கொண்டாலன்றி, சம்பளமில்லா மற்றும் சம்பளத்துடன் கூடிய இரட்டை பளு, வழக்கமாகிவிட்டது. பெண்களின் பேரார்வங்களையும் தேவைகளையும் எல்லோராலும் ஏற்கப்பட்டால் இது நிகழக்கூடும்.

குழந்தை வளர்ப்பு மற்றொரு பிரச்சனை தரம்வாய்ந்த குழந்தைக் காப்புப் பணிகள் பள்ளிக்கு முந்தைய குழந்தைக் காப்பகங்கள் போன்றவை, சமூக மற்றும் பொருளாதாரச் செயல்பாடுகளில் பெண்களுக்குப் பொருத்தமான ஆதரவளிக்கக்கூடிய உதவிகளாயிருக்கும். உண்மையில் அத்தகைய உதவிகள் பெண்களுக்கு குடும்ப முழுவதற்குமாதரவானதாகக் கருதப்பட்டால் மட்டுமே இவை, பெருமளவில் கிடைக்கக்கூடும். இத்தொடர்பில் மாநில அரசு முன்னின்று தகுதி வாய்ந்த அரசு சாரா அமைப்புகளோடு ஒருங்கிணைந்து பணியாற்றலாம்.

வேலை செய்யும் பெண்களுக்குப் பாதுகாப்பான தங்குமிட வசதியை செய்தளிப்பதில் அரசு நேரடியாகப் பொறுப்பேற்பது மற்றொரு வகையான உதவியாகும். விருப்பேற்பு அல்லது சூழ்நிலை காரணமாகக் (மாறுதல் காரணமாய்) குறிப்பாக, சிறிய நகரங்களில், சந்தேகம் மற்றும் தப்பெண்ணம் காரணமாக வாடகைக்குக் குடியிருப்பிட வசதி கிடைப்பதரியதாயுள்ளது. மேலும் பாதுகாப்பு, ஒரு பிரச்சனையாக உள்ளது. பணம் பெற்றுத்தரமான வசதிகளையளிக்கும் பணிபுரியும் மகளிருக்கான விடுதிகள் முக்கியத் தேவை. தமிழ்நாட்டின் பெரிய மாவட்டங்களில் பணிபுரியும் மகளிருக்கான விடுதிகள் ஏற்கெனவே இயங்கி வருகின்றன. இருப்பினும் அவை மேலும் பல தேவையாய் உள்ளன. இந்திய அரசிடமிருந்து நிதியுதவி பெற்று அவற்றை நடத்த விரும்பி முன்வரும் தகுதிவாய்ந்த நிறுவனங்களுக்குக் கிடைக்கப் பெறச் செய்யலாம். பணிபுரியும் இடங்களில் போக்குவரத்து வசதிகள் மகளிருக்குத் தனியான குளியலறை கழிப்பிட வசதிகள் மற்ற தேவை களாகும். பெரும்பாலான பணியிடங்கள் ஆண்களை மட்டுமே மனதில் கொண்டு வடிவமைக்கப் படுவதால் மகளிருக்கு இவ்வசதிகள் செய்து தரப்படும் என உறுதியாகச் சொல்ல இயலாத நிலை காணப்படுகிறது. இருப்பினும் இந்நிலை மாறிவருவது தெளிவு. தகுதிவாய்ந்த மற்றும் கூர்உணர்வுடன் வடிவமைக்கப்பட்ட பயிற்சி முறைகளுடன் கூடிய, பணிக்கு முந்தைய மற்றும் பணியிடைப் பயிற்சித் தேவையெனக் கொண்டு பால் இனக்கூர் உணர்வுப் பயிற்சியின் மூலம் இதை விரிவு படுத்தலாம்.

அரசுக் கொள்கையின் ஒரு முக்கிய அம்சமாக இடஒதுக்கீடு அமைந்துள்ளது. அரசுத் துறையில் வேறுபாடு காண்பதை நீக்க இது உதவுகிறது. தொடக்கத்தில் ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடி வகுப்பினருக்கு மட்டுமே அளிக்கப்பட்ட இச்சலுகை, அரசியல் பங்கேற்பில் கீழ்நிலைகளில் தற்போது பெண்களுக்கும் விரிவுபடுத்தப்பட்டுள்ளது. முந்தைய பகுப்பாய்வுகளிலிருந்து மகளிருக்கு இடஒதுக்கீடு இல்லாத இடங்களில் ஒரு தெளிவான வித்தியாசத்தை ஏற்படுத்திக் குறிப்பிடுமளவு போதிய எண்ணிக்கையில் முடிவெடுப்பதில் பெண்களால் பங்கேற்க இயலவில்லை என்று முடிவுக்கு வரலாம். இடஒதுக்கீடு ஒரு மிகச்சிறந்த ஏற்பாடாயிருப்பினும், விவாதத்திற்குரியதாயும் உள்ளது. முடிவெடுக்கும் செய்முறையில் மகளிரின் பங்கேற்பு குறைந்த அளவான தொடக்க நிலைகளை ஒட்டிய பின்னர், மற்ற மாற்றங்களும் தொடர்ந்து நிகழக்கூடும்.

### பாலின சமஒப்புரவுக்கு நிறுவன ஏற்பாடுகள்

தமிழ்நாட்டில் மகளிருக்குப் பாலின சமஒப்புரவு ஏற்படுத்தும் நிறுவன ஏற்பாடுகள் மிக விரிவானது. பாலின சமஒப்புரவை ஏற்படுத்துவதில் ஈடுபட்டுள்ள நிறுவனங்கள் தமிழ்நாடு அரசு

மகளிர் ஆணையம், தமிழ்நாடு மகளிர் மேம்பாட்டுக் கழகம் மற்றும் சமூக நலத்துறை இந்நிறுவனங்கள், இணைப்புக்குரிய முகமைகள் ஆகும். இவற்றின் மூலமாக அரசு கொள்கைகளைச் செயலாக்குகிறது. இருப்பினும், இத்திட்டங்களோடு கூடுதலாகப் பாலின சம ஒப்புரவை வலியுறுத்தும் பல சட்டமுறை நடவடிக்கைகளும் நடப்பில் உள்ளன. இப்பிரிவு, திட்டங்கள் மற்றும் சட்டத்தைப் பற்றி விளக்குகிறது.

**செயற்திட்டங்களும் கொள்கைகளும் மகளிருக்குப் பொருளாதார அதிகாரமளிக்க வசதி**

மத்திய, மாநில அரசால், மகளிருக்குப் பல்வகையான சுயவேலைவாய்ப்புத் திட்டங்கள் தொடங்கப்பட்டுள்ளன. மகளிர் திட்டம் வாயிலாக மாநில முழுவதும் 1.4 மில்லியன் பெண்களை உள்ளடக்கிய 80,000 மகளிர்க்கு மட்டுமான சுயஉதவிக்குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. இருப்பினும் இத்திட்டம் பல துறைகளில், குறிப்பிடத்தக்க செயல் விளைவுகளை இன்னும் ஏற்படுத்தவில்லை. எடுத்துக்காட்டாக, வீட்டுவேலை மற்றும் குழந்தைக்காப்பில் ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையே பாலினப் பிரிவு குறித்த நிலைகளில் நிகழும் மாற்றம், மகளிர் ஊழியக் குறைப்பு, மகளிருக்கு முழுவேலைவாய்ப்பு உருவாக்கம், பெண்களின் பண்ணை சாராத நடவடிக்கைகளை விரிவாக்கல், ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையிலான ஏற்றத்தாழ்வை சரி செய்தல், நிலம் மற்றும் வீடுகளில் மகளிரின் உரிமையை விரிவாக்கல். வேறுவிதமாகச் சொல்வதெனில், இத்திட்டம், மகளிரின் தொழில் முனைவோர் திறம் மற்றும் தேர்ச்சித்திறன் வளர்ப்பில் அதிக கவனம் செலுத்துகிறது. முதலீட்டில் பெண்களின் வழி வாய்ப்புகளை விரிவு படுத்துவதோடு, மகளிர் சுயஉதவிக்குழு உறுப்பினர்களிடையில் தொழில் முனைவோர் தகுதியை ஏற்படுத்த வசதியாக அரசுசாரா அமைப்புகள் மற்றும் அரசின் அடிமட்டக் களப்பணியாளர்களின் கொள்திறனை வளர்க்கும் அதே சமயம், குழுவளர்ச்சி மற்றும் மகளிர்க்கதிகாரம் அளிப்பில் கவனத்தைத் தொடர்ந்து கொண்டிருப்பது ஒரு சவாலாக உள்ளது.

**பெட்டி 6.5 : தடைகளைத் தாண்டி**

தருமபுரி மாவட்டம் காசிமாப்பட்டியிலிருக்கும் சுகுணா 1995-இல் தமிழ்நாடு மகளிர் மேம்பாட்டுத் திட்டத்தின்கீழ் MYRADA-வால் நடத்தப்படும் சுயஉதவிக் குழுவில் சேர்ந்தார். அதே ஆண்டில் நிழற்படக்கலைப் படிப்புப் பிரிவில் சேர்ந்து வங்கியிலிருந்து ரூ. 10,500 கடன் பெற்றார். இக்கடன் மூலம் ஒரு நிழற்படக் கருவியை வாங்கி அவரே ஒரு நிழற்படக் கலைஞரானார். அடுத்த சில ஆண்டுகளில், சுற்றுப்புறப் பகுதிகளில் அவர், மிகப் பிரபலமானார். ஓசூர், பெங்களூர் போன்ற இடங்களிலும் அவர் தன் தொழிலை விரிவுபடுத்தினார். பிறந்தநாள் விழாக்கள், திருமணங்கள் போன்ற தனியார் விழாக்களிலும், நிழற்படக்கலைஞராய் தன் திறமையைக் காட்டினார் இரண்டே ஆண்டுகளில் அவர் பெற்ற வங்கிக்கடனைத் திரும்ப செலுத்திவிட்டு அவருடைய குடும்ப வருமானத்திலும் கணிசமான பங்களிப்பை ஈந்து கணவரின் ஆதரவையும் பெற்றவரானார்.

*ஆதாரம் : தமிழ்நாடு மகளிர் மேம்பாட்டு திட்டம்.*

தன் வேலைவாய்ப்பு மற்றும் சம்பளம் பெறும் வேலைகளில் மகளிரின் அதிகமான பங்கேற்புக்காதரவளிக்கவும், மகளிரின் பொருளாதார நிலையை உயர்த்தவும், தற்போதிருக்கும்

ஏராளமான திட்டங்களை வலுப்படுத்துவதோடு புதிய திட்டங்களும் தொடங்கப்பட வேண்டும் அவை பற்றிய விவரங்களாவன :

- தாழ்த்தப்பட்ட / பழங்குடி வகுப்பினருக்கிருப்பதைப் போல, மாநில அரசின் 30% மகளிருக்கு இட ஒதுக்கீட்டுக் கொள்கை, சட்டமாக்கப்பட வேண்டும். அனைத்து வகைப் பணியாளர்களுக்கும் இது விரிவுபடுத்தப்பட வேண்டும். இதன் செயலாக்கத்திற்குக் குறுக்கே உள்ள தடைகள் நீக்கப்பட்டுக் காலமுறைதோறும் இது கண்காணிக்கப்பட வேண்டியதவசியம். பதவி உயர்வுப் பணியிடங்களில் பணியமர்த்துவதில், மகளிருக்கு முன்னுரிமையளிப்பது, பதவி உயர்வு வாய்ப்புகளில் பாலினப் பாகுபடுத்தும் பணிநிலைப் பிரிவுகளில் ஒரு சார்புத்தன்மையை ஒழித்தல், தொழிற்சங்கங்கள் மற்றும் கலவைப் பணிநிலைப் பிரிவுகளில் தலைமைப் பதவிகளில் மகளிரின் பிரதிநிதித்துவத்தை அதிகரித்தல் இன்றியமையாதவையாகும். மற்ற சில வழக்கங்களும் மாற்றப்பட வேண்டும். எடுத்துக்காட்டாக சில துறைகளில் பாலினப் பாகுபாடான வேலை ஒதுக்கீடுகள் எடுத்துக்காட்டாக மக்கள் நலவாழ்வுத்துறையில் எல்லா நல ஆய்வாளர்களும் ஆண்கள், கிராம நல செவிலியர்கள் அனைவரும் பெண்கள். பெற்றோர் மருத்துவக் காப்பு ஆண் பணியாளர்களுக்கு மட்டுமே அளிக்கப்படுகிறது. பெண் பணியாளர்களுக்கல்ல. மணமாகாத தாய்களுக்கும் தத்தெடுத்துக் கொள்ள விரும்பும் ஒற்றையாயிருக்கும் மகளிருக்கு மகப்பேறு விடுப்பு இல்லாமை.

- உச்சநீதிமன்றத்தால் ஆணையிட்டவாறு பணியிடங்களில் மகளிருக்குப் பாலுணர்வான தொல்லையளிப்பதைத் தடைசெய்யக் கூடுதல் நடவடிக்கைகள். தற்போது பால் உணர்வுத் தொல்லைகள் பொதுவானதாயும் முழுமையாக அறிவிக்கப்படாத நிகழ்வுகளாக உள்ளன. இதற்கு காரணம் பெண் தொழிலாளர்களுக்குப் போதிய பாதுகாப்பின்மையே ஆகும்.

- தொழிலாளருக்குப் பாதுகாப்பு மற்றும் முறைப்படியானதல்லாத அறையில் பெண்களுக்குப் பாதுகாப்பான நிலைமை ஆகியன மற்றொரு சவாலாய் உள்ளது. மாநில அரசால் ஏற்படுத்தப்பட்ட அமைப்பு முறைப்படியல்லாத தொழிலாளர் நலவாரியம், சரியான முறையில் மேற்கொள்ளப்பட்ட ஒரு நடவடிக்கையாகும்.

- ஊரக வளர்ச்சித் துறை திட்டமான பூமாலை திட்டத்தின் கீழ் அவர்களுடைய பொருள்களை விற்பதற்கு ஏதுவாகப் பெண் வணிகர்கள் மற்றும் உற்பத்தியாளர்களுக்கு மாவட்ட அளவில் பெண்களுக்கெனத் தனியான அங்காடிகளையும் மகளிர் இணையங்களையும் உருவாக்கல். தற்போது கூட்டுறவுத் துறையால் விற்பனை செய்யப்பட்டு வரும் நீர்ம பெட்ரோலிய வாயுவை வீட்டு எரிபொருளாகப் பயன்படுத்துவது கடின உழைப்பைக் குறைக்கும். பெண்கள் தொலை தூரத்திலிருக்கும் அங்காடிகளுக்குச் செல்ல இயலும்.

- மகள்களுக்கு மரபு உரிமைகளை மறுக்கும் அல்லது ஒரு பெண், அவளுடைய சகோதரர்கள், கணவர் அல்லது மாமன் மாமியாருக்காதரவாய் அவளுடைய உரிமைகளை சரண் செய்யும் எந்த ஒரு ஆவணத்தையும் செல்லாததாக்கும்படி செய்யும் சொத்துரிமை சட்டங்கள் திருத்தப்பட வேண்டும். ஒரு பெண் குழந்தைகளின்றி அல்லது சந்தேகத்திற்கிடமான சூழ்நிலைகளில் இறந்தால் அவளுடைய சொத்து, அவள் பிறந்த குடும்பத்தையே சேர வேண்டும். பெண்களுக்கான மகாராஷ்ட்டிர அரசின் கொள்கையை ஒட்டி சட்டம் இயற்றப்பட வேண்டும். இதன்படி

திருமணம் முறைப்படி நடந்து முடிந்த பின், கணவர் ஈட்டிய சொத்து மற்றும் உடைமைகளுக்கு மனைவி கூட்டு உரிமையாளராகிறார். நிலஉரிமை மற்றும் மாற்றங்கள் மீதான பாலினவாரியாய்ப் பிரிக்கப்பட்ட புள்ளிவிவரங்களைத் திரட்டல் சட்டமாக்கப்பட்டுப் பெண்களின் நில உரிமைகள் கண்காணிக்கப்பட வேண்டும்.

**மற்ற பாலினம் தொடர்பான பிரச்சனைகளில் நடவடிக்கை**

மேற்சொன்னபடி இத்தகைய நடவடிக்கைகள் பொதுவாகப் பெண்கள், தொழிலாளரோடு இணைந்து அவர்களுடைய ஒட்டுமொத்த பொருளாதார நிலையை வலுப்படுத்துவதைக் குறிக்கோளாகக் கொண்டிருக்கிறது. இருப்பினும், வறுமையைப் பெண்களிடமிருந்து நீக்கல், கல்வியறிவு மற்றும் கல்வி பயிலும் உரிமை மேலான உடல்நலம், பெண்களுக்கு எதிரான வன்முறை மற்றும் பெண்களின் பங்கேற்பு ஆகிய பிரச்சனைகளை எதிர்கொண்டு சமாளிக்க மேலும் அதிகமான குறிப்பிடத்தக்க நடவடிக்கைகள் தேவை. இப்பிரிவு இத்தகைய பிரச்சனைகளை முன்னிலைப் படுத்தி அதற்கான தீர்வுகளையும் எடுத்துரைக்கிறது.

- **பெண்வறுமைக் குறிப்பீடுகள்** அதிகரித்த வருமானம் எப்போதுமே மேலான ஊட்டச்சத்து நலக்காப்பு மற்றும் கல்வி, குடும்பத்தின் அதிகரிக்கும் நலவாழ்க்கையில் கொண்டு விடாது என்பதைக் காட்டுகிறது. ஆண், மதுவுக்குச் செலவிடும் செலவினம் வருமானத்தில் ஒரு பெரும் இழப்பாகும். இதன் காரணமாக மகளிர் குடும்ப வருமானத்தில் மிக்க் குறைவான கட்டுப் பாட்டையே பெறும் நிலையில் உள்ளனர். ஏழை மகளிரின் உடனடித் தேவை ஒரு முழு மதுவிலக்குக் கொள்கையாம். மற்றொரு இழப்பு வரதட்சணை மற்றும் திருமணச் செலவுகளாம். தமிழ்நாட்டில் சமுதாய மக்கள் சார்ந்த சுயஉதவிக்குழுக்கள் மற்றும் சமுதாயம் சார்ந்த அமைப்புகள் பெரும் எண்ணிக்கையிலிருப்பதால் உறுப்பினர்களின் குடும்பங்களிடையில் வரதட்சணை யில்லாத் திருமணங்களுக்கு முயற்சிக்கலாம்.

கிராம அளவில் பல்வேறு திட்டங்கள் மற்றும் துறைகளுக்கிடையே போதிய ஒப்புமையில்லாததால் அதிகரித்த வருமானம் மற்றும் மேம்பட்ட நல்வாழ்க்கைக்கிடையில் காணப்படும் இடைவெளிக்குக் காரணமாகிறது. கிராம ஊராட்சிகள் மகளிர் திட்டங்கள் மற்றும் ஏனைய சுயஉதவிக் குழுக்களின் பிரதிநிதிகள் கிராம நல செவிலியர் பள்ளி முதல்வர்கள் மற்றும் கிராம கணக்கர்களடங்கிய கிராம அளவு ஒருங்கிணைப்புக் குழுக்களை அமைப்பது பயனளிப்பதாய் அமையும். கிராம ஊராட்சியின் செயலாக்கப் பிரிவான இதே கிராம அளவிலான ஒருங்கிணைப்புக் குழு, மணவிலக்கு, பிரிவு அல்லது திருமணச் சண்டைகள் போன்ற நிகழ்வுகளில் தலையிட்டுப் பெண்களை வறுமை யிலாழ்த்தும் பாலினக் குறிப்பிட்ட முறைகளைத் தடை செய்தும் குறைந்த அளவாகப் பெண்களின் பொருளாதார உரி⌒மகள் காக்கப்படவும் பாடுபட வேண்டும்.

- **கல்வியறிவுக்கும் கல்விக்கும் உரிமை** பெண் கல்விக்குப் பாலினக் குறிப்பிடத்தக்க தடைகளை எதிர்கொள்ளத் தமிழ்நாடு அரசு பல கொள்கை நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. ஒவ்வொரு ஒன்றியமும் பெண் வள ஆதார மையத்தைக் கொண்டிருக்கும். இது தங்களுடைய செயல்முறைக் கல்வியறிவுத் திறன்களை வலுப்படுத்திக் கொள்ள விரும்பும் மகளிருக்கும் இளம்பெண்களுக்கும் (சுயஉதவிக் குழுக்கள் உள்ளிட்ட) 10-15 நாட்கள் உறைவிடப்

பயிற்சியளிக்கும் மையமாக இயங்குவதோடு பொருளாதார சமூக மற்றும் அரசியல் அதிகார மளிப்புக்குத் தேவையான முதலீடுகளையும் அளிக்கும். வேறுவிதமாகச் சொல்வதெனில் இது மகளிர்க்கான ஒரு கல்வி மையமாய் இது செயல்படும் மகளிர்க்கு மட்டுமேயான நூலகங்கள் படிப்பகங்களை நிறுவுதல் மகளிரையே நூலகராக நியமித்தல் (பகுதிநேர / முழு நேர அடிப்படையில்). மகளிர் எளிதில் செல்லக்கூடிய இடங்களில் நூலகங்களை அமைத்தல், ஆகியன மகளிர் அறிவு பெறக்கூடிய உத்திகளாகும்.

பள்ளிகளுக்கான வழிவாய்ப்புகளைப் பொறுத்தவரை, நடுநிலை, உயர்நிலை மற்றும் மேல் நிலைப்பள்ளி நிலைகளில் பெண் ஆசிரியைகளின் விகிதத்தை உயர்த்துவதில் கவனம் செலுத்தப்பட வேண்டும். பாலினச் சமசீரின்மை குறைவாயுள்ள மாவட்டங்களின்பால் அதிகக் கவனம் செலுத்தப்பட வேண்டும். ஆசிரியர்களிடையில் பாலினச் சுடர் உணர்வு ஏற்படுத்துவது மற்றொரு பிரச்சனை (ஆசிரியர் பயிற்சிப் படிப்புப் பிரிவுகள் மற்றும் 'பணியிடைப் பயிற்சியில் கல்வி' பற்றிய இயலைப் பார்க்கவும்) முக்கியப் பாலினப் பாகுபாடுகள் பற்றிய விஷயங்களில் அதிக கவனம் செலுத்தப்பட வேண்டும்.

- **உடல்நலமும் இனப்பெருக்கமும்** மக்கள் நலவாழ்வு நிருவாகத்தில் முக்கியப்பாலினப் பாகுபாடு குறித்த சவால்கள் மீதான ஒரு ஆய்வு, 1999-இல் மேற்கொள்ளப்பட்டது. இவ்வாய்வின் பரிந்துரைகள் தற்போது மறுஆய்வு செய்யப்பட்டு வருகிறது. ஏற்கப்படும் பரிந்துரைகள், மொத்தப் பணியமர்த்தக் கொள்கையின் ஒரு பகுதியாய் உள்முக நிறுவனமயமாக்கப்பட வேண்டும். இருப்பினும் கேட்பில் பாலினச் சரி ஒப்புரவுக்கான தடைகளையும் எதிர்கொள்ள நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுவது அவசியம். இதில் பின்வருவன அடங்கும். பெண்களின் இனப்பெருக்க மற்றும் பாலுணர் உரிமைகள் மற்றும் இது தொடர்பான அவர்களுடைய பொறுப்பு பற்றி ஆண்களிடையே சுடர் உணர்வு ஏற்படுத்தல், உணவு மற்றும் உடல்நலக்காப்பு பங்கீட்டில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகள் குறித்த பொதுமக்களின் மனப்போக்கை மாற்றல், மலட்டுத்தன்மை பாலின முடிவு மீதான அறிவு, நலவாழ்வு மற்றும் கிராம அளவிலான சமுதாயம் சார்ந்த நிறுவனங்களுக்கிடையில் மேலான குவிவுகள் வாயிலாக, ஏழை மகளிர்க்கு நலக்காப்பீடு மற்றும் கடன் வசதிகளுக்கு வசதியளித்தல், திட்ட அளவில் கருத்தரிப்புக் கட்டுப்பாட்டில் பாலின சரி ஒப்புரவு, மலட்டுத்தன்மையைப் போக்க சிகிச்சை, மகளிரின் வாழ்க்கைத் தொழில் முறையிலான உடல்நலம் ஒரு உடல்நலப் பிரச்சனையாய் வன்முறை, நடுத்தரவயதான மகளிருக்குப் புற்றுநோய்க்கான பரிசோதனைகள் போன்றவை மீது நடவடிக்கை மேற்கொள்ளப்பட வேண்டும்.

- **மகளிர்க்கெதிரான வன்முறை** மகளிர்க்கெதிரான வன்முறையை எதிர்கொள்ளப் பல்வேறான நிறுவனக் கட்டமைப்புகள் உள்ளன. அனைத்து மகளிர் காவல் நிலையங்கள் இலவச சட்டஉதவி வாரியங்கள். குடும்ப அறிவுறுத்த மையங்கள் மற்றும் மகளிர்க்கான ஆணையங்கள் (இவற்றிற்குப் பரவலான அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது) போன்றவை ஏற்படுத்தப்பட்டுள்ளன. இருப்பினும் பல அரசு சாரா அமைப்புகள் மகளிர்க்கெதிரான அட்டூழியங்களைத் தடுக்கப் பணியாற்றி வருகின்றன. நிறுவன சீராக்கத்திற்குத் தடைகளாயிருப்பவைகளில் ஒன்று காவல்துறையின் மனப்போக்கு என்பதை உணர்ந்த மகளிருக்கான மாநில ஆணையம் தமிழ்நாடு காவல்துறை அதிகாரிகளிடையே பாலினச்சுடர் உணர்வை உருவாக்கவும் ஆசிரியர்களுக்குச்

சட்டக்கல்வியறிவு திட்டங்களை அரசுசாரா அமைப்புகளின் உதவியோடு செயல்படுததவும் நடவடிக்கை மேற்கொண்டுள்ளது.

காவலருக்குப் பாலினச் சுடர் உணர்வூட்டும் திட்டங்கள், காவலருக்கும் அலுவலருக்கும் ஆன காவலர் பயிற்சிக் கல்லூரியின் பட்டப்படிப்பு பாடதிட்டத்திற்குள்ளாக நிறுவன முறைப்படுத்தப்பட வேண்டும். மாநில மகளிர் ஆணையத்தால் பரிந்துரைக்கப்பட்ட பல சட்ட சீர்திருத்தங்கள்[5], மணவிலக்கு, மறுமணம் மற்றும் வன்முறையினங்களில், ஆணையத்திற்கு அதிக அதிகாரங்கள் வழங்கிச் செயலாக்கப்பட வேண்டும். மகளிர்ப் பிரச்சனைகளுக்காகப் பாடுபடுவோருக்கு மனித உரிமைகள் மற்றும் சட்டம் பற்றிய பயிற்சி தேவை. பாலினத் தொலைநோக்கில் தணிக்கைக் கொள்கைகளும் சட்டமும்கூட மறுஆய்வு செய்யப்பட வேண்டும்.

- **மகளிரும் ஆளுமையும்** கிராம ஊராட்சிகளை சேர்ந்த ஆண், பெண் பிரதிநிதிகள், ஊராட்சி களின் செயல்பாடு மற்றும் பரவலாக்கப்பட்ட மக்களாட்சியில் அவர்களுடைய பணிதொடர்பான பல்வேறு விஷயங்களில் மாவட்ட ஊரக வளர்ச்சி முகமையின் மூலம் பயிற்சி பெற்றுள்ளனர். ஊரக வளர்ச்சித் துறையும் ஐக்கிய நாடுகளின் பன்னாட்டு சிறார் கல்வி நிதியமும் இணைந்து அலுவலர்களுக்கான நடைமுறை நூல் தொகுதிகள் உருவாக்கம் மற்றும் பயிற்சித் திட்டங்கள் மூலம் பயிற்சியை முறைப்படுத்த தற்போது திட்டமிட்டுள்ளன. ஊராட்சி நிறுவனங்கள் மற்றும் நகர உள்ளாட்சி மன்றங்கள் ஆகிய இரண்டிலும் சிறப்புப் பயிற்சிகள், இப்பயிற்சி முறைகளில் சேர்க்கப்பட்டு பாலினப் பாகுபாடுகள் பயனுள்ள வகையில் முக்கியப்படுத்தப்பட வேண்டும்.

உள்ளூர்த் தன் ஆட்சியில் சிறந்த சுயஉதவிக்குழு உறுப்பினர்களுக்கு (தலைவர்களுக்கேற்ற செழிப்பான விளையிடம்)ப் பயிற்சியளிப்பது உண்மையான தலைவர்களாகப் பெண்கள் பெரும் எண்ணிக்கையில் உருவாக வழிவகுக்கும். தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்களுக்குச் சுடர் உணர்வு உள்ளிட்ட, பெண்கள்பால் கிராம ஊராட்சிகளின் பொறுப்புடைமையை, உள்ளாட்சி மன்றத்தின் ஒவ்வொரு துணைக்குழுவிலும் குறைந்த அளவாக தேர்ந்தெடுக்கப்பட்ட பெண் அலுவலர்களின் பிரதிநிதித்துவத்திற்கும் வகை செய்யும் ஊராட்சி சட்டங்களில் ஒரு திருத்தத்துடன் அதிகரிக்க நடவடிக்கைகள் தேவை. மகளிருக்கு நியாயமான பிரதிநிதித்துவம் அதாவது அனைத்து அரசுக் குழுக்களிலும் சட்ட முறையிலான வாரியங்கள் போன்ற அமைப்புகளில் ஒவ்வொரு நிலையிலும் மாநில மாவட்ட, ஒன்றிய மற்றும் கிராம நிலையில் குறைந்த அளவாக 33% இடஒதுக்கீடு, அனைத்துத் துறைகளிலும் பாலினப் பாகுபாட்டினை சீராக்க உதவும்.

### சுருக்கமும் முடிவுகளும்

பெண்கள் கல்வியறிவு, பெண்கள் சேர்க்கை, பெண்களின் ஆயுட்கால எதிர்பார்ப்பு மற்றும் அடிப்படை வசதிகளில் பெண்களுக்கான வழிவாய்ப்பு போன்ற கட்டிக்காட்டும் குறியீடுகளில்

---

[5]குறிப்பிடத்தக்க பரிந்துரைகளில் பின்வருவன அடங்கும்

1. திருமணம் மற்றும் மணவிலக்கில் மகளிருக்கு அதிகப் பாதுகாப்பளிக்கும் வகையில் குற்றவியல் நடைமுறை விதித் தொகுப்பு மற்றும் இந்தியக் குற்ற தண்டனை விதித் தொகுப்புகளில் திருத்தங்கள்
2. ஆணையத்திற்கு விசாரணை செய்யும் அதிகாரமளித்து மணவிலக்கான (அ) தனியாக்கப்பட்ட மகளிருக்காதரவாய் குற்றவியல் நடைமுறை விதித்தொகுப்புக்குத் திருத்தங்கள்
3. குடும்ப வன்முறையைத் தடுக்க சட்டமுறையான ஏற்பாடுகள்

தமிழ்நாடு அனைத்திந்திய நிலைக்கு அதிகமாக, நியாயமான செயலாக்கத்தை நன்றாகப் பெற்றிருப்பதை மேற்சொன்ன பகுப்பாய்வு குறிப்பிட்டுக் கூறுகிறது. பேறுகால இறப்பு விகிதங்களும், மொத்த கருவள வீதங்களும் தேசீய சராசரியை விடக் குறைவாக உள்ளது. அரசியல் பங்கேற்பைப் பொறுத்தவரை, பெண்கள் நியாயமாக நன்கு செயல்படுகின்றனர். தமிழ்நாட்டில் பெண்களின் மொத்த நிலை பெரும்பாலான மற்ற மாநிலங்களைவிட மேலானதாயிருப்பினும், ஆண்களோடு ஒப்பிடுகையில், பெண்களின் நிலை, கல்வியறிவு, கல்வி, தொழிலாளர் எண்ணிக்கையில் பங்கேற்பு, கூலிகள், சொத்துரிமை மற்றும் அரசியலில் பங்கேற்பு ஆகியவற்றில் முன்னேற்றமில்லை. பெண்களின் நிலை குறிப்பாகத் தருமபுரி, கடலூர், விழுப்புரம் மற்றும் திருவண்ணாமலை ஆகிய நான்கு பிற்பட்ட மாவட்டங்களில் மோசமாக உள்ளது பெண்களின் நிலை குறிப்பாக குழந்தை இறப்பு வீதத்தில் (கு.இ.வீ) பாலின ஏற்றத்தாழ்வு மற்றும் பாலின விகிதம் சேலம், தருமபுரி மாவட்டங்களில் மிக மோசமாய் உள்ளது. ஒரு கவலைக்குரிய போக்கு, தமிழ்நாட்டில் 1991-2001-க்கு இடைப்பட்ட காலத்தில் இளைஞர் பாலின விகிதத்தில் 0.29% குறைவாகும். (மக்கட்தொகைக் கணக்கெடுப்பு, 2001) 22 மாவட்டங்களில் இளைஞர் பாலின விகிதத்தில் ஒரு குறைவு காணப்பட்டது. இந்த மாவட்டங்கள் ஒவ்வொன்றுக்கும், வெவ்வேறு வகை திட்டங்கள் மூலம் உடனடியான கவனம் தேவைப்படுகிறது.

தமிழ்நாட்டில் பெண்களின் முன்னேற்றத்திற்காக நிறைவேற்றப்பட்ட பல புதுமையான தேர்வாய்வு மூலம் பல பாடங்கள் கற்க வேண்டியிருந்தாலும், பல இடங்களில் அதிகக் கவனம் தேவைப்படுகிறது. பெண்களின் வாழ்க்கைகள் துறைவாரியாகப் பிரிக்கப்படாதிருந்தாலும் பின்வருவனவற்றை செய்யக்கூடிய பாலினசரி ஒப்புரவுக்கான ஒரு விரிவான அரசுக் கொள்கையை மாநில அரசு உருவாக்குவது தவிர்க்க முடியாததாக உள்ளது.

- மாநிலத்தில் பாலின சரி ஒப்புரவை அடைந்திட, கால வரையறைக்குட்பட்ட இலக்குகளையும் குறிக்கோள்கைகளையும் வகுப்பது.
- முக்கிய பாலினத் தொடர்பான பிரச்சனைகளையும், குறியீடுகளையும் மற்றும் வழுப்படத்தக்க குழுக்களை முன்னிலைப்படுத்துதல்.
- ஒவ்வொரு துறை மற்றும் நிறுவனத்தால் பாலினக் கொள்கையை அறிவித்தல்
- மாநில வரவு செலவு திட்டத்தின் கீழ், ஒவ்வொரு துணைத் தலைப்பில் பாலின வரவு செலவு திட்டம். மற்றும் ஆண்டுத்துறைப் பாலினத் தணிக்கைகளும் தொடர்ந்த பெண்கள் பகுதி திட்டம்.
- பாலினக் கொள்கையின் சாதனையைக் கண்காணிக்கப் பயன்படும் சுட்டிக்காட்டும் குறியீடுகளைக் குறிப்பிடுகிறது. சுட்டிக்காட்டும் குறியீடுகள் அடையப்படுகின்றனவா இல்லையா என்பதை அளக்க ஒவ்வொரு துறையாலும் எந்த விதமான பாலினவாரியாய் பிரிக்கப்பட்ட புள்ளி விவரங்களை சேகரிக்க வேண்டும் எனக் குறிப்பிடுகிறது.
- கொள்கை இலக்குகளை அடையப் பொறுப்பான முகமைகளைக் குறிக்கிறது.
- சிறப்பாக எல்லா பணயதாரர்களையும் ஈடுபடுத்தி முதன்மையாக மகளிரை ஈடுபடுத்திக் கொள்கை உருவாக்கப்பட வேண்டும். அதன் செயலாக்கம் கூட்டாகச் செய்து முடிக்கப்பட்டு, மாநில மகளிர் ஆணையத்தால், தன்னாட்சிப் பொறுப்பில் ஆய்வு செய்யப்படவேண்டும்.

# இயல்

# 7

## சமூகப்பாதுகாப்பு

சமூகப்பாதுகாப்புக் கோட்பாடு என்பது அதன் மிகவிரிவான பொருள்படி ஒவ்வொருவரும் தங்களுடைய நியாயமானதொரு வாழ்க்கைத்தரத்தை அடைய அல்லது எந்த ஒரு எதிர்பாராத நிகழ்ச்சியாலும் தங்களுடைய வாழ்க்கைத்தரத்தில் ஒரு இறக்கத்தை அனுபவிக்காதிருப்பதை உறுதி செய்ய உதவுவதாகும். ஒரு சமூகப் பாதுகாப்பு திட்டத்தின் விரிவான சமூகவிளைவு வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துவதாயிருந்தால், அதன் பொருளாதார விளைவு, வளர்ச்சி மற்றும் காப்பீட்டு நடவடிக்கைகளின் இணைதல்மூலம் வருமானத்தை மறுபங்கீடு செய்வதாகும். வளர்ச்சி நடவடிக்கைகளில் வளர்ச்சியை இயக்குவித்த வறுமைக்கெதிரான நடவடிக்கைகளும் காப்பீட்டு நடவடிக்கைகள், முதுமை, இறப்பு, வேலை செய்யும்போது காயமுறல், நோய்நிலை மகப்பேறு முதலான குறிப்பிட்ட எதிர்பாராத நிகழ்வுகளால் பாதிக்கப்பட்ட மக்களுக்குப் பொறுப்புறுதி அல்லது உரிமைகளையளிப்பதாகும். (குகன், 1992) இவ்வியல் தமிழ்நாட்டில் முதியோருக்கு ஒரு முக்கிய மனித மேம்பாட்டு பிரச்சனையாகக் காப்பீட்டு சமூகப்பாதுகாப்பு தொடர்பில் முக்கிய கவனம் செலுத்துகிறது.

### தமிழ்நாட்டில் சமூகப்பாதுகாப்பு நடவடிக்கைகள்

உதவி மற்றும் ஈட்டுறுதி வாயிலான சமூகப் பாதுகாப்பு, இந்தியாவில் ஒரு புதியகோட்பாடாக இல்லாவிட்டாலும் அரசு தொடங்கிய சமூகப் பாதுகாப்பு மிக அண்மைக்காலத்தியது. இப்பிரிவு மாநில அரசால் தமிழ்நாட்டில் தொடங்கப்பட்ட பெரிய சமூகப் பாதுகாப்பு நடவடிக்கைகளை விவரிக்கிறது.

தமிழ்நாட்டில் (நாட்டின் ஏனைய பகுதிகளிலிருப்பதைப்போல) சமூகப் பாதுகாப்பு, வளர்ச்சி மற்றும் காப்பீட்டு நடவடிக்கைகள் மூலம் அளிக்கப்படுகிறது. காப்பீட்டு நடவடிக்கைகளில், அரசு ஊழியர்களுக்கு ஓய்வூதியம் மற்றும் ஓய்வுக்காலப் பயன்கள் வடிவில் பங்களிப்புப் பலன்கள் முறைப்படியாய் அமையாத தொழிலாளர்களுக்கு உயிர்பிழைத்திருப்போருக்கான பலன்கள் தொழிற்சாலை களிலும் மற்ற வணிக நிறுவனங்களிலும் உள்ள தொழிலாளர்களுக்கு வருங்கால வைப்புநிதி மற்றும் ஏனைய பலன்கள் முறைப்படியாய் அமையாத துறைத்தொழிலாளருக்குப் பயன்கள் நலதிட்டங்கள் மற்றும் மகளிருக்கும் மற்றவர்களுக்கும், திருமணம், மகப்பேறு உதவி, முதியார் ஓய்வூதியம் முதலானவை உள்ளடங்கும். இவ்வியலில் பின்வரும் திட்டங்கள் விவாதிக்கப்படுகின்றன :

- ஓய்வுபெற்ற அரசு ஊழியர்களுக்கு ஓய்வுக்காலப் பயன்கள்
- தனியார் அமைப்பு சார்ந்த துறைத்தொழிலாளருக்கு சமூகப்பாதுகாப்பு

- அமைப்பு சாராத்துறைத் தொழிலாளருக்கு சமூகப்பாதுகாப்பு
- ஊறுபடத்தக்க பிரிவினருக்கு ஓய்வூதியம்
- அமைப்பு சாராப் பிரிவில் உயிர்பிழைத்திருப்போருக்கான பலன்கள்.
- ஏழைப் பெண்களுக்குத் திருமண மற்றும் மகப்பேறு உதவி.

## ஓய்வுபெற்ற அரசு ஊழியருக்கு ஓய்வூதியப் பலன்கள்

தமிழ்நாட்டில் ஓய்வுபெற்ற அரசு ஊழியர்களுக்கு ஓய்வூதியங்கள், குடும்ப ஓய்வூதியங்கள், இறப்பு ஓய்வுப் பணிக்கொடை, ஈட்டிய விடுப்பைப் பணமாக்கல் முதலிய ஓய்வுக்காலப் பயன்கள் வடிவில் உள்ளன. ஆயுட்கால எதிர்பார்ப்பு தொடர்ந்து அதிகரித்துவரும் நிலையில் இறப்பு காரணமாக ஆண்டுதோறும் புதிதாய் ஓய்வூதியம் பெறுவோரின் எண்ணிக்கை மிக அதிகமாயுள்ளது. 1991-92-இல் 2,30,000-ஆக இருந்த ஓய்வூதியர்களின் எண்ணிக்கை 2000-2001-இல் 4,13,000-ஆக உயர்ந்து விட்டதால் ஓய்வூதியம் மற்றும் ஓய்வுக் காலப்பயன் கணக்கெடுப்புக்காக நடப்புவிலை நிலவரப்படி கடந்த ஆண்டுகளில் 1991-92-இல் ரூ. 4.01 பில்லியன் ஆக இருந்த அரசு செலவினமானது 1991-இல் 23,500-ஆக இருந்த ஓய்வூதியர்களின் எண்ணிக்கை 2000-2001-இல் 4,13,000-ஆக உயர்ந்துவிட்டதால் 2000-2001-இல் ரூ. 25.78 பில்லியனாக உயர்ந்துள்ளது. 2010-ல் செலவினம் ரூ. 138.61 பில்லியன் அளவுக்கு உயரும் என மதிப்பிடப்படுகிறது. இது வருவாய் செலவினத்தில் 15%-ஆக அமைந்திருக்கிறது. ஓய்வூதியக் கொள்கை தாராள மயமாக்கம், ஓய்வூதியம் தொகுத்துப் பெறும் வசதிகள் அகவிலைப்படி மற்றும் ஏனைய பயன்கள் ஒப்பளிப்பு ஆகியவை அரசு ஓய்வூதியர்களுக்கு நியாயமான வசதியானதொரு ஓய்வுக்குப் பிந்தைய செறிவு திட்டத்தை அளித்துள்ளது.

## தனியார் அமைப்பு சார்ந்த துறை ஊழியருக்கு சமூகப்பாதுகாப்பு

20 அல்லது அதற்குமேற்பட்ட நபர்களைப் பணியமர்த்தும் தமிழ்நாட்டிலுள்ள தொழிற்சாலைகள் மற்றும் வணிக நிறுவனங்களின் ஊழியர்களைப் பாதுகாக்கும் சட்டமுறையிலான நான்கு சமூகப் பாதுகாப்புதிட்டங்களில் பணியாளர் வருங்கால வைப்புநிதிதிட்டம் 1952, பணியாளர் வைப்புத் தொகையுடன் இணைந்த ஈட்டுறுதி திட்டம் 1976, பணியாளர் ஓய்வூதிய திட்டம் 1995 மற்றும் பணியாளர் ஈட்டுறுதி சட்டம் 1948 ஆகியன அடங்கும். தற்போது 177 வகையான தொழில்கள் 44,308 நிறுவனங்கள் மற்றும் 3.86 மில்லியன் உறுப்பினர்களை உள்ளடக்கியதாய் உள்ளது.

## தனியார் அமைப்பு சாராத துறை ஊழியருக்கு சமூகப்பாதுகாப்பு

அமைப்பு சாராத துறையானது குறைவான வருமானம், நிலையற்ற மற்றும் ஒழுங்குமுறை யில்லாத வேலைவாய்ப்பு போதிய சட்டமுறை மற்றும் தொழிற்சங்கப் பாதுகாப்பின்மை ஆகியவற்றின் அடையாளமாக உள்ளது.

1995-இல் மாநில அரசு கட்டுமானத் தொழிலாளர்களுக்கெனத் தனியானதொரு நலவாரியத்தை உருவாக்கியது. கூட்டு / தனிப்பட்ட விபத்து நிவாரண / திருமண உதவி, பேறுகாலப் பயன்கள், தொழிலாளரின் குழந்தைகளின் கல்வி உதவி, ஓய்வுகாலப்பயன்கள், ஈமச்செலவினத்திற்கான உதவி ஆகியவற்றை இந்நலத்திட்டம் ஏறக்குறைய 23,8000 கட்டுமானப் பணியாளர்கள் இந்நல வாரியத்தில் உள்ளடக்கப்பட்டுள்ளனர். 1999-இல் அரசு 57 வகை அமைப்பு சாராத தொழிலாளர்களுக்காக தமிழ்நாடு உடல் உழைப்புத் தொழிலாளர் சமூகப்பாதுகாப்பு மற்றும் நலவாரியத்தை ஏற்படுத்தியது.

மேலும் வேளாண் தொழிலாளர்கள், பனைமரம் ஏறும் தொழிலாளர்கள் தானியங்கி மூவுருளி உந்து (ஆட்டோரிக்ஷா) மற்றும் வாடகை பேருந்து ஓட்டுநர் உள்ளடங்கிய ஏழுவகையான உடல்உழைப்புத் தொழிலாளர்களுக்குத் தனி வாரியங்களையும் அமைத்தது. இவ்வாரியங்கள் இப்போது, அவை தொடங்கப்பட்ட நிலையிலேயே உள்ளன.

### ஊறுபடத்தக்க பிரிவினருக்கு ஓய்வூதியம்

முதியோர் (இயல்பான), கைவிடப்பட்ட மனைவியர், ஆதரவற்ற விதவைகள், ஆதரவற்ற உடல் ஊனமுற்றோர், ஆதரவற்ற வேளாண் தொழிலாளர்கள் ஆகிய வேறுபட்ட வயதுத் தொகுதியை சார்ந்த 5 வகை இலக்குப் பிரிவினருக்கு ஓய்வூதியம் அளிக்கப்படுகிறது. இந்த ஓய்வூதியத்தைப் பெறுவதற்கான முக்கியத் தகுதியான அளவுகோல் இந்த வகைப்பாடுகளை சேர்ந்த நபர்கள், பிழைப்புக்கு எந்த விதமான வருவாய் வழி வகைகளையோ அல்லது குடும்ப ஆதரவையோ பெற்றிருக்கக் கூடாதென்பதே.

### அமைப்பு சாராத துறையில் உயிர்ப்பிழைத்திருப்போருக்கான பயன்கள்

அமைப்புசாராத ஏழைத் தொழிலாளரின் குடும்பங்கள், குடும்பக்காப்புப் பொருளீட்டுநரின் இறப்பு அல்லது கடும் காயம் காரணமாக திடீர் என வருமான இழப்புகளால் துன்புறுகின்றனர். உயிர்ப் பிழைத்திருப்போருக்கான பயன்கள் உருவில், இழந்த நிலையிலுள்ள குடும்பங்களுக்கு சமூகப் பாதுகாப்பளிக்கும் பொருட்டுத் தமிழ்நாட்டின் அனைத்து மாவட்டங்களிலும் குடும்ப இடர் நிவாரண திட்டம் (கு.இ.நி.தி) மற்றும் விபத்து நிவாரணத்திட்டம் (வி.நி.தி) ஆகியவை செயலாக்கப் படுகின்றன. குடும்ப இடர் நிவாரண திட்டம் (கு.இ.நி.தி) குடும்பக்காப்புப் பொருளீட்டுநரின் இறப்புக் காரணமாக ஏற்படும் வருமான இழப்பை ஈடுசெய்ய, இழந்த ஏழைக் குடும்பங்களுக்குத் தனிநிதியுதவியளிப்பதை இத்திட்டம் நோக்கமாகக் கொண்டுள்ளது. கு.இ.நி.தி. திட்டத்தின் கீழ் அளிக்கப்படும் நிதியுதவியானது தொடக்கத்தில் மாநில அரசால் ஏற்பட்டது. 1999 முதல் இது மத்திய அரசால் முழுமையாக ஏற்கப்படுகிறது. நிதியுதவியின் அளவு ரூ. 10,000 வி.நி.தி. குறிப்பிட்ட 44 வரை ஏழை வாழ்க்கைத் தொழிலில் ஈடுபட்ட தொழிலாளர்கள் பணி செய்கையில் விபத்துகளில் (அ) இறந்தால் (அ) வேறுவகையில் உடல் ஊனமடையப் பெற்றால் அவர்களுடைய குடும்பங்களுக்கு நிதிநிவாரணமளிப்பதை நோக்கமாய்க் கொண்டுள்ளது. நிதியுதவியின் அளவு ரூ. 5,000/- முதல் ரூ. 15,000/- வரை வேறுபடும். இதை மத்திய, மாநில அரசுகள் பங்கீடு செய்துகொள்ளும். ஏறத்தாழ 4,00,000 குடும்பங்கள் இத்திட்டங்கள் தொடங்கிய நாளிலிருந்து பெரும்பாலும் கு.இ.நி.தி. மூலம் பயனடைந்துள்ளன.

### ஏழைப் பெண்களுக்குத் திருமணம் மற்றும் மகப்பேறு உதவி

தமிழ்நாட்டில் 5 திருமண உதவி திட்டங்கள் செயலாக்கப்படுகின்றன. பெரிய திட்டங்களில் ஒன்று வறுமைக்கோட்டிற்குக் கீழ்உள்ள இளம்பெண்களுக்குரியது. பெண்ணின் குடும்பத்தின் நிதிச் சுமையைக் குறைக்கமுயலும் அதேசமயம் பெண்களின் கூட்டமுறையிலான திருமண வயது 18 என்பதைச் செயல்படுத்துவதோடு, பெண் கல்வியறிவு, பள்ளிக்கல்வியையும் வலியுறுத்துகிறது. மகப்பேறு உதவி திட்டம், ஏழைக்குடும்பங்களை சேர்ந்த பணிபுரியும் கர்ப்பிணி பெண்களுக்கு மகப்பேறுக்கு முந்திய கடைசி எட்டு முதல் பன்னிரு வாரங்களுக்கும் மகப்பேறுக்குப் பின்னர் எட்டு வாரங்களுக்கும் அவர்களுடைய வருமானத்தை ஈடுசெய்யும் வகையில் பண உதவியளிக்கிறது. இப்பண உதவி அவர்களுடைய உணவில் ஊட்டச்சத்துக்களைப் பெற உதவுகிறது.

### முதியோருக்கான சமூகப் பாதுகாப்பு

மக்கட்தொகையின் வயது முதிர்வு அண்மைக்காலம்வரை வளர்ந்த நாடுகளின் ஒருகவலையாயிருந்தது. தற்போது இந்தியா உள்ளிட்ட வளர்ந்துவரும் நாடுகளின் ஒரு முக்கியப் பிரச்சனையாகி விட்டது. இந்தியாவில் வயதானவர்களின் மக்கட்தொகை (60+) 1991-ல், 56.7 மிலியனாக இருந்தது. 2001-ல் 71 மிலியனுக்கதிகமாயும் 2021-ல் 137 மிலியனாயும் அதிகரிக்கும் என எதிர்பார்க்கப் படுகிறது. (உத்தேச)[1] 1991-ல் 6.7%-ஆக இருந்த முதியோரின் விகிதம் 2001-ல் 7%-ஆகவும் 2021-ல் 9.8%-ஆகவும் உயருமென மதிப்பிடப்பட்டுள்ளது. 1991 நிலவரப்படி பெரிய மாநிலங்களில் முதியோரின் மிக அதிகவிகிதம் கேரளாவில் 8.7% அதற்கடுத்துத் தமிழ்நாட்டில் 7.4-ஆகவுமிருந்தது. இவ்விரு மாநிலங்களிலும் கருவள மிகை மற்றும் குறைந்துவரும் இறப்புவீதங்கள் முதியோரின் மக்கட்தொகையில் ஒரு அதிக மற்றும் வேகமான உயர்வுக்குக் காரணமாயிருந்தது. மகாராட்டிரா மற்றும் பஞ்சாப் போன்ற மாநிலங்கள் மிகப் பின்தங்கியிருக்கவில்லை.

தமிழ்நாட்டில் மக்கட்தொகையின் முதிர்வு கடும்விளைவுகளைக் கொண்டுள்ளது. எதிர்காலத்தில் முதியோர், குறிப்பாக ஏழை முதியோர் எவ்விதம் வாழ்வார்கள் என்பது மிகப்பெரும் கொள்கை விளைவுகளோடுகூடிய பெருங்கவலையளிக்கும் விஷயமாயுள்ளது. மாநிலத்தின் வேகமான நகர்மயமாக்கும் நகர்ப்புறங்களில் இருப்பிடப் பற்றாக்குறை விளைவை ஏற்படுத்தியுள்ளது. உயர்ந்த வாடகை வீதங்கள், கூட்டுக்குடும்ப முறைக்குப் பெரும் தடையாக உள்ளன. மரபுரிமையான முதியோர்கள் பால் மரியாதையும் அவர்களுடைய உணர்வுகளைப் புரிந்துகொள்ளும் மனப்போக்கும் அக்கறையும் குறிப்பிடத்தக்க அளவு குறைந்துள்ளது. நகர்ப்புறங்களுக்கு வயதான சிறாரின் குடிப்பெயர்ச்சி தனியே விடப்பட்ட முதியோரின் ஊறுபடத்தக்கமையை மேலும் கடுமையாக்கி யுள்ளது. குறிப்பாக, சுதந்திரமான உற்பத்தி உடைமைகளைப் பெற்றிராத அவர்களுடைய உடல் உழைப்பையே பெரிதும் நம்பியிருந்த குடும்பங்களில் இது அதிகமாய்க் காணப்பட்டது (சங்கரன் 1998) மாறிவரும் சமுதாய மதிப்புகளின்படி முதியோர் நலன்களைக் காக்கும் பொறுப்பு சமுதாயம் மற்றும் அரசின்மீது சுமத்தப்பட்டது. இதன் காரணமாய் அவர்களுடைய சமூகப் பாதுகாப்புக் குறித்துக் கூரியகவனம் செலுத்த நடவடிக்கை மேற்கொள்ளும் அவசியம் ஏற்பட்டது.

பின்வருவனவற்றைப் பற்றி ஆய்வு செய்யும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. அ) தமிழ்நாட்டில் வயது முதிர்வின் உரு வடிவம். ஆ) ஏழை முதியோருக்கு நிதிப்பாதுகாப்பு மற்றும் முதியோர் ஓய்வூதிய திட்டங்கள். இ) முதியோருக்கு உடல் நலப்பாதுகாப்பு, நலக்காப்பு, வீட்டுவசதி மற்றும் சமூகப்பணிகள். ஈ) கொள்கை அதிகாரங்கள்.

### மக்கட்தொகையின் வயதுக் கட்டமைப்பு

தமிழ்நாட்டின் மக்கட்தொகையில் வயதுக் கட்டமைப்பு மாறிவருகிறது. 0-4 வயதுத் தொகுதியில் மக்கட்தொகையின் விகிதம் 1981-ல் 11.15%-லிருந்து 2000-ல் 7.79%-க்கு (மதிப்பீடு) குறைந்தது. 60+ மக்கட்தொகை இதேகாலத்தில் 6.41%-லிருந்து 8.26%-க்கு உயர்வதாய் மதிப்பிடப் பட்டது. பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்பு 1970-75-ல் 49.6 ஆண்டுகளாயிருந்தது. 1991-95-ல் 63.3 ஆண்டுகளாய் உயர்ந்திருக்கையில் 60+ வயதானவர்களின் ஆயுள்கால எதிர்பார்ப்பும் இதேகாலத்தில் 11.9 ஆண்டுகளிலிருந்து 14.5 ஆண்டுகளாக அதிகரித்தது. எனவே, வயதானோரின் மக்கட்தொகையைக் கூர்ந்து கவனிப்பது அவசியமாகிறது.

---

[1]இவ்வியலை எழுதும்போது 2001 மக்கட்தொகையின் வயது தொடர்பான புள்ளிவிவரங்கள் கிடைக்கவில்லை.

## தமிழ்நாட்டின் முதியோரின் மக்கட்தொகையியலின் உருவடிவம்

1961 மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி தமிழ்நாட்டில் முதியோரின் எண்ணிக்கை (60 வயதும் அதற்கு மேலும்) 1.89 மில்லியன். 1991-ல் இந்த எண்ணிக்கை இரண்டு மடங்குக்கும் மேலாகி விட்டது (4.16 மில்லியன்). 1961-ல் மொத்த மக்கட்தொகையில் முதியோரின் விழுக்காடு 5.60-ஆக இருக்கையில் 1991-ல் 7.45%-ஆக அமைந்தது (அட்டவணை 7.1) 60-9, 70-9 மற்றும் 80+ வயதுத் தொகுதி ஒவ்வொன்றிலும் 1961-ல் இருந்து 1991 வரையிலான காலத்தில் இரண்டு மடங்குக்கும் மேலாகியது. மேலும் 1981-91-க்குட்பட்ட பத்தாண்டுகளில் இந்த முதியவயதுத் தொகுதியினரின் மக்கட்தொகை, முந்தைய பத்தாண்டுகளோடு ஒப்பிடுகையில் அதிகமாயிருந்தது. தற்சார்பான ஒரு மதிப்பீடு 2001 மற்றும் 2011-ம் ஆண்டுகளில் முதியோரின் மக்கட்தொகை விழுக்காட்டை முறையே 9.05 மற்றும் 11.43-ஆகக் காட்டியுள்ளது. இது கேரளாவுக்கு அடுத்தபடியாய் உள்ள விழுக்காடுகளாகும் (இருதயராஜன் et.al. 1999). தமிழ்நாட்டில், மொத்த மற்றும் ஒப்பீட்டடிப்படையிலான முதியோரின் மக்கட்தொகையின் மதிப்பீட்டு உயர்வு அதிர்ச்சியூட்டக் கூடியதாயிருப்பதால், முதியோர் தொடர்பான அரசுக் கொள்கையில் விளைவுகளை ஏற்படுத்தியுள்ளது.

## மாவட்ட அளவில் வயது முதிர்வின் உருவடிவம்

1991 மக்கட்தொகைக் கணக்கெடுப்பின் அடிப்படையில் மாவட்ட அளவிலான வயது முதிர்வின் உருவடிவை பார்க்கையில் (முந்தைய 21 ஒருங்கிணைந்த மாவட்டங்களின் அடிப்படை விவரங்கள்) காஞ்சிபுரம், கடலூர், சேலம், திருச்சிராப்பள்ளி மற்றும் தஞ்சாவூர் ஆகிய 5 மாவட்டங்கள் 3,00,000-க்கும் மிகையான 60+ வயதான மக்களைப் பெற்றுள்ளன. சேலம் மிக அதிகமாக 34,000, 80+ வயதான நபர்களையும், நீலகிரி மிகக்குறைவாய் 3000 நபர்களையும் கொண்டுள்ளது.

**அட்டவணை - 7.1 : தமிழ்நாட்டில் 1961-91-இல் முதியோரின் மக்கட்தொகையியலின் உருவடிவம்**

| | 1961 | 1971 | 1981 | 1991 |
|---|---|---|---|---|
| 1. முதியோரின் எண்ணிக்கை (ஆயிரங்களில்) | | | | |
| 60-69 | 1296 | 1633 | 2077 | 2702 |
| 70-79 | 452 | 557 | 780 | 1075 |
| 80+ | 138 | 175 | 247 | 385 |
| மொத்தம் | 1886 | 2365 | 3104 | 4162 |
| 2. மொத்த மக்கட்தொகைக்கு விழுக்காடு (%) | | | | |
| | 1961 | 1971 | 1981 | 1991 |
| 60-69 | 3.85 | 3.96 | 4.26 | 4.84 |
| 70-79 | 1.34 | 1.35 | 1.61 | 1.92 |
| 80+ | 0.41 | 0.43 | 0.54 | 0.69 |
| மொத்தம் | 5.60 | 5.74 | 6.41 | 7.45 |

(தொடர்ச்சி)

| | 1961 | 1971 | 1981 | 1991 |
|---|---|---|---|---|
| 3. வளர்ச்சி வீதம் | | | | |
| 60-69 | | 26.02 | 27.23 | 30.06 |
| 70-79 | | 23.19 | 39.92 | 37.86 |
| 80+ | | 26.72 | 41.12 | 55.57 |
| மொத்தம் | | 25.39 | 31.25 | 34.05 |

*ஆதாரம் : இந்திய மக்கட் தொகைக் கணக்கெடுப்பு 1991 இந்தியாவில் முதியோரின் மக்கட் தொகை 1991 மக்கட்தொகைக் கணக்கெடுப்பு அடிப்படை விவரம் பற்றிய பகுத்தாய்வு பதிவாளர் தலைவர் இந்தியா - மார்ச் 1999.*

60+ வயதான முதியோரின் மக்கட்தொகை ஆண்கள் மற்றும் பெண்களின் விகிதம் 1991 மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி 7.45%-ஆக இருந்தது. ஆண்கள் பெண்களிருவருக்குமான மாநில சராசரிக்கு மிகையான மாவட்டங்கள் ஈரோடு (9.34%) தூத்துக்குடி (8.36%), திருநெல்வேலி (8.33%), சேலம் (8.24%), கன்னியாகுமரி (8.19%), சிவகங்கை (8.14%), கோயம்புத்தூர் (8.08%), திருவண்ணாமலை (7.71%) மற்றும் திருச்சிராப்பள்ளி (7.67%).

**சார்ந்திருத்தல் விகிதங்கள்**

60 வயதும் அதற்கு மிகையான மற்றும் 15-59 வயதுக்குட்பட்ட நபர்களின் விகிதம், முதியோர் சார்ந்திருத்தல் விகிதம் எனப்படும். அதுவே மிகப் பொதுவான சமுதாய சார்ந்திருத்தல் விகிதமாகும் இளைஞர் சார்ந்திருத்தல் விகிதம் இடைநிலை வயதான (15-59) 100 நபர்களுக்கு 0-14 வயதான நபர்களின் எண்ணிக்கையாகும். இளைஞர் சார்ந்திருத்தல் விகிதம் 1961-ல் 63.08%-ஆக இருந்தது. ஆனால், 1991-ல் 50.15%-ஆகக் குறைந்தது ஆனால் முதியோர் சார்ந்திருத்தல் விகிதம் 1961-ல் 9.86%-லிருந்து, 1991-ல் 12.13%-க்கு உயர்ந்தது. இவ்வாறு முதியோர் சார்ந்திருந்த விகிதம் 3% புள்ளிகள் உயர்ந்தும், இளைஞர் சார்ந்திருத்தல் விகிதம் 13% புள்ளிகள் குறைந்தும் காணப்பட்டது. முதுமையின் குறியீடு சார்ந்திருத்தலின் கட்டமைப்பை அளப்பதை நோக்கமாய்க் கொண்டுள்ளது. அதாவது 60-ம் அதற்கும் மேற்பட்ட மற்றும் 0-14 வயதான மக்கட்தொகைக்கும் உள்ள விகிதம், 15 வயதுக்குட்பட்ட 100 நபர்களுக்கு 60-ம் அதற்கும் மேற்பட்ட நபர்களின் எண்ணிக்கை, (முதுமையின் குறியீடு) 1961-ல் 15.63%-ஆக இருந்தது. ஆனால், 1991-ல் 24.19%-ஆக உயர்ந்தது. இந்த உயர்வு, 1961-81-க்கிடைப்பட்ட காலத்தில் 2.7% புள்ளிகளாயும், ஆனால் 1981-91-க்கிடைப்பட்ட காலத்தில் 5.87% புள்ளிகளாயுமிருந்தது இதன்மூலம் தமிழ்நாட்டில் முதுமை குறியீட்டின் விரைவைச் சுட்டிக்காட்டுவதாய் அமைந்துள்ளது. (அட்டவணை 7.2) மக்கட் தொகைக் கணக்கெடுப்பின் வயது தொகுதி மதிப்பீட்டின் அடிப்படையில் முதியோர் சார்ந்திருத்தல் விகிதம் 13-12 எனவும் முதுமையின் குறியீடு 32.07 எனவும் முடிவுசெய்யப்பட்டது. இது 1991-லிருந்து 7.88% புள்ளிகள் மேலும் உயர்ந்திருப்பதைக் காட்டுகிறது.

**அட்டவணை - 7.2 : தமிழ்நாட்டில் சார்ந்திருத்தல் விகிதம், முதுமையின் குறியீடு மற்றும் குடும்ப சார்ந்திருத்தல் விகிதம்**

| ஆண்டு | சார்ந்திருத்தல் விகிதம் | | | முதுமையின் குறியீடு | குடும்ப சார்ந்திருத்தல் விகிதம் | |
|---|---|---|---|---|---|---|
| | இளைஞர் 0-14/15-59 | வயது 60+/15-59 | மொத்தம் 0-14 மற்றும் 60+/15-59 | 60+/0-14 | 0-14/60+ | 60-74/40-44 |
| 1961 | 63.08 | 9.86 | 72.94 | 15.63 | 640 | கி. பெ. |
| 1971 | 66.88 | 10.17 | 77.05 | 15.20 | 658 | 105 |
| 1981 | 59.78 | 10.95 | 70.73 | 18.32 | 546 | 115 |
| 1991 | 50.15 | 12.13 | 62.28 | 24.19 | 413 | 108 |
| 2001 | 40.90 | 13.12 | 54.01 | 32.07 | 312 | 109 |

*குறிப்பு : கி.பெ. - கிடைக்கப் பெறவில்லை*

*ஆதாரம் : மக்கட் தொகைக் கணக்கெடுப்பு நிறுவனத்தால் மதிப்பீடு செய்யப்பட்ட வயது தொகுதி மக்கட் தொகையின் அடிப்படையில் விகிதங்கள் கணக்கிடப்பட்டுள்ளன.*

மிக உயர்சார்ந்திருத்தல் விகிதம் (கிராமம் மற்றும் நகர்ப்புறம்) ஈரோடு மாவட்டத்தில் 144/1000. இதைத் தொடர்ந்து தூத்துக்குடி 141, திருநெல்வேலி 139, சிவகங்கை 135, கன்னியாகுமரி மற்றும் திருவண்ணாமலையில் 134-ஆக இருந்ததாய் மாவட்டப் புள்ளிவிவரங்கள் காட்டுகின்றன. கிராமப் பகுதிகளிலும்கூட மிகஉயர்வான சார்ந்திருத்தல் விகிதம், தூத்துக்குடியில் 159-ம் இதையடுத்து ஈரோட்டில் 156, திருநெல்வேலி மற்றும் கோவையில் 143, சிவகங்கையில் 142, சேலத்தில் 140-ம்ஆக இருந்தது.

## கல்வியறிவும் முதியோரும்

முதியோருக்கிடையே கல்வியறிவு வீதம் மிகக் கவலையளிக்கும் வகையில் குறைவாய் உள்ளது. 1991 மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி 60+ வயதான மக்கட்தொகையில் 33.68% கல்வியறிவுடையோராய் உள்ளனர். மொத்த மக்கட்தொகையில் 62.66% கல்வியறிவு வீதமாய் உள்ளது. பாலினப் பாகுபாடு மிகஅதிகமாய் 34% புள்ளிகளாய் உள்ளது. வயதான ஆண் கல்வியறிவு வீதம் 49.94%-ஆக இருக்கையில் பெண் கல்வியறிவு வீதம் 16.07%-ஆக உள்ளது. வேறுவிதமாய் சொல்வதெனில் முதியோர் மக்கட்தொகையில் 2/3 கல்வியறிவு அற்றவர்களாயும், 84% முதியோர் பெண்கள் கல்வியறிவற்றவர்களாய் உள்ளனர். தமிழ்நாட்டில் கிராமப்புற முதியோர் பெண்கள் அறிவு வெறும் 8.64% மட்டுமே. மாறாக, நகர்ப்புறக் கல்வியறிவு வீதம் 31.5% ஆண்களைவிடப் பெண்களின் ஆயுட்கால எதிர்பார்ப்பு அதிகமாயிருப்பதால், பெண்களிடையில் அதிகக் கல்வியறிவற்ற நிலை மிகக் கடும் விளைவுகளை ஏற்படுத்தக் கூடியதாய் உள்ளது. வயதான பெண்கள் விதவையாகும்போது அவர்கள் ஆண் ஆளுமையின்றி வாழ நேரிடும்.



### அட்டவணை - 7.3 : வயதானோரின் கல்வியறிவு வீதம் 60+

| மாநிலம் | கிராமப்புறம் | | | நகர்ப்புறம் | | | ஒருங்கிணைந்த | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | நபர்கள் | ஆண் | பெண் | நபர்கள் | ஆண் | பெண் | நபர்கள் |
| தமிழ்நாடு | 41.07 | 8.64 | 25.74 | 70.29 | 31.56 | 51.06 | 49.94 | 16.07 | 33.68 |
| கேரளா | 76.81 | 50.17 | 62.69 | 84.38 | 58.27 | 69.91 | 78.68 | 52.32 | 64.55 |
| இந்தியா | 33.65 | 7.51 | 21.11 | 65.97 | 30.76 | 48.73 | 40.62 | 12.68 | 27.15 |

*ஆதாரம் : மக்கட்தொகைக் கணக்கெடுப்பு - 1991*

## பாலின் இருப்பிடவாரியாய் முதியோர்

தமிழ்நாட்டிலிருக்கும் மொத்த 4.16 மில்லியன் முதியோர் மக்கட்தொகையில் 2 மில்லியன் பேர் பெண்கள். மொத்த முதியோர் தொகையில் 68% கிராமப்புறங்களில் வசிக்கிறார்கள். அட்டவணை - 7.4-ல் கண்டுள்ளபடி நகர்ப்புற முதியோர் மக்கட்தொகை, ஆண் பெண் இருவருக்கிடையில் சமமாகப் பிரிக்கப்பட்டுள்ளது. கிராமப்புறங்களில் முதியோர் ஆண் மக்கட்தொகை (1.51 மில்லியன்), பெண் முதியோர் மக்கட் தொகையைவிட (1.35 மில்லியன்) சற்றே உயர்வாக உள்ளது.

### அட்டவணை - 7.4 : தமிழ்நாட்டில் பாலின இருப்பிட வாரியாய் 60+ வயதான நபர்களின் மக்கட்தொகை

| கிராமப்புறம் | | | நகர்ப்புறம் | | | ஒருங்கிணைந்த | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஆண் | பெண் | நபர்கள் | ஆண் | பெண் | நபர்கள் | ஆண் | பெண் | நபர்கள் |
| 1.51 | 1.35 | 2.86 | 0.66 | 0.65 | 1.31 | 2.16 | 2.00 | 4.16 |

*ஆதாரம் : மக்கட்தொகைக் கணக்கெடுப்பு - 1991*

## ஏழை முதியோருக்கு நிதிப் பாதுகாப்பு

மக்கட்தொகையின் வயது முதிர்வு, மக்கட் தொகையியலின் மாற்றத்தில் ஏற்படும் முன்னேற்றத்தின் விளைவு என்பது வெளிப்படையானாலும், அது, முதியோருக்கிடையில் நிதிப் பாதுகாப்பின்மையை வெளிக்கொணர்ந்துள்ளது. இதை விரைவில் உணர்ந்த மாநிலங்களில் கேரளா மாநிலமும் ஒன்று. இம்மாநிலம் 1960-ல் முதியோர் உதவித்தொகை திட்டத்தை (மு.உ.தொ) அறிமுகப்படுத்தி, பின்னர் இதனை 1964-ல் விதவை / கைவிடப்பட்டவர்களுக்கான ஓய்வூதியத் திட்டத்துடன் தொடர்ந்து செயல்படுத்தியது. இதைப் பின்பற்றித் தமிழ்நாடு முதியோருக்கு முதியோர் உதவித்தொகை திட்டத்தை 1962-ல் அறிமுகப்படுத்தியது. ஆதரவற்ற விதவைகளுக்கான ஓய்வுதிய திட்டம், உடல் ஊனமுற்றோருக்கான முதியோர் உதவித் தொகை திட்டத்தோடு 1970-களில்தான் அறிமுகப்படுத்தியது. 1980 மேலும் இரு ஓய்வூதிய திட்டங்களைத் தொடராகக் கண்டது. ஒன்று கணவனால் கைவிடப்பட்ட மனைவியர்க்கும் மற்றொன்று ஆதரவற்ற வேளாண் தொழிலாளர்க்குமான ஓய்வூதிய திட்டமாகும். தகுதியடிப்படைகளை நிறைவு செய்யும் என்பதால் முதியோர் பிந்தைய நான்கு திட்டங்களின் கீழும் ஓய்வூதியத் தொகையைப் பெறலாம். முதியோர் உதவித் தொகை (பொது) எனக் கூறப்பட்ட முதலாவது திட்டத்தைத் தவிர, மற்ற எல்லா திட்டங்களும் முதியோர்க்கு

முக்கியமாய் சொல்லப்படவில்லை. எனவே முதியோர் உதவித்தொகை (பொது) மற்றும் ஏனைய நான்கு திட்டங்களுக்கிடையில் ஒன்றுக்கொன்று ஒருவகையில் ஒரே மாதிரியாய் உள்ளன.[2]

அறிமுகப்படுத்தப்பட்ட ஆண்டு, வயதுத்தகுதி, பொது மற்றும் கூடுதல் தகுதி, ஓய்வூதியத் தொகைவீதம் மற்றும் முதியோர் ஓய்வுத் தொகைத் திட்டங்களின் பிற பயன்கள் விவரப் பெட்டி 7.1-ல் தரப்பட்டுள்ளன.

**விவரப் பெட்டி 7.1 : முதியோர் உதவித்தொகைத் திட்டங்கள் அறிமுகப்படுத்தப்பட்ட ஆண்டும் தகுதியும்**

| திட்டம் | அறிமுகப்படுத்தப்பட்ட ஆண்டு | தகுதி |
|---|---|---|
| 1. முதியோர் உதவித் தொகை (பொது) | 1.4.1962 | பொதுத்தகுதி : குடும்ப ஆதரவின்மை மற்றும் பிழைப்புக்கு வழிவகையின்மை. வயது 60-ம் அதற்கு மேலும் கைவிடப் பட்ட நிலையில் கண்குருடு, தொழுநோய், மனநோய், பக்கவாதம் (அ) உறுப்பு இழப்பு மற்றவர்களுக்கு 65 வயதுக்குமேல் |
| 2. ஆதரவற்ற, உடல் ஊனமுற்றோருக்கான ஓய்வூதியம் | 6.11.1974 | 55 வயது 45 வயது 50%-ஆவது அல்லது அதற்கு மிகையான இயலாமை |
| 3. ஆதரவற்ற விதவையர் ஓய்வூதியம் | 27.5.1975 | 45 ஆண்டுகள்<br>40 ஆண்டுகள்<br>வயதுவரம்பு இல்லை<br>ஆதரவற்ற விதவைகளும் 18 வயதுக்கு மேற்பட்ட சட்டமுறையான வாரிசைப் பெற்றிருக்கும் விதவையரும் |
| 4. ஆதரவற்ற வேளாண் தொழிலாளர் ஓய்வூதியம் | 15.3.1981 | 60 வயது மற்றும் அதற்கு மேற்பட்ட வயதினர் வேளாண் தொழிலாளர் என்பதற்கான சான்று. |

[2]முதியோர் உதவித் தொகை (பொது) மட்டுமின்றி, 60 வயதுக்கு மேற்பட்ட ஆதரவற்றவர்களும் மற்ற வகை ஓய்வூதிய திட்டங்களின்கீழ் பயன்பெறுவர். எனவே, 60+ வயதான முதியோரின் மக்கட்தொகை (1991 மக்கட்தொகைக் கணக்கெடுப்பு) முதியோர் உதவித் தொகை (பொது) திட்டத்திற்கான இலக்கு மக்கட்தொகையாய் எடுத்துக்கொள்ளப் படுவது சரியாயிருக்காது. எனவே ஒன்றுக்கொன்று ஒரே மாதிரியாயிருப்பதைத் தவிர்க்க முதியோர் உதவித்தொகை (பொது) திட்டத்தின் கீழான இலக்கு மக்கட்தொகையை உடல் ஊனமுற்ற மக்களை சார்ந்த முதியோர் மக்கட் தொகையையும் (தேசீய மாதிரி கணக்கெடுப்பு 36-வது சுற்றின் மதிப்பீடுகளின் அடிப்படையிலான மொத்த மக்கட்தொகையில் 1.9%) ஆதரவற்ற விதவைகள், கணவரால் கைவிடப்பட்ட மனைவியர் மற்றும் வேளாண் தொழிலாளர்களைக் கழிப்பதன் மூலம் பெறலாம். இப்பிரிவுகள் (அதாவது 60+ வயதானோர்) முறையே அவரவர் தம் வகைகளிலிருந்து ஓய்வூதியம் கோரிப் பெறுவர் எனப் புனைவாய் கருதப்படுகிறது.

| திட்டம் | அறிமுகப்படுத்தப்பட்ட ஆண்டு | தகுதி |
|---|---|---|
| 5. கணவனால் கைவிடப் பட்ட மனைவியர் ஓய்வூதியம் | 25.4.1986 | 30 மற்றும் அதற்கு மேற்பட்ட வயதினர். கணவரால் கைவிடப்பட்ட மனைவியரும் மற்றும் 18 மற்றும் அதற்கு மிகையாய் வயதான சட்டமுறையான வாரிசைப் பெற்றிருப்போரும் |

**ஓய்வூதிய வீதம்**

1962-ல் முதியோர் ஓய்வூதிய திட்டம் அறிமுகப்படுத்தப் பட்டபோது, ஒரு பயனாளியின் ஓய்வூதியத் தொகையின் வீதம் ரூ. 20/-ஆக இருந்தது. அடுத்து வந்த ஆண்டுகளில் இது திருத்தப்பட்டது. 1996 முதல் இந்திய அரசு ஓய்வூதிய நிதிக்கு பங்களிக்கத் தொடங்கியது. ஒரு பயனாளியின் ரூ. 100/-ல் அதன் பங்கு ரூ. 75/-ஆக இருந்தது. இப்போது ஒரு பயனாளியின் ஓய்வூதிய வீதம் ரூ. 200. (ரூ. 75/- மத்திய அரசின் பங்கு ரூ. 125/- மாநில அரசின் பங்கு)

**மற்ற பயன்கள்**

1. இலவச வேட்டி, சேலை வழங்கும் திட்டத்தின் கீழ் ஆண்டில் இருமுறை அதவாது பொங்கல் மற்றும் தீபாவளிப் பண்டிகைகளின்போது ஒவ்வொரு ஆணுக்கும் ஒரு வேட்டியும் ஒவ்வொரு பெண்ணுக்கும் ஒரு சேலையும் வழங்கப்படுகிறது.
2. முதியோர் உதவித் தொகை பெறுவோருக்கு இலவச அரிசி 1980 முதல் வழங்கப்படுகிறது. 1997-லிருந்து மதிய உணவு திட்ட மையங்களில் (ம.உ.தி.) உணவு பெறும் முதியோர் உதவி தொகை பெறும் ஒவ்வொருவரும் மாதமொன்றுக்கு 2 கிலோ அரிசியை இலவசமாகப் பெறுகின்றனர். மதிய உணவு பெறாதவர்கள் ஒவ்வொருவரும் 4 கிலோ அரிசியை இலவசமாய் பெறுகின்றனர்.

தமிழ்நாட்டுக்கான அடிப்படை விவரம் (அட்டவணை - 7.5) 60+ வயதுத் தொகுதிகளில் எல்லாவகையான 5 ஓய்வூதிய திட்டங்களிலும் பயனாளிகளின் எண்ணிக்கை 1995-96-ல் 348480-லிருந்து 1999-2000-ல்[3] 506865-ஆக உயர்ந்ததைக் காட்டுகிறது. பெரும் உயர்வுகள் முதியோர் உதவித் தொகை (பொது) மற்றும் ஆதரவற்ற விதவைகள் ஓய்வூதியத் திட்டங்களிலும் இருந்தது. முதியோர் உதவித் தொகை (பொது)வின் உள்ளடக்க விகிதம், 1995-96-ல் 11.04%-லிருந்து 1999-2000-ல் 16.98%-ஆக கணிசமாய் உயர்ந்தது. உடல் ஊனமுற்ற மற்ற வேளாண் தொழிலாளர்களின் திட்டங்களில், உள்ளடக்க விகிதங்கள், 1995-96-லிருந்து 1999-2000 வரை சிறிதளவே அதிகரித்தன. அட்டவணை-7.5, 1995-96 மற்றும் 1999-2000 ஆண்டுகளுக்கிடைப்பட்ட காலத்தில் முதியோர் உதவித் தொகை திட்டங்களின் கீழ் 60+ வயதானவர்களின் மக்கட் தொகையில் வகைவாரியான பயனாளிகளின் எண்ணிக்கை உள்ளடக்க விகிதங்களைக் காட்டுகிறது.

[3]எல்லா திட்டங்களிலும் எல்லா வயதுத் தொகுதிகளிலும் கிராமப் பகுதிகளிலுள்ள பயனாளிகளின் மொத்த எண்ணிக்கை 620000-ஆக இருந்தது. 249000 பயனாளிகளுடன் கூடிய முதியோர் உதவித் தொகை (பொது) மிகப்பெரிய திட்டமாயிருந்தது. இதையடுத்து, 236000 கிராமப்புற பயனாளிகளுடன் கூடிய ஆதரவற்ற விதவையர் திட்டம் இவ்விரு திட்டங்களும் ஒருங்கிணைந்து கிராம பயனாளிகளில் 78%-ஆக இருந்தன.

## அட்டவணை - 7.5 : முதியோர் உதவித் தொகை பயனாளிகளும் 60+ வயதானோரின் உள்ளடக்க விகிதங்கள்

| வகை | இலக்கு மக்கட்தொகை 60+ 1991 (ஆயிரங்களில்) | 60+ பயனாளிகள் 1995-96[1] | மொத்தத் திற்கு % | 60+ பயனாளிகள் 1999-2000[1] | மொத்தத் திற்கு % | உள்ளடக்க விகிதம் % | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | 1995-96 | 1999-2000 |
| 1. முதியோர் உதவித் தொகை(3) | 2331 | 257199 | 73.81 | 395692 | 78.07 | 11.04 | 16.98 |
| 2. வழக்கமான உடல் ஊனமுற்றோர்(4) | 79 | 2934 | 0.84 | 3462 | 0.68 | 3.71 | 4.38 |
| 3. ஆதரவற்ற விதவையர்(2) | 1203 | 10716 | 3.08 | 21846 | 4.31 | 0.89 | 1.82 |
| 4. வேளாண் தொழிலாளர்(2) | 535 | 75038 | 21.53 | 80731 | 15.93 | 14.04 | 15.10 |
| 5. ஆதரவற்ற கைவிடப் பட்ட விதவை(2) | 14 | 2593 | 0.74 | 5134 | 1.01 | 18.53 | 36.70 |
| மொத்தம் | 4162 | 348480 | 100.00 | 506865 | 100.00 | 8.37 | 12.18 |

*ஆதாரம் : 1. தமிழ்நாட்டின் மாவட்ட ஆட்சித்தலைவர்கள். 60+ வயதான தொகுதியினரில் பயனாளிகள்.*
*2. மக்கட்தொகைக் கணக்கெடுப்பு 1991*
*3. 1991 மக்கட்தொகைக் கணக்கெடுப்பு அட்டவணைகளிலிருந்து கணக்கிடப்பட்டவை.*
*4. தேசீய மாதிரிக் கணக்கெடுப்பு, 36-வது சுற்று (1981-ம் ஆண்டு) அடிப்படையிலான 60+ வயதானோரின் மக்கட்தொகைக் கணக்கெடுப்பில் 1.9%-ஐ மேற்கொண்டு மதிப்பீடு செய்யப்பட்டது.*

அண்மைக்காலத்தில் குறிப்பிட்ட திட்டங்களின் முக்கியத்துவம் மாறி வருவதைப் பற்றிப் பல செய்திகள் வரிசைப்படி இடம்பெற்றுள்ளன. அவை :

- 1995-96-ல் 73.81%-ஆக இருந்த முதியோர் உதவித் தொகை (வழக்கமான)யின் பங்கு 1999-2000-ல் 78.07%-ஆக உயர்ந்தது. இதற்கு மாறாக ஆதரவுற்ற விதவையர் திட்டத்தின் (ஆ.வி.தி.) பங்கு படிப்படியாக 1995-96-ல் இருந்த 3.08%-லிருந்து 1999-2000-ல் 4.31%-ஆக உயர்ந்தது. உடல்ஊனமுற்றோரின் திட்டத்தின் பங்கு 1995-96-லிருந்த 0.84% விழுக்காட்டி லிருந்து 1999-2000-ல் 0.68%-ஆகக் குறைந்தது.

- ஆதரவற்ற வேளாண் தொழிலாளர் ஒய்வூதிய திட்டத்தின் பங்கு வியக்கத்தக்க வகையில் குறைவாக உள்ளது. வேலை பயனாளிகளில் பெரும்பாலோர் முதியோர் உதவித் தொகை (வழக்கமான) திட்டத்தின் கீழ் பயன் பெற்றிருக்கலாம். ஏனெனில் (அ) இரு திட்டங்களுக்கும் வயதுத் தகுதியில் அதிக வேறுபாடில்லை. (ஆ) ஆதரவற்ற வேளாண் தொழிலாளர் ஒய்வூதிய திட்டத்தின் கீழ் பயனாளிகள் தாங்கள் வேளாண் தொழிலாளர் என்பதற்கான சான்றினை அளிக்கவேண்டும். முதியோர் உதவித்தொகை (வழக்கமான) திட்டத்தில் அது தேவையில்லை. ஆகையால் முதியோர் உதவித்தொகை (வழக்கமான) திட்டத்தின்கீழ் வழிவாய்ப்புகள் எளிதா யிருப்பதும், ஆதரவற்ற வேளாண் தொழிலாளர் ஒய்வூதிய திட்டம் வலுவாயில்லாததற்கு வெளிப்படையான காரணம் ஆகும்.

- ஆதரவற்ற / கைவிடப்பட்ட மனைவியர் ஓய்வூதிய திட்டம்கூட அதிக வளர்ச்சியைப் பெற்றிருக்கவில்லை. ஒருவேளை இந்த திட்டத்தின் கீழ்த் தகுதிபெற ஒருவரைக் கைவிடப்பட்ட மனைவி என அறிவித்துக் கொள்வது சமூக இழுக்கு எனக் கருதப்படுவதும் காரணமாயிருக்கலாம்.
- எல்லா திட்டங்களிலும் பெருமளவு உள்ளடக்கத்திற்கு முக்கியக் காரணம் முதியோர் உதவித் தொகை விண்ணப்பங்களின் காத்திருப்போர் பட்டியல் நீக்கப்பட்டதும், 1989-ல் முதியோர் உதவித் தொகை ஒப்பளிப்புக்கு விதிக்கப்பட்ட உச்சவரம்பை நீக்கியதுமேயாகும். எந்தவிதமான உச்சவரம்பும் அல்லது வரையளவுமின்றி முதியோர் உதவித் தொகை விண்ணப்பங்களை ஒப்பளிக்க மாவட்ட ஆட்சித் தலைவர்களுக்கு அனுமதியளிக்கப்பட்டதைத் தொடர்ந்து உச்சவரம்பை நீக்கிய ஒரு ஆண்டுக்குள் 1990-இல், இத்திட்டங்களின் உள்ளடக்கம் 26.7%-ஆக உயர்ந்தது. (குகன், 1992) இந்த போக்கு தொடர்கிறது.

## முதியோரிடையே வறுமையின் அளவுகளும், முதியோர் உதவித் தொகை உள்ளடக்கமும்

வறுமைக்கோட்டுக்கும் கீழ்வாழும் முதியோரில் எத்தனை பேர் ஆதரவற்றோர் என்ற தகுதியின் பேரில் பயன்பெற்றனர் மற்றும் முதியோரில் எத்தனை விழுக்காட்டினர் முதியோர் உதவித் தொகைத் திட்டங்களுக்கு வழிவாய்ப்புகளைப் பெற்றனர் என்பதை இப்பிரிவு ஆய்வு செய்கிறது. அட்டவணை-7.6 வறுமை, வேலையில் பங்கேற்பு வீதம், முதியோர் உதவித் தொகை (வழக்கமான) மற்றும் முதியோர் உதவித் தொகை (எல்லா வகைகளும்) பற்றிய, 1991 மக்கட்தொகைக் கணக்கெடுப்புப்படி முன்பு ஒருங்கிணைந்திருந்த 21 மாவட்டங்களில் தனித்தனியான அடிப்படை விவரங்களைக் காட்டுகிறது. அதில் கண்டுள்ளபடி முதியோர் உதவித் தொகை (வழக்கமான) திட்டத்தின் கீழ் மாநில சராசரி உள்ளடக்கம் 16.98% ஆகும். மாவட்டத்தின் மொத்த வறுமைவீதம் 31.66% ஆகும். இப்பகுத்தாய்விற்காக முதியோர் உள்ளிட்ட எல்லா வயதுத் தொகுதி மக்களிடையேயும் வறுமை சமமாகப் பரவியுள்ளது என ஊகிக்கப்படுகிறது. உள்ளடக்க விகிதம், பயனாளிகளின் எண்ணிக்கையை முதியோரின் மக்கட்தொகையால் வகுத்துக் கணக்கிடப்படுகிறது.

**அட்டவணை - 7.6 : முதியோரின் மக்கட்தொகை முதியோரின் வேலையில் பங்கேற்பு விகிதம் வறுமை மற்றும் முதியோர் உதவித் தொகை உள்ளடக்க விகிதத்திற்கிடையில் ஒப்புமைத் தொடர்பு**

| வரிசை எண் | மாவட்டம் | முதியோர் உதவித் தொகை (வழக்கமான) க்குத் தொடர்புள்ள 60+ இலக்கு முதியோர் மக்கட்தொகை 1991 (000 களில்) | எல்லா வகைகளிலும் 60+ இலக்கு முதியோர் மக்கட்தொகை 1991 (000களில்)[1] | முதியோரின் வே.ப.வீ (%) 1991 | வறுமையின் அளவு 1993-94 %[2] | முதியோர் உதவித் தொகை (வழக்கமான) பயனாளிகள் உள்ளடக்க விகிதம் (%) 1991-2000 | எல்லா 5 வகைகளும் பயனாளிகளின் உள்ளடக்க விகிதம் (%) 1999-2000 |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 1. | சென்னை | 177 | 257 | 16.81 | 31.58 | 24.39 | 17.37 |
| 2. | காஞ்சிபுரம் | 171 | 309 | 32.21 | 27.00 | 19.72 | 13.31 |
| 3. | வேலூர் | 118 | 222 | 36.82 | 36.55 | 20.37 | 17.33 |
| 4. | தருமபுரி | 104 | 168 | 45.10 | 26.70 | 17.51 | 15.67 |
| 5. | திருவண்ணாமலை | 86 | 157 | 45.55 | 42.15 | 26.35 | 20.71 |

(தொடர்ச்சி)

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 6. | கடலூர் | 187 | 328 | 44.28 | 50.91 | 15.53 | 11.62 |
| 7. | சேலம் | 180 | 320 | 45.16 | 30.14 | 19.77 | 13.42 |
| 8. | ஈரோடு | 122 | 217 | 46.59 | 18.32 | 8.94 | 6.75 |
| 9. | நீலகிரி | 25 | 38 | 23.79 | 21.24 | 8.08 | 7.84 |
| 10. | கோவை | 166 | 283 | 34.74 | 25.77 | 7.90 | 5.64 |
| 11. | திண்டுக்கல் | 69 | 130 | 46.13 | 46.28 | 13.99 | 9.04 |
| 12. | திருச்சி | 172 | 317 | 44.07 | 21.59 | 15.78 | 12.76 |
| 13. | தஞ்சாவூர் | 170 | 334 | 43.22 | 30.73 | 20.36 | 12.05 |
| 14. | புதுக்கோட்டை | 56 | 94 | 41.53 | 26.90 | 17.64 | 12.27 |
| 15. | சிவகங்கை | 53 | 88 | 46.60 | 26.63 | 16.33 | 11.48 |
| 16. | மதுரை | 123 | 246 | 39.35 | 30.35 | 23.18 | 15.81 |
| 17. | விருதுநகர் | 55 | 113 | 48.56 | 26.21 | 16.81 | 10.36 |
| 18. | ராமநாதபுரம் | 50 | 80 | 46.43 | 25.86 | 15.03 | 12.40 |
| 19. | தூத்துக்குடி | 62 | 122 | 41.84 | 47.02 | 14.76 | 9.61 |
| 20. | திருநெல்வேலி | 107 | 207 | 42.41 | 44.10 | 13.41 | 8.11 |
| 21. | கன்னியாகுமரி | 78 | 132 | 29.34 | 48.59 | 5.83 | 4.50 |
| | தமிழ்நாடு | 2331 | 4162 | 39.89 | 31.66 | 16.98 | 12.18 |
| | மாநில சராசரி | 111 | 198 | | | | |

*ஆதாரம் : 1. மக்கட்தொகைக் கணக்கெடுப்பு - 1991*

*2. பொருளியல் (ம) புள்ளியியல் இயக்ககம், சென்னை.*

*3. தமிழ்நாட்டின் மாவட்ட ஆட்சி தலைவர்களால் அளிக்கப்பட்ட புள்ளிவிவரங்களின் அடிப்படையில் கணக்கிடப்பட்டது.*

வறுமை மற்றும் முதியோர் உதவித் தொகை (வழக்கமான)க்கிடையில் பின்வரும் நிலைகளை அறியலாம்.

- சென்னை மாநகர், வேலூர், திருவண்ணாமலை, தஞ்சாவூர் மற்றும் மதுரை மாவட்டங்களில் முதியோர் உதவித் தொகை (வழக்கமான) பயனாளிகளின் எண்ணிக்கை, மாநில சராசரியைவிட 20% (அ) அதற்குமேல் உயர்வாயுள்ளது. எனவே, ஆதரவற்றிருக்கும் நிலைத் தகுதி வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழும் முதியோருக்கு முதியோர் உதவித் தொகை (வழக்கமான) பயனாளி களின் எண்ணிக்கை, மாநில சராசரியைவிட 20% (அ) அதற்குமேல் உயர்வாயுள்ளது. எனவே, ஆதரவற்றிருக்கும் நிலைத் தகுதி வறுமைக்கோட்டிற்குக் கீழ்வாழும் முதியோருக்கு முதியோர் உதவி தொகை பெறும் வழிவாய்ப்புகளை ஏற்படுத்தி உயிர்வாழ வகை செய்துள்ளது என நியாயமாகவும் நம்பிக்கையோடும் கூறலாம். இம்மாவட்டங்களுள் திருவண்ணாமலையும் தஞ்சாவூரும் மாநில சராசரியைவிட அதிகமான முதியோரின் வேலையில் பங்கேற்பு வீதத்தைப் பெற்றுள்ளன. இதிலிருந்து அறியக்கூடியது என்னவெனில், ஈட்டிய கூலி மிகக் குறைவாக (அ)

உயிர்வாழப் பற்றாக்குறையாக உள்ளது என்பதே. இரண்டு மாவட்டங்களில் ஒன்றில் (திருவண்ணாமலை 42.15%) வறுமை உயர்நிலையிலிருப்பது இதற்குச் சான்றுரைப்பதாய் உள்ளது.

- இடைநிலை வறுமை மாவட்டங்களான காஞ்சிபுரம், சேலம், புதுக்கோட்டை மற்றும் தருமபுரி மாநில சராசரியைக் காட்டிலும் உயர்வான உள்ளடக்க விகிதத்தைப் பெற்றுள்ளன. பிந்தைய மூன்று மாவட்டங்கள் மாநில சராசரியைக் காட்டிலும் உயர்வான முதியோர் வேலைப்பங்கேற்பு வீதத்தைப்பெற்றுள்ளன.

- கடலூர், தூத்துக்குடி மற்றும் திருநெல்வேலி மாவட்டங்கள், மாநில சராசரியைக் காட்டிலும் உயர்வான வறுமை நிலைகளைப் பெற்றுள்ளன. இருந்தும், முதியோர் உதவித் தொகையின் கீழ் அவற்றின் உள்ளடக்கம், மாநில உள்ளடக்க விகிதத்தைக் காட்டிலும் குறைவாக உள்ளது. இம்மாவட்டங்களில், வேலைப் பங்கேற்பு வீதங்கள் அதிகமாயிருந்தபோதிலும் உயர்கூலி வீதங்கள் காரணமாக ஏழை முதியோர் முதியோர் உதவித் தொகையின் உதவியை நாடவில்லை எனச் சொல்லமுடியாது. அப்படி இருந்திருந்தால் இம்மாவட்டங்களில் வறுமையின் அளவுகள் உயர்வாய் இருந்திராது. மிகக்குறைவான உள்ளடக்கத்திற்கான காரணங்களைத் தற்சார்பின்றி ஆய்வு செய்யவேண்டும்.

- இடைநிலை வறுமை மாவட்டங்களில், கோயம்புத்தூர், முதியோர் உதவித் தொகையின் கீழ் மிகக் குறைந்த விகிதத்தைப் பெற்றுள்ளது (7.90%) வேலைப் பங்கேற்பு வீதமும் மிகவும் குறைவு. (34.74%) இதிலும்கூட, மிகக்குறைவான உள்ளடக்கத்திற்கான காரணங்கள் ஆய்வு செய்யப்பட வேண்டும்.

- இடைநிலை வறுமை மாவட்டங்களான விருதுநகர் (26.21%) ராமநாதபுரம் (25.86%) மற்றும் சிவகங்கை (26.63%) ஆகியவையும்கூட நியாயமான முதியோர் உதவித் தொகை உள்ளடக்க விகிதங்களாய் முறையே 16.81%, 15.03% மற்றும் 16.33%-ஐப் பெற்றுள்ளன. இம்மாவட்டங்கள் வழக்கமாகப் பின்தங்கிய மற்றும் வறட்சிக்காட்படக்கூடிய மாவட்டங்கள் இங்கு முதியோரிடையே உயர் வேலைப்பங்கேற்பு வீதங்கள் குறைவான கூலிகள் காரணமாக உயிர்வாழ்வதற்கான போதிய வருவாயைப் பெற்றுத் தருவதில்லை.

- ஈரோடு மாவட்டத்தில் முதியோர் உதவித் தொகையின் கீழ்க் குறைவான உள்ளடக்க விகித (8.94%)த்திற்கு, இம்மாவட்டத்தில் மரபு வழியாய் பெரும்பான்மை வகுப்பினரிடையில் முதியோரை ஆதரித்துவரும் ஒரு குடும்ப அமைப்புமுறை காரணமெனக் கூறலாம்.

மேற்சொன்னவற்றிலிருந்து அறியப்படுவது என்னவெனில், மாவட்டவாரியான முதியோர் உதவித் தொகை திட்டங்களின் உள்ளடக்க விகிதங்கள், வறுமையின் அளவுகள் மற்றும் வேலைப் பங்கேற்பு வீதங்களோடு ஆய்வு செய்யப்படுகையில் மாறுபட்டதொரு நிலையைக் காட்டுகிறது. இருப்பினும் பின்வரும் உண்மை தெளிவாகத் தெரிகிறது. வறுமைக்கோட்டிற்குக் கீழ் வாழும் மக்களின் மாநில அளவிலான விழுக்காடு 31.66%-ஆக இருப்பதாய் நிச்சயமாய் எடுத்துக்கொண்டு (வறுமை, 60+ வயதான மக்கள்தொகையினரிடையே சமமாய்ப் பரவியிருப்பதாய்ப் புனைவியலாய் மீண்டும் கருதினாலும்) முதியோர் உதவித் தொகை (வழக்கமான)யின் உள்ளடக்கம் 16.98% மட்டுமே எல்லா திட்டங்களும் சேர்ந்து 12.18% மட்டுமே ஆகவும் இருக்கிறது. எனவே, உள்ளடக்கம் முதியோர் உதவித் தொகை (வழக்கமான)-யின் கீழ் வறுமைக்கோட்டின்கீழ் வாழும் முதியோரில் 55%-க்கும் குறைவாகவும், எல்லா திட்டங்களும் ஒன்றாய் சேர்ந்ததில் 40%-க்கு குறைவாகவும் உள்ளது. மாவட்ட நிருவாகத்தால் முதியோர் உதவித் தொகைகளை ஒப்பளிப்பதில் உச்சவரம்பு ஏதுமில்லாததால் ஏழை முதியோரிடையே முதியோர் உதவித் தொகைகளின் உள்ளடக்கம்

மனநிறைவளிக்கவில்லை. இக்குறைவான உள்ளடக்கத்திற்கான காரணங்கள் கவனமுடன் ஆய்வு செய்யப்படவேண்டும்.

## முதுமையின் பாலின உருவளவைகளும் சமூகப் பாதுகாப்பும்

1991 மக்கட்தொகைக் கணக்கெடுப்பு விவரங்கள் பெண்களைவிட (2 மிலியன்) ஆண் முதியோர் அதிகமிருப்பதை (2.16 மிலியன்) காட்டுகிறது. பெண் முதியோர் மக்கட்தொகையின் விகிதத்தை ஆண் முதியோர் மக்கட்தொகையின் விகிதம், வேலூர், திருநெல்வேலி, சிவகங்கை மற்றும் தூத்துக்குடி நீங்கலாய் மற்ற எல்லா மாவட்டங்களிலும் அதிகமாக உள்ளது. மேலும், ஆண் முதியோரின் விகிதம் எல்லா மாவட்டங்களிலும் நகர்ப்புறங்களிலிருப்பதைவிட கிராமப் புறங்களில் அதிகமாக உள்ளது. பெண் முதியோர் மக்கட்தொகையைப் பொறுத்தமட்டில் கடலூர், தஞ்சாவூர், புதுக்கோட்டை மற்றும் கன்னியாகுமரி போன்ற சில மாவட்டங்களில் நிலைமை எதிர்மறையில் இருப்பது உண்மை.

முதுமையின் பாலின உருவளவை மதிப்பிடலில் வேறுபிரிவுகளான முதியோரின் திருமணத் தகுதிநிலைக்கிடையில் பாலின விகிதம் கணக்கிடப்படுகிறது. சிவகங்கை (1016) தூத்துக்குடி (1050) மற்றும் திருநெல்வேலி (1020) நீங்கலாக எல்லா மாவட்டங்களிலும் பெண், ஆண் பாலின விகிதங்கள் மொத்த மக்கட் தொகையிலிருப்பதைவிட 60+ மற்றும் 70+ வயது தொகுதிகளில் குறைவாக உள்ளது. காஞ்சிபுரம், வேலூர், நீலகிரி, சிவகங்கை, விருதுநகர், தூத்துக்குடி, திருநெல்வேலி, கன்னியாகுமரி மற்றும் சென்னை மாநகரில் 80+ வயதுத் தொகுதியில் உயர் பாலின விகிதங்கள் அறிவிக்கப்பட்டுள்ளன.

முதியோருக்கு சமூகப் பாதுகாப்பு எனும் சூழமைவில் மேற்கண்டவற்றைக் காணுமிடத்து, 1999-2000-ல் ஆண்களைவிட பெண் முதியோர் உதவித் தொகை பயனாளிகள் அதிகமிருந்தனர். அதாவது பெண்கள் 2,45,000. ஆண்கள் 1,50,000. முன்னர் சுட்டிக்காட்டியபடி ஆண்களைவிடப் பெண்கள் அதிககாலம் வாழ்வதற்கு இது காரணமாயிருக்கலாம். எனவே உயிர்வாழ்வதற்காக அவர்கள் முதியோர் உதவித் தொகையை நாடினர். எல்லாவகையான 60+ முதியோர் உதவித்தொகை பயனாளிகளின் விவரங்களை ஒன்று சேர்த்தால் பெண் பயனாளிகளின் எண்ணிக்கை 3,21,000 ஆகிறது. முதியோர் உதவித் தொகை (வழக்கமான) உடல் ஊனமுற்றோர் மற்றும் வேளாண் தொழிலாளர் ஆகிய மூன்று வகைகளில் 1,86,000 ஆண் மற்றும் 2,94,000 பெண் பயனாளி களிருந்தனர். இதற்குக்காரணம், முதியோர் ஆண்களில் உயர்வேலைப் பங்கேற்பு வீதங்களாயிருக்கலாம். அதாவது பெண்களுடைய 21.31%-உடன் ஒப்பிடுகையில் ஆண்களின் 57.05% இருப்பினும் 60+ வயதான ஆண்களின் வேலைப் பங்கேற்பு வீதம் 1971-லிருந்த 70.23%-லிருந்தது 1991-ல் 57.05-க்குக் குறைந்தது. ஆனால் இது பெண்களைப் பொறுத்தவரை 13.27%-லிருந்து 21.31%-ஆக உயர்ந்தது. கிட்டத்தட்ட முதியோர் ஆண்களில் பெரும்பாலும் அரைபங்கும் முதியோர் பெண்களில் ஐந்தில் ஒரு பங்கும் தொழிலாளர் அணியில் இருந்தனர்.

## ஆண் முதியோரும் முதியோர் உதவி தொகையும்

மாவட்டங்களில் ஆண் முதியோர் உதவித் தொகை பயனாளிகளுடன் ஒப்புமைத் தொடர்புள்ள மாறுமியல்புகள் ஆண் முதியோர் மக்கட் தொகையும் ஆண் வேலைப் பங்கேற்பு வீதங்களுமாகும். அட்டவணை 7.7-ல் காட்டியுள்ளபடி, இலக்கு 60+ வயதான ஆண் முதியோர் உதவித் தொகை (வழக்கமான) மக்கட்தொகையின் பங்கீடு ஒருபுறமாய் சாய்ந்துள்ளது. முதியோர் உதவித் தொகை (வழக்கமான)யின் கீழ் இலக்கு மக்கட்தொகையில் 52.4%, 1991 மக்கட் தொகைக் கணக்கெடுப்பின்படி, மாநிலத்தின் 21 மாவட்டங்களில் 7-ல் நிறைந்திருக்கிறது. அவை : சென்னை, காஞ்சிபுரம், கடலூர், சேலம், கோயம்புத்தூர், திருச்சி மற்றும் தஞ்சாவூர் முதியோர் உதவித் தொகை (வழக்கமான) உடல் ஊனமுற்றோர் மற்றும்

வேளாண் தொழிலாளர் ஆகிய மூன்று இலக்கு மக்கட் தொகை ஒருங்கிணைந்து இதேபோன்று மேற்சொன்ன 7 மாவட்டங்களில் நிறைந்திருக்கிறது. இது இலக்கு மக்கட்தொகையில் 52.2% ஆகும். உயர் இலக்கு மக்கட்தொகை எவ்வாறிருந்த போதிலும், முதியோர் உதவித் தொகை (வழக்கமான)யின் கீழ் உள்ளடக்கம் மாநில சராசரியான 8.41%-ஐக் கோவையில் (3.66%) திருச்சியில் (8.09%) மற்றும் சேலத்தில் (8.30%) குறைவாயிருக்கிறது. குறிப்பிடத் தக்கவகையில் தருமபுரி (11.64%) திருவண்ணாமலை (13.06%) மற்றும் புதுக்கோட்டை (8.88%) மாவட்டங்கள் 60%-க்கு மிகையாய் ஆண் முதியோர் பங்கேற்பு வீதத்தைப் பெற்றிருந்த போதிலும் மற்றும் இலக்கு முதியோர் உதவித் தொகை (வழக்கமான) மக்கட்தொகை, மாநில சராசரியான 85-க்குக் குறைவா யிருந்தாலும் முதியோர் உதவித் தொகை (வழக்கமான)யில் ஒரு உயர்வான உள்ளடக்கத்தைப் பெற்றுள்ளன. மூன்று தொகுதிகள் ஒருங்கிணைந்த உள்ளடக்க விகிதங்களிலும் இதே மாதிரியான ஒரு போக்கு காணப்படுகிறது.

## அட்டவணை - 7.7 : ஆண் முதியோர் மக்கட்தொகை, ஆண் முதியோர் வேலைப் பங்கேற்பு வீதம் மற்றும் முதியோர் உதவித் தொகை உள்ளடக்க விகிதம் (தேர்வு செய்த சில மாவட்டங்களில்)

| வரிசை எண் | மாவட்டங்கள் | இலக்கு ஆண் முதியோர் மக்கட்தொகை 60+ (1000 களில்) | | ஆண் முதியோர் வே.ப.வி | ஆண் பயனாளிகள் (1999-2000)[2] உள்ளடக்க விகிதம் % | |
|---|---|---|---|---|---|---|
| | | முதியோர் உதவித் தொகை (வழக்கமான) தொடர்புடையவை | எல்லா மூன்று வகைகளும் முதியோர் உதவித் தொகை (வ) உ.ஊ. + வே.தொ. | % 1991[1] | மு.உ.தொ. (வ) | எல்லா மூன்று வகைகளும் (மு.உ.தொகை (வ) + உ.ஊ + வே.தொ) |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| 1. | சென்னை | 126 | 129 | 30.19 | 9.89 | 9.76 |
| 2. | காஞ்சிபுரம் | 131 | 157 | 49.31 | 9.93 | 10.37 |
| 3. | தருமபுரி | 78 | 92 | 61.77 | 11.64 | 14.00 |
| 4. | திருவண்ணாமலை | 70 | 84 | 63.31 | 13.06 | 14.40 |
| 5. | கடலூர் | 147 | 184 | 62.60 | 10.41 | 10.66 |
| 6. | சேலம் | 139 | 170 | 60.95 | 8.30 | 8.05 |
| 7. | கோவை | 126 | 149 | 50.46 | 3.66 | 3.65 |
| 8. | திருச்சி | 136 | 165 | 60.36 | 8.09 | 9.57 |
| 9. | தஞ்சாவூர் | 134 | 177 | 65.08 | 14.04 | 12.14 |
| 10. | புதுக்கோட்டை | 43 | 48 | 60.73 | 8.88 | 9.13 |
| | தமிழ்நாடு | 1789 | 2164 | 57.05 | 8.41 | 8.60 |
| | மாநில சராசரி | 85 | 103 | - | - | - |

*ஆதாரம் : 1. மக்கட் தொகைக் கணக்கெடுப்பு 1991*

*2. தமிழ்நாட்டில் மாவட்ட ஆணையரிடமிருந்து கிடைத்த புள்ளிவிவரங்களின் அடிப்படையில் கணக்கிடப் பட்டது.*

## பெண் முதியோரும் முதியோர் உதவித் தொகையும்

தமிழ்நாட்டின் மொத்த பெண் முதியோரின் மக்கட்தொகை, 1991 மக்கட் தொகைக் கணக்கெடுப்பின்படி ஏறத்தாழ 2 மிலியன்களாகும். பெண் வேலைப் பங்கேற்பு வீதம் ஆண் முதியோரின் வேலைப் பங்கேற்பு விதமான 57.05%-க்கெதிராய் 21.31% மட்டுமே. அட்டவணை 7.8 பெண் முதியோரின் மக்கட்தொகை, பெண் முதியோரின் வேலைப் பங்கேற்பு வீதம் மற்றும் முதியோர் உதவித் தொகை பெண் பயனாளிகளின் உள்ளடக்க விகிதம் ஆகியவற்றிற்கிடையான ஒப்புமைத் தொடர்பைக் காட்டுகிறது. முதியோர் உதவித் தொகையின் (வ) கீழ் 60+ வயதான இலக்குப் பெண் முதியோரின் மக்கட்தொகையை மதிப்பீடு செய்ய, ஆதரவற்ற விதவையர் ஓய்வூதியம் கணவரால் கைவிடப்பட்ட மனைவியர் ஓய்வூதியம், (ஆ.கை.ம.ஓ.) ஆதரவற்ற வேளாண் தொழிலாளர் ஓய்வூதியம் (ஆ.வே.தொ.ஓ.) மற்றும் ஆதரவற்ற உடல் ஊனமுற்றோர் ஓய்வூதியம் (ஆ.உ.ஊ.ஓ.) ஆகிய சிறப்பு திட்டங்களின் கீழ் முதியோர் உதவி தொகை பெறத் தகுதியுள்ள பெண் முதியோர், இச்சிறப்புத் திட்டங்களின்கீழ் முதியோர் உதவித் தொகை பயனைப் பெறுவர். முதியோர் உதவித் தொகை (வழக்கமான) திட்டத்தின் கீழானது அல்ல என ஊகிக்கப்படுகிறது. இந்த நான்கு திட்டங்களின் கீழான இலக்கு மக்கட் தொகை, முதியோர் உதவித் தொகையின் கீழ் இலக்கு மக்கட் தொகையைக் கணக்கிட 60+ வயதுத் தொகுதி மொத்த பெண் முதியோர் மக்கட்தொகையிலிருந்து கழிக்கப்படுகிறது.

### அட்டவணை - 7.8 : பெண் முதியோர் மக்கட்தொகை பெண் முதியோர் வேலைப் பங்கேற்பு வீதம் மற்றும் முதியோர் உதவித் தொகை உள்ளடக்கவிகிதம் (தேர்வு செய்த மாவட்டங்களில்)

| வரிசை எண் | மாவட்டங்கள் | இலக்கு பெண் முதியோர் மக்கட்தொகை 60+ (1000 களில்) | | பெண் முதியோர் வே.ப.வி | பெண் பயனாளிகள் (1999-2000)[2] உள்ளடக்க விகிதம் % | |
|---|---|---|---|---|---|---|
| | | முதியோர் உதவித் தொகை (வழக்கமான) தொடர்புடையவை | எல்லா மூன்று வகைகளும் முதியோர் உதவித் தொகை (வ) உ.ஊ. + வே.தொ.[1] | % 1991[1] | மு.உ.தொ. (வ) | எல்லா மூன்று வகைகளும் (மு.உ.தொகை (வ) + உ.ஊ + வே.தொ) |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| 1. | சென்னை | 31 | 128 | 3.45 | 60.15 | 24.98 |
| 2. | காஞ்சிபுரம் | 40 | 152 | 14.62 | 51.79 | 16.35 |
| 3. | வேலூர் | 26 | 112 | 17.55 | 58.30 | 22.98 |
| 4. | திருவண்ணாமலை | 16 | 73 | 25.01 | 84.53 | 27.99 |
| 5. | சேலம் | 42 | 150 | 27.17 | 57.93 | 19.52 |
| 6. | ஈரோடு | 31 | 102 | 26.83 | 22.04 | 9.41 |
| 7. | நீலகிரி | 7 | 18 | 12.13 | 16.78 | 9.71 |
| 8. | கோவை | 40 | 134 | 17.19 | 21.34 | 7.86 |
| 9. | திண்டுக்கல் | 14 | 60 | 29.13 | 53.73 | 15.07 |

(தொடர்ச்சி)

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| 10. | மதுரை | 25 | 122 | 23.56 | 85.96 | 25.53 |
| 11. | விருதுநகர் | 8 | 56 | 35.67 | 68.40 | 13.44 |
| 12. | கன்னியாகுமரி | 27 | 65 | 7.11 | 10.50 | 6.06 |
| | தமிழ்நாடு | 542 | 1998 | 21.31 | 45.28 | 16.05 |
| | மாநில சராசரி | 26 | 95 | | | |

*ஆதாரம் : 1. மக்கட் தொகைக் கணக்கெடுப்பு 1991*

*2. தமிழ்நாட்டில் மாவட்ட ஆணையரிடமிருந்து கிடைத்த புள்ளிவிவரங்களின் அடிப்படையில் கணக்கிடப் பட்டது.*

முதியோர் உதவித் தொகை (வழக்கமான)யின் மாநில உள்ளடக்க விகிதம் 45.28% ஆகும். சென்னை மாநகர், காஞ்சிபுரம், வேலூர், சேலம், திண்டுக்கல் மற்றும் விருதுநகர் 50%-க்கும் மேலான உள்ளடக்க விகிதத்தைப் பெற்றுள்ளன. திருவண்ணாமலையும், மதுரையும் ஒரு மிக உயர் உள்ளடக்கவிகிதமாக 80%-க்கும் அதிகம் பெற்றுள்ளன. நீலகிரியில் உள்ளடக்கம் மிகக் குறைவாயுள்ளது. மலை மாவட்டமாயிருப்பதால் இத்திட்டம் பற்றிப் போதிய அறிநிலையில்லாமை இதற்குக் காரணமாயிருக்கக்கூடும். இருப்பினும், கன்னியாகுமரி குறைவான பெண் முதியோர் வேலைப்பங்கேற்பு வீதத்தைப் பெற்றிருந்த போதிலும் (7.11%) ஒரு குறைவான உள்ளடக்கத்தையே (10.5%) பெற்றுள்ளது. மாவட்டத்தின் குடும்பக் கட்டமைப்பு இதற்குக் காரணமாயிருக்கலாம். இங்கு இளம் தலைமுறையினர், பெண் முதியோருக்குக் குடும்பத்திற்குள்ளாகவே, முறைப்படியல்லாத ஒரு சமூகப் பாதுகாப்பை அளிக்கின்றனர்.

அனைத்து ஐந்து முதியோர் உதவித் தொகை திட்டங்களில் மாநில சராசரி உள்ளடக்கம் 16.05% ஆகும். சென்னை மாநகர், வேலூர், திருவண்ணாமலை மற்றும் மதுரை மாவட்டங்கள், 20%-க்கும் மேற்பட்ட உள்ளடக்க விகிதத்தைப் பெற்றுள்ளன. கோவை மற்றும் ஈரோடு 10%-க்கும் குறைவான உள்ளடக்க விகிதத்தைப் பெற்றுள்ளன. இம்மாவட்டங்களில் குறைவான உள்ளடக்க விகிதத்திற்கான காரணங்கள், கிட்டத்தட்ட ஆண் முதியோரின் தேர்விலிருப்பதைப் போன்றே உள்ளன. பெண் முதியோரின் மொத்த உள்ளடக்க விகிதம் முதியோர் உதவித் தொகை (வ) மற்றும் முதியோர் உதவித் தொகை (எல்லா திட்டங்கள்) ஆகிய இரண்டிலும் நியாயமான அளவு சிறப்பாய் உள்ளது.

## ஆதரவற்ற விதவையர் ஓய்வூதியம் (ஆ.வி.ஓ)

1991 மக்கட் தொகைக் கணக்கெடுப்பின்படி 60+ வயதான விதவையரின் மாறிய மக்கட்தொகை 1.2 மில்லியன்களாகும். இதற்கு மாறாய் 1999-2000-ல் ஆதரவற்ற விதவையர் ஓய்வூதியம் பயனாளிகள் 22000 மட்டுமே இருந்தனர். இதன் உள்ளடக்க விகிதம் 1.82%[4] இது முதியோர் உதவித் தொகை (வழக்கமான) உள்ளடக்க விகிதமான 16.98%-ஐக் காட்டிலும் மிகக்குறைவானது. இது மூன்று காரணங்களினாலிருக்கலாம். அவை அ. விதவையரின் ஆதரவற்ற நிலைமை, முதியோர் உதவித் தொகை பெறுவோருடைதைக் காட்டிலும் குறைவாய் இருக்கலாம், ஆ. மொத்த பயனாளிகளின் எண்ணிக்கையில் 3,00,000-க்கு மேற்பட்டோர் 20-60 வயதுத் தொகுதிக்குள்

[4] பயனாளிகளின் எண்ணிக்கை 1999-2000-லிருந்தும் மக்கட்தொகை 1991-லிருந்தும் எனும் உண்மையின்படி நோக்கின் நடைமுறையில் உள்ளடக்க விகிதம் மேலும் குறைவாயிருக்கலாம்.

வருகின்றனர். இதிலிருந்து அதிக இளம்விதவைப் பயனாளிகளிருப்பது தெரியவருகிறது மற்றும் இ. 65 வயதுக்கும் மேலான ஆதரவற்ற விதவையர் முதியோர் உதவித் தொகை (வ)யின் கீழும் பயனடைந்திருக்கலாம். மேற்கூறியபடி, முறைப்படியாயில்லாத ஒருவாறான சமூகப் பாதுகாப்பு இளம் விதவையருக்கு அவர்களுடைய பிறந்த குடும்பங்களிலேயே கிடைக்கிறது. ஈரோடு, கோவை போன்ற மாவட்டங்களில் இது உண்மையான நிலை. இங்கு மரபுவழியான சாதி முறையமைப்பு, ஒருமுறைப்படியாயில்லாத சமூகப் பாதுகாப்பு ஏற்பாட்டை அளிக்கிறது. இவ்விரு மாவட்டங்களில் உள்ளடக்க விகிதம் முறையே 1.40%-ம் 0.80%-ம் ஆகும். திருநெல்வேலி மற்றும் கன்னியாகுமரி மாவட்டங்களும் கூட முறையே 0.75% மற்றும் 1.47% ஆ.வி.உ தொகை உள்ளடக்கத்தைப் பெற்றுள்ளன. இளம் விதவையருக்கு குடும்பப் பாதுகாப்பளிக்கும் சமூக வழக்காற்றை இது மீண்டும் எடுத்துக் காட்டுகிறது. ஈரோடு, திருவண்ணாமலை, கன்னியாகுமரி மற்றும் கோவை ஆகிய 4 மாவட்டங்களில் உள்ளடக்கம் பெரும்பான்மையாய் நகர்ப்புறத் தன்மையுடையதன் காரணமாயிருக்கலாம். மேலும் இது அவர்களுடைய துணைவர்களின் இறப்புக்குப் பிறகு ஆதரவற்ற விதவையர் ஓய்வூதியம் பெறவிரும்பும் முதிய விதவையருக்கு மட்டும் வரையறை செய்யப்பட்டிருப்பதும் காரணமாயிருக்கலாம்.

## கணவரால் கைவிடப்பட்ட மனைவியர் உதவித்தொகை

1991-ல் கைவிடப்பட்ட 60+ வயதான மனைவியரின் மக்கட்தொகை 14000-ஆக இருந்தது. ஆனால், ஆதரவற்ற, கைவிடப்பட்ட மனைவியர் உதவித்தொகையின் கீழ்ப் பயனாளிகளின் எண்ணிக்கை 1999-2000-ல் 5000-ஆக மட்டுமேயிருந்தது. திருவண்ணாமலை, வேலூர், தருமபுரி, மதுரை, கோவை, காஞ்சிபுரம், ஈரோடு மற்றும் விருதுநகர் மாவட்டங்களில் கைவிடப்பட்ட மனைவியர் உதவித்தொகை பெறுவோர் அதிகமாய் உள்ளனர். அவர்கள் முக்கியமாய் 40-50 வயதுத் தொகுதியில் உள்ளனர். தஞ்சாவூரில் 50-60 வயதுத் தொகுதியில் அதிக விதவையர் பயனாளிகள் உள்ளனர். இதைத் தொடர்ந்து சென்னை மாநகர், திருநெல்வேலி மற்றும் திருவண்ணாமலை வருகின்றன. 30-40 வயதுத் தொகுதியில் அதிக விதவையர் பயனாளிகளாய் பெற்றுள்ள மாவட்டங்கள், தூத்துக்குடி, ராமநாதபுரம், புதுக்கோட்டை, சிவகங்கை, வேலூர், விருதுநகர் மற்றும் சேலம் ஆகும். மொத்தத்தில் இத்திட்டத்தின் அடைவு ஒப்பீட்டடிப்படையில் குறைவு. கிராமப்புறங்களில் இளம்விதவையர் பால் காட்டப்படும் ஒரு இழக்குணர்வு இதற்கொரு காரணம். பொதுமக்களிடையில் இத்திட்டம் பற்றிய போதிய அறியாதிருப்பது இதற்கு மற்றொரு காரணமாகும்.

## ஆதரவற்ற உடல் ஊனமற்றோர் ஓய்வூதியம்

மாநிலத்தில் இவ்வுதவித்தொகை பெறும் ஆதரவற்ற உடல் ஊனமுற்ற நபர்களின் மொத்த எண்ணிக்கை 1995-96-ல் 2934-லிருந்து 1999-2000-ல் 3462-ஆக உயர்ந்தது. உள்ளடக்கம் முறையே 3.71%-லிருந்து 4.38%-க்கு உயர்ந்தது. மொத்த / விகிதாச்சாரப்படி இது குறைவே. 60+ வயதான தொகுதியில் இயலாதோரின் மக்கட் தொகை மதிப்பீடு 79,000. குறைவான உள்ளடக்கத்திற்கு மிக முக்கியக் காரணமாயிருப்பது[5] நியாயமற்ற வரையறைத் தகுதி விதி முறைகளாகும். 50% உடல் ஊனம் எனும் தகுதிநிலை, உள்ளடக்கத்தை மேலும் விரிவுபடுத்தும் பொருட்டு 25% ஆகக் குறைக்கப்பட வேண்டும். 4.38% எனக் குறைவான உள்ளடக்க விகிதம் இருந்த போதிலும் 1999-2000-ல் இத்திட்டத்திற்கென ரூ. 7.92 மில்லியன் செலவிடப்பட்டது. உள்ளடக்கம் 20-லிருந்து 30% வரை விரிவுபடுத்தப்பட்டால் ஆண்டு ஓய்வூதிய முதலீடு ரூ.36.16 மில்லியன் மட்டுமேயாகவும் (20% உள்ளடக்கப்படி) மற்றும் ரூ.54.25 மில்லியன் மட்டுமே ஆகவும் (30% உள்ளடக்கப்படி) இருக்கும். இது பெரும் செலவு எனக் கூற முடியாது.

## ஆதரவற்ற வேளாண் தொழிலாளர் ஓய்வூதியம்

மாநிலத்தில் இத்திட்டத்தின் கீழ் உ.தொ. பெறுவோரின் மொத்த எண்ணிக்கை 1995-96-ல் 75,038-லிருந்து 1999-2000-ல் 80,731 ஆக உயர்ந்தது. இது மொத்த 60+ வயதான வேளாண் தொழிலாளரில் 15.10% ஆகும் மாவட்டங்களின் புள்ளி விவரங்கள் முதியோர் வேலையில் பங்கேற்பு வீதம், முதியோர் சார்ந்திருத்தல் விகிதம் மற்றும் ஆதரவற்ற வேளாண் தொழிலாளர் ஓய்வூதிய திட்டத்தின் கீழ் உள்ளடக்க விகிதம் ஆகியவற்றிற்கிடையே ஒரு கலவையான ஒப்புவமைத் தொடர்வை வெளிப்படுத்துகிறது. காஞ்சிபுரம் (மாவட்ட சராசரியுடன் ஒப்பிடுகையில்) குறைவான வேலையில் பங்கேற்பு வீதம் (32.21%) குறைவான சார்ந்திருத்தல் விகிதம் (109%) மற்றும் உணரக்கூடிய வகையில் ஒரு குறைவான உள்ளடக்க விகிதத்தை (17.68%) ஐப்பெற்றுளது. ஆனால் வேலூர், நல்ல உயர் முதியோர் வேலைப் பங்கேற்பு விகிதத்தை (36.82%)-யும் உயர் சார்ந்திருத்தல் விகிதத்தையும் (124%) பெற்றிருந்தும், உயர் உள்ளடக்க விகிதத்தை, 40.36%-ஐப் பெற்றுள்ளது. சேலம், தஞ்சாவூர், மதுரை, திண்டுக்கல், விருதுநகர், திருநெல்வேலி, சிவகங்கை உயர் முதியோர் வேலைப் பங்கேற்பு விகிதத்தைப் பெற்று, இதற்கு ஒத்திசைவாக குறைவான உள்ளடக்க விகிதத்தைப் பெற்றுள்ளன (இருப்பினும் சார்ந்திருத்தல் விகிதம், சில மாவட்டங்களில் குறைவாயும், மற்ற மாவட்டங்களில் உயர்வாயும் உள்ளன). திருவண்ணாமலை, தருமபுரி, கடலூர், ராமநாதபுரம் மற்றும் புதுக்கோட்டை உயர்வேலைப் பங்கேற்பு வீதத்தைப் பெற்றிருப்பினும், உயர் உள்ளடக்க விகிதத்தையும் பெற்றுள்ளன. இதனால் அறிவதென்னவெனில் முதியோர் மட்டும் வேளாண் கூலிகள், இலக்கு மக்கட்தொகையை ஆதரவற்ற நிலைமைக்கு உயர்த்தப் போதுமானதாயில்லை அல்லது இதற்கு மாற்றாக, உள்ளடங்கிய பயனாளிகள், எந்த வேலையும் செய்யவில்லை. எனவே, ஆதரவற்ற வேளாண் தொழிலாளர் ஓய்வூதியத்தை சார்ந்திருக்கின்றனர் என்பதே. பல மாவட்டங்களில், வேளாண் நடவடிக்கைகள், பருவ காலத்திற்குரியனவாய் உள்ளன என்பது இங்கு சுட்டிக்காட்டப்பட வேண்டியதாய் உள்ளது (ராமநாதபுரம், புதுக்கோட்டை போன்ற மாவட்டங்கள்) எனவே, இலக்கு மக்கட்தொகை, இன்னும் பிழைத்திருக்கும் நிலைக்குக் குறைவாகவே உள்ளனர்.

## முதியோர் உதவித்தொகை திட்டச் செலவினம்

அட்டவணை 7.9, 1995-96 முதல் 1999-2000 வரையிலான காலத்தில் மு.உ.தொ. திட்டங்களின் வகைவாரி செலவினங்களைக் காட்டுகிறது. 60+ வயதான முதியோர் மக்கட்தொகைக்கான எல்லா மு.உ.தொ. திட்டங்களுக்கான மொத்த செலவினம் 1995-96-லிருந்த ரூ.382.28 மில்லியன்களிலிருந்து 1999-2000-ல் ரூ. 820.95 மில்லியனாய் உயர்ந்தது. தற்போதைய விலை நிலவரப்படி வளர்ச்சி வீதம் 21.06%. பயனாளி ஒருவருக்கான செலவினம் 1995-96-ல் ரூ.1097-லிருந்து 1999-2000-ல் ரூ. 1619.66 ஆக உயர்ந்தது. இதற்குக் காரணம் அக்காலத்தில் ஓய்வூதியத் தொகையின் வீதம் ரூ.75-லிருந்து ரூ.150 ஆக உயர்த்தப்பட்டதே.

மு.உ.தொ. (வழக்கமான) 1999-2000-ல் மொத்த மு.உ.தொ. செலவினத்தில் 77.21%-ஐப் பெற்றது. செலவினத்தைப் பொறுத்தமட்டில் அடுத்த மிகப்பெரிய திட்டம் ஆதரவற்ற வேளாண் தொழிலாளர் ஓய்வூதியத் திட்டம். இது மொத்த செலவில் 16.37% ஆக இருந்தது. ஆதரவற்ற உடல் ஊனமுற்றோர் உ.தொ., ஆதரவற்ற விதவையர் உ.தொ., மற்றும் கணவரால் கைவிடப்பட்ட மனைவியர் உ.தொ. ஆகியவற்றின் செலவு மொத்த செலவில் 6.42% மட்டுமே. 1999-2000-ல் மு.உ.தொ. திட்டங்களின் செலவினம் மொத்த வருவாய் செலவில் 0.41% ஆக இருந்தது.

அட்டவணை - 7.9 : தமிழ்நாட்டில் 60+ வயதான முதியோர் மக்கட்தொகைக்கான மு.உ.தொ. செலவினம்

(ரூபாய் லட்சங்களில்)

| வகை | செலவு 1995-96 | மொத்தத்தில் விழுக்காடு | செலவு 1999-2000 | மொத்தத்தில் விழுக்காடு |
|---|---|---|---|---|
| 1. மு.உ.தொ.[1] (வழக்கமான) | 2748.64 | 71.90 | 6338.79 | 77.21 |
| 2. ஆதரவற்ற உடல் ஊனமுற்றோர்[2] | 47.54 | 1.24 | 79.20 | 0.96 |
| 3. ஆதரவற்ற விதவையர்[2] | 99.91 | 2.62 | 342.90 | 4.18 |
| 4. ஆ.வே.தொ.[1] | 897.58 | 23.48 | 1343.69 | 16.37 |
| 5. ஆதரவற்ற கைவிடப்பட்ட மனைவியர்[2] | 29.15 | 0.76 | 104.91 | 1.28 |
| மொத்த செலவினம் (ரூ. லட்சங்களில்) | 3822.82 | 100.00 | 8209.49 | 100.00 |
| செலவினம் (ரூ. கோடிகளில்) | 38.23 | - | 82.09 | - |
| வருவாய் செலவினம் (ரூ. கோடிகளில்)[3] | 10910.57 | - | 20166.02[4] | - |
| 60+வயதான மு.உ.தொ. மீதான செலவினம் | - | - | - | - |
| வருவாய் செலவினத்தில் % ஆக | 0.35 | - | 0.41 | - |
| பயனாளி ஒருவருக்கான செலவு (ரூ.) | 1097.00 | - | - | 1619.66 |

*ஆதாரம் : 1. மா.ஆட்சியர்கள் தமிழ்நாடு*

*2. இலக்குப் பயனாளிகளுக்கான மொத்த செலவினத்தின் அடிப்படையில் (ஆ.உ.ஊ.), ஆ.வி.ஓ. மற்றும் கைவிடப்பட்ட விதவையர், ஓய்வூதியம் ஆகிய மூன்று வகைகளின் தனி ஒரு பயனாளியின் செலவினம் கணக்கிடப்பட்டு 60+ வயதான தொகுதியின் செலவினம் அடையப்பட்டது.*

*3. 1999-2000 வரவு செலவு திட்ட உரையின் பின்னிணைப்புகள்*

*4. வரவு செலவு திட்டக்குறிப்பு - பிரிவு - 1-2000-01*

## முதியோருக்கு நலக்காப்பு வீட்டுவசதி மற்றும் ஏனையச் சமூகப் பணிகள்

### நோய்

வயதாக வயதாக முதியோர், நிலைத்திருக்கும் உடல்நலப் பிரச்சனைகள் மற்றும் கடுமையான நோய்களால் பீடிக்கப்படுகின்றனர். சில வேளைகளில் பல்மடங்கு இயல்புகளுடன் இதன் விளைவாய், பார்வையிழப்பு காது கேளாமை மற்றும் நடமாட்டமின்மை காரணமாய் அவர்களுடைய செயல்திறன் அடிக்கடி பாதிக்கப்படுகிறது. எனவே அவர்களுக்குத் தனி மருத்துவ மற்றும் செவிலிப் பணியும் வீட்டிலும் மருத்துவமனைகளிலும் நீண்டகாலத்திற்கு நோய்களுக்கான சிகிச்சையும் தேவைப்படுகிறது.

இரத்தக்கொதிப்பு (அ) அழுத்தம், இதய நோய், நீரிழிவு நோய் போன்ற பெரிய நோய்கள் கிராமப்புறங்களோடு ஒப்பிடுகையில் நகர்ப்புற முதியோர்களிடையே, ஒருவேளை நகர்ப்புற வாழ்க்கை முறை காரணமாய் மிகப் பரவலாய்க் காணப்படுகின்றன. தே.மா.க. நிறுவனத்தின் 52-ஆவது சுற்று (1995-96) புள்ளிவிவரப்படி கிராமப்புற மற்றும் நகர்ப்புறங்களில் வசிக்கும் பெண்களைவிட, ஆண்களிடையே நாள்பட்ட நோய்கள் அதிகளவு பரவியிருப்பதாய்த் தெரிய வருகிறது.

மனநோய் போன்ற வயதானவர்களைப் பாதிக்கக்கூடிய வயதுக்குரிய நோய்களும் உள்ளன. மேலும் தடுமாற்றம், இடுப்பு எலும்பு முறிவு உணர்வு இழப்பு போன்ற உடனிருக்கும் பலதரப்பட்ட உடல்நிலைக் கோளாறுகள் தன்மதிப்பு மற்றும் தற்சார்பு இழப்புக் காரணமாய் மனநலத்தைப் பாதிக்கிறது. மேலும் சமுதாய முறைகளில் மாற்றங்கள் முதியோர்களையும் அவர்கள் மதிக்கப்படும் முறைகளையும் மாற்றுகின்றன. இந்த மாற்றங்கள் மன அழுத்தம், கவலை, ஏன் தற்கொலை போன்ற மோசமான மனநல விளைவுகளில் கொண்டுபோய்விடக்கூடும்.

முதியோரிடையே நோயுற்றநிலை மாதிரியைப் பற்றியே மட்டும் விரிவான ஆய்வுகள் தற்போது தமிழ் நாட்டில் கிடைக்கவில்லையாயினும் இந்திய மருத்துவ ஆராய்ச்சிக் குழுவால் தேசீய அளவில் மேற்கொண்ட முதியோரின் இயலாமை பற்றிய ஆய்வில் 88% பார்வைக்கோளாறுகளாலும் 40% நடமாட முடியாமையாலும் 18.7% நரம்புக் கோளாறுகளாலும் 8.1% உளநோய் சிரமங்களால் பாதிக்கப்பட்டிருப்பதாயும் தெரியலாயிற்று. மேலும் ஒரு இந்திய மருத்துவ ஆராய்ச்சிக் குழுவின் ஆய்வு, 20.74% பேர் மன அழுத்தத்தால் பாதிக்கப்பட்டதாகக் கண்டறிந்துள்ளது. தமிழ்நாட்டைப் பொறுத்தமட்டில், நகர்ப்புறம் மற்றும் கிராமப்புறங்களில் உடலியலான இயலாமையில் (மற்றவை ஏதுமல்லாத) மிகக் குறைவான நடப்பிலிருந்த வீதத்தை (முறையே 31.4% மற்றும் 33.1%) பெற்றுள்ளது எனக் கூறலாம்.

**அட்டவணை - 7.10 : பாலினவாரியாய் 60+வயதான நபர்களிடையில் உடலியல் இயலாமை நடப்பிலிருப்பு வீதம் (ஒரு லட்சம் நபர்களில் ஒருவர் வீதம்)**

| | | ஆண்கள் | பெண்கள் | மொத்தம் |
|---|---|---|---|---|
| தமிழ்நாடு | கிராமப்புறம் | 40,435 | 34,879 | 37,913 |
| | நகர்ப்புறம் | 33,391 | 29,586 | 31,479 |
| இந்தியா | கிராமப்புறம் | 38,002 | 42,455 | 40,247 |
| | நகர்ப்புறம் | 16,559 | 36,696 | 35,608 |

ஆதாரம் : *தேசீய மாதிரிக் கணக்கெடுப்பு நிறுவனம் (தே.மா.க.நி) 52-வது சுற்று 1995-96*

முதியோர், குறிப்பாய் பெண்கள் வீதப்படியல்லாமல் ஏழையராயிருப்பதால் பொதுவான மக்கட் தொகையைக் காட்டிலும் ஊட்டக்குறைவாயிருக்கும் வாய்ப்புள்ளது போதிய உணவு இல்லாமை, குழப்பம் மற்றும் மறதி போன்ற பிரச்சனைகளுக்கு வழிவகுக்கக்கூடும். இப்பிரச்சனைகள் தவறாக நோய் கணிக்கப்பட்டு நிலைமை மேலும் மோசமாக்கக் கூடும். எடுத்துக்காட்டாக குழப்பத்திற்கான அறிகுறிகளை வெளிப்படுத்தும் ஒரு நோயாளி, உடலுறுப்புக் கோளாறினால் ஊகிக்கப்படலாம். ஆனால் உள்ளபடியே அவர் ஊட்டக்குறைவினால் பாதிக்கப்பட்டிருக்கக்கூடும். மற்றொரு நிலைப்பாடு இயல்பாய் வயதாவதன் காரணமாய் முதியோர், குழம்பியும் மந்தமாயும் இருப்பர் என மக்கள் நம்புவதால் ஊட்டக்குறைவின் அறிகுறிகளை அவர்கள் ஏற்பதில்லை அதன் காரணமாய் முதியோரை சிகிச்சை எடுத்துக்கொள்ளும்படி சமுதாயம் ஊக்குவிப்பதில்லை. இவ்வாறாக ஊட்டக்குறைவினால் ஏற்படும் உறுப்புக் கோளாறுகளுக்கான அறிகுறிகள் சரிவர கவனிக்கப்படாமல் நோயாளிகள் நோய் அறுதியிடப்படாமல் விடப்பட்டிருத்தல் மிகப் பரவலாகக் காணப்படுகிறது.

**நிறுவனக்காப்பும், சமூகப் பாதுகாப்பும்**

ஒரு பொதுநல வாழ்வு திட்டம் மூலம் முதியோரின் நலன்களைப் பாதுகாப்பது அரசின் பொறுப்பாயிருந்தாலும், அம்மாதிரியான மிக நல்லதொரு முறை தற்போதில்லை. ஒரு தனித்திறம் வாய்ந்த துறையாய், முதியோர் மருத்துவம், சென்னையில் உள்ள அரசு பொதுமருத்துவமனையில் மட்டுமே உள்ளது. தனியார் மருத்துவமனைகளில் முதியோர் மருத்துவத்திற்கான அதிக வசதிகளிருப்பினும், செலவு மிக அதிகமாயிருக்கும் காரணத்தால் நகர்ப்புற மற்றும் கிராமப்புறங்களில் வசிக்கும் ஏழையரால், இம்மருத்துவமனைகளை அணுக முடிவதில்லை. இவையனைத்தும், ஏழையர் முதியோர் நலனுக்கான வழிவாய்ப்புகளுக்கும் கடும் தடைகளாய் உள்ளன. எனவே, முதியோருக்கான நிறுவனக்காப்பு முக்கியமாய் சமய அறக்கட்டளை நிறுவனங்கள் போன்ற லாபநோக்கற்ற தொண்டு நிறுவனங்களால் அளிக்கப்படுகிறது. முதுமைக்கான சென்னை நிறுவனம் 'முதியோரின் நலக்காப்பு' (1989) எனும் தலைப்பைக் கொண்ட ஒரு தனிக்கட்டுரையில் முதியோருக்குக் காப்பளிக்கும் பணியில் ஈடுபட்டுள்ள நாடெங்கிலுமுள்ள 329 நிறுவனங்களைப் பட்டியலிட்டுள்ளது. இவ்வாய்வின்படி தமிழ்நாடும் கேரளாவும் இந்தியாவிலிருக்கும் மற்ற மாநிலங்களைவிட அதிக முதியோர் காப்பு நிறுவனங்களைப் பெற்றுள்ளன. தமிழ்நாட்டில் 71 முதியோர் இல்லங்கள், கேரளாவில் 70 மொத்தத்தில் தென்னக மாநிலங்கள் (தமிழ்நாடு, கேரளா, கர்நாடகா, ஆந்திரப்பிரதேசம்) அனைத்து முதியோரில்லங்களிலும் 57%-ஐப் பெற்றுள்ளன. அண்மையாண்டுகளில் தமிழ்நாட்டிலும், ஆந்திராவிலும் திறக்கப்பட்ட புதிய இல்லங்களின் எண்ணிக்கை மிக அதிகம். (இருதயராஜன், 1999)

ஏழை முதியோர் நோயுற்றவர்கள் மற்றும் ஊனமுற்ற முதியோருக்கு இன்னும் முதியோரில்லங்கள் தேவைப்படுகின்றன. ஏழையல்லாதவருக்கும் முதியோரில்லங்களின் எண்ணிக்கை மிகச்சிறிதளவே. மேலும் இவை எப்போதுமே நெரிசலாய் உள்ளன. பகற்காப்பு மையங்களுக்கும் பெருந்தேவையுள்ளது. ஏனெனில் பெரியவர்கள் வெளியில் வேலைக்குச் செல்லும்போது, குழந்தைகளையும் பேரக் குழந்தைகளையும் வீட்டில் தனியே விட்டுச் செல்ல முடியாது.

**அட்டவணை - 7.11 : இந்திய அரசின் நிதியுதவியின் கீழ்உள்ள முதியோர் இல்லங்கள் மற்றும் பகற்காப்பு மையங்களின் எண்ணிக்கை**

| | தமிழ்நாடு | அனைத்திந்தியா |
|---|---|---|
| 1. முதியோரில்லங்களின் எண்ணிக்கை | 20 | 234 |
| முதியோரின் எண்ணிக்கை | 500 | 5850 |
| 2. பகற்காப்பு மையங்களின் எண்ணிக்கை | 27 | 398 |
| முதியோரின் எண்ணிக்கை | 1350 | 19,900 |

*ஆதாரம் : சமூகநீதி மற்றும் அதிகாரமளிப்புத்துறை அமைச்சகம், இந்திய அரசு 'இந்தியாவில்' முதியோர் வடிவுருவமும் திட்டங்களும் 2000'-ல் குறிப்பிட்டுள்ளபடி இந்திய அரசு CSO*

ஒரு விரிவான நீண்டகாலத் திட்டமும் தேவையாயுள்ளது. தமிழ்நாட்டில் முதியோரின் மக்கட்தொகை அதிர்ச்சியூட்டும் அளவு பெருகிவரும் நிலையில் தொடக்கநல நிலைய நிலையில் முதியோருக்கு நலக்காப்பு அளிக்கப்பட வேண்டும். தொடக்கநல நிலையங்களில் உள்ள மருத்துவர்களுக்கும், மருத்துவம் சார்ந்த பணியாளருக்கும் முதியோர் காப்பில் தொடக்கநல

நிலையங்களிலேயே முதியோரின் அடிப்படைக் கோளாறுகளுக்கு சிகிச்சையளிக்கும் வகையில் பயிற்சியளிக்கப்படவேண்டும்.

மேலும் நிறுவனக் காப்போடு கூடுதலாய் சமூகப் பாதுகாப்பும் அளிக்கப்பட வேண்டும். அண்மைக்காலம் வரை, பணியிலிருந்து ஓய்வு பெற்றபின் மக்களுக்கு மருத்துவக் காப்பளிக்கும் சமூகப் பாதுகாப்பளிக்கும் திட்டம் ஏதும் இல்லை. இருப்பினும் அண்மையில் குறைந்தது ஓய்வு பெற்ற அரசு அலுவலர்களுக்கு சமூகப் பாதுகாப்புப் பயன்களை விரிவுபடுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. மத்திய அரசின் நலவாழ்வுப் பணித்திட்டமும் தொழிலாளர் ஈட்டுறுதித் திட்டமும் (தொ.ஈ.தி.) தமிழ்நாட்டிலுள்ள மத்திய அரசு அலுவலர்களுக்கு விரிவுப்படுத்தப்பட்டது. தமிழ்நாட்டில் ஓய்வு பெற்ற அரசுப்பணி அரசு மருத்துவமனையில் மருத்துவ வசதிகளைப் பயன்படுத்திக் கொள்ள அனுமதிக்கப்பட்டுள்ளனர். இருந்த போதிலும் இத்திட்டங்களில் இடம்பெறாத பெரும் எண்ணிக்கையிலான மூத்த குடிமக்களுக்குக் குறிப்பாக ஏழையர்க்கு மருத்துவக் காப்பளிக்க ஏற்பாடு ஏதும் செய்யப்படவில்லை. அவர்கள் பொது மருத்துவ சேவையையே நம்பியிருக்க வேண்டியுள்ளது.

பொதுத்துறை ஈட்டுறுதி நிறுமங்கள், மருத்துவ உதவிக் கேட்பு ஆவணங்களைக் கொண்டுள்ளன. ஆனால் இவை, பொதுவாக முறைப்படியான வருமானத்தைப் பெறும் நடுத்தர வருவாய் வகுப்புகளைச் சேர்ந்த வயதானவர்களையே இலக்காகக் கொண்டுள்ளன. மேலும், பெரும்பாலான திட்டங்கள் 70 வயதிற்கும் மேற்பட்டவர்களுக்கு மருத்துவ ஈட்டுறுதியையளிப்பதில்லை. இப்பிரிவினருக்கே மற்றவர்களைக் காட்டிலும் பெருமளவு மருத்துவக் காப்பு தேவைப்படுகிறது. ஆனால் தவணைத் தொகையின் வீதம் இவ்வயதுப் பிரிவினருக்கு, அதுவும் வருவாயில் ஒரு குறைவு ஏற்படும் காலத்தில், மிக அதிகமாயிருக்கிறது. ஈட்டுறுதித் துறையை வெளிநாட்டு நிறுமங்களுடன் கூட்டு முயற்சிகளுக்கனுமதியளிக்கப்பட்டிருப்பதைத் தொடர்ந்து, முதியோரின் தேவைகளை நிறைவுசெய்ய உரிய திட்டங்கள் உருவாக்க இயலும்.

### கொள்கைக் கட்டாயங்கள்

மேலே விளக்கியுள்ளபடி கடந்த இருபதாண்டுகளில் நிகழ்ந்த மக்கட் தொகையியல் மாற்றம் மக்கட்தொகையில் வயது கட்டமைப்பில், அதாவது மக்கட்தொகையில் இன்று முதியோர் ஒரு பெருகிய பங்கைப் பெற்றிருக்கும் ஒரு சமச்சீரின்மையை உருவாக்கியுள்ளது. இந்த மக்கட் தொகையியல் மாற்றங்களைத் தொடர்ந்து சிறு குடும்பங்களின் தோற்றம், மரபுவழியாய் வரும் குடும்ப முறைகளின் அழிவு, இளந்தலைமுறையினருக்கும் முதியோருக்கும் இடையில் மாறிவரும் மதிப்புகள் போன்ற சமூக பொருளாதார மாற்றங்கள் நிகழ்கின்றன. இம்மாற்றங்கள், முதியோருக்குக் கடும் விளைவுகளை ஏற்படுத்தும்.

எனவே இந்த மக்கட்தொகையியலின் மாற்றங்களின் அடிப்படையில் முதியோரின் எதிர்கால அளவும் அமைப்பும் உடல் இயல் மற்றும் மனநல அடிப்படையில் அவர்களுடைய தேவைகளை மதிப்பிடக் கருத்தில் கொள்ளப்பட வேண்டும். முதியோருக்காக ஒரு பரந்த கொள்கை வகுக்கப்பட வேண்டும். அத்தகைய கொள்கையின் விரிவான அம்சங்கள் பொதுவில் முதியோர் காப்பையும் (நலப்பாதுகாப்பு) பணப் பிரச்சினைகளையும் (சமூகப் பாதுகாப்பு) மற்றும் நிறுவன ஆதரவு ஆகியவற்றைக் கருத்தில் கொள்ள வேண்டும். இவை ஒவ்வொன்றின் கொள்கைக் கட்டாயங்கள் அடியில் முன்னிலைப்படுத்தப்பட்டுள்ளன.

**நலப்பாதுகாப்பு**

- அரசு மருத்துவமனைகள் ஒரு முதியோர் மருத்துவத்துறை வல்லாருடன் கூடிய முதியோர் பிரிவினைப் பெற்றிருக்க வேண்டும். மேலும் முதியோர் புற நோயாளர்கள் நீண்ட வரிசையில் காத்திருக்காமல் மருத்துவர்களிடமிருந்து முன்னுரிமை கவனத்தைப் பெறவேண்டும்.

- முதியோரின் உடலியல் மற்ற உளவியல் தேவைகளுக்கேற்ப ஒருங்கிணைந்த காப்பைப் பெற்றிருக்க வேண்டும். முதியோர், உளவியல் பிரச்சனைகளைவிட உடலியல் கோளாறு களுக்கான சிகிச்சையைப் பெறவே பெரிதும் விரும்புவர். எனவே அது தற்போதிருக்கும் உடலியல் நோய்களுக்கு சிகிச்சையளிக்கும் முறையின் ஒரு பகுதியாயிருப்பின், உளவியல் கோளாறுகளுக்கு சிகிச்சையளிக்கும் எந்த முயற்சியும் மிகுந்த பயனளிப்பதாயிருக்கும். இது மிக விலை மலிவானதாயிருக்கும்.

- தொடக்கநல நிலைய மருத்துவர்களுக்கும், மருத்துவத்துறைசார்ந்த பணியாளருக்கும் முதியோருக்கும் சிகிச்சையளிப்பதில் அடிப்படைப் பயிற்சி அளிக்கப்பட வேண்டும். அமைப்பு சாரா கிராமிய மருத்துவர் திட்டங்கள் உருவாக்கப்பட்டு மருத்துவத் துறைசார்ந்த பணியாளர்கள் வீடுதோறும் சென்று முதியோரின், குறிப்பாக கிராமப்புறங்களிலிருப்போர், உடலியல் மற்றும் மனநலப் பிரச்சனை குறித்துப் பரிசோதனைகள் மேற்கொள்ள வேண்டும்.

- முதியோருக்கும் அவர் தம் குடும்பங்களுக்கும் பொழுது போக்குவசதிகள் மற்றும் மருத்துவப் பரிசோதனை, ஆலோசனை போன்ற மற்ற சேவைகளையளிக்கும் பன்னோக்குப் பகல் காப்பு மையங்கள் ஏற்படுத்தப்பட வேண்டும்.

- இல்ல மற்றும் நிறுவனக் காப்புகள் உள்ளிட்ட நீண்டகாலக் காப்புத்தேவைகளை நிறைவு செய்யவும் ஏற்கக் கூடிய காப்புத் திட்டங்களை உருவாக்க ஆராய்ச்சி தேவை. உரிய காப்பு முறையை உருவாக்க, தமிழ்நாட்டில் முதியோருக்கு வரக்கூடிய பெரிய நோய்கள் மற்றும் அவற்றின் வழக்கிலிருத்தல் குறித்த கொள்ளை நோயியல் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

**நிதிப் பாதுகாப்பு**

- ஓய்வூதியர் குடும்ப ஆதரவைப் பெற்றிருக்கக் கூடாது. வருவாய் வாய்ப்பைப் பெற்றிருக்கக் கூடாது எனும் மு.உ.தொ.க்கான இரு தகுதி அடிப்படைகளை, அரசு மாற்றியமைக்க வேண்டும். இத்தகுதி அடிப்படைகள் கடுமையானவை. எல்லா மு.உ.தொ.திட்டங்களையும் சேர்த்து உள்ளடக்க விகிதம் வெறும் 12.18% ஆக இருப்பதிலிருந்து இது தெளிவாகிறது.

- சமூக உதவி, தனி நபர்களை மட்டும் இலக்காய்ப் கொண்டிராமல் அவர்களுக்காதரவாயிருக்கும் குடும்பங்களையும் கருத்தில் கொள்ள வேண்டும். எனவே, மு.உ.தொ. திட்டத்திலிருந்து நெருங்கிய உறவினர்களைக் கொண்ட ஏழை முதியோரை, நீக்கும் தகுதி அடிப்படையை ஒழிப்பது விரும்பத்தக்கது. (மிட்க்லீ - 1993) இதற்கு பதிலாக வறுமைக்கோட்டின் கீழ் வாழும் அனைவரையும் இத்திட்டங்களில் உள்ளடக்கலாம்.

- வறுமைத்தகுதி நிலையைப் பொறுத்தவரை, பயனாளியின் வறுமை நிலையை மட்டுமே கருத்தில் கொள்ள வேண்டும் பயனாளியின் குடும்ப வருவாயைக் கணக்கில் கொள்ளக் கூடாது. மாநிலத்தில் வறுமைக்கோட்டின் கீழ் வாழும் அனைவருமே உள்ளடக்கப்பட்டாலும் (எல்லா

வயதுப் பிரிவினருக்கும்மிடையில் வறுமை ஒரே சீராய்ப் பரவலாயிருக்கிறது எனப் புனைவியலாய்க் கருதினால்) மதிப்பிடப்பட்டுள்ள 4.1 மில்லியன் முதியோர் மக்கட் தொகையில் தற்போதிருக்கும் 12.18%-க்கெதிராய் 31% முதியோர் மு.உ.தொ.திட்டத்தின்கீழ்க் கொண்டுவரப்படுவர். தற்போது தனி ஒரு பயனாளிக்காகும் செலவு ரூ.1619/- (இலவச மதிய உணவு, இலவச வேட்டிசேலை நீங்கலாய்) இதன்படி மொத்த செலவு ரூ.2.09 பில்லியன். இது மொத்த வருவாய் செலவினத்தில் ஏறத்தாழ வெறும் 1.04% மட்டுமே ஒரு குறியீட்டுடன் இணைந்த மு.உ.தொ.யும் பரிசீலிக்கப் படலாம். அது ஓரளவு நிலையான வருமானத்தை அளிப்பதுடன், ஓய்வூதியர்களின் குழந்தைகளுக்கு ஒரு முக்கிய வருமான ஆதாரமாய் அமைவதுடன் அவர்களுடைய பெற்றோரைக் காக்க ஊக்கமளிக்கும்.

- மு.உ.தொ.க்கான வழி வாய்ப்புகள் மேலும் எளிதாக்கப்படவேண்டும்.. மு.உ.தொ. காலதாமதமின்றி ஒப்பளிக்கப்படவேண்டும். இப்பணியையும் பொறுப்பையும், கிராம (அ) ஒன்றிய அளவில் ஒப்படைப்பதே சிறந்த தீர்வாயமையும் கிராம சபையின் மூலம் பயனாளிகள் தேர்வு செய்து மு.உ.தொ. காலதாமதமின்றி ஒப்பளிக்கப்படலாம். மு.உ.தொ.யின் தொகுப்பு தற்போதிருப்பதைப் போன்றே, ஊராட்சி (அ) வட்ட அளவில் இருக்கலாம்.

- சில மாநிலங்களில் ஏற்கெனவே செய்துள்ளபடி பிள்ளைகள், முதியோரைப் பாதுகாப்பதை உறுதிசெய்ய சட்ட முறையான ஏற்பாடுகள் செய்யப்படவேண்டும். அழுத்தமாய் சொல்வதெனில் அத்தகைய ஒரு சட்டம் இளைய தலைமுறையினர், முதியோரின் பராமரிப்புக்கென அவர்களுடைய பங்களிப்பை அளிக்க வேண்டும் எனக் குறிப்பிடவேண்டும் (ஜாப்வாலா மற்றும் சுப்பிரமணியா 2000) அத்தகைய ஒரு சட்டம், முதியோருக்குதவுவதில் மாநில அரசின் நிதிச்சுமையை ஓரளவு குறைக்கும்.

- மேற்சொன்னவை நடைபெறக் குடும்பக் காப்புப் பொருளீட்டுநருக்கு வருமானவரி செலுத்து வதிலிருந்து முழுமையாய் விலக்களிக்கப்பட வேண்டும். அப்படிச் செய்வது முதியோரை வயதான காலத்தில் ஆதரித்துக் காக்க ஒரு ஊக்குவிப்பாய் அமையும்.

- வருமானவரி செலுத்தாதவர்களுக்குப் பொதுப் பங்கீடு முறை (வினியோக) மூலம் ஒரு சிறப்புப்படி அளிக்கலாம்.

## நிறுவனக்காப்பு

தமிழ்நாட்டில் பணம்பெறும் முதியோர் இல்லங்கள் பெருகிவந்தாலும், அவை முக்கியமாய் பணம் செலுத்த வசதி படைத்த ஏழையரல்லாதவர்களையே இலக்காய்க் கொண்டுள்ளன. தமிழ்நாட்டில் இலவச முதியோரில்லங்கள் மிகவும் நெரிசல் மிகுந்தவையாய் உள்ளன. முதியோரை சேர்க்க நீண்ட காத்திருப்போர் பட்டியல்கள் உள்ளன. ஏழையருக்கும் அவர்களை வைத்துக் காப்பாற்ற யாருமற்ற அனாதை முதியோர்களுக்கென்றே தனி முதியோரில்லங்களை நிறுவிட அரசின் தலையீடு அவசியம். அரசு சாரா அமைப்புகள் மற்றும் அறநிலையங்கள் இலவச முதியோரில்லங்களை நடத்துகின்றன. முதியோரில்லங்கள் கட்டுவதற்கு அவற்றிற்காதரவாய் இந்திய அரசின் மானிய உதவியளிக்கப்பட வேண்டும். மாநில அரசு இத்தகைய முதியோரில்லங்களுக்கு இலவச மின்சாரம் மற்றும் இலவச தண்ணீர் வசதியையும் செய்தளிக்க வேண்டும்.

# 8. எதிர்காலப் பாதை (திட்டம்)

# புதிய நூற்றாண்டில் தமிழ்நாடு



## இயல்

# 8

# எதிர்காலப் பாதை (திட்டம்) புதிய நூற்றாண்டில் தமிழ்நாடு

இந்த மனித மேம்பாட்டறிக்கையின் முந்தைய இயல்களில், மனித மேம்பாட்டு ஆதாயங்களை இயன்ற அளவு விரிவாகவும் ஆனால் அதே சமயம் வரும் ஆண்டுகளில் வெற்றி கொள்ளவேண்டிய சவால்களைக் கண்டறிந்து விளக்க முயன்றுள்ளோம். இவ்விறுதி இயல், எதிர்காலத்தில் இந்த சவால்களை எதிர்கொண்டு, மக்களில் வேறு பிரிவினரிடையில் காணப்படும் மனித இழப்பின் அளவைப் படிப்படியாகக் குறைக்கும் தமிழ்நாட்டின் திட்டங்களை முன்னிலைப்படுத்த முயல்கிறது. பல்வேறு துறைகளில் சமுக பொருளாதார வளர்ச்சியை மனித மேம்பாட்டு நோக்கங்களுடன் நெருக்கமாய் வரிசைப்படுத்திக் கொண்டுவரும் விளைவைக் கொண்ட விரிவான திட்டங்கள் வாயிலாய் இப்பரிந்துரைகள் செய்யப்பட்டுள்ளன. பொருளாதார வளர்ச்சிக் கொள்கை வகுக்கப்பட்ட பின் தீர்வு காணப்பட வேண்டிய துணைநோக்கங்களாக இவற்றைக் கருதக் கூடாது. ஆனால், பொருளாதார வளர்ச்சிக் கொள்கை உருவாக்கத்தின் மையப் பொருளாயிருக்க வேண்டும் என்ற வாதத்தில் குறிப்பிடத்தக்க வலிமை உள்ளது. பொருளாதார மற்றும் மனித மேம்பாடு, வெவ்வேறான பாதைகளில் செல்லும் பன்னாட்டு எடுத்துக்காட்டுகள் பல இருந்தபோதிலும், பொதுவான அனுபவத்திலிருந்து மனித மேம்பாடு முழுமையாய் ஒருங்கிணைந்த வளர்ச்சியே நீண்ட காலத்தில் மிக உறுதியான வளர்ச்சி எனத் தெளிவாகத் தெரிகிறது.

இவ்வியலில் எடுத்துரைக்கப்பட்டுள்ள பரிந்துரைகள் பின்வரும் கருத்தின் அடிப்படையில் எழுகின்றன.

**வருமானம், வேலை வாய்ப்பு மற்றும் வறுமை**

மக்கட் தொகையில் 65 விழுக்காட்டினர் கிராமப்புறங்களில், வாழ்வின் ஆதாரமாக வேளாண்மையை நம்பி வாழும் ஒரு மாநிலத்தில் வேலைவாய்ப்பு மற்றும் வருமானத்தை அதிகரிப்பதற்கான எந்த ஒரு கலந்தாய்வும், மாநில நிகர உள்நாட்டு உற்பத்திக்கு முதனிலைத் துறையின் பங்களிப்பையே மையமாகக்கொண்டமைவது அவசியமாகிறது. இச்சூழமைவில், நோக்கினால், கடந்த மூன்று பத்தாண்டுகளில் நிகர மாநில உள்நாட்டு உற்பத்திக்கு **முதனிலைத் துறையின்** குறைந்து வரும் பங்கு (18.76 விழுக்காடு) கவலையளிப்பதாயிருக்கிறது. எப்படி

யிருந்தாலும், வேளாண் தொழிலாளர்களின் பங்கில் குறைவேதுமில்லாத நிலையில், ஒரு நபரின் உற்பத்தித் திறன் மட்டுமல்லாமல் வேளாண் தொடர்புள்ள உற்பத்தி திறனும் குறைந்துள்ளன என்றே தெரிகிறது. கிராமப்புறங்களில் மாநிலத்தின் மக்கள் தொகையில் பெரும் பகுதி குவிந்திருக்கையில் இத்துறையிலிருந்து பங்களிப்பை அதிகரிக்க வேண்டிய தேவை உள்ளது. இது, கிராமப் பகுதிகளில் வேலைவாய்ப்பை பெருக்கி, கிராமப்புறத்திலிருந்து நகர்ப்புறங்களுக்குக் குடிபெயருவது அதிகரிப்பதைத் தடுத்து, நகர்ப்புறக் கட்டமைப்புக்கான தேவையை குறைக்கும். மேலும், அது மாநிலத்தின் உணவு மற்றும் ஊட்டச்சத்துக்கான அடிப்படையாக இருப்பதோடு, வேளாண் சார்ந்த தொழில்களின் வளர்ச்சிக்கான அடித்தளத்தையும் அமைத்துக் கொடுக்கும்.

மாநில அரசு வேளாண்மையில் 4 விழுக்காடு வளர்ச்சியைக் குறிக்கோளாகக் கொண்டுள்ளது. இது ஒரு கடினமான பணியாகத் தோன்றினாலும், உயிரியல் தொழில்நுட்பவியல், தகவல் தொழில் நுட்பம் மற்றும் உள்-கட்டமைப்பு முதலான துறைகளின் வளர்ச்சி, இத்துறையில் உயர் வளர்ச்சி விகிதத்தை அடைய உதவும். இச்சூழமையில் அடுத்துவரும் சில ஆண்டுகளில் பின்பற்றவிருக்கும் கொள்கையை சுட்டிக்காட்டுவதான மிக முக்கியத்துறைகள் கீழே முன்னிலைப் படுத்தப்பட்டுள்ளன.

- மக்களுடைய பங்கேற்புடன் முறைப்படியான மற்றும் சிக்கனமான தனித்தனி அணுகுமுறைகளின் மூலம் வேளாண் தொழில் மேம்படுத்தப்பட வேண்டும்.

- ஏறக்குறைய 2 மில்லியன் ஹெக்டேர்களில் நிலையாய் அரிசி பயிரிடுவதன் மூலம் உணவுப் பாதுகாப்பை உறுதி செய்வதோடு, விற்பனை வசதியோடு கூடிய வணிகப் பயிர்களைப் பயிரிடுவதும் ஊக்குவிக்கப்பட வேண்டும்.

- வேளாண்காடு மற்றும் தோட்டப் பயிர்கள் பயிரிடுவதன் மூலம் தரிசு நிலங்களை விளைநிலங்களாக்குவது மற்றொரு முன்னுரிமையாயிருக்க வேண்டும். இது பதனிடுதல் மற்றும் மதிப்புக் கூட்டுதல் உள்ளிட்ட விற்பனை வாய்ப்பு அதிகமுள்ள தோட்டப்பயிர் வளர்ச்சியைத் தூண்டும். கிராமப்புறத் தொழில்கள் வேலைவாய்ப்பு மற்றும் வருமான ஆதாரங்களாக மாறும் வகையில், மதிப்புக் கூட்டுதல்களுக்குப் பங்களிக்கும் வேளாண்சார்ந்த தொழில்களுக்கு ஊக்கமளிக்கப்பட வேண்டும்.

- மாநிலத்தில் கால்நடை வளர்ச்சி, ஏற்கனவே நன்கு முன்னேற்றம் கண்டுள்ளது. கால்நடை ஊட்டச்சத்தையும் பாதுகாப்பையும் மேம்படுத்தப்படுவதன் மூலம் இவ்வளர்ச்சி மேலும் ஒருங்கிணைக்கப்பட வேண்டும். கால்நடை உற்பத்திப் பொருள்களின் தரம் மற்றும் மேன்மையான ஆதரவுப் பணிகள் பங்கு உறுதி செய்யப்பட்டு தனியார் நிறுவனங்களும் உழவர்களும் இதில் ஊக்கப்படுத்தப்பட வேண்டும். கிராமப்புறங்களில் வருமான அளவுகளைக் கூட்டும் மாபெரும் உள்ளாற்றலை இத்துறை பெற்றுள்ளதுடன் வளமிகு பால்பண்ணைத் தொழிலின் வளர்ச்சிக்கும் உதவும்.

- முறைசாராத கட்டடத் தொழில் துறையும் சரியான முறையில் பேணி ஊக்குவிக்கப் பட்டால், ஏராளமான வேலை வாய்ப்புகளை குறிப்பாக கிராமப்புறங்களில் அளிக்கவல்லது. வீடு கட்டும் நடவடிக்கைகள், பொருளாதார வளர்ச்சியை உருவாக்குவதுடன் பொருளாதாரத்தின்

ஏனைய துறைகளிலும் பன்மடங்கான பயன்களை கொண்டுள்ளதாக உள்ளது. இத்துறையை ஊக்குவிக்கும் வகையில் நிதிக் கொள்கை உருவாக்கப்பட வேண்டும்.

- பொருளாதாரத்தில் கட்டமைப்பு மாற்றங்கள் நிகழும் இத்தறுவாயில், தொழில் மற்றும் சேவைத்துறைகள், பெரும்பங்காற்ற வேண்டும். இருப்பினும், பெருமளவு தானியக்கம் மற்றும் தகவல் தொழில்நுட்பத் துறையின் வருகைக்குப் பின், சிறிதளவு தேர்ச்சித்திறம் பெற்ற, மற்றும் பயிற்சித்திறன் பெறாத தொழிலாளர்களுக்கு இத்துறையில், அடுத்துவரும் பத்தாண்டில், வேலைவாய்ப்புகள் குறையும். எனவே, வணிக நிலவரத்திற்கேற்ப, தொழிலாளர்களுக்குச் செயல்திறன் பயிற்சியளிக்க முயற்சிகள் மேற்கொள்ளப்படவேண்டும்.

வறுமையைக் குறைப்பதே பொருளாதார வளர்ச்சியின் இலக்காக இருக்க வேண்டும். வறுமையை 35% புள்ளிகள் குறைத்ததன் மூலம் தமிழ்நாடு நன்கு செயல்பட்டுள்ளது. 1973-74-ல் 56.5% ஆக இருந்த வறுமையின் வீதம் 1999-2000-ல் 21.12% ஆகக் குறைந்தது. இருப்பினும் வறுமைக் கோட்டுக்குக் கீழ் வாழும் மக்களைப் பொறுத்தவரை தமிழ்நாடு நாட்டில், எட்டாவது இடத்தில் உள்ளது. தென்மாநிலங்களிடையில் தமிழ்நாடு மிக அதிக நபர்வாரி விகிதங்களை பெற்றுள்ளது. மிகவும் கவலையளிக்கும் பொருள் என்னவெனில், பயனீட்டளவில் சமச்சீரின்மையைப் பொறுத்தவரை (32.3) தமிழ்நாடு, நாட்டில் இரண்டாமிடத்தில் உள்ளதென்று கினிக் குறியீடு வெளிப்படுத்துகிறது. திருவண்ணாமலை, தஞ்சாவூர், சேலம், கன்னியாகுமரி மற்றும் திருநெல்வேலி போன்ற மாவட்டங்கள் உயர்வறுமை அளவுகளையும் பயனீட்டளவில் சமச்சீரின்மையும் கொண்டுள்ளதோடு பெருமளவு இழப்புகளையும் சுட்டிக்காட்டுகிறது. குறிப்பிட்ட சில மாவட்டங்களில் காணப்படும் மிகக் குறைவான செயலாக்கத்திற்கான காரணங்கள் கண்டறியப் பட்டுத் தீர்வுக்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படவேண்டும்.

### நலவாழ்வு

கடந்த இருபதாண்டுகளில் மக்கள் தொகையைக் கட்டுப்படுத்துவதில், தமிழ்நாடு குறிப்பிடத் தக்க சாதனையைப் படைத்துள்ளது. இதன் விளைவாக, பேறுகால இறப்புவிகிதமும், குழந்தை இறப்பு விகிதமும் கணிசமாய்க் குறைந்துள்ளன. மாநிலத்தின் நிறுவன நலக்காப்பு முறையானது துறைத்திறன்கள் மற்றும் தளவாடங்களில் கணிசமாய் பலப்படுத்தப்பட்டுள்ளது. இருந்த போதிலும், நலவாழ்வுத் துறையில் கவலைதரும் போக்குகளும் காணப்படுகின்றன. இவற்றைக் கண்டறிந்து இயன்ற வகையில் கேரளாவுக்கு நிகரான நிலையை அடைய இம்முறையை சீராக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, உத்தேச பிறப்பு வீதம் (உ.பி.வீ.) 19-20 (ஏறத்தாழ)-ஐ சுற்றியே உள்ளது. 1990-ஆம் ஆண்டுகளில் இளம் சிறார்களின் இறப்பு வீதம் பெரிய அளவு இறக்கத்தைக் காட்டவில்லை. தேசிய குடும்பநலக் கணக்கெடுப்பு-2-இன் படி, இது இன்னும் 48-லேயே நிற்கிறது. புதிய பிறப்பின் இறப்பு விகிதமே இதற்கு முக்கியக் காரணம் ஆகும். இதில் குறிப்பிடத்தக்க கிராமப்புற - நகர்ப்புற வேறுபாடுகள், மாவட்டங்களுக்கு இடையிலான வேறுபாடுகள், தேக்கமான புதிய பிறப்பின் இறப்பு வீதம், மற்றும் அதிகரிக்கும் பெண் குழந்தை இறப்புவீதம் போன்ற கவலையளிக்கும் மற்ற தன்மைகளும் உள்ளன. குழந்தை பிறந்து குறுகிய காலத்திற்குள் இறப்பு வீதம் தொடர்ந்து உயர்வாகவே இருந்து, மொத்த குழந்தைகளின் இறப்பில் 58% பங்கைப் பெற்றிருந்தது. தருமபுரி, சேலம், தேனி போன்ற மாவட்டங்களில் மகன் வேண்டும் எனும் முன்னுரிமை பெண்

சிசுக்கருவழிப்பு மற்றும் பெண் சிசுக்கொலை போன்ற கவலை தரும் நிகழ்வுகளுக்குக் காரணமாயிருந்தது. தேசீய குடும்பநலக் கணக்கெடுப்பு - 2 (தே.கு.ந.க.-2)-இன் படி, மாநில மொத்தத்திலும் பேறுகால இறப்பு வீதம் (பே.இ.வி) அதிகமாகவும் சேலம், திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி, மதுரை மற்றும் தருமபுரி போன்ற மாவட்டங்களில் அது இயல்புக்கு மீறிய அளவிலும் இருந்துள்ளது.

பிறப்பு வீதக் குறைப்பு என்பது மத்திய அரசிடமிருந்து அதிகாரப் பொறுப்புரிமை ஒப்படைப்பு (அ) நாடாளுமன்றத் தொகுதிகள் ஒதுக்கீடு என்பன வரும்போது மாநிலத்திற்கு பயன் தருவதாக இல்லை என வாதிடலாம். ஆனால் இதை வேறு நிலைகளில் கையாள வேண்டும். உத்தேச பிறப்பு வீதத்தின் தேக்கத்தின் விளைவாக மாநிலப் பொருளாதாரத்தின் எல்லாப் பிரிவுகளிலும், கல்வி, நலக்காப்பு மற்றும் கட்டமைப்பு (ஒரு சிலவே குறிப்பிடப்பட்டுள்ளன) ஆகியவற்றில் மிகக் குறைவான கேட்பு காணப்படுகிறது. எனவே இனி வருங்காலத்தின் பின்வரும் கருத்துக்களைக் கவனத்தில் கொள்ளப்படல் வேண்டும்.

- மிகச் சிறப்பாக உத்தேச பிறப்பு வீதம் 2010-க்குள் தற்போதிருக்கும் 19.3-லிருந்து 14-க்குக் குறைக்கப்பட வேண்டும். பெண்களுக்குத் திருமணத்திற்குகந்த வயதை 22 ஆக உயர்த்துதல் குழந்தை பெறுவதற்குகந்த வயது 23-27 ஆண்டுகள், இரு குழந்தைகளுக்கு இடையில் இடைவெளி குறைந்தது மூன்றாண்டுகள், இதில் இறுதியில் கூறப்பட்டது குழந்தை இறப்பு வீதம் மற்றும் நோக்காட்டைக் குறைக்கும் எனப் பிரச்சாரம் மூலம் மேற்கொண்டால் இவ்விலக்கு அடைய முடியாததல்ல.

- 2010-க்குள் மொத்தக் கருத்தரிப்பு வீதம் (மொ.க.வீ. 2.0-லிருந்து 1.5 ஆகக் குறைக்கப் படவேண்டும்.

- குழந்தை இறப்பு வீதம், 2005-க்குள் மிகக் குறைந்த அளவாக 40 ஆகவும், 2010-க்குள் 30 ஆகவும் குறைக்கப்பட வேண்டும். புதிய பிறப்பு மற்றும் பிறப்புக்கு முன் இறப்பு (Prenatal) வீதங்களை 70% வரை குறைத்தால் மட்டுமே இது இயலும். இதை உறுதிசெய்ய, தொடக்கப் புதிய பிறப்புப் பதிவு, தாய்மார்களின் எடை கூடுவதைக் கண்காணித்து அதை கர்ப்ப காலத்தில் தாய்க் காப்பு பேணுகை மையங்கள் மூலம் 10.கி.கி. வரை அதிகரிக்கச் செய்தல், நுண்ணூட்டச்சத்துக்களுடன் தாய்மார்கள் உணவு உட்கொள்ளுவதை வலியுறுத்தல். இவற்றோடு இரும்பு, ஃபோலிக் அமில மாத்திரைகள், வைட்டமின் ‘அ’ மருந்துறைகள், வலிப்பு நோய்த் தடைக்காப்பு மற்றும் நிறுவன மகப்பேறு வசதிகளை அதிகரித்தல்.

- அடுத்து வரும் பத்தாண்டுக்குள், எதிர்பார்ப்பு ஆயுட்காலத்தைத் தற்போதிருக்கும் 66-லிருந்து 75-ஆக உயர்த்துதல்.

- பேறுகால இறப்பு வீதத்தை தற்போதிருக்கும் ஆயிரத்திற்கு 1.5 என்றிருப்பதை இந்தப் பத்தாண்டு முடிவில் 1-ஐவிடக் குறைத்திட வேண்டும்.

- தமிழ்நாட்டில் தேசீயக் குடும்பநலக் கணக்கெடுப்பு-2-இன் நோக்காடு விவரங்கள் ஊக்கமளிப்பதாயில்லை. குறிப்பிட்ட நோய்கள் பரவலாயிருப்பதற்கான காரணங்கள் ஆழ்ந்து ஆய்வு செய்யப்படவேண்டும். நோய்களின் நிகழ்வுகளைக் குறைக்கத் தீர்வு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

- கிராமப்புற நலக்காப்புத் தேவைகள் ஆரம்ப சுகாதார நிலையங்களின் தொடரமைப்பு மூலமாக நிறைவு செய்யப்பட்டாலும், இவ்வசதிகளைப் பொறுத்தவரை, சிறிய நகராட்சிகளும் பேரூராட்சிகளும் இன்னும் பின்தங்கியே உள்ளன. இதுவரை புறக்கணிக்கப்பட்டு வந்த நகர்ப்புறப் பகுதிகளிலும், இந்த இடைவெளியை நிறைவு செய்வது அவசியம்.

- மலேரியா, யானைக்கால் போன்ற நோய்க்கிருமிகளால் பரவும் நோய்கள் தண்ணீரால் ஏற்படும் ஹெபடிட்டிஸ் (கல்லீரல் வீக்கம்) மற்றும் காசநோய் போன்ற தொற்றுநோய் மற்றும் தொழுநோய் போன்றவை முழுமையாக ஒழிக்கப்பட வேண்டும்.

- ஏழை மக்களின் வாழும் நிலைமைகளை மேம்படுத்துவதன் மூலம் இந்நோய்களில் பலவற்றிற்கு தீர்வு காண முடியும். நலவாழ்வு மற்றும் வாழும் நிலைமைகளுக்கிடையில் உள்ள ஒப்புமைத் தொடர்பு நன்கு மெய்ப்பிக்கப்பட்டுள்ளது. தூய இருப்பிடம், குடிநீர், மின்வசதி மற்றும் துப்புரவு வசதிகள் போன்றவற்றை அளித்தல் மாநிலத்தின் நலவாழ்வுயைச் சுட்டும் குறியீடுகள் மேம்பட மிகவும் இன்றியமையாதவை. ஒருங்கிணைந்த தஞ்சாவூர், திருச்சி, சேலம் மற்றும் கடலூர் மாவட்டங்களும் தருமபுரி, இராமநாதபுரம், புதுக்கோட்டை மற்றும் சிவகங்கை மாவட்டங்களும், இவ்வசதிகள் இழப்பிற்கான குறியீடுகளில் உயர் இடத்தில் உள்ளன. வாழும் நிலைமைகள் மேம்பட, தற்காலிக அடிப்படையிலன்றி, இழப்பின் அளவுக்கேற்ப வளஆதார ஒதுக்கீடு செய்யப்பட வேண்டும். நகர்ப்புற வறுமையை ஒழிப்பதன் மூலம் நகர்ப்புறக் குடிசைப்பகுதிகளின் பிரச்சனைகளை சமாளிக்க உரிய திட்டங்கள் தேவைப்படுகின்றன.

- முதியோர்களின் எண்ணிக்கை உயர்ந்து காணப்படுவதால் முதியோர் காப்புக்குச் சிறப்பு கவனம் தேவை.

- தமிழ்நாட்டில் ஹெச்.ஐ.வி. நோய் நேர்வுகள் மிக அதிக அளவில் காணப்படுகின்றன. நல வாழ்வுக் கல்வியும் ஹெச்.ஐ.வி. நோய் தடுப்பு நடவடிக்கைகளும் முடுக்கிவிடப் படவேண்டும்.

- நடப்புப் பத்தாண்டில் பார்வையிழப்பை ஒழிப்பது மற்றொரு முன்னுரிமையளிக்கத்தக்க விஷயம். இதற்குத் தொடர்ச்சியான கவனம் தேவை.

ஒவ்வொரு பிரச்சனைக்கும் தீர்வு காண்பதற்கான விரிவான கொள்கைகள் வரையப்பட்டால் மேற்சொன்னவற்றை அடைவது சாத்தியமே. நலக்காப்பு மற்றும் நோய்களின் நிகழ்வுகளுக்கிடையில் மாவட்டவாரியான ஏற்றத்தாழ்வுகளை அத்தகையதொரு திட்டத்தின் கீழ் வள ஆதாரங்களை ஒதுக்கீடு செய்கையில் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

## கல்வி பெறுதிறன்

2001 மக்கட் தொகைக் கணக்கெடுப்பு விவரங்கள் தமிழ்நாடு கல்வியறிவின் அளவுகளை உயர்த்திடுவதில் ('கல்வியறிவும், கல்வியும்' இயலைப் பார்க்கவும்) போதிய அளவு நன்கு செயல்

பட்டுள்ளதைக் காட்டுகிறது. கல்வியறிவு நிலையில் ஊக்கமளிக்கத்தக்க இயல்பு என்னவெனில் பாலின இடைவெளியை 4.5%-புள்ளிகளுக்கும் அதிகமாய் குறைத்திட செய்ததே. 1991-இல் 22.42% ஆக இருந்தது. 2001-ல் 17.78% ஆகக் குறைக்கப்பட்டது. இருப்பினும் தமிழ்நாடு இன்னமும் கேரளாவின் பாலின இடைவெளியான 11.6%-ஐ விட மிகவும் பின்தங்கியே உள்ளது. பெண்களின் கல்வியறிவு 64.56% ஆக இருப்பதிலிருந்து. 7+வயதுத் தொகுதியிலிருக்கும் பெண்களில் மூன்றில் ஒரு பங்கு கல்வியறிவற்றவர்களாயிருப்பதைத் தெரிவிக்கிறது. மற்றும் 10 மாவட்டங்களில் இப்புள்ளி விவரம் 40%-க்கு அதிகமாக உள்ளது. வறுமைக்கிடையிலும் குழந்தைகளைப் பள்ளிக்கனுப்புவதால் பெண்கல்வியறிவு வெளிப்படையான செயல் விளைவைப் பெற்றுள்ளது என முன்னர் நாம் உறுதியாக வாதிட்டோம் (‘கல்வியறிவும் கல்வியும்’ இயலைப் பார்க்கவும்). பெண்கள் கல்வியறிவு, குறைவான, சிசு மற்றும் குழந்தை இறப்பு வீதம் மேம்பட்ட நலவியல் தரம் மற்றும் அதிகமான அரசியல் பங்கேற்பு ஆகியவற்றில் அதன் செயல்விளைவைப் பெறும். எனவே, அடுத்த பத்தாண்டில் பெண்கள் கல்வியறிவை உயர்த்த, குறிப்பாகப் பெண்கல்வியறிவு 50%-க்கும் குறைவாயுள்ள தருமபுரி மாவட்டத்திலும் கல்வியறிவு 57%-க்கும் குறைவாக உள்ள திருவண்ணாமலை, கடலூர்-விழுப்புரம் மாவட்டத்தைச் சூழ்ந்த பகுதி, பெரம்பலூர் அரியலூரை சூழ்ந்த பகுதி சேலம், நாமக்கல், ஈரோட்டை சூழ்ந்த பகுதிகளில் பெண் கல்வியறிவை அதிகரிப்பதில் நடவடிக்கை எடுக்கப்பட வேண்டியது அவசியம்.

2001-ஆம் ஆண்டு மக்கள் தொகை கணக்கெடுப்பில் வயது வாரியான கல்வியறிவு வீதம் இன்னும் வெளியிடப்படவில்லை. எனவே, சேர்க்கை மற்றும் தேக்கநிலை ஆகியவற்றில் முன்னேற்றங்கள் குறித்துத் தெளிவாய் மதிப்பீடு செய்ய இயலாது. இருப்பினும். இவ்வறிக்கையின் முன்னதாய் செய்யப்பட்ட பகுத்தாய்வு அனைவருக்கும் தொடக்கக் கல்வி என்பது உள்ளபடியே நிறைவேற குழந்தைகளின் சேர்க்கையை மேம்படுத்தவும், தேக்கநிலையை குறைக்கவும், இடையில் படிப்பைவிட்டுச் செல்வதைக் குறைக்கவும் கல்வியின் தரத்தை மேம்படுத்தவும் முனைப்பான திட்டங்கள் தேவை எனக் காட்டுகின்றது. புதிய தொடக்கப்பள்ளிகள் திறப்பு, பள்ளிகளுக்கு மேலான வழி வாய்ப்புகளுக்காகத் தொடக்கப்பள்ளிகளை நடுநிலைப் பள்ளிகளாய் உயர்த்துதல் போன்ற பல நடவடிக்கைகளை அரசு எடுத்துள்ளது. மேலும் கடந்த 5 ஆண்டுகளில் பெரும் எண்ணிக்கையில் ஆசிரியர்களைப் பணியமர்த்தியுள்ளது. 1998-99-இல் தொடக்கப் பள்ளி நிலையில் மொத்த சேர்க்கைவிகிதம் 105% ஆக இருந்தாலும், எட்டு மாவட்டங்களில் சேர்க்கை 100%-க்கும் குறைவாக உள்ளது. சொல்லப் போனால் இந்த எட்டு மாவட்டங்களில் ஆறு, மாவட்ட தொடக்கக்கல்வி திட்டத் (மா.தொ.க.தி.)தின் கீழ் உள்ளடங்கியுள்ளன. பெண்களின் மொத்த சேர்க்கைவிகிதமும் கூட இதே மாதிரியான நிலையை வெளிப்படுத்துகிறது. தொடக்கப் பள்ளி நிலையில் மொத்த சேர்க்கை விகிதம் 89% மட்டுமே. இங்கு 4 இலட்சம் சிறார்கள் பள்ளிகளில் சேரவில்லை என அறிவிக்கப்பட்டுள்ளது. உயர்நிலை மற்றும் மேல்நிலைப் பள்ளிகளின் நிலைகளில் மொத்த சேர்க்கை விகிதம் முறையே 66% மற்றும் 30% மட்டுமே. மாவட்டங்களிடையில் பாலினப் பாகுபாடுகள் மிகவும் குறிப்பிடத்தக்க வகையில் காணப்படுகின்றன.

எனவே எல்லோருக்கும் கல்வி எனும் நிலையை நாம் அடைவதென்றால் திட்டங்களைப் புத்தமைப்பது அவசியமாகிறது. இதற்கான முன்னுரிமைகள் பின்வருமாறு :

- அறிவுபூர்வமாய்த் தேவைகளை மதிப்பீடு செய்த பின்னர் உரிய கவனத்துடன் புதிய பள்ளிகள் திறக்கப்படுவதை உறுதி செய்ய பள்ளிகளின் வரைபடம் தயாரிக்கப்படவேண்டும். அரசின் நிதி ஆதாரங்கள் ஒரு வரையறைக்குட்பட்டவை என்பதைப் புதிய பள்ளிகள் திறக்கையில் கருத்தில் கொள்ள வேண்டும். இருப்பினும், குறைந்து வரும் பிறப்பு விகிதம் காரணமாய், அண்டைக் கேரள மாநிலத்திலிருப்பதைப் போல் அடுத்த பத்தாண்டில் தொடக்கப் பள்ளி நிலையில் பள்ளிகளில் போதிய எண்ணிக்கையில் பிள்ளைகள் கிடைக்கப் பெறாத நிலை உருவாகக்கூடும்.

- குறைந்தது தொடக்க நிலையிலாவது பள்ளிக்குச் செல்லும் வயதுள்ள அனைத்து சிறுமிகளும் பள்ளிக்குச் செல்வதை உறுதிப்படுத்தப்பட வேண்டும். பெண்களுக்குக் கல்வியளிப்பதில் உள்ள பொருளாதார மற்றும் சமுதாயப் பயன்களைப் பற்றிப் பெற்றோர்களுக்கு அறிவூட்ட வேண்டும்.

- 1.5 மில்லியன் (15 கோடி) என மதிப்பிடப்பட்ட படிப்பை இடையில் விட்டுச்செல்லும் 9-15 வயதுக்குட்பட்ட பிள்ளைகளுக்கான முறைசாராக் கல்வி திட்டங்களின் எண்ணிக்கையை அதிகரித்து முறைசாராக் கல்வி மூலம் உள்ளடக்கப்பட வேண்டும். தற்போதிருப்பவை, அத்தகைய சிறார்களில் 10-15 விழுக்காட்டினர் மட்டுமே உள்ளடக்கும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளன.

- கிராமப்புறங்களில் கட்டுப்படுத்தும் அளவுகளுக்கு மாணவர் - ஆசிரியர் விகிதத்தைக் குறைத்திடப் பள்ளிக் கட்டமைப்பைச் சீரமைப்பதில் கவனம் செலுத்தப்படவேண்டும். அறிவு பூர்வமாய் ஆசிரியர்கள் மறுபணியமர்த்தம் செய்யப்பட வேண்டியது அவசியம். தொடக்கப்பள்ளி நிலையில் ஆசிரியர்கள் பல்வேறு வகுப்புகளில் கல்வி கற்பிக்க வேண்டியிருப்பதால் பல்நிலைக் கற்பித்தல், அதற்குரிய கவனத்தைப் பெற வேண்டும்.

- கற்றலின் இனிமை பாடதிட்டமானது பிள்ளைகளை மையமாகக் கொண்டு உருவாக்கப்பட்டும் நிலையாகத் திருத்தப்பட்டும் இருக்கவேண்டும்.

- முதியோர் எழுத்தறிவு முயற்சிகள் சீரமைக்கப்பட்டு எழுத்தறிவுக்குப் பிந்தைய இயக்கங்கள், எழுத்தறிவுப் பெற்றவர்கள் மீண்டும் எழுத்தறிவற்றவர்களாக மாறுவதைத் தடுக்கப் பயனளிக்கும் வகையில் செய்யப்பட வேண்டும்.

- தொடக்கக் கல்வியை உள்ளாட்சி மன்றங்களின் சுற்றெல்லைக்கு கொண்டு வருவது சிறந்ததென்றாலும் இது நீண்டகால அடிப்படையில் எடுக்கப்பட வேண்டிய பெரிய கொள்கை முடிவாகும். இதற்கிடையில், உள்ளூர் மக்களும் பெற்றோர், ஆசிரியர் சங்கங்களும், தொடக்க மற்றும் உயர்தொடக்க நிலைகளில் பள்ளிகளை நடத்த முனைப்பாக ஈடுபடுத்தப்பட வேண்டும். உள்ளூர் மக்களின் ஈடுபாடு ஆசிரியர்களை ஊக்கமூட்டுவற்கும் பொறுப்புடையவர்களாயிருப்பர். சேர்க்கையை அதிகரிக்கவும் கற்பிக்கும் தரத்தை உயர்த்தவும் பெருமளவு உதவும். அத்தகைய ஈடுபாடு தகுந்த ஒரு அரசாணை மூலம் முறைப்படுத்தப்பட்டால் இது பயனளிக்கும்படி அமையும்.

- புதிய கொள்கைக் கட்டமைப்பில் இக்கருத்துக்கள் இடம் பெறவேண்டும் என உறுதியாய் பரிந்துரைக்கப்படுகிறது. நடப்புப் பத்தாண்டின் முடிவுக்குள்ளாக, எல்லாருக்கும் கல்வி எனும் நோக்கம் அடையப்படும் வகையில், தேவைப்படும் மாவட்டங்களுக்கு நிதியாதாரங்களை உரிய முறையில் மறு ஒதுக்கீடு செய்யப்பட வேண்டும். உயர்நிலை மற்றும் மேல்நிலைப் பள்ளி நிலைகளிலும்கூட, பள்ளி செல்லும் வயதுள்ளவர்களில் குறிப்பாக பெண்களில் குறைந்த அளவாக 60%-ஐ அடைய இதே மாதிரியான முயற்சிகள் தேவைப்படுகின்றன.

**மாவட்டங்களுக்கிடையிலான ஏற்றத்தாழ்வுகளை நீக்கல்**

மனித மேம்பாட்டுக் குறியீடும் பாலின மேம்பாட்டுக் குறியீடும் மாநிலத்தில் மனித மேம்பாட்டைப் பற்றிய ஒரு நுண்ணறிவையளித்தாலும், மற்ற மாநிலங்கள் மற்றும் நாடுகளுடன் ஒப்பிடத்தக்கதொரு நிலைமையை ஏற்படுத்தியளித்தாலும், மாவட்டங்களிடையிலான ஏற்றத்தாழ்வுகளைச் சுட்டிக்காட்டுவனவாக உள்ளன. மாவட்டங்களிடையில் காணப்படும் கல்வி, நலவாழ்வு மற்றும் வருமான ஏற்றத்தாழ்வுகளை மிகத் தெளிவாக இக்குறியீடுகள் வெளிப்படுத்துகின்றன. வருமானம், கல்வி மற்றும் எதிர்பார்க்கும் ஆயுட்காலம் பற்றிய குறியீடுகள் உயர் வருமானம், நலவாழ்வு மற்றும் கல்வித் துறைகளில் மனித மேம்பாட்டின் உயர் அளவுகளைப் பிரதிபலிப்பதாகாது என்பதையும் சுட்டிக்காட்டுகின்றன. சேலம் மற்றும் விருதுநகர் மாவட்டங்கள், மாநில சராசரியைவிட உயர் மாவட்ட தனி நபர் வருமானத்தைப் பெற்றிருந்தாலும் அவற்றின் மனித மேம்பாட்டுக் குறியீடு மாநில சராசரியைவிடக் குறைவாக உள்ளது. இதற்கான காரணங்கள். ஒப்பீட்டடிப்படையில் குறைவான பிறப்பின்போது ஆயுள் எதிர்பார்ப்புக்காலம் மற்றும் கல்வியின் அளவுகளே எனத் தெரிய வருகிறது. இதேபோல மதுரை மாவட்டம், மாநில சராசரியைவிட உயர்மாவட்ட தனி நபர் வருமானத்தை (15% உயர்வான) கொண்டிருந்தாலும் அதன் மனித மேம்பாட்டுக் குறியீடு மாநிலம் மே.கு.டைவிடச் சிறிதளவே அதிகமாக உள்ளது. உயர்தனி நபர் வருமானம் நிச்சயமாய் உயர் அளவுகள் மனித மேம்பாட்டுக்கு வழிவகுக்கும் எனும் அவசியமில்லை என்பதையே இவை எடுத்துக்காட்டுவதாக அமைகின்றன.

வருமான ஏற்றத்தாழ்வுகள் மாநிலமெங்கிலும் பரவலாகக் காணப்படுகிறது. கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை மாவட்டங்களும் தஞ்சை, திருவாரூர் மற்றும் நாகப்பட்டினம் போன்ற அரிசி விளையும் பகுதிகளும் குறைவான மாவட்ட தனி நபர் வருமானத்தைப் பெற்றுள்ளன. வேளாண்மையை முக்கியமாய் நம்பியுள்ளன. இதேபோல வறட்சிக்குட்படும் மாவட்டங்களான புதுக்கோட்டை, இராமநாதபுரம், சிவகங்கை மற்றும் தருமபுரி முதலானவை குறைவான தனி நபர் வருமான அளவுகளைப் பெற்றுள்ளன. கன்னியாகுமரி மாவட்டம் மட்டுமே, குறைவான மாவட்ட தனி நபர் வருமானத்தை பெற்றிருந்த போதிலும் மாநிலத்திலேயே இரண்டாவது மிக உயர்வான மனித மேம்பாட்டுக் குறியீட்டைப் பெற்றுள்ளது. இம்மாவட்டத்தின், கல்வி மற்றும் நலக்காப்பில் உயர் அடைவு அளவுகளே இதற்குக் காரணம். இரண்டாய்ப் பிரிக்கப்பட்ட மாவட்டங்கள் தெளிவான மாதிரியைக் காட்டுகின்றன. எடுத்துக்காட்டாக முன்பிருந்த சேலத்திலிருந்து பிரிந்தமைந்த நாமக்கல் மாவட்டமும் ஒருங்கிணைந்த மதுரை மாவட்டத்திலிருந்து பிரித்தமைக்கப்பட்ட தேனீ மாவட்டமும் மாநில சராசரியைவிட குறைவான தனி நபர் வருமானத்தைப் பெற்றிருக்கையில் இப்போதிருக்கும் சேலம் மற்றும் மதுரை மாவட்டங்கள் மாநில சராசரியைவிட மிக அதிகமான தனி நபர்

வருமானத்தைப் பெற்றுள்ளன. இரண்டாக பிரிப்பதற்கான உள்ளார்ந்த காரணம் எதுவாயிருப்பினும் புதிதாய் அமைக்கப்பட்ட மாவட்டங்களில் தனி நபர் வருமான அளவுகளை அதிகரிக்கும் முனைப்பான வளர்ச்சி திட்டங்கள் தேவை என்பது தெளிவு.

மாநில நலவாழ்வுக் காப்பினைப் பிரதிபலிக்கும் பிறப்பின்போது எதிர்பார்க்கும் ஆயுட்காலம் மாநிலத்தின் 29 மாவட்டங்களில் 15-இல் மாநில சராசரியைக் காட்டிலும் குறைவாக இருக்கிறது. சென்னை கன்னியாகுமரி மற்றும் நீலகிரி போன்ற சில மாவட்டங்களில் பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்பின் உயர் அளவுகள் மாநில சராசரியை நிலைப்படுத்தி அதற்கு ஒரு மதிப்பை யளித்துள்ளது. மாவட்டங்களிடையே ஏற்றத்தாழ்வுகள் பரவலாக உள்ளன. 'நலவாழ்வு'ப் பிரிவில் ஏற்கனவே சுட்டிக்காட்டியபடி இவற்றுக்கென குறிப்பிட்ட திட்டங்களை உருவாக்குவதன்மூலம் குறைக்கப்பட வேண்டும்.

கல்வி அடைவுகளில் மாவட்டங்களின் ஏற்றத்தாழ்வுகள் காணப்படுகின்றன. விழுப்புரம், கடலூர், திருவண்ணாமலை, சேலம், தருமபுரி, நாமக்கல் மற்றும் புதுக்கோட்டை மாவட்டங்கள் கல்வி அடைவில் தாழ்ந்தவை எனக் கருதப்படலாம். ஈரோடு, பெரம்பலூர் மற்றும் திண்டுக்கல் மாவட்டங்கள் கல்வி அடைவில் நடுத்தர அளவுகளைக் கொண்டுள்ளன. ஆனால், இவை மாநில சராசரியைவிடக் குறைவானவை. மேற்கண்ட மாவட்டங்களில் கல்வி இழப்பு குறித்த பிரச்சனைகளுக்குத் தீர்வு காணவும், முன்னர் சுட்டிக்காட்டியபடி ஏற்றத்தாழ்வுகளை நீக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படவும் வேண்டும்.

வளர்ச்சி நிகழ்கையில் வட்டார ஏற்றத்தாழ்வுகள் தவிர்க்க முடியாதவை. வளர்ச்சியின் மூன்று சுட்டிக்காட்டிகளில் ஏற்றத்தாழ்வுகள் மிக வெளிப்படையாகக் காணப்படுகிறது. கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை அடங்கிய தமிழ்நாட்டின் வடபகுதியில் இழப்பு, மிக மோசமாக உள்ளது எனலாம். மாநிலத்தின் நெற்களஞ்சியமான ஒருங்கிணைந்த தஞ்சாவூர் மற்றும் திருச்சி மாவட்டங்கள் உள்ளடங்கிய வடிநிலப்பகுதி குறைந்த அளவு மனித மேம்பாட்டைக் காட்டுகிறது. வறட்சிக்குட்பட்ட பகுதியான புதுக்கோட்டை சிவகங்கை, இராமநாதபுரம் ஆகியவை பலவேறு காரணங்களுக்காகக் குறைவான மனித மேம்பாட்டளவைக் கொண்டுள்ளன. மேற்குப் பகுதியில் தருமபுரி, நாமக்கல் மாவட்டங்கள். இம்மாவட்டங்களில் புல ஒருங்கிணைந்த மாவட்டங்கள் வளர்ச்சி நிர்வாகத்தைப் பொறுத்தவரை குறிப்பாக சமூகத்துறைகளில் மிகவும் பெரியதாகவும் எளிதில் கையாள முடியாதவையாகவும் இருந்த காரணத்தால் 80-களிலும் 90-களிலும் இரண்டாக அல்லது மூன்றாகப் பிரிக்கப்பட்டன என்பது சுட்டிக்காட்டப்பட வேண்டியதாய் உள்ளது. இருந்தும் இரண்டாகப் பிரிக்கப்பட்டு பல ஆண்டுகளாகியும் இம்மாவட்டங்கள் மிக மந்தமாகவே வளர்ச்சி பெற்று வருகின்றன. முன்னேறிய மாவட்டங்களின் நிலையை இன்னும் அடைய வேண்டியுள்ளது.

### மகளிருக்கு முழு சமத்துவம் அளிப்பதை உறுதி செய்தல்

குறுமப் பாலின ஒத்தப்படி நிலையின்மையை சுட்டிக்காட்டுவதாய் மாவட்டங்களிடையில் பாலின மேம்பாட்டுக் குறியீடு (பா.மே.கு.) மற்றும் மனித மேம்பாட்டுக் குறியீடு (ம.மே.கு.) மதிப்புகளுக்கிடையில் வேறுபாடு மிகச் சிறிதளவே காணப்படுகிறது. பா.மே.கு. தமிழ்நாட்டின்

மாவட்டங்களிடையில் பெருமளவில் வேறுபாடுகளிருப்பதைக் காட்டுகிறது. ம.மே.கு. களில் இருப்பதைப் போலவே சென்னை, கன்னியாகுமரி மற்றும் நீலகிரி போன்ற சில குறிப்பிட்ட மாவட்டங்களில் பா.மே.கு.களின் உயர் மதிப்புகள், மாநில சராசரியை சமனப்படுத்தியுள்ளன. எனவே, மாவட்டங்களிடையே உள்ள ஏற்றத்தாழ்வுகளை நீக்குவதே முதற்கண் செய்ய வேண்டியதாகும். இராமநாதபுரம், திண்டுக்கல், புதுக்கோட்டை, திருவண்ணாமலை, விழுப்புரம், பெரம்பலூர் மற்றும் தருமபுரி ஆகிய மாவட்டங்களில் மனித மேம்பாட்டில் பாலின ஒத்தபடி நிலையின்மையைச் சுட்டிக் காட்டும் வகையில், பாலின மேம்பாட்டுக் குறியீடு மாநில சராசரியோடு ஒப்பிடுகையில் குறைவான பா.மே.குறியீட்டைப் பெற்றுள்ளது. மற்றொரு பகுத்தாய்வு தருமபுரி, பெரம்பலூர், தேனி மற்றும் வியப்பளிக்கும் வகையில் மதுரையும் ஒப்பீட்டடிப்படையில் குறைவான ஆயுட்கால எதிர்பார்ப்பைப் பெற்றுள்ளது. இது குறைவான பெண் நலக்காப்பை சுட்டிக்காட்டுகையில், மற்றொரு ஆய்வில் இம்மாவட்டங்களில் உயர் பெண்குழந்தை இறப்பு விகிதத்தை இதற்குக் காரணமாய்க் காட்டுகிறது. விழுப்புரம், திருவண்ணாமலை, கடலூர், சேலம், நாமக்கல், தருமபுரி மற்றும் திருவாரூர் மாவட்டங்களில் பெண் கல்வி அடைவுக்குறியீடு மிகவும் குறைவாக உள்ளது. இம்மாவட்டங்களில் பெண் தனி நபர் வருமானமும் குறைவாக உள்ளது. எனவே, இம்மாவட்டங்கள் மிக முனைப்பானதொரு பாலின ஒத்தபடி நிலையின்மையைப் பெற்றுள்ளதென்பது தெளிவு. பின்வருவனவற்றின் மீது நடவடிக்கை எடுக்க ஒரு விரிவான திட்டம் தேவை.

- கர்ப்பிணிப் பெண்களுக்குப் பேறுகாலக் காப்பு மூலம் ஆயுட்கால எதிர்பார்ப்பை அதிகரித்தல்.
- நோய்த்தடைக்காப்பு, பெண் சிசுக்கொலைக்கெதிரான விழிப்புணர்வை உருவாக்கல் உயர் பெண்கல்வி அறிவு மூலம் கல்வி அடைவு நிலைகளை அதிகரித்தல்.
- பெண்களைப் பள்ளிக்கனுப்புவதில் உள்ள பயன்களைப் பற்றித் தாய்மார்களுக்கு அறிவூட்டல். ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையினருக்கும் கூலி வேறுபாடுகளைக் குறைத்து பெண்ணின் தனி நபர் வருமானத்தை அதிகரித்தல்.
- பெண்களுக்கு ஒத்தபடி நிலையை வலியுறுத்தும் ஒரு அரசுக் கொள்கை உருவாக்கப்பட வேண்டும். அத்தகைய ஒரு கொள்கை, மற்றவற்றிற்கிடையில் பின்வருவனவற்றின் மீது கவனம் செலுத்த வேண்டும்.
- பெண்களுக்கு உயர் கூலி வழங்குவதை உறுதி செய்தல்
- பெண்களுக்கு வேளாண் சாராத நடவடிக்கைகளை விரிவுபடுத்தல்.
- நலவாழ்வு மற்றும் கல்வியில் பாலின சமஉரிமை (அ) சரி ஒப்புரவு.
- நலிவடையத்தக்க பிரிவினருக்கு பாலினம் தொடர்பான பிரச்சனைகளைப் பற்றி எடுத்துரைத்தல்.
- பெண்களுக்கெதிரான குற்றங்களைத் தடுக்க பயனளிக்கும் வகையில் ஒரு உருவரைபடம் தயாரித்தல்.

அரசு மகளிர் ஆணையம் காவலரிடையே பாலினக் கூர்உணர்வினை ஏற்படுத்திட ஒரு முன்னோடி திட்டத்தைத் தொடங்கியுள்ளது. அடுத்து மாநிலத்தின் மூத்த அலுவலர்கள் உள்ளடங்கிய காவல்துறைப் பணியாளர்களுக்குப் பாலினக் கூர் உணர்வூட்டும் மிகப்பெரும் திட்டம் மேற்கொள்ளப்பட்டது. அனைத்து மகளிர் காவல்துறைப் பணியாளர்களுக்கும் தொகுதிகளில் மறு கூர் உணர்வூட்டும் ஒரு தருக்க திட்டம் செயலாக்கப்பட்டது. காவல் பயிற்சி நிலையங்களின் பயிற்சி திட்டங்களில் பாலினம் ஒரு முக்கியப் பாடமாக இடம் பெற்றுள்ளது. பாலின உரிமைகள், பாலினக் கூர் உணர்வு பற்றிய துறைகளில் பல அரசுசாரா அமைப்புகள் பணியாற்றினாலும் மகளிர் இயக்கத் தொடரமைவுகளுக்காக மனித உரிமைகள் சட்டம் மற்றும், மகளிர் சுயஉதவிக்குழுக்கள் போன்ற சமுதாயம் சார்ந்தமைகளுக்குரிய பயிற்சி திட்டங்கள் மேற்கொள்ளப்பட வேண்டும். எந்த ஒரு பாலினக் கொள்கையும் மகளிர் பாதுகாப்பை உள்ளடக்கி இருக்க வேண்டும்.

## முதியோருக்கு சமூகப் பாதுகாப்பு

ஒரு மதிப்பீட்டின்படி மாநிலத்தின் மொத்த மக்கள் தொகையில், முதியோரின் விகிதப்பங்கு 2011-ல் 11.43% ஆக அதிகரிக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. முதியோர் மக்கட் தொகையில் எதிர்பார்க்கப்படும் உயர்வில் தமிழ்நாடு கேரளத்திற்கு அடுத்தபடியாக உள்ளது. முதியோரின் மக்கள் தொகை அதிகரித்து வருவதற்கான காரணம், நலவாழ்வுக் காப்புப் பணிகள் மற்றும் பொதுவாழ்க்கைத் தரத்தின் மேம்பாட்டின் பயனாக நீடுவாழ்வு அதிகரிப்பும் மற்றும் இறப்பு வீதத்தில் ஏற்பட்ட குறைவே ஆகும். மெதுவாக மறைந்து வரும் கூட்டுக்குடும்ப முறை காரணமாய், குறிப்பாக கிராமப்புறங்களிலிருந்து நகர்ப்புறங்களுக்குக் குடிப்பெயர்ச்சி, முதியோரைக் காக்கும் பொறுப்பு பெருமளவில் சமுதாயத்தின் மீதும் அரசின் மீதும் சுமத்தப்பட்டுவிட்டது. முதியோருக்கு வருமானப் பாதுகாப்பு மட்டுமின்றி நலக்காப்பும் தேவைப்படுகிறது. பெரிய நகரங்களைத் தவிர மற்ற இடங்களில் மருத்துவமனைகளில், முதியோர் காப்பு இன்னும் முழுமையான ஒரு பிரிவாக செயல்படவில்லை. முதியோர் தனிமையில் விடப்பட்டதாயும், உதவியற்று சமுதாயத்தால் விரும்பப்படாதவர்களாக உணர்வதால், அவர்களுக்கு உணர்வுப் பூர்வமான ஆதரவு தேவைப்படுகிறது. அவர்கள் மதிப்புடனும் தன்மானத்துடனும் வாழும் ஒரு சூழ்நிலை உருவாக்கப் படவேண்டும். மு.உ.தொ.கள் வழங்குதல்கள் மூலமாய்ப் பணப் பாதுகாப்பளிப்பதோடு நில்லாமல் முதியோருக்குச் சமூகப் பாதுகாப்பு உளவியலானதாகவும் அமைய வேண்டும்.

## நிதியாதாரங்களின் ஒதுக்கீடு

மனித மேம்பாட்டில் மாநிலத்திற்குள்ளாக நிலவும் ஏற்றத்தாழ்வுகளை, இழப்பின் அளவைக் கருத்தில் கொண்டு அதன் அடிப்படையில் நிதியாதாரங்களை ஒதுக்கீடு செய்தால் மட்டுமே பெருமளவு மட்டுப் படுத்த முடியும். முன்னதாக எடுத்துரைத்தவாறு மனித மேம்பாட்டு நோக்கங்களோடு பொருளாதார மேம்பாட்டுக் கொள்கைகள் ஒருங்கிணைக்கப்பட வேண்டும்.

தமிழ்நாடு, இந்தியாவில் பெரும் மாநிலங்களுக்கிடையில் ஒப்பிடும்போது, குறைவான தனி நபர் வருமான திட்ட முதலீட்டையே பெற்றுள்ளது. தமிழ்நாட்டின் திட்டத்திற்காகும் சொந்த நிதியாதாரங்கள் நீடித்த உயர் அளவிலான திட்ட முதலீடுக்குப் போதாததாக உள்ளதே இதற்கு முக்கிய காரணமாகும். ஏனெனில் அதன் மொத்த செலவினத்தில் ஒரு உயர் விழுக்காட்டைத்

திட்டத்தில் சேராத செலவுகள் ஈர்த்துக் கொள்கின்றது. தற்போதிருக்கும் மிகைகள் எதிர்மறையானவையாயிருப்பதால் சமீப ஆண்டுகளில் மூலதன அமைப்பில் முதலீடுகள் பங்களிப்பில் எந்த வகையிலும் உதவவில்லை. தற்போதிருக்கும் முதலீடுகளில் பெரும்பங்கு அரசுப்பணியாளருக்குக் கூலிகள், சம்பளம் மற்றும் ஓய்வூதியத்திற்குச் செல்கிறது. ஏனைய பெரிய மாநிலங்களோடு ஒப்பிடுகையில், தமிழ்நாட்டில் அரசுப் பணியாளரின் எண்ணிக்கை பெருமளவில் உள்ளது என்று தெரியவருகிறது. மத்திய அரசின் சம்பள ஏற்றமுறையை மாநில அரசுப் பணியாளருக்கும் ஏற்றுக் கொண்டதன் விளைவாக கருவூலத்தின் மீதான சுமை கணிசமாக உயர்ந்துள்ளது. மாநிலத்தின் வரி – மொத்த உள்நாட்டு உற்பத்தி விகிதம், பெரிய மாநிலங்களில் மிக அதிகமானவற்றில் ஒன்றாயுள்ளது. எனவே, கூடுதல் வரிவிதிப்பு மூலம் திட்ட முதலீடுகளுக்கான நிதியாதாரங்களைத் திரட்டுவதற்கான வாய்ப்பு முற்றிலும் வரையறைக்குட்பட்டுள்ளது.

வளர்ச்சி சாராத செலவினத்தைக் குறைக்க நடவடிக்கை எடுக்கப்பட்டாலொழிய, திட்ட முதலீடுகள் உண்மையில் எதிர்காலத்தில் தேக்க நிலையிலேயே தொடர்ந்திருக்கும். ஒவ்வொரு துறையிலும் தொடக்க நிலை வரவு செலவுத் திட்டத்தில் பணியாளர் குறித்த திட்டமிடல் மேற்கொள்ளப்பட வேண்டும். தொடக்கத்தில் மிகைப் பணியாளர்கள் மறு பணியமர்த்தம் செய்யப்பட வேண்டும். பணியாளர்கள் நகர்ப்புறங்களில் மிகுந்திருப்பது, குறிப்பாக கல்வி மற்றும் நலவாழ்வுத் துறையில் காணப்படுகிறது. கிராமப்புறங்களில், பள்ளிகளில் உயர் ஆசிரியர் – மாணவர் விகிதமும் தொடக்க நல நிலையங்களில் குறைவான மருத்துவர்களும் நலப்பணியாளர்களும் இருத்தல் குறிப்பிடத்தக்கது. எடுத்துக்காட்டாக நலவாழ்வு சுட்டிக்காட்டும் குறியீடுகளில் நன்கு செயல்படும் மாவட்டங்களிலிருந்து, பேறுகால இறப்பு விகிதம் மற்றும் உயர் இறப்புவிகிதம் போன்றவற்றில் மோசமான சுட்டிக்காட்டும் குறியீடுகளைக் கொண்ட மாவட்டங்களில் உரிய முறையில் மறு பணியமர்த்தம் செய்வது இம்மாவட்டங்களில் நலக்காப்பை மேம்படுத்தும் அடிப்படை நோக்கத்தை அடைய உதவும். இது மட்டுமின்றி, திட்டத்தில் சேராத செலவினங்களில் சிக்கனம் கடுமையாய்க் கடைபிடிக்கப்பட வேண்டும். மாநில திட்டக்குழு, பயனற்ற திட்டங்களைக் கண்டறிந்து அவற்றைக் களைவதற்கு விரிவான ஆய்வை மேற்கொண்டது. அதன் பரிந்துரைகள் உடனடியாய் செயலாக்கப்பட வேண்டும்.

திட்ட நிதிகள் மாவட்டங்களை எவ்வாறு சென்றடைகின்றன என்பது பற்றி குறைசுட்டும் நுண்ணாய்வு தேவைப்படுகிறது. இனி வருங்காலத்தில் சமூகத்துறைகளில் நிதி ஆதாரங்களின் ஒதுக்கீடு ம.மே.கு. மற்றும் பா.மே.கு. மதிப்புகள் குறைவாயுள்ள மாவட்டங்களில் அதிகமாயிருத்தல் வேண்டும். உயர் ம.மே.கு. மற்றும் பா.மே.கு. மதிப்புகள் அதிகம் பெற்று முன்னேறிய மாவட்டங்கள், சமூகத் துறைகளில் தனியார் பங்கேற்பை ஊக்குவிக்க இயலும் அளவுக்கு ஒரு நிலையை அடைந்துள்ளன. இதன் மூலம் நிதியின் பெரும்பங்கு தேவைப்படும் மாநிலங்களுக்குக் கிடைக்கும் நிலை ஏற்படும்.

மாநிலத்தில், மாவட்ட நிலையில் திட்டமிடுதல் பரவலாகத் தொடங்கப்பட்டுள்ளது. இது சமூகத்துறையின் செயலாக்கத்தை மேம்படுத்த, குறிப்பாக, பின்தங்கியுள்ள மாவட்டங்களில் பயன்படுத்தப்பட வேண்டும். இழப்பேற்பட்டுள்ள மாவட்டங்களுக்கு நிதியாதாரங்கள் வழங்கப்பட்டாலன்றி, சமூகத் துறையின் செயலாக்கத்தில் மேம்பாடுகளையும் மனித வள

மேம்பாட்டுக் குறிக்கோள்களையும் அடைவது மிகக் கடினமாக இருக்கும். சமூக சேவை அளிப்பதில் அரசு நிதியாதாரங்கள் வரையறைக்குட் பட்டிருக்கும் காரணத்தால், குறிப்பாக ஏழையரல்லாதவர் களிடமிருந்து கட்டணம் பெறுவதைக் கவனத்தில் கொள்ளலாம். தனியார் துறையின் பங்கேற்பைத் தூண்ட உரிய நிதி ஊக்கத்தை அறிமுகப்படுத்தப்பட வேண்டும்.

இழப்புக்காளான மாவட்டங்களுக்கு வெறும் நிதி ஒதுக்கீடு மட்டும் போதாது. அரசு திட்டங்கள், முதலீடுகளில் திறமைக் குறைவு மற்றும் அரசு திட்டங்களில் கட்டணங்களுக்குரிய பயன்கள் விகிதத்தைக் குறைப்பதற்குரிய பேணுகை, மற்றும் செயலாக்கங்களில் உள்ள குறைபாடுகளை சரிபார்க்க, நிதியாதாரங்களின் பயன்பாடு உரிய முறையில் கண்காணிக்கப்பட வேண்டும். இது நடைமுறைப்படுத்தப்பட்டால் தமிழ்நாட்டின் கணிசமான சாதனைகள் மேலும் அதிகரிக்கக்கூடும்.

# அ1. குறியீடுகளும் சுட்டிக்காட்டும் கருவிகளும்

## அ-1.1 : மனித மேம்பாட்டைச் சுட்டிக்காட்டும் கருவிகள்

| வ.எண் | மாவட்டங்கள் | பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்பு (ஆண்டுகள்)[1] 1997 | கல்வியறிவு வீதம்[2] (2001) | கல்வியறிவு குறியீடு | ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை விகிதம்[3] (1998-99) | ஒருங்கிணைந்த சேர்க்கை குறியீடு | தனிநபர் வருமானம்[4] (ரூ.) (நிலைத்திருக்கும் விலைகள் 1993-94) 1998-99 | உண்மையான மாவட்ட மொத்த உள்நாட்டு உற்பத்தி தனி நபர் வாங்கும் ஆற்றல் சரி ஒப்பு | மாவட்டத்தின் உண்மையான மொத்த உள்நாட்டு உற்பத்தி தனிநபர் (படிநிலை) |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| 1. | சென்னை | 74.21 | 80.14 | 0.801 | 100.83 | 1.008 | 18,127 | 3328.87 | 2 |
| 2. | காஞ்சிபுரம் | 69.26 | 77.61 | 0.776 | 75.32 | 0.753 | 24,553 | 4372.82 | 1 |
| 3. | திருவள்ளூர் | 67.38 | 76.54 | 0.765 | 78.76 | 0.788 | 10,197 | 1816.06 | 18 |
| 4. | கடலூர் | 68.87 | 71.85 | 0.719 | 80.88 | 0.809 | 8359 | 1488.71 | 24 |
| 5 | விழுப்புரம் | 65.07 | 64.85 | 0.649 | 73.65 | 0.737 | 6813 | 1213.38 | 29 |
| 6. | வேலூர் | 65.55 | 73.07 | 0.731 | 88.09 | 0.881 | 12,527 | 2231.02 | 8 |
| 7. | திருவண்ணாமலை | 66.57 | 68.22 | 0.682 | 79.73 | 0.797 | 7033 | 1252.56 | 28 |
| 8. | சேலம் | 65.24 | 65.72 | 0.657 | 77.93 | 0.779 | 11.805 | 2102.44 | 11 |
| 9. | நாமக்கல் | 66.22 | 67.66 | 0.677 | 83.17 | 0.832 | 10,661 | 1898,69 | 15 |
| 10. | தருமபுரி | 61.83 | 59.23 | 0.592 | 69.83 | 0.698 | 12,047 | 2145.54 | 9 |
| 11. | ஈரோடு | 69.18 | 65.51 | 0.655 | 83.63 | 0.836 | 12902 | 2297.81 | 6 |
| 12. | கோயம்புத்தூர் | 69.30 | 76.95 | 0.770 | 83.84 | 0.838 | 16585 | 2953.74 | 3 |
| 13. | நீலகிரி | 69.19 | 81.44 | 0.814 | 79.89 | 0.799 | 11,937 | 2125.95 | 10 |
| 14. | திருச்சி | 67.52 | 79.16 | 0.792 | 83.86 | 0.839 | 11,008 | 1960.49 | 13 |
| 15. | கரூர் | 68.10 | 68.74 | 0.687 | 81.98 | 0.820 | 10,711 | 1907.60 | 14 |
| 16. | பெரம்பலூர் | 62.08 | 65.29 | 0.653 | 80.38 | 0.804 | 9129 | 1625.85 | 20 |
| 17. | தஞ்சாவூர் | 64.38 | 76.07 | 0.761 | 84.06 | 0.841 | 8164 | 1453.99 | 25 |
| 18. | திருவாரூர் | 66.00 | 76.90 | 0.769 | 84.07 | 0.841 | 7594 | 1352.47 | 27 |
| 19. | நாகப்பட்டினம் | 66.36 | 76.89 | 0.769 | 81.44 | 0.814 | 10488 | 1867.88 | 17 |

(தொடர்ச்சி)

(அ1.1 தொடர்ச்சி)

| வ.எண் | மாவட்டங்கள் | பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்பு (ஆண்டுகள்)[1] 1997 | கல்வியறிவு வீதம்[2] (2001) | கல்வியறிவு குறியீடு | ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை விகிதம்[3] (1998-99) | ஒருங்கிணைந்த சேர்க்கை குறியீடு | தனிநபர் வருமானம்[4] (ரூ.) (நிலைத்திருக்கும் விலைகள் 1993-94) 1998-99 | உண்மையான மாவட்ட மொத்த உள்நாட்டு உற்பத்தி தனி நபர் வாங்கும் ஆற்றல் சரி ஒப்பு | மாவட்டத்தின் உண்மையான மொத்த உள்நாட்டு உற்பத்தி தனிநபர் (படிநிலை) |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| 20. | புதுக்கோட்டை | 65.53 | 71.66 | 0.717 | 75.29 | 0.753 | 8362 | 1489.25 | 23 |
| 21. | மதுரை | 62.15 | 78.65 | 0.787 | 92.15 | 0.922 | 13,698 | 2439.58 | 4 |
| 22. | தேனி | 62.67 | 72.01 | 0.720 | 88.55 | 0.886 | 9989 | 1779.01 | 19 |
| 23. | திண்டுக்கல் | 64.64 | 69.83 | 0.698 | 82.49 | 0.825 | 12,751 | 2270.92 | 7 |
| 24. | இராமநாதபுரம் | 65.18 | 73.05 | 0.731 | 82.46 | 0.825 | 8523 | 1517.92 | 21 |
| 25. | விருதுநகர் | 66.59 | 74.23 | 0.742 | 77.57 | 0.776 | 11,760 | 2094.42 | 12 |
| 26. | சிவகங்கை | 67.65 | 72.66 | 0.727 | 85.1 | 0.851 | 7902 | 1407.32 | 26 |
| 27. | திருநெல்வேலி | 65.79 | 76.97 | 0.770 | 87.94 | 0.879 | 10,526 | 1874.65 | 16 |
| 28. | தூத்துக்குடி | 68.26 | 81.96 | 0.820 | 93.16 | 0.932 | 13,420 | 2390.06 | 5 |
| 29 | கன்னியாகுமரி | 72.65 | 88.11 | 0.881 | 89.41 | 0.894 | 8461 | 1506.88 | 22 |
|  | மாநிலம் | 66.74 | 73.47 | 0.735 | 83.15 | 0.832 | 11775 | 2097.09 | - |

*ஆதாரங்கள் : 1. டேனிஷ் நாட்டுப் பன்னாட்டு வளர்ச்சி உதவி நலவாழ்வு திட்டம் (1997) நடத்திய முக்கிய நிகழ்வுகள் கணக்கெடுப்பு.*

*2. மக்கட்தொகைக் கணக்கு 1991.*

*3. பள்ளிக் கல்வித்துறை சென்னை.*

*4. பொருளியியல் மற்றும் புள்ளியியல்துறை, சென்னை.*

## அ-1.2 : மனித மேம்பாட்டுக் குறியீடு

| வ. எண் | மாவட்டங்கள் | பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்பு குறியீடு | கல்விக் குறியீடு | வருமானக் குறியீடு | ம.மே.கு. | | உண்மையான மொ.உ.உ. தனிநபர் வாங்கும் ஆற்றல் சரிஒப்பு படிநிலை (-) ம.மே.கு. படிநிலை |
|---|---|---|---|---|---|---|---|
|  |  |  |  |  | மதிப்பீடு | படிநிலை |  |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 1. | சென்னை | 0.820 | 0.870 | 0.580 | 0.757 | 1 | 1 |
| 2. | காஞ்சிபுரம் | 0.738 | 0.768 | 0.631 | 0.712 | 2 | -1 |

(தொடர்ச்சி)

(அ1.2 தொடர்ச்சி)

| வ. எண் | மாவட்டங்கள் | பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்பு குறியீடு | கல்விக் குறியீடு | வருமானக் குறியீடு | ம.மே.கு. | | உண்மையான மொ.உ.உ. தனிநபர் வாங்கும் ஆற்றல் சரிஓப்பு படிநிலை (–) ம.மே.கு. படிநிலை |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | மதிப்பீடு | படிநிலை | |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 3. | திருவள்ளூர் | 0.706 | 0.773 | 0.484 | 0.654 | 12 | 6 |
| 4. | கடலூர் | 0.731 | 0.749 | 0.451 | 0.644 | 16 | 8 |
| 5. | விழுப்புரம் | 0.668 | 0.678 | 0.417 | 0.587 | 28 | 1 |
| 6. | வேலூர் | 0.676 | 0.781 | 0.518 | 0.658 | 11 | -3 |
| 7. | திருவண்ணாமலை | 0.693 | 0.721 | 0.422 | 0.612 | 26 | 2 |
| 8. | சேலம் | 0.671 | 0.698 | 0.508 | 0.626 | 24 | -13 |
| 9. | நாமக்கல் | 0.687 | 0.728 | 0.491 | 0.636 | 20 | -5 |
| 10. | தருமபுரி | 0.614 | 0.628 | 0.512 | 0.584 | 29 | -20 |
| 11. | ஈரோடு | 0.736 | 0.716 | 0.523 | 0.658 | 10 | -4 |
| 12. | கோயம்புத்தூர் | 0.738 | 0.792 | 0.565 | 0.699 | 5 | -2 |
| 13. | நீலகிரி | 0.737 | 0.809 | 0.510 | 0.685 | 6 | 4 |
| 14. | திருச்சி | 0.709 | 0.807 | 0.497 | 0.671 | 7 | 6 |
| 15. | கரூர் | 0.718 | 0.732 | 0.492 | 0.647 | 15 | -1 |
| 16. | பெரம்பலூர் | 0.618 | 0.703 | 0.465 | 0.596 | 27 | -7 |
| 17. | தஞ்சாவூர் | 0.656 | 0.787 | 0.447 | 0.630 | 21 | 4 |
| 18. | நாகப்பட்டினம் | 0.689 | 0.784 | 0.489 | 0.654 | 13 | 4 |
| 19. | திருவாரூர் | 0.683 | 0.793 | 0.435 | 0.637 | 19 | 8 |
| 20. | புதுக்கோட்டை | 0.676 | 0.729 | 0.451 | 0.618 | 25 | -2 |
| 21. | மதுரை | 0.619 | 0.832 | 0.533 | 0.661 | 8 | -4 |
| 22. | தேனி | 0.628 | 0.775 | 0.480 | 0.628 | 23 | -4 |
| 23. | திண்டுக்கல் | 0.661 | 0.741 | 0.521 | 0.641 | 17 | -10 |
| 24. | இராமநாதபுரம் | 0.670 | 0.762 | 0.454 | 0.629 | 22 | -1 |
| 25. | விருதுநகர் | 0.693 | 0.753 | 0.508 | 0.651 | 14 | -2 |

(தொடர்ச்சி)

(அ1.2 தொடர்ச்சி)

| வ. எண் | மாவட்டங்கள் | பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்பு குறியீடு | கல்விக் குறியீடு | வருமானக் குறியீடு | ம.மே.கு. | | உண்மையான மொ.உ.உ. தனிநபர் வாங்கும் ஆற்றல் சரிஒப்பு படிநிலை (-) ம.மே.கு. படிநிலை |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | மதிப்பீடு | படிநிலை | |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 26. | சிவகங்கை | 0.711 | 0.768 | 0.441 | 0.640 | 18 | 8 |
| 27. | திருநெல்வேலி | 0.680 | 0.806 | 0.489 | 0.658 | 9 | 7 |
| 28. | தூத்துக்குடி | 0.721 | 0.857 | 0.530 | 0.703 | 4 | 1 |
| 29. | கன்னியாகுமரி | 0.794 | 0.885 | 0.453 | 0.711 | 3 | 19 |
| | மாநிலம் | 0.696 | 0.767 | 0.508 | 0.657 | - | - |

*ஆதாரம் : மாநில திட்டக்குழு, சென்னை - 2001.*

## அ 1.3 : பாலின மேம்பாட்டுக் குறியீடு : வருமானக் குறியீடு

| வ. எண் | மாவட்டங்கள் | உண்மையான மாவட்ட மொ.உ.உ. தனி நபர் வாங்கும் ஆற்றல் சரி ஒப்பு | உண்மையான மொ.உ.உ. தனி நபர் வாங்கும் ஆற்றலில் சரி ஒப்பு | | சரிகட்டிய வருமானம் | | சமமாய்பங்கீடு செய்யப்பட்ட வருமானக் குறியீடு |
|---|---|---|---|---|---|---|---|
| | | | ஆண் | பெண் | ஆண் | பெண் | |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 1. | சென்னை | 3228.37 | 1815.66 | 4570.51 | 0.484 | 0.638 | 0.551 |
| 2. | காஞ்சிபுரம் | 4372.82 | 2430.18 | 6262.06 | 0.533 | 0.691 | 0.602 |
| 3. | திருவள்ளூர் | 1816.06 | 1011.07 | 2596.16 | 0.386 | 0.544 | 0.453 |
| 4. | கடலூர் | 1488.71 | 821.58 | 2146.55 | 0.352 | 0.512 | 0.418 |
| 5. | விழுப்புரம் | 1213.38 | 670.85 | 1746.40 | 0.318 | 0.477 | 0.383 |
| 6. | வேலூர் | 2231.02 | 1224.36 | 3234.80 | 0.418 | 0.580 | 0.487 |
| 7. | திருவண்ணாமலை | 1252.56 | 687.66 | 1815.39 | 0.322 | 0.484 | 0.388 |
| 8. | சேலம் | 2102.44 | 1196.51 | 2943.57 | 0.414 | 0.565 | 0.479 |
| 9. | நாமக்கல் | 1898.69 | 1058.18 | 2711.56 | 0.394 | 0.551 | 0.460 |
| 10. | தருமபுரி | 2145.54 | 1214.77 | 3018.37 | 0.417 | 0.569 | 0.482 |
| 11. | ஈரோடு | 2297.81 | 1278.07 | 3287.88 | 0.425 | 0.583 | 0.493 |

(தொடர்ச்சி)

(அ1.3 தொடர்ச்சி)

| வ. எண் | மாவட்டங்கள் | உண்மையான மாவட்ட மொ.உ.உ தனி நபர் வாங்கும் ஆற்றல் சரி ஒப்பு | உண்மையான மொ.உ.உ தனி நபர் வாங்கும் ஆற்றலில் சரி ஒப்பு | | சரிகட்டிய வருமானம் | | சமமாய்பாங்கீடு செய்யப்பட்ட வருமானக் குறியீடு |
|---|---|---|---|---|---|---|---|
| | | | ஆண் | பெண் | ஆண் | பெண் | |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 12. | கோயம்புத்தூர் | 2953.74 | 1653.09 | 4201.31 | 0.468 | 0.624 | 0.536 |
| 13. | நீலகிரி | 2125.95 | 1157.45 | 3107.18 | 0.409 | 0.574 | 0.478 |
| 14. | திருச்சிராப்பள்ளி | 1960.42 | 1073.90 | 2847.83 | 0.396 | 0.559 | 0.465 |
| 15. | கரூர் | 1907.60 | 1040.91 | 2781.75 | 0.391 | 0.555 | 0.460 |
| 16. | பெரம்பலூர் | 1625.85 | 888.71 | 2366.75 | 0.365 | 0.528 | 0.433 |
| 17. | தஞ்சாவூர் | 1453.99 | 788.56 | 2133.44 | 0.345 | 0.511 | 0.413 |
| 18. | நாகப்பட்டினம் | 1867.88 | 1016.08 | 2732.38 | 0.387 | 0.552 | 0.456 |
| 19. | திருவாரூர் | 1352.47 | 736.73 | 1975.66 | 0.333 | 0.498 | 0.400 |
| 20. | புதுக்கோட்டை | 1489.25 | 810.53 | 2177.39 | 0.349 | 0.514 | 0.417 |
| 21. | மதுரை | 2439.58 | 1351.66 | 3503.97 | 0.435 | 0.594 | 0.503 |
| 22. | தேனி | 1779.01 | 983.89 | 2559.73 | 0.382 | 0.541 | 0.449 |
| 23. | திண்டுக்கல் | 2270.92 | 1252.95 | 3275.19 | 0.422 | 0.582 | 0.490 |
| 24. | இராமநாதபுரம் | 1517.92 | 818.67 | 2240.00 | 0.351 | 0.519 | 0.420 |
| 25. | விருதுநகர் | 2094.42 | 1140.58 | 3060.33 | 0.406 | 0.571 | 0.476 |
| 26. | சிவகங்கை | 1407.32 | 758.69 | 2077.73 | 0.338 | 0.506 | 0.407 |
| 27. | திருநெல்வேலி | 1874.65 | 1006.82 | 2778.54 | 0.385 | 0.555 | 0.456 |
| 28. | தூத்துக்குடி | 2390.06 | 1278.73 | 3556.68 | 0.425 | 0.596 | 0.498 |
| 29. | கன்னியாகுமரி | 1506.88 | 820.86 | 2201.17 | 0.351 | 0.516 | 0.419 |
| | மாநிலம் | 2097.09 | 1157.16 | 3024.19 | 0.409 | 0.569 | 0.477 |

*ஆதாரம்: மாநிலத் திட்டக்குழு, சென்னை. 2001*

## அ 1.4 : பாலினமும் ம.மே. படிநிலைகளும்

| வ. எண் | மாவட்டங்கள் | பா.மே.கு.மதிப்பு | பா.மே.கு.படிநிலை | ம.மே.கு. மதிப்பு | ம.மே.கு.படிநிலை |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 1. | சென்னை | 0.776 | 1 | 0.757 | 1 |
| 2. | காஞ்சிபுரம் | 0.710 | 2 | 0.712 | 2 |
| 3. | திருவள்ளூர் | 0.651 | 13 | 0.654 | 12 |
| 4. | கடலூர் | 0.643 | 15 | 0.644 | 16 |
| 5. | விழுப்புரம் | 0.582 | 28 | 0.587 | 28 |
| 6. | வேலூர் | 0.655 | 11 | 0.658 | 11 |
| 7. | திருவண்ணாமலை | 0.608 | 26 | 0.612 | 26 |
| 8. | சேலம் | 0.625 | 24 | 0.626 | 24 |
| 9. | நாமக்கல் | 0.631 | 20 | 0.636 | 20 |
| 10. | தருமபுரி | 0.582 | 29 | 0.584 | 29 |
| 11. | ஈரோடு | 0.656 | 10 | 0.658 | 10 |
| 12. | கோயம்புத்தூர் | 0.697 | 5 | 0.699 | 5 |
| 13. | நீலகிரி | 0.686 | 6 | 0.685 | 6 |
| 14. | திருச்சிராப்பள்ளி | 0.671 | 7 | 0.671 | 7 |
| 15. | கரூர் | 0.641 | 16 | 0.647 | 15 |
| 16. | பெரம்பலூர் | 0.592 | 27 | 0.596 | 27 |
| 17. | தஞ்சாவூர் | 0.629 | 21 | 0.630 | 21 |
| 18. | நாகப்பட்டினம் | 0.652 | 12 | 0.654 | 13 |
| 19. | திருவாரூர் | 0.633 | 19 | 0.637 | 19 |
| 20. | புதுக்கோட்டை | 0.615 | 25 | 0.618 | 25 |
| 21. | மதுரை | 0.661 | 8 | 0.661 | 8 |
| 22. | தேனி | 0.628 | 22 | 0.628 | 23 |
| 23. | திண்டுக்கல் | 0.638 | 17 | 0.641 | 17 |
| 24. | இராமநாதபுரம் | 0.626 | 23 | 0.629 | 22 |

(தொடர்ச்சி)

(அ1.4 தொடர்ச்சி)

| வ. எண் | மாவட்டங்கள் | பா.மே.கு.மதிப்பு | பா.மே.கு.படிநிலை | ம.மே.கு. மதிப்பு | ம.மே.கு.படிநிலை |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 25. | விருதுநகர் | 0.649 | 14 | 0.651 | 14 |
| 26. | சிவகங்கை | 0.635 | 18 | 0.640 | 18 |
| 27. | திருநெல்வேலி | 0.656 | 9 | 0.658 | 9 |
| 28. | தூத்துக்குடி | 0.703 | 4 | 0.703 | 4 |
| 29. | கன்னியாகுமரி | 0.708 | 3 | 0.711 | 3 |
| | மாநிலம் | 0.654 | - | 0.657 | - |

*ஆதாரம் : மாநில திட்டக்குழு, சென்னை 2001*

# அ2. பொருளாதார உருவடிவம்

## அ2.1 : மாநிலங்களிடைப் பொருளாதார உருவடிவம் (பெரிய மாநிலங்கள்)

| சுட்டிக்காட்டிகள் | குறிப்பு ஆண்டு | இந்தியா | தமிழ்நாடு | ஆந்திரப் பிரதேசம் | கேரளா | கர்நாடகா | குஜராத் | அரியானா | மத்திய பிரதேசம் | மகாராஷ்டிரா | பஞ்சாப் | மே.வங்கம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| நிகரமாநில உள்நாட்டு உற்பத்தி நடப்பு விலை நிலவரப்படி (ரூ. கோடிகளில்)[1] | 1996-97 | 1102645 | 82465 | 81643 | 40819 | 63342 | 75164 | 31386 | 65676 | 161470 | 39511 | 73976 |
| நிகர மாநில உள் நாட்டு உற்பத்தி நிலையான விலை நிலவரப்படி 1993-94 ரூ.கோடிகளில்)[1] | 1996-97 | 858234 | 66754 | 61928 | 28189 | 49358 | 61457 | 23665 | 53301 | 124642 | 31321 | 57979 |

(தொடர்ச்சி)

(அ2.1 தொடர்ச்சி)

| சுட்டிக்காட்டிகள் | குறிப்பு ஆண்டு | இந்தியா | தமிழ்நாடு | ஆந்திரப் பிரதேசம் | கேரளா | கர்நாடகா | குஜராத் | அரியானா | மத்திய பிரதேசம் | மகாராஷ்ட்டிரா | பஞ்சாப் | மே.வங்கம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| நிகரமாநில உள் நாட்டு உற்பத்தி[1] | | | | | | | | | | | | |
| - வேளாண்மை (நி.மா.உ.உ.யில் விழுக்காடு) | 1996-97 | 27.7 | 18.3 | 30.6 | 24.2 | 30.7 | 21.4 | 38.4 | 31.6 | 18.1 | 44.1 | 30.0 |
| - தொழில் (நி.மா.உ.உ.யில் விழுக்காடு) | 1996-97 | 16.5 | 23.7 | 13.6 | 11.6 | 15.7 | 27.1 | 19.2 | 16.5 | 24.1 | 13.4 | 14.1 |
| - சேவைகள் (நி.மா. உ உ யின் விழுக்காடு) | 1996-97 | 55.8 | 58.0 | 55.8 | 64.2 | 53.6 | 51.5 | 42.4 | 51.9 | 57.8 | 42.5 | 55.9 |
| நடப்பு விலை நிலவரப்படி[1] - தனி நபர் வருமானம் (ரூபாய்களில்) | 1996-97 | 11554 | 13985 | 11242 | 13089 | 12729 | 16366 | 16729 | 8757 | 18488 | 17530 | 9827 |
| நிலையான விலை நிலவரப்படி தனி நபர் வருமானம் (1993-94) ரூபாய்களில்[1] | 1996-97 | 8987 | 11320 | 8527 | 9039 | 9919 | 13382 | 12614 | 7107 | 14271 | 13896 | 7702 |
| மொத்த உள்நாட்டு உற்பத்தி விகித வளர்ச்சி[2] (சீர்திருத்த காலத்திற்கு முன்னர்) | 1980-81 முதல் 1990-91 வரை | 5.55 | 5.38 | 5.65 | 3.57 | 5.29 | 5.08 | 6.43 | 4.56 | 6.02 | 5.32 | 4.71 |
| சீர்திருத்தக் காலத் திற்கு பின்னர் | 1991.92 முதல் 1997-98 வரை | 6.89 | 6.22 | 5.03 | 5.83 | 5.29 | 9.57 | 5.02 | 6.17 | 8.01 | 4.71 | 6.91 |

(தொடர்ச்சி)

(அ2.1 தொடர்ச்சி)

| சுட்டிக்காட்டிகள் | குறிப்பு ஆண்டு | இந்தியா | தமிழ்நாடு | ஆந்திரப் பிரதேசம் | கேரளா | கர்நாடகா | குஜராத் | அரியானா | மத்திய பிரதேசம் | மகாராஷ்ட்டிரா | பஞ்சாப் | மே.வங்கம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| மொத்த உள்நாட்டு உற்பத்தியில்[2] சீர்திருத்த காலத்திற்கு முன்-தனி நபரின் வருமான வளர்ச்சி | 1980-81 முதல் 1990-91 வரை | 3.03* | 3.87 | 3.34 | 2.19 | 3.28 | 3.08 | 3.86 | 2.08 | 3.58 | 3.33 | 2.39 |
| சீர்திருத்தக் காலத்திற்கு பின்னர் | 1991-92 முதல் 1997-98 வரை | 4.02* | 4.95 | 3.45 | 4.52 | 3.45 | 7.57 | 2.66 | 3.87 | 6.13 | 2.80 | 5.04 |
| வறுமையில் உள்ள மக்கட் தொகை (30 நாள் நினைவு கூர்தல்)[2] | 1999-2000 | | | | | | | | | | | |
| - எண்ணிக்கை (லட்சங்களில்) | - | 2602.50 | 130.48 | 119.01 | 41.04 | 104.40 | 67.89 | 17.34 | 298.54 | 227.99 | 14.49 | 213.49 |
| மொத்த மக்கட் தொகையில் % | - | 26.10 | 21.12 | 15.77 | 12.72 | 20.04 | 14.07 | 8.74 | 37.43 | 25.02 | 6.16 | 27.02 |
| வறுமையில் உள்ள மக்கட் தொகை (%) (30 நாள் நினைவு கூர்தல்) | 1999-2000 | | | | | | | | | | | |
| - நகர்ப்புறம் | - | 23.62 | 22.11 | 26.63 | 20.27 | 25.25 | 15.59 | 9.99 | 38.44 | 26.81 | 5.75 | 14.86 |
| - கிராமப்புறம் | - | 27.09 | 20.55 | 11.05 | 9.38 | 17.38 | 13.17 | 8.27 | 37.06 | 23.72 | 6.35 | 31.85 |
| 1000 பேருக்கு பணி யமர்த்தப்பட்ட நபர்களின் எண்ணிக்கை (வழக்கமான தகுதி[3] நிலைப்படி) | | | | | | | | | | | | |
| கிராமப்புறம் | 55வது சுற்று | 417 | 513 | 542 | 387 | 487 | 499 | 349 | 462 | 484 | 410 | 349 |

(தொடர்ச்சி)

(அ2.1 தொடர்ச்சி)

| சுட்டிக்காட்டிகள் | குறிப்பு ஆண்டு | இந்தியா | தமிழ்நாடு | ஆந்திரப் பிரதேசம் | கேரளா | கர்நாடகா | குஜராத் | அரியானா | மத்திய பிரதேசம் | மகாராஷ்ட்டிரா | பஞ்சாப் | மே.வங்கம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| நகர்ப்புறம் | 1999-2000 | 337 | 393 | 348 | 373 | 366 | 345 | 314 | 319 | 346 | 353 | 350 |
| 1000 நபர்களில் வேலையில்லாதோர் எண்ணிக்கை வழக்கமான நிலைப்படி[3] | | | | | | | | | | | | |
| கிராமப்புறம் | 55வது சுற்றுப்படி | 7 | 11 | 5 | 41 | 4 | 3 | 3 | 2 | 9 | 8 | 12 |
| நகர்ப்புறம் | 1999-2000 | 18 | 17 | 15 | 48 | 13 | 7 | .9 | 12 | 23 | 11 | 30 |
| மொத்த மாநில உள் நாட்டு உற்பத்தியின் விழுக்காட்டில் கடன்[4] | 1996-97 | 20.71* | 14.88 | 18.54 | 24.10 | 16.27 | 15.93 | 17.65 | 17.27 | 11.56 | 32.33 | 21.47 |
| மொத்த[4] உ.உ. விகிதத்தில் - வரி | 1994-95 முதல் 1996-97 வரை சராசரி யளவு | 8.7 | 8.47 | 5.45 | 8.33 | 8.43 | 7.29 | 6.72 | 4.94 | 6.55 | 6.52 | 5.39 |
| மொத்த செல வினத்தில் வளர்ச்சி செலவினத்தின் % பங்கு | 1996-97 | 69.5 | 73.3 | 79.5 | 64.7 | 72.6 | 73.2 | 54.4 | 76.2 | 72.8 | 58.1 | 72.9 |
| தனிநபர் திட்ட செலவு (ரூ.)[2] | 1997-98 | 608 | 675 | 501 | 906 | 896 | 846 | 694 | 447 | 890 | 904 | 376 |
| மா.உ.உ.யின் %ஆக திட்ட செலவு[2] | 1987-88 முதல் 1997-98 வரை சராசரியாக | 4.50* | 4.60 | 4.28 | 4.99 | 6.49 | 4.51 | 3.94 | 4.97 | 3.97 | 3.94 | 2.70 |

(தொடர்ச்சி)

(அ11.4 தொடர்ச்சி)

(1999-2000)

| வ. எண் | மாவட்டங்கள் | மு.ஓ.ஊ. (வழக்கமான) | | | ஆதரவற்ற வேளாண் தொழிலாளர் ஓய்வூதியம் | | | ஆதரவற்ற உடல் ஊனமுற்றோர் ஓய்வூதியம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | ஆண் | பெண் | மொத்தம் | ஆண் | பெண் | மொத்தம் | ஆண் | பெண் | மொத்தம் |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 |
| 26. | விருதுநகர் | 3382 | 5833 | 9215 | 735 | 1579 | 2314 | 30 | 8 | 38 |
| 27. | சிவகங்கை | 2859 | 5796 | 8655 | 561 | 526 | 1087 | 44 | 87 | 131 |
| 28. | திருநெல்வேலி | 4994 | 9406 | 14400 | 716 | 644 | 1360 | 240 | 155 | 395 |
| 29. | தூத்துக்குடி | 2871 | 6320 | 9191 | 459 | 2080 | 2539 | 0 | 0 | 0 |
| 30. | கன்னியாகுமரி | 1729 | 2801 | 4530 | 241 | 497 | 738 | 33 | 39 | 72 |
| | மாநிலம் | 150388 | 245304 | 395692 | 33830 | 46901 | 80731 | 1902 | 1560 | 3462 |

## (மொத்த அட்டவணைகள், 4 தொடர்ச்சி)

(1999-2000)

| வ. எண் | மாவட்டங்கள் | ஆதரவற்ற விதவையர் ஓய்வூதியம் | ஆதரவற்ற, கைவிடப் பட்ட மனைவியர் ஓய்வூதியம் | மொத்த முதிய பயனாளிகள் | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | ஆண் | பெண் | மொத்தம் |
| 1 | 2 | 12 | 13 | 14 | 15 | 16 |
| 1. | சென்னை | 1301 | 23 | 12550 | 32138 | 44688 |
| 2. | காஞ்சிபுரம் | 159 | 0 | 9955 | 12669 | 22624 |
| 3. | திருவள்ளூர் | 467 | 106 | 6278 | 12226 | 18504 |
| 4. | கடலூர் | 754 | 19 | 7052 | 10390 | 17442 |
| 5. | விழுப்புரம் | 0 | 0 | 12547 | 8067 | 20614 |
| 6. | வேலூர் | 3599 | 96 | 12818 | 25647 | 38465 |
| 7. | திருவண்ணாமலை | 683 | 1856 | 12159 | 20427 | 32586 |
| 8. | சேலம் | 1598 | 255 | 10330 | 19663 | 29993 |
| 9. | நாமக்கல் | 27 | 0 | 3374 | 9567 | 12941 |
| 10. | தருமபுரி | 425 | 318 | 12831 | 13501 | 26332 |
| 11. | ஈரோடு | 784 | 571 | 5071 | 9555 | 14626 |

(தொடர்ச்சி)

(அ11.4 தொடர்ச்சி)

| வ. எண் | மாவட்டங்கள் | ஆதரவற்ற விதவையர் ஓய்வூதியம் | ஆதரவற்ற, கைவிடப் பட்ட மனைவியர் ஓய்வூதியம் | மொத்த முதிய பயனாளிகள் | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | ஆண் | பெண் | மொத்தம் |
| 1 | 2 | 12 | 13 | 14 | 15 | 16 |
| 12. | கோயம்புத்தூர் | 616 | 203 | 5445 | 10500 | 15945 |
| 13. | நீலகிரி | 118 | 54 | 1182 | 1793 | 2975 |
| 14. | திருச்சி | 511 | 23 | 7192 | 11292 | 18484 |
| 15. | கரூர் | 559 | 170 | 4164 | 4138 | 8302 |
| 16. | பெரம்பலூர் | 352 | 56 | 4475 | 9208 | 13683 |
| 17. | அரியலூர் | கி.வி. | கி.வி. | கி.வி. | கி.வி. | கி.வி. |
| 18. | தஞ்சாவூர் | 841 | 93 | 10361 | 10452 | 20813 |
| 19. | திருவாரூர் | 487 | 18 | 5058 | 5375 | 10433 |
| 20. | நாகப்பட்டினம் | 0 | 0 | 6013 | 2985 | 8998 |
| 21. | புதுக்கோட்டை | 0 | 19 | 4406 | 7144 | 11550 |
| 22. | மதுரை | 6103 | 350 | 5842 | 26115 | 31957 |
| 23. | தேனி | 157 | 547 | 1960 | 4928 | 6888 |
| 24. | திண்டுக்கல் | 481 | 0 | 2666 | 9063 | 11729 |
| 25. | இராமநாதபுரம் | 470 | 63 | 3497 | 6483 | 9980 |
| 26. | விருதுநகர் | 134 | 53 | 4147 | 7607 | 11754 |
| 27. | சிவகங்கை | 203 | 0 | 3464 | 6612 | 10076 |
| 28. | திருநெல்வேலி | 506 | 175 | 5950 | 10886 | 16836 |
| 29. | தூத்துக்குடி | 0 | 0 | 3330 | 8400 | 11730 |
| 30. | கன்னியாகுமரி | 511 | 66 | 2003 | 3914 | 5917 |
| | மாநிலம் | 21846 | 5134 | 186120 | 320745 | 506865 |

*குறிப்புகள்* *மு.ஓ.ஊ – முதியோர் ஓய்வூதியர்கள்.*

*ஆ.வே.தொ.ஓ.ஊ. - ஆதரவற்ற வேளாண் தொழிலாளர் ஓய்வூதியர்கள்.*

*ஆ.உ.ஊ.ஓ.ஊ. - ஆதரவற்ற உடல் ஊனமுற்றோர் ஓய்வூதியர்கள்*

*ஆ.வி.ஓ.ஊ. - ஆதரவற்ற விதவையர் ஓய்வூதியர்கள்.*

*ஆ.கை.ம.ஓ.ஊ. - ஆதரவற்ற கைவிடப்பட்ட மனைவியர் ஓய்வூதியர்கள்.*

*1. புள்ளி விவரங்கள் ஒருங்கிணைந்த பெரம்பலூர், அரியலூர் மாவட்டங்கள் தொடர்பானவை.*

*ஆதாரம் : தமிழ்நாட்டின் மாவட்ட ஆட்சியர்கள்.*

# தொழில்நுட்பக் குறிப்புகள்

**அ. மனித மேம்பாட்டுக் குறியீட்டைக் கணக்கிடுதல்**

மாவட்டங்களுக்கான மனித மேம்பாட்டுக் குறியீட்டைக் கணக்கிட மாநில அரசு பின்பற்றும் வழிமுறை பொதுவாக ஐக்கிய நாடுகள் வளர்ச்சி திட்டத்தினால் பின்பற்றப்படும் வழிமுறையைப் போன்ற ஒன்றே ஆகும். ம.மே.கு. (மனித மேம்பாட்டுக் குறியீடு) பின்வரும் வாழ்க்கைத் தரங்களின் மூன்று அளவுகளை உள்ளடக்கியதன் ஒரு கூட்டுக் குறியீடாய் உள்ளது.

| **அளவுகள்** | **மாறுமியல்புகள்** |
|---|---|
| 1. நீண்டவாழ்நாள் அடைதல் | பிறப்பின்போது எதிர்பார்ப்பு ஆயுட்காலம் |
| 2. கல்வி பெறுதல் | (அ) வயது வந்தோர் கல்வியறிவு விகிதம் |
| | (ஆ) ஒருங்கிணைந்த சேர்க்கை விகிதம் (தொடக்க இடைநிலை மற்றும் மேல்நிலை) |
| 3. நிதியாதாரங்களின் மீது கட்டுப்பாடு | தனிநபரின் உண்மையான வருமானம் |

மனித மேம்பாட்டை சுட்டிக்காட்டும் கருவியான நீண்ட வாழ்நாள், நலவாழ்வின் பல இயல்புகளை உள்ளடக்கியதாய் அமைகிறது. ஏனெனில் அது, ஊட்டச்சத்து, நலவாழ்வு மற்றும் ஏனைய உயிரியல் மற்றும் சமூக சாதனைகளுடன் நெருங்கிய ஒப்புமைத் தொடர்புடையதாய் உள்ளது. கல்வி பெறுகையானது வயது வந்தோரின் கல்வியறிவு வீதம் மூன்றில் இரண்டு பங்கு மதிப்பு மற்றும் தொடக்க நிலை, இடைநிலை மற்றும் மேல்நிலைகளில் சேர்க்கை விகிதம் மூன்றில் ஒரு பங்கு மதிப்பும் இணைந்த ஒரு அளவையால் அளவிடப்படுகிறது. வாழ்க்கைத் தரம், வாங்கும் சக்திக்கிணையான டாலர்கள் வாயிலாய் குறிப்பிடப்பட்டும், உண்மையான தனி நபரின் மொத்த உள்நாட்டு உற்பத்தியால் அளக்கப்படுகிறது. ஐக்கிய நாடுகள் வளர்ச்சி திட்டத்தால் நிர்ணயிக்கப்பட்ட குறியீடுகள் கணக்கிடுவதற்கான குறும மற்றும் பெருமளவு மதிப்பீடுகள் பின்வருமாறு:

| | குறும அளவு | பெரும அளவு |
|---|---|---|
| • பிறப்பின்போது ஆயுள் எதிர்பார்ப்பு காலம் | 25 ஆண்டுகள் | 85 ஆண்டுகள் |
| • வயது வந்தோர் கல்வியறிவு வீதம் | 0 விழுக்காடு | 100 விழுக்காடு |
| • ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை விகிதம் | 0 விழுக்காடு | 100 விழுக்காடு |
| • உண்மையான தனி நபரின் மொத்த உள்நாட்டு உற்பத்தி (வாங்கும் சக்தி கிணையான டாலர்கள்) | 100 டாலர்கள் | 40,000 டாலர்கள் |

இந்த இதழில் வளர்ச்சித் திட்டங்களின் விளைவுகளை மதிப்பாய்வு செய்ய, தமிழ்நாட்டின் மாவட்டங்களில் ம.மே.கு.–ஐக் கணக்கிட நாம் முயற்சி மேற்கொண்டுள்ளோம். குறியீட்டின் மதிப்புகளைக் கணக்கிட மாவட்ட அளவிலான அடிப்படை விவரங்களின் ஆதாரங்கள் பின்வருமாறு

## அடிப்படை விவர ஆதாரங்கள்

1. அனைத்து 29 மாவட்டங்களுக்குமான 1997–ம் ஆண்டுக்குரிய பிறப்பின் போது ஆயுட்கால எதிர்பார்ப்பு டேனிஷ்பன்னாட்டு வளர்ச்சி உதவி - நலவாழ்வு திட்டத்தால் நடத்தப்பட்ட முக்கிய நிகழ்வுகள் பகுதி - கணக்கெடுப்பை அடிப்படையாய்க் கொண்டது.

2. தொடக்கநிலை, நடுநிலை, உயர்நிலை மற்றும் மேல்நிலைப்பள்ளிகளுக்கான ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை விகிதம், பள்ளி செல்லும் வயதுடைய மக்கட்தொகையால் சரிக் கட்டியதற்கேற்ப, கல்வித் துறையால் அளிக்கப்பட்ட அடிப்படை விவரங்களைப் பயன் படுத்திப் பொருளியல் மற்றும் புள்ளியியல் துறையால் கணக்கிடப்பட்டது.

   கல்வி கற்றோரைக் கணக்கிட 1991 மக்கட்தொகைக் கணக்குப்படியான கல்வியறிவு விகிதம் எடுத்துக்கொள்ளப்பட்டது.

   கல்வி கற்றோர் விவரம் ஒருங்கிணைந்த கல்வியறிவு (2001 ம.தொ.க.) (மூன்றிலிரண்டு பங்கு அளவு) மற்றும் தொடக்க நிலை, நடுநிலை, உயர்நிலை மற்றும் மேல்நிலைகளில் பள்ளி செல்லும் வயது மக்கட்தொகைக்கு சரிக்கட்டியதற்கேற்ப ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை விகிதத்தால் அளவிடப்படுகிறது. (மூன்றில் ஒரு பங்கு அளவு (1998–99)

3. வருமானக் குறியீடுகளைக் கணக்கிடப் பொருளியல் மற்றும் புள்ளியியல் துறையால் மதிப்பீடு செய்யப்பட்ட மாவட்டவாரியான வருவாய் மதிப்பீடுகள் (1993–94 விலைவாசிப்படி புதிய தொகுதிகள்) பயன்படுத்தப்பட்டுள்ளன.

## ஒழுங்குமுறை

ம.மே.கு–ஐக் கணக்கிடும் ஒழுங்குமுறை பின்வருமாறு :

குறியீட்டைக் கணக்கிடக் கீழே விவரித்துள்ளபடி ஒவ்வொரு சுட்டிக்காட்டும் கருவிக்கும் குறும அளவு மற்றும் பெரும அளவு மதிப்பீடுகள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன.

ம.மே.கு.–இன் ஒவ்வொரு பகுதிக்கும் மா.பொ. குறியீடு பின்வருமாறு விளக்கப்படுகிறது.

$$\text{குறியீடு} = \frac{\text{உண்மையான } x_i \text{ மதிப்பு - குறும அளவு } x_i \text{ மதிப்பு}}{\text{பெரும அளவு } x_i \text{ மதிப்பு – குறும அளவு } x_i \text{ மதிப்பு}}$$

(i)வது மாறும் இயல்புக்கான ஒ-வது மாவட்டத்தின் ($I_j$)கு மதிப்பு, இம்மாறும் இயல்புகளின் சராசரியாக விளக்கப்படுகிறது.

ஒரு தனிநபரின் நல்வாழ்க்கையை அர்த்தமுள்ளவகையில் மதிப்பாய்வு செய்வதில் ஒவ்வொரு பகுதியும் சமமான முக்கியத்துவம் பெற்றிருப்பதால் மேம்பாட்டுக் குறியீட்டில் உள்ளடங்கிய மூன்று அளவுகள் ஒவ்வொன்றுக்கும், ம.மே.கு. சமமதிப்பளிக்கிறது.

$I_j = \Sigma I_{ij}/3 \qquad i = 1, 2, 3,$

$j = $ 1-29 மாவட்டங்கள்

## குறும அளவு மற்றும் பெரும அளவு மதிப்பீடுகள்

தமிழ்நாட்டினுடைய மாவட்டங்களுக்கான ம.மே.கு.–ஐக் கணக்கிட, இத்தகைய சுட்டிக்காட்டும் கருவிகள் ஒவ்வொன்றிற்கும் நாம், பின்வருமாறு, குறும அளவு மற்றும் பெரும அளவு மதிப்பீடுகளை அமைத்துள்ளோம்.

- பிறப்பின்போது ஆயுள் எதிர்பார்ப்பு காலம் – 25 ஆண்டுகள் மற்றும் 85 ஆண்டுகள்
- கல்வியறிவு விகிதம் – 0 விழுக்காடு மற்றும் 100 விழுக்காடு
- ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை விகிதம் – 0 விழுக்காடு மற்றும் 100 விழுக்காடு

$$\text{ஆயுள் எதிர்பார்ப்புக் குறியீடு} = \frac{\text{உள்ளபடியேயான மதிப்பீடு} - 25}{85 - 25}$$

கல்விக்குறியீடு = (2 x கல்வியறிவு வீதக் குறியீடு + 1 x ஒருங்கிணைந்த சேர்க்கை விகிதம் குறியீடு) / 3

## வருமான அளவு முடிவு செய்தல்

வருமானக் குறியீட்டைக் கணக்கிடுதல் மேலும் சிக்கலானது. கடந்த ஆண்டுகளில் மனித மேம்பாட்டறிக்கை 'அட்கின் வாய்ப்பாடு' என அழைக்கப்படும் ஒரு குறிப்பிட்ட வாய்ப்பைப் பயன்படுத்தியது. வருமானத்தை எடுத்துக்கொள்ளும் அடிப்படை அணுகுமுறை, மனித மேம்பாட்டில் ஒரு மதிப்பிற்குரிய நிலையை எட்ட அளவற்ற வருமானம் தேவையில்லை என்ற காரணத்தால் மேற்கொள்ளப்பட்டது. இதை எடுத்துக்காட்ட, ம.மே.கு.–ஐக் கணக்கிடப் பின்கண்ட வாய்ப்பாட்டைப் பயன்படுத்தி வருமானம் கழிவு செய்யப்பட்டது.

$$W(Y) = Y^* + 2(y^{*1/2}) + 3(y^{*1/3}) + 4(y^{*1/4}) + 5(y^{*1/5}) + 6(y^{*1/6}) + 7(40{,}000\text{-}6y^{*1/7})$$

இந்த வாய்ப்பாட்டில் உள்ள முக்கியச் சிக்கலானது. குறும அளவுக்கு மேலாக வருமானத்தை மிக அதிகமாய்க் கழிவு செய்வதன் மூலம், குறும அளவுக்கு மிகையான வருமானம் பெறும் நாடுகளை தண்டிப்பதாய் அமைகிறது. பல நேர்வுகளில் நீண்டதொரு மற்றும் நலவாழ்வும் அறிவும் அல்லாத ஏனைய அனைத்து மனித மேம்பாட்டு அளவுகளுக்கும் மாற்றாயிருக்கும் பொருத்தத்தை வருமானம் இழக்கிறது. 1999–ம் ஆண்டு ம.மே. அறிக்கையில் ஆனந்த் மற்றும் சென் ஆகியோரின் ஆய்வின் அடிப்படையில் ம.மே.கு–ல் வருமானத்தை எடுத்துக் கொள்வதைப் பற்றி முழுமையானதொரு மறுஆய்வு செய்யப்பட்டது. வருமானத்தை எடுத்துக் கொள்ளுவதைப் பற்றிய இம்மேம்பாடு மேலும் ஒரு உறுதியான பகுப்பாய்வு சார்ந்த அடித்தளத்தில் இவ்வொழுங்கு முறையை வைப்பதன் மூலம் இச்சிக்கல் சரி செய்ய முயற்சிக்கிறது. பின்வரும் வாய்ப்பாட்டைப் பயன்படுத்துவதன் மூலம் வருமானம் எடுத்துக்கொள்ளப்படுகிறது.

$$W(y) = \frac{\log y - \log y_{\text{குறுமம்}}}{\log y_{\text{குறுமம்}} - \log y_{\text{பெருமம்}}}$$

இவ்வாய்ப்பாட்டைப் பயன்படுத்துவன் பயன்களாவன:

i. முன்பு பயன்படுத்திய வாய்ப்பாட்டைப் போல் இந்த வாய்ப்பாடு வருமானத்தை மிக அதிகமாய்க் கழிவு செய்யவில்லை.

ii. ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேற்பட்ட வருமானத்தை மட்டுமின்றி (குறும அளவு) அனைத்து வருமானத்தையும் இது கழிவு செய்கிறது.

iii. இந்திய ரூபாய்களில் நாட்டின் தனிநபர் மொத்த உள்நாட்டு உற்பத்தியில் மாவட்டத்தில் தனி நபர் மொ.உ.உ.யின் விகிதத்தைக் கணக்கிட்டு, அதனோடு டாலர் மதிப்பில் நாட்டின் தனிநபர் மொ.உ.உ மதிப்பால் பெருக்கப்பட்டுள்ளது. ($ 1670, 1997-ம் ஆண்டுக்கு) மாவட்டங் களுக்கான வருமானக் குறியீடைக் கணக்கிட, மாவட்ட மொ.உ.உ. வாங்கும் திறன் டாலருக் கிணையான மதிப்பில் கணக்கிடப்பட வேண்டும். அவ்வாறு கணக்கிட

தமிழ்நாட்டின் தனி நபரின் மொத்த
உள்நாட்டு உற்பத்தி (1996-97)
நிலையான விலைவாசிப்படி = ரூ. 11,320/-
(பொருளியல் மற்றும் புள்ளியியல் இயக்ககம்)

இந்தியாவில் தனி நபரின் மொத்த
உள்நாட்டு உற்பத்தி (1996–97
நிலையான விலைவாசிப்படி = ரூ. 9376.90 (இந்திய அரசு)

இந்தியாவின் தனி நபரின் மொத்த
உள்நாட்டு உற்பத்தி (1997) வாங்கும்
சக்தி டாலர்களுக்கிணையானது. = $ 1670 (ம.மே.அ 1999)

$$\text{உள்ளபடியான மாவட்டத்தின் தனி நபரின் மொத்த உள்நாட்டு உற்பத்தி வாங்கும் சக்தி டாலருக்கு இணையானது} = \frac{\text{மாவட்டத்தின் தனி நபரின் மொத்த உள்நாட்டு உற்பத்தி (ரூபாய்களில்)}}{\text{இந்தியாவின் தனி நபர் மாவட்ட மொத்த உள்நாட்டு உற்பத்தி (ரூபாய்களில்)}} \times \text{இந்தியாவின் தனி நபரின் மொத்த உள்நாட்டு உற்பத்தி வாங்கும் சக்தி டாலருக்கு இணையானதில்}$$

அப்போது வருமான குறியீடு பின்வருமாறு இருக்கும்.

$$\frac{\text{Log (உண்மையான மாவட்ட தனி நபர் மொ. உ.உ)} - \log 100}{\text{Log } 40000 - \text{Log } 100}$$

**ம.மே.கு. ஒழுங்குமுறையின் விளக்கம்**

ம.மே.கு.—ஐக் கணக்கிடும் நிலைகளை விளக்க, நாம் தமிழ்நாட்டைத் தேர்வு செய்கிறோம்.

*வாழ்நாள் எதிர்பார்ப்புக் குறியீடு*

$$\frac{66.74 - 25}{85 - 25} = 0.696$$

*கல்வியறிவுக் குறியீடு*

$$\frac{73.47 - 0}{100 - 0} = 0.735$$

*ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை விகிதம்*

$$\frac{83.15 - 0}{100 - 0} = 0.832$$

*கல்விக் குறியீடு*

= 2/3 (கல்வியறிவுக் குறியீடு) + 1/3 (ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை விகிதம்)

= 2/3 (0.735)+1/3 (0.832) = 0.767

*சரிக்கட்டப்பட்ட உண்மையான தனி நபரின்*
*மொத்த உள்நாட்டு உற்பத்தி (டாலருக்கிணையான வாங்கும் சக்தி) குறியீடு*

$$\frac{\text{Log } 2097.09 - \text{Log } 100}{\text{Log } 40{,}000 - \text{Log } 100} = 0.508$$

தமிழ்நாட்டின் ம.மே.கு. = (0.696 + 0.767 + 0.508)/3
= 1.971/3 = 0.657

## ஆ. பாலினத் தொடர்பு மேம்பாட்டுக் குறியீடு கணக்கிடல்

பாலின மேம்பாட்டுக் குறியீடு (பா.மே.கு) ம.மே.கு–ஐப் போன்று ஒரே மாதிரியான மாறும் இயல்புகளைப் பயன்படுத்துகிறது. ஆனால் ஒவ்வொரு மாவட்டத்தின் ஆயுட்கால எதிர்பார்ப்பு கல்வி கற்றோர் மற்றும் வருமானம் ஆகியவற்றின் சராசரி சாதனையை ஆண்கள் மற்றும் பெண்களின் சாதனைகளுக்கிடையிலான சாதனையின் ஏற்றத்தாழ்வுகளுக்கேற்ப சரிக்கட்டிக் கொள்கிறது. வேறுவிதமாய் சொல்வதெனில் பாலின மேம்பாட்டுக் குறியீடு என்பது கழிவு செய்த (அ) பாலின ஏற்றத்தாழ்வைக் கீழ்நோக்கிச் சரிக்கட்டிய ம.மே.கு. ஆகும். கழிவு செய்வது, பாலின ஏற்றத்தாழ்வுக்கெதிரான வெறுப்புணர்வில் செய்யப்படுகிறது. மிதமான பாலின எதிர்ப்புணர்வு, குறியீட்டில் (epsilon) 'e' எனக் குறிப்பிடப்படுகிறது. பாலின மேம்பாட்டுக் குறியீட்டைக் கணக்கிடுவதில் இது (2)ன் மதிப்பை எடுத்துக் கொள்ளுகிறது. கிரேக்க நெடுங்கணக்கின் ஐந்தாவது (e) எழுத்து என்பது ஆண் மற்றும் பெண் மதிப்புகளின் இசைவான சராசரியாகும்.

பாலின மேம்பாட்டுக் குறியீட்டின் (பா.மே.கு.) கணக்கீடு சமமாய்ப் பங்கீடு செய்யப்பட்ட பிறப்பின்போது ஆயுட்கால எதிர்பார்ப்புக் குறியீடு, சமமாய்ப் பங்கீடு செய்யப்பட்ட கல்வி பெறுவது, மற்றும் சமமாய்ப் பங்கீடு செய்யப்பட்ட வருமானப் பங்கீடு ஆகியவற்றின் கணக்கீட்டின் அடிப்படையிலமைந்துள்ளது. பாலின மேம்பாட்டுக்குறியீடு (பா.மே.கு) சமமாய்ப் பங்கீடு செய்யப்பட்ட இம்மூன்று குறியீடுகளின் சராசரியாகும். '0'க்கும் (1)க்குமிடையிலான மதிப்பை இது எடுத்துக் கொள்ளுகிறது.

ஆண்களைவிடப் பெண்கள் நீண்டநாள் வாழ்கின்றனர் என்ற உண்மையைக் கணக்கில் கொண்டு, ஐக்கிய நாடுகளின் வளர்ச்சி திட்டம் ஆயுட்கால எதிர்பார்ப்புக்கான பெரும அளவு மற்றும் குறும அளவு மதிப்பீடுகளைத் தேர்வு செய்கிறது. பெண்களுக்கு பெரும அளவு மதிப்பீடு 87.5 ஆண்டுகளாகவும் குறும அளவு மதிப்பீடு 27.5 ஆண்டுகளாகவும் ஆண்களுக்கு ஒத்த மதிப்பீடுகள் முறையே 82.5 ஆண்டுகளாகவும் 22.5 ஆண்டுகளாகவும் எடுத்துக் கொள்ளப்படுகிறது. மாவட்ட அளவில் பா.மே.கு–ஐக் கணக்கிடவும் இதே பெரும அளவு மற்றும் குறும அளவு மதிப்பீடுகள் பயன்படுத்தப்படுகின்றன.

கல்வி கற்றோர் குறியீட்டுக்கான மாறும் இயல்புகளில், ம.மே.கு. லிருப்பதைப் போன்றே ஒருங்கிணைந்த கல்வியறிவு வீதத்தில் மூன்றில் இரண்டு மடங்கு மற்றும் ஒருங்கிணைந்த சேர்க்கை விகிதத்தில் (தொடக்கக் நிலை, நடுநிலை, உயர்நிலை மற்றும் மேல்நிலை) மூன்றில் ஒரு மடங்கு மதிப்பும் உள்ளடங்கியுள்ளது. இந்தக் குறியீடுகள் ஒவ்வொன்றும் ஒரு பெரும அளவு மதிப்பாய் 100–ஐயும் ஒரு குறும அளவு மதிப்பாய் '0'வையும் பெற்றுள்ளது.

வருமானத்திற்கான குறியீட்டைக் கணக்கிடுவது பெரும்பாலும் சிக்கலானதே. வருமானக் குறியீட்டைக் கணக்கிட சராசரி ஆண் கூலிக்கு சராசரி பெண் கூலி விகிதம் மற்றும் 15 வயதுக்கும் மேற்பட்ட பொருளாதார செயலார்ந்த மக்கட்தொகையில் ஆண்கள் மற்றும் பெண்களின் விழுக்காடுகளின் விகிதம் பற்றிய அடிப்படை விவரங்களிலிருந்து ஈட்டிய வருமானத்தில் பெண்

மற்றும் ஆணின் பங்கு பெறப்படுகிறது. வருமானக் குறியீட்டைக் கணக்கிடும் முன்னர் மக்கட்தொகையில் பெண்கள் மற்றும் ஆண்களின் பங்குகளின் விகிதப்படி, ஈட்டிய வருமானத்தில் பெண்கள் மற்றும் ஆண்களின் பங்குகளின் ஏற்றத்தாழ்வுகளின் அடிப்படையில், ஒரு மாவட்டத்தின் சரிக்கட்டிய சராசரி உண்மையான தனி ஒருவரின் மொத்த உள்நாட்டு உற்பத்தி கழிவு செய்யப்படுகிறது.

இந்தத் இதழில் தமிழ்நாட்டிலிருக்கும் மாவட்டங்களுக்கு, ஆண்களுக்கும், பெண்களுக்கு மிடையிலான சாதனைகளின் ஏற்றத்தாழ்வுகளுக்கேற்ப ஒவ்வொரு மாவட்டத்தின் சாதனையையும் பகுப்பாய்வு செய்ய பாலின மேம்பாட்டுக் குறியீட்டை (பா.மே.கு)க் கணக்கிட முயற்சித்துள்ளோம். மாவட்ட அளவிலான அடிப்படை விவரங்களுக்கான ஆதார குறியீடுகளின் மதிப்பீடுகளைக் (ம.மே.கு.)–களைக் கணக்கிடப் பயன்படுத்தப்படுவதைப் போன்றேயாகும்.

### பா.மே.கு. ஒழுங்குமுறைப் பற்றிய விளக்கம்

தமிழ்நாட்டின் பா.மே.கு. கணக்கீடு பின்வருமாறு காட்டப்படுகிறது. சமமில்லாத எதிர்மறை $\varepsilon$ மதிப்பு '2' என எடுத்துக் கொள்ளப்படுகிறது.

*மொத்த மக்கட்தொகையின் விழுக்காடு பங்கு*

பெண் : 49.263 ஆண் : 50.737 **ஆதாரம் :** ம.தொ.க. 1991

*பிறப்பின்போது ஆயுள் எதிர்பார்ப்புக்காலம் (ஆண்டுகள்)*

பெண் : 70.54 ஆண் : 66.38 **ஆதாரம் :** டேனிஷ் பன்னாட்டு உதவி (டேனிடா) (1997)

*ஒருங்கிணைந்த கல்வியறிவு வீதம் (%)*

பெண் : 51.3 ஆண் : 73.8 **ஆதாரம் :** ம.தொ.க. 1991

ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை விகிதம்

பெண் : 80.60 ஆண் : 85.61 **ஆதாரம் :** *கல்வித்துறை*

*1998–99 பொருளாதார செயலாற்ந்த மக்கட்தொகையில் பங்கு*

பெண் : 39.2 ஆண் : 60.8 **ஆதாரம் :** தேசிய மாதிரிக் கணக்கெடுப்பு நிறுவனம் (50-வது சுற்று) வேளாண் கூலி வீதங்கள்

பெண் : ரூ. 33.55 ஆண் : ரூ. 57.22 **ஆதாரம் :** பொருளியல் மற்றும் புள்ளியியல் இயக்ககம் (1998–99)

**படி : 1**

***சமமாய் பங்கீடு செய்யப்பட்ட எதிர்பார்ப்பு ஆயுட்காலக் குறியீடு கணக்கீடு***

பெண் : (70.54 – 27.50) / (87.50 – 27.50) = 0.717

ஆண் : (66.38 – 22.50)/(82.50–22.50)=0.731

***சமமாய் பங்கீடு செய்யப்பட்ட எதிர்பார்ப்புக்கு ஆயுட்காலக் குறியீடு***

[(பெண் மக்கட்தொகைப்பங்கு x (பெண் எதிர்பார்ப்பு ஆயுட்காலக் குறியீடு)$^{1-\varepsilon}$ + (ஆண் மக்கட்தொகைப் பங்கு) x (ஆண் எதிர்பார்ப்பு ஆயுட்காலக் குறியீடு)$^{1-\varepsilon}$]$^{1-\varepsilon}$

$= [0.4926\ (0.717)^{-1} + 0.5074\ (0.731)^{-1}]^{-1}$

= 0.724

**படி : 2**

***சமமாய்ப் பங்கீடு செய்யப்பட்ட கல்வி கற்றோர் குறியீடு***

**ஒருங்கிணைந்த கல்வியறிவு குறியீடு**

பெண் $\dfrac{(64.55\text{–}0)}{100\text{–}0} = 0.646$

ஆண் $\dfrac{82.33\text{-}0}{100\text{–}0} = 0.823$

**ஒருங்கிணைந்த மொத்த சேர்க்கை விகிதம்**

பெண் $\dfrac{80.60\text{–}0}{100\text{–}0} = 0.806$

ஆண் $\dfrac{85.61\text{-}0}{100\text{–}0} = 0.856$

***கல்வி கற்றோர்க் குறியீடு***

= 2/3 (ஒருங்கிணைந்த கல்வியறிவுக் குறியீடு)
+ 1/3 (ஒருங்கிணைந்த சேர்க்கைக் குறியீடு)

பெண் = 2/3 (0.646) + 1/3 (0.806) = 0.699

ஆண் = 2/3 (0.823) + 1/3 (0.856) = 0.834

சமமாய் பங்கீடு செய்யப்பட்ட கல்வி கற்றோர் குறியீடு

= [(பெண் மக்கட்தொகைப் பங்கு) x (பெண் கல்வி கற்றோர்க் குறியீடு)$^{1-\varepsilon}$) + (ஆண் மக்கட் தொகைப்பங்கு) து (ஆண் கல்வி கற்றோர்க் குறியீடு)$^{1-\varepsilon}$)]$^{1-\varepsilon}$

$= [0.4926\ (0.699)^{-1} + 0.5074\ (0.834)^{-1}]^{-1}$

= 0.762

**படி : 3**

*சமமாய்ப் பங்கீடு செய்யப்பட்ட வருமானக் குறியீடு :*

வருமானத்திற்கான குறியீட்டைக் கணக்கிடுவது பெரும்பாலும் சிக்கலானதே. பெண்கள் மற்றும் ஆண்களுக்கான தனி ஒருவரின் மொத்த உள்நாட்டு உற்பத்தியின் மதிப்பீடுகள் (வாங்கும் சக்திக்கிணையான டாலர்கள்) ஈட்டிய வருமானத்தில் பெண்களின் பங்கு ($s_f$) மற்றும் ஆண்களின் பங்கிலிருந்து ($s_m$) கணக்கிடப்படுகிறது. பதிலுக்கு இப்பங்குகள் ஆண் கூலிக்கு ($w_f$)ப் பெண் கூலியின் விகிதத்திலிருந்து ($w_m$) பொருளாதார செயலார்ந்த மக்கட் தொகையில் பெண் ($ea_f$) மற்றும் ஆண் ($ea_m$) விழுக்காடு பங்குகளிலிருந்தும் மதிப்பீடு செய்யப்படுகிறது. கூலிவிகிதம் மீதான அடிப்படை விவரம் கிடைக்கப்பெறாவிட்டால் 75% அளவிலான ஒரு மதிப்பீடு பயன்படுத்தப்படுகிறது. பெண் மற்றும் ஆண் தனி ஒருவர் வருமான மதிப்பீடுகள் (வாங்கும் சக்திக்கிணையான டாலர்) ம.மே.கு.வுக்கு எடுத்துக் கொள்வதைப் போன்றே எடுத்துக் கொள்ளப்பட்டுப் பின் சமமாய்ப் பங்கீடு செய்யப்பட்ட வருமானக் குறியீட்டைக் கணக்கிடப் பயன்படுத்தப்படுகிறது.

பொருளாதார செயலார்ந்த மக்கட்தொகையின் விழுக்காட்டுப் பங்குகள்

பெண் : 39.2 ஆண் : 60.8

ஐக்கிய நாடுகள் வளர்ச்சி திட்டம், ஆண் வேளாண் அல்லாத கூலிக்கு பெண் வேளாண் அல்லாத கூலி விகிதத்தை மேற்கொள்ளுகிறது. தமிழ்நாடு அதன் மக்கட்தொகையில் மூன்றில் இரண்டு பங்கு வேளாண் துறையைச் சார்ந்திருக்கும் மாநிலமாயிருப்பதால் இங்கு நாம் ஆண் வேளாண் கூலிக்குப் பெண் வேளாண் கூலி விகிதத்தைப் பயன்படுத்துகிறோம்.

பெண் வேளாண் கூலி = ரூ. 33.55

ஆண் வேளாண் கூலி = ரூ. 57.22

ஆண் வேளாண் கூலிக்குப் பெண் வேளாண் கூலி விகிதம் = $W_f/W_m$ = 0.586

பொருளாதார செயலார்ந்த மக்கட்தொகையின் பெண் விழுக்காட்டுப் பங்கு ($ea_f$) = 39.2

பொருளாதார செயலார்ந்த மக்கட்தொகையில் ஆண் விழுக்காட்டுப்பங்கு ($ea_m$) = 60.8

*அ) விகிதாசார வருமானப் பங்கைக் கணக்கிடுதல்*

$$\text{கூலிப்பட்டியலில் பெண்கள் பங்கு} = \frac{(S_f) = (W_f/W_m) \times ea_f}{(W_f/W_m) \times ea_f) + ea_m}$$

$$\frac{0.586 \times 39.2}{(0.586 \times 39.2) + 60.8}$$

$$= 22.971/83.771 = 0.274$$

ஒரு மாவட்டத்தின் / மாநிலத்தின் (y) மொத்த உள்நாட்டு உற்பத்தி (வாங்கும் சக்திக்கு இணையான டாலர்கள்) $s_f$-க்கு ஏற்ப, பெண்களுக்கும் ஆண்களுக்குமிடையே முடிவு செய்யப் படவேண்டும். பெண்களின் மொத்த, மொத்த உள்நாட்டு உற்பத்தி (வாங்கும் சக்திக்கிணையான டாலர்கள்) வருமானத்தின் பங்கு $(s_f \times y)$ஆலும், ஆண்களின் மொத்த உள்நாட்டு உற்பத்தி (வாங்கும் சக்திக்கிணையான டாலர்கள்) $[y-(s_f \times y)]$ஆலும் கொடுக்கப்படுகிறது.

பெண்களின் தனி ஒருவரின் மொத்த உள்நாட்டு உற்பத்தி (வாங்கும் சக்திக்கிணையான டாலர்கள்) $(Y_f) = S_f \times Y/N_{f1}$ இங்கு $N_{f1}$ என்பது மொத்த பெண் மக்கட்தொகையாய் உள்ளது.

$$Yf = (0.274 \times 1302526.67) / 308.42 = 356892.31 / 308.42 = 1157.16$$

ஆண்களின் தனி நபரின் மொத்த உள்நாட்டு (வாங்கும் சக்தி டாலருக்கிணையான) உற்பத்தி $Y_m$ $y-(S_f \times y)/N_{m1}$ இங்கு $N_{m1}$ என்பது மொத்த ஆண் மக்கட் தொகையாய் உள்ளது.

$$Y_m = (1302526.67-356892.31) / 312.69 = 945634036 / 312.69 = 3024.19$$

ம.மே.கு.–யைக் கணக்கிடுவதில் வருமானத்தை எடுத்துக்கொள்வதைப் போன்றே பெண்களின் சரிக்கட்டிய வருமானம் $W(y_f)$, பின்வருமாறு:

$$W(yf) = \frac{\log Y_f - \log Y_{min}}{\log Y_{min} - \log y_{max}.}$$

$$= \frac{\log 1157.16 - \log. 100}{\log 40000 - \log 100}$$

$$= (3.063 -2) / (4.602-2) = 1063 / 2.602$$

$$= 0.409$$

ஆண்களின் சரிக்கட்டிய வருமானம் $W(Y_m)$ பின்வருமாறு :

$$W(Y_m) = \frac{\log Y_m - \log y_{min}}{\log y_{min} - \log y_{max}}$$

$$= \frac{\log 3024.19 - \log 100}{\log 40000 - \log 100}$$

$= (3.481-2)/(4.602-2) = 1.481/2.602$

$= 0.569$

*ஆ. சமமாய் பங்கீடு செய்யப்பட்ட வருமானக் குறியீட்டை கணக்கிடுதல்*

சமமாய் பங்கீடு செய்யப்பட்ட வருமான குறியீட்டை கணக்கிட மதிப்பளவு (ε = 2) பயன் படுத்தப்படுகிறது.

(பெண் மக்கட்தொகைப் பங்கு) × (சரிக்கட்டிய பெண் தனி நபரின் உள்நாட்டு உற்பத்தி வாங்கும் சக்திக்கு இணையான டாலர்களில்)$^{1-\varepsilon}$ + (ஆண் மக்கட்தொகைப்பங்கு) × (சரிக் கட்டிய ஆண் தனி நபரின் உள்நாட்டு உற்பத்தி வாங்கும் சக்திக்கிணையான டாலர்களில்) $^{1-\varepsilon}]^{1/1-\varepsilon}$

$= [(0.493 \times (0.409)^{-1} + 0.507 \times (0.569)^{-1}]^{-1}$

$= [(0.493 \times 2.445) + (0.507 \times 1.757)^{-1}]$

$= (1.205 + 0.891)^{-1} = (2.096)^{-1} = 0.477$

**படி : 4**

**பாலின மேம்பாட்டுக் குறியீடு**

= 1/3 (சமமாய் பங்கீடு செய்யப்பட்ட பிறப்பின்போது எதிர்பார்ப்பு ஆயுட்காலம் + சமமாய் பங்கீடு செய்யப்பட்ட கல்வி கற்றோர் குறியீடு + சமமாய் பங்கீடு செய்யப்பட்ட வருமானக் குறியீடு)

= 1/3 (0.724 + 0.762 + 0.477)

= 0.654

## இ. மாநில / மாவட்ட உள்நாட்டு உற்பத்தி மதிப்பீடுகள் - ஒழுங்குமுறை

1950 தொடக்கங்களில், தேசீய வருமான குழு அறிக்கைகள் வெளியான பின்னர், மாநில வருமான மதிப்பிடல் பெரும் கவனத்தை ஈர்த்தது. 1957–ல் மையஅரசின் புள்ளியியல் விவர நிறுவனம் (மை.பு.நி) மாநில வருமானம் குறித்த ஒரு செயற்குழுவை நிறுவியது. இதன் பணி, மாநில புள்ளி விவர முகமைகளால் அவ்வப்போது தயாரிக்கப்படும் மாநில வருமான மதிப்பீடுகளின் தொழில்நுட்ப ஆய்வை மேற்கொண்டு புள்ளி விவரங்களின் இடைவெளிகளை நிரப்பி, அந்த மதிப்பீடுகளை மேம்படுத்துவதற்கான பரிந்துரைப்பதும் மாநில உள்நாட்டு உற்பத்தியை மதிப்பிடலுக்கான பொதுவான ஒரு நிலையான தொகுதி கோட்பாடுகள் விளக்கங்கள் மற்றும் ஒழுங்கு முறைகளை அளிப்பதும் ஆகும். மாநில வருமான புள்ளி விவரங்களின் தயாரிப்பு முக்கியமாய் இக்குழுவின் ஆழ்ந்தாராய்வின் வழிகாட்டுதலின் படியே இருக்கின்றன. இக்குழு பெரும்பாலான மாநிலங்களால் தயாரிக்கப்பட்ட மதிப்பீடுகளை ஆய்வு செய்து மதிப்பீடுகளை

மேம்படுத்தவும் மாநிலங்களிடையிலான ஒப்பீடு செய்யவும் ஏதுவாய் விரிவான கருத்துக்களை அளித்துள்ளது. இக்குழு, வெவ்வேறு துறைகளின் வருமான மதிப்பீட்டுக்கான நிலையான ஒழுங்குமுறைகளை வகுத்துள்ளது.

தேசீய மாநில வருமான மதிப்பிடலில் மூன்றாவது முக்கிய முன்னேற்றம், இந்திய அரசால் 1972–ல் மண்டலக் கணக்குக் குழுவை நியமித்ததே ஆகும். (ம.க.கு) இக்குழு மாநில/மாவட்ட அல்லது மற்ற மண்டல நிலை ஆகிய இவற்றில் எந்த நிலையில் கணக்குகள் தயாரிக்கப்பட வேண்டும் எனவும், கிடைக்கப்பெறும் அடிப்படை விவரங்களின் அடிப்படையில் அத்தகைய கணக்குகளைத் தயாரிப்பதற்கான நடவடிக்கைகளை எடுத்துரைக்கும் எனவும் எதிர்பார்க்கப்பட்டது. 1976 செப்டம்பரில் இக்குழுவால் அளிக்கப்பட்ட இறுதியறிக்கையில், மாநிலங்களுக்கு ஒரு கணக்குக் கட்டமைப்பைப் பரிந்துரைக்கும் அதே நேரத்தில் மாநிலங்களைவிடச் சிறியவையாயிருக்கும் மாவட்டங்கள் போன்ற மண்டலங்களுக்கு அவ்விதம் பரிந்துரைப்பதில் சிறிதளவு பயனே உள்ளன என உணர்ந்தது. மாநிலங்களைவிடச் சிறிதாயிருக்கும் பகுதிகளின் பாடங்கள் உற்பத்தி செய்யும் துறைகளுக்கு உள்நாட்டு உற்பத்திப் பொருளைத் தனித்தனியாய்ப் பிரிப்பது மட்டும் பரிந்துரைக்கப்பட்டது. மற்ற வகையில் பரிந்துரைக்கப்படும் கணக்குகளின் நோக்கத்திற்காக மண்டலம் ஒரு மாநிலத்தின் நிலவியல் எல்லையுடனான கூட்டு முடிவிடமாய்க் கருதப்படுகிறது. நடப்பு மற்றும் நிலையான விலைவாசிகளின்படி மாநில உள்நாட்டு உற்பத்தியைத் தயாரிப்பதற்கு விரிவான பின்பற்றக்கூடிய வழிமுறைகளையளிக்கும் மண்டலங்கள் குழுவின் பரிந்துரைகள் பெருங்கவனத்தை ஈர்த்தது. விரிவானதாயும் போதுமானதாயும் அவை கருதப்பட்டன. இருப்பினும் மாவட்ட உள்நாட்டு உற்பத்தியை மதிப்பிடுவதற்கான நடவடிக்கை மாநிலங்களால் உறுதியான முறையில் தொடர்ந்து மேற்கொள்ளப்படவில்லை.

**உள்நாட்டு உற்பத்தி என்றால் என்ன?**

உள்நாட்டு உற்பத்தி என்பது, ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் பல்வேறு வகையான பொருளாதார நடவடிக்கைகளால் உருவாக்கப்படும் உற்பத்திப் பொருட்களின் இரட்டிப்பாக்கப்படாத மொத்த பண மதிப்புகளாகும். அதாவது

அது, விளைவளவின் மொத்த மதிப்பு – இடைநிலை முதலீடுகள். அது ஒரு விரிவான பொதுக்கருத்து. அது குடியிருப்பவர்களால் உற்பத்தி செய்யப்பட்டும் எல்லாப் பண்டங்கள் மற்றும் பணிகளை அவை, விற்பனை செய்யப்பட்டாலும் அல்லது விற்பனை செய்யப்படாவிட்டாலும் அவை பணத்திற்காக ஒன்றுக்கொன்று மாற்றிக்கொள்ளப்பட்டாலும், பண்டமாற்றம் செய்யப் பட்டாலும் சொந்தப் பயனுக்காயிருப்பினும் இதில் எதையும் பொருட்படுத்தாமலேயே உள்ளடக்கியதாயுள்ளது. சொந்தப் பயன்பாட்டுப் பொருட்கள் மற்றும் பணிகள் (உரிமையாளர் குடியிருக்கும் கட்டிடங்களுக்கான வாடகைப் பணங்கள் போன்றவற்றிற்குரிய மதிப்புகளும் சேர்க்கப்பட்டுள்ளன. எனவே மொத்த உள்நாட்டு உற்பத்தியானது அடிப்படையில் பண்டங்களின் மற்றும் பணிகளின் உற்பத்தியை அளக்கும் ஒரு விளைபொருள் கோட்பாடாகும். ஆனால் பொது வழக்கில், அது ஒரு வருமானக்கோட்பாடாயும் ஏற்கப்படுகிறது. ஏனெனில், இது கூட்டிய மதிப்பிற்கிணையானது. அது உற்பத்தி நிலம், தொழிலாளர், முதலீடு, தொழில்முனைவர் திறம் ஆகிய விளைவளவைத் தயாரிக்க உதவும். காரணிகளின் வருமானங்களின் மொத்தமாகும்.

### நடப்பு மற்றும் நிலையான விலைவாசிகள்

பணவீக்கமானது, நவீன பொருளாதாரத்தின் பொதுவானதொரு சிறப்பியல்பாயிருக்கும் நிலையில் எந்த ஒரு தயாரிப்பு அல்லது வருமான அளவின் மதிப்பில் உள்ள உயர்வு, அந்த அளவு ஒரு பணப் பொய்த் தோற்றமாகவே இருக்கும். வருமானத்தின் வாங்கும் சக்தியின் உண்மையான மதிப்பை அறுதியிடும் பொருட்டு, ஒரு வருமான (அல்லது தயாரிப்பு) பொருள் அளவு ஒரு அடிப்படைக் காலத்திலிருந்து பண்டங்கள் மற்றும் பணிகளின் மாறாத விலைகளை அடிப்படையாய்க் கொண்டிருக்கவேண்டும். இதன்படி உண்மையான சொற்களின்படி அளவைப் பெற வேண்டும். அடிப்படைக் காலத்தைத் தேர்வு செய்வது குறித்து தரங்கள் உள்ளன. அவை: அது ஒரு வழக்கமான ஆண்டாயிருக்க வேண்டும். பொருளாதாரத்தில் கட்டமைப்பு மாற்றங்களைக் கண்டிராத ஒரு தொடர்பற்ற ஆண்டாயிருக்கக் கூடாது.

மொத்த உள்நாட்டு உற்பத்தி பொருளாதார நடவடிக்கை அல்லது நடப்பு மற்றும் நிலையான விலைவாசிப்படித் துறைகளால் அளக்கப்படுகிறது. கூட்டிய மதிப்பின் மதிப்பீடுகள், பண்டங்கள் உற்பத்தித் துறைகளுக்கும் ஏனைய துணைத்துறைகளுக்கும் மற்றும் துறைகளுக்கும் மதிப்பீட்டாண்டில் நடப்பிலிருக்கும் விலைவாசிகளின்படியும் மற்றும் அடிப்படையாண்டில் நடப்பிலிருக்கும் விலைவாசிகளின்படியும் தனியாய் பெறப்படுகின்றன.

### மதிப்பீட்டு நடைமுறை

மொத்த உள்நாட்டு உற்பத்தி பன்னாட்டுத்தரத் தொழிலாளர் வகைப்பாடு (ப.த.தொ.வ)– இன்படி துறைகளின் பொருளாதார நடவடிக்கையால் மதிப்பீடு செய்யப்படுகிறது. ஒவ்வொரு துறையிலும் உருவாக்கப்படும் மொத்த உள்நாட்டு உற்பத்தியை அளவிட மையப்புள்ளியியல் நிறுவனத்தால் பல்கூட்டான தொகுதி முறைகள் கையாளப்படுகின்றன. உற்பத்தி மற்றும் வருமானம் ஆகிய இரண்டு அணுகுமுறைகளும் பின்பற்றப்படுகின்றன. கிடைக்கப்பெறும் அடிப்படை விவரங்களின் இயல்பு, இன்றியமையா அளவுகோலாய் உள்ளது. தொழிலாளர் அதிகமாய் உள்ள கச்சா கட்டுமானப்பணி போன்ற நேர்வுகளில் செலவுமுறை பின்பற்றப்படுகிறது. உற்பத்தி அணுகுமுறைக்கு இணக்கமாய் உள்ள துறைகள், வேளாண்மையும் அது சார்ந்த நடவடிக்கைகளும், காடு வளர்ப்பு, மரம் அறுத்தல், மீன் பிடித்தல், சுரங்கத் தொழிலும், தோண்டி எடுத்தலும் மற்றும் பதிவு செய்யப்பட்ட தயாரிப்புத் தொழில்களாகும். வருமானமுறை அல்லது அதற்கு சற்று மாறுபட்ட முறை பின்வரும் துறைகளுக்குப் பின்பற்றப்படுகிறது.

பதிவு செய்யப்படாத தயாரிப்புத் தொழில், மின்சாரம் வாயு மற்றும் குடிநீர் வழங்கல், போக்குவரத்து பண்டகசாலை மற்றும் தகவல் தொடர்பு, வணிகம், உணவு விடுதிகளும், சிற்றுண்டி விடுதிகளும், வீடு நில உடைமைகள், குடியிருக்கை மற்றும் ஏனைய தொழில் பணிகள், பொது நிருவாகம் பாதுகாப்பு மற்றும் ஏனைய பணிகள் வெவ்வேறான துறைகளுக்கான உள்நாட்டு உற்பத்தியின் மதிப்பீட்டுக்கான நடைமுறைகள் கீழே, சுருக்கமாய் விளக்கப்பட்டுள்ளது :

நிலையான முதலின் பயனீட்டளவு - (நி.மு.ப)

மறைமுகமாய் அளக்கப்படும் இடைநிலை நிதிப்பணிகள் - (ம.மு.அ.நி.ப)

கூட்டப்பட்ட மொத்த மதிப்பு - (கூ.மொ.ம)

விளைவளவின் மொத்த மதிப்பு - (வி.மொ.ம)

தொழிற்சாலைகளின் ஆண்டுக் கணக்கெடுப்பு - (தொ.ஆ.க)

**1. வேளாண்மையும் அது சார்ந்த நடவடிக்கைகளும்**

பெரிய பண்டங்களுக்கு மாவட்டவாரியான உற்பத்தி மற்றும் விலைகள் தயாராக உள்ளன. ம.மு.அ.நி.ப, நி.மு.ப. போன்ற சில பண்டங்களுக்கு மாநில அளவு மதிப்பீடுகள் மட்டும் உள்ளன. முதலீடுகளில் பரப்பு, நீர்ப்பாசனம் செய்யப்படும் பரப்பு மற்றும் மாவட்டத்தின் விளைவளவின் மொத்த மதிப்பு போன்றவை தகுந்த சுட்டிக்காட்டும் கருவிகளின் அடிப்படையில் மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது.

**2. காடு வளர்ப்பும் மரம் அறுத்தலும்**

மாநில மதிப்பீடுகள் மாவட்ட வாரியான காடுகளின் பரப்பளவுக்கேற்ப மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகின்றன. எரிக்கும் விறகைப் பொறுத்தவரை, மாவட்டவாரியான கிராமப்புற மற்றும் நகர்ப்புற மக்கட் தொகை மதிப்பீட்டுக்காகப் பயன்படுத்தப்படுகிறது.

**3. மீன் பிடித்தல்**

மதிப்பீடுகளில் மாவட்ட வாரியான கடல் சார்ந்த மற்றும் உள்நாட்டு மீன் உற்பத்தி மற்றும் மதிப்பு பயன்படுத்தப்படுகிறது. மாநில அளவில் உள்ளீடுகள், மறைமுகமாய் அளக்கப்படும் இடைநிலை நிதிப்பாளிகள் மற்றும் நி.மு.ப., முதலீட்டின் மொத்த மதிப்பு ஆகியவற்றின் அடிப்படையில் மாவட்டத்திற்கு ஒதுக்கீடு செய்யப்படுகின்றன.

**4. சுரங்கத் தொழிலும் தோண்டியெடுத்தலும்**

இத்துறையின் மாவட்ட வருமான மதிப்பீடுகளுக்கு, மாவட்ட வாரியான கனிப்பொருள் உற்பத்தியும் மதிப்பும் பயன்படுத்தப்படுகிறது. மாநில அளவில் கிடைக்கப்பெறும் உள்ளீட்டு வீதங்கள், மாவட்ட அளவிலும் பயன்படுத்தப்படுகின்றன.

மாநில அளவில், ம.மு.அ.இ.நி.ப., நி.மு.ப., மாவட்டவாரியான கூட்டிய மொத்த மதிப்பின் அடிப்படையில் மாவட்டங்களுக்கிடையே பங்கீடு செய்யப்படுகிறது.

**5. தயாரிப்பு (பதிவு செய்யப்பட்டது)**

மாவட்டத்தில் கிடைக்கப்பெறும் மாவட்ட வாரியான கூட்டிய மொத்த மதிப்பு (தொழிலாளர்களின் ஆண்டு கணக்கெடுப்பு) ம.மு.அ.இ.நி.ப. மற்றும் நிலையான முதலின் பயனீட்டளவு (நி.மு.ப) மாவட்டங்களின் கூட்டிய மொத்த மதிப்பீட்டின் அடிப்படையில் மாவட்டங்களிடையே பங்கீடு செய்யப்படுகின்றன.

**6. தயாரிப்பு (பதிவு செய்யப்படாதது)**

மாநில வருமானம் தொழிலாளர் எண்ணிக்கையின் அடிப்படையில் மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது. ம.மு.அ.இ.நி.ப.-களும் நிலையான முதலீட்டின் பயனீட்டளவும் மாவட்டங்களுக்

கிடையே மாவட்ட வாரியான கூட்டிய மொத்த மதிப்பீட்டின் அடிப்படையில் பங்கீடு செய்யப் படுகின்றன.

### 7. மின்சாரம், வாயு மற்றும் குடிநீர் வழங்கல்

மாநிலத்தின் மதிப்பீட்டு வருமானம் மாவட்டங்களிடையில் தொழிலாளர்களின் எண்ணிக்கை அடிப்படையில் பங்கீடு செய்யப்படுகிறது. மாநில அளவு ம.மு.அ.இ.நி.ப. மற்றும் நிலையான முதலீட்டுப் பயனீட்டளவு மாவட்டங்களிடையே கூட்டிய மொத்த மதிப்பின் அடிப்படையில் பங்கீடு செய்யப்படுகின்றன.

### 8. கட்டுமானம்

மாநில வருமான மதிப்பீடுகள் தொழிலாளர்களின் எண்ணிக்கைக்கேற்ப மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது. மாநில ம.மு.அ.நி.இ.நி மற்றும் நிலையான முதலீட்டின் பயனீட்டளவு மாவட்டத்தின் கூட்டிய மொத்த மதிப்பின் அடிப்படையில் ஒதுக்கீடு செய்யப்படுகின்றன.

### 9. வணிகம், உணவு விடுதிகள் மற்றும் சிற்றுண்டி விடுதிகள்

மாநில அளவிலான வருமானம், தொழிலாளர்களின் எண்ணிக்கை மற்றும் மொத்த வணிக வருமானத்தின் அடிப்படையில் மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது. மாநிலத்தின் ம.மு.அ.இ.நி.ப மற்றும் நிலையான முதலீட்டின் பயனீட்டளவு மாநிலவாரியான கூட்டிய மொத்த மதிப்பின் அடிப்படையில் மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகின்றன.

### 10. மற்ற வழி முறைகளில் போக்குவரத்து

மாநில அளவு மதிப்பீடுகள் மாவட்ட வாரியான தொழிலாளர்களின் எண்ணிக்கை மாவட்டவாரியான ஊர்திகளின் எண்ணிக்கை மற்றும் மொத்த வணிக வருமானம் (மொ.வ.வ) ஆகியவற்றின் அடிப்படையில் ஒதுக்கீடு செய்யப்படுகிறது. ம.மு.அ.இ.நி.ப மற்றும் நி.மு.ப. மாவட்டங்களின் கூட்டிய மொத்த மதிப்பின் அடிப்படையில் மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகின்றன. (மாவட்டங்கள்)

### 11. சேமிப்பிடம்

மாநிலக் கூட்டிய மொத்த மதிப்பு (மா.கூ.மொ.ம.) மாவட்டத் தொழிலாளர்களின் எண்ணிக்கை அடிப்படையில் மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது. ம.மு.அ.இ.நி.ப. மற்றும் நிலையான முதலீட்டின் பயனீட்டளவு, மாவட்ட வாரியான கூட்டிய மொத்த மதிப்பின் அடிப்படையில் மாவட்டங்களுக்குப் பங்கீடு செய்யப்படுகின்றன.

### 12. வீடு, நில உடைமைகள் இருப்பிட உடைமை உரிமை மற்றும் வணிகப் பணிகள்

வீடு, நில உடைமை மற்றும் வணிகப் பணியிலிருந்து கிடைக்கும் மதிப்பிட்ட வருமானம் மாவட்ட வாரியான தொழிலாளர் எண்ணிக்கையின் அடிப்படையில் மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது. இருப்பிடங்களிலிருந்து கிடைக்கும் வருமானம், மாவட்ட வாரியான இருப்பிடக் கட்டிடங்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது.

ம.மு.அ.இ.நி.ப. மற்றும் நிலையான முதலீட்டின் பயனீட்டளவு மாவட்ட வாரியான கூட்டிய மொத்த மதிப்பிற்கேற்ப மாவட்டங்களுக்குப் பங்கீடு செய்யப்படுகின்றன.

## 13. இருப்பூர்தி தொலைத்தொடர்பு மற்றும் வங்கி மற்றும் ஈட்டுறுதி

மாநில வருமானம் மாவட்ட வாரியான தொழிலாளர்களின் எண்ணிக்கை அடிப்படையில் மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது.

## 14. பொது நிருவாகம்

தொழிலாளர்களின் பணிக்கேற்ப மாநில அளவு மதிப்பீடுகள் மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது.

## 15. ஏனைய பணிகள்

தொழிலாளர்களின் எண்ணிக்கைக்கேற்ப மாநில அளவு மதிப்பீடுகள் மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது. ம.மு.அ.இ.நி.ப. மற்றும் நிலையான முதலீட்டின் பயனீட்டளவு மாவட்ட கூட்டிய மொத்த மதிப்பீட்டின் அடிப்படையில், மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகின்றன.

## வரையறைகள்

மாவட்ட வருமான மதிப்பீடுகள், வெவ்வேறு துறைகளுக்கான மாநில வருமான மதிப்பீடுகளிலிருந்து பெறப்படுகின்றன. துறை வருமானத்தைத் தனியாய் பிரித்து, வெவ்வேறு மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்வதில், பயிர்களின் விளைச்சல் மற்றும் விலைகள் பற்றிய விவரங்கள் கிடைக்கப்பெற்றால் அவை எடுத்துக் கொள்ளப்படுகின்றன. வேளாண் துறையில் சில பயிர்களுக்கு மாவட்ட வாரியான விளைச்சல் மற்றும் விலைகள் கிடைக்கப் பெறுவதில்லை. அத்தகைய நேர்வுகளில் இப்பயிர்களின் மாவட்ட வாரியான விளைவளவின் மதிப்பு, அந்தப் பயிரின் கீழ் உள்ள மாவட்டவாரியான பரப்பளவின் அடிப்படையில் விளைவளவின் மாநில அளவு மதிப்பு ஒதுக்கீடு செய்யப்பட்டுக் கணக்கிடப்படுகிறது.

தயாரிப்புத்துறை (பதிவு செய்தது)யைப் பொறுத்தவரை, மாவட்ட வாரியான வருமானம் ஆண்டுத் தொழில்களின் கணக்கெடுப்பின் (ஆ.தொ.க) அடிப்படையில் மதிப்பீடு செய்யப்பட்டு வருமானத் தொடக்கமுறை கடைபிடிக்கப்படுகிறது. எனவே, தூத்துக்குடி மற்றும் தருமபுரி மாவட்டம் ஒசூரில் இருப்பதைப் போல தயாரிப்பு நடவடிக்கைகள் நிறைந்திருக்குமிடங்களில் தயாரிப்பால் கூட்டப்படும் மொத்த மதிப்பும் அம்மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது. இதே முறையில் நெய்வேலியில் முதனிலை சுரங்க நடவடிக்கைகளில் முழு வருமானமும், கடலூர் மாவட்டத்திற்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது. கடல் சார்ந்த அனைத்து மீன்பிடி நடவடிக்கைகளும், மீன்கள் நடமாட்டம் மற்றும் மாவட்டத்திலிருக்கும் கடற்கரையின் நீளம் ஆகியவற்றின் அடிப்படையில், கடற்கரை மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது. மூன்றாவதான துறையில் வருமான அணுகுமுறை பின்பற்றப்படும் இடங்களில், மாநில வருமான மதிப்பீடுகள், ஒவ்வொரு மாவட்டத்திலுள்ள தொழிலாளர்களின் எண்ணிக்கைக்கேற்ப மாவட்டத்திற்கு ஒதுக்கீடு செய்யப் படுகிறது. சில தொழில்களில், வணிகம், உணவகம் மற்றும் போக்குவரத்து ஆகியவற்றி

லிருப்பதைப் போல் தொழிலாளர்களின் சராசரி பொருள் ஈட்டல், மாவட்டத்திற்கு மாவட்டம் மாறுபடும். தொழிலாளர்களின் எண்ணிக்கை மற்றும் சராசரி பொருள் ஈட்டல் பற்றிய பல கணக்கெடுப்புகளின் அடிப்படையிலான விவரங்கள், இத்துறைகளின் வருமான மதிப்பீட்டிற்காக மேற்கொள்ளப்பட்டன.

இருப்பூர்திகள், வங்கித் தொழில்பணிகள் போன்ற மண்டலங்களுக்கப்பாற்பட்ட துறைகளில் மாநில வருமான மதிப்பீடுகளே மத்தியப் புள்ளியியல் நிறுவனத்தால் செய்யப்பட்ட ஒதுக்கீடுகளை ஒருங்கிணைத்தமைக்கின்றன. பதிலுக்கு, இந்த மதிப்பீடுகள் தொழிலாளர்களின் எண்ணிக்கை போன்ற தட்டிக்காட்டும் கருவிகளின் அடிப்படையில் வெவ்வேறு மாவட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகிறது.

17 துறைகள் மற்றும் துணைத்துறைகளுக்கான மாவட்ட வருமான மதிப்பீடுகள் விளைச்சல் பரப்பு, விலைகள், வெவ்வேறு பிரிவுகளில் தனி ஒரு தொழிலாளரின் சராசரி வருமானம் மற்றும் வெவ்வேறு துறைகளில் தொழிலாளர் எண்ணிக்கை போன்ற தரநிலைகளைப் பின்பற்றி விரிவானதொரு செய்முறையால் தயாரிக்கப்படுகிறது. அத்தகைய சுட்டிக்காட்டும் கருவிகளில் உள்ள குறைபாடுகள் மாவட்ட வருமான மதிப்பீடுகளிலும் கூடப் பிரதிபலிக்கச் செய்யும்.

மாவட்ட வருமானத்தை கணக்கிடுவதில் மாவட்டத்திற்குள் வருவனவும் மாவட்டத்திற்கு வெளியே போவனவும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுவதில்லை. பல துறைகளில் ஒரு மாவட்டத்தின் கணிசமான உற்பத்திப் பொருட்கள் வெளிச்செல்லுகின்றன. எடுத்துக்காட்டாய் கழிமுகப்பகுதி மாவட்டங்களிலிருந்து நெல், சென்னை, காஞ்சிபுரம், தூத்துக்குடியிலிருந்து தயாரிப்புப் பொருள்கள் இதே போன்று பண்டங்கள் மற்றும் செலுத்துத் தொகைகள் ஆகிய மாவட்டத்திற்குள் வரும் இரண்டும் கூடக் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுவதில்லை. எடுத்துக்காட்டாய், இந்தியாவின் மற்றப் பகுதிகள் மற்றும் வெளிநாடுகளில் பணிபுரியும் நபர்களிடமிருந்து கணிசமான பணம் செலுத்துத் தொகைகள் இருக்கப்பெறும் ஒரு மாவட்டத்தில் இவை, மாவட்ட வருமானத்தில் பிரதிபலிக்காது. வெளிநாடுகளில் வாழும் இந்தியர்களிடமிருந்து கிடைக்கப்பெறும் செலுத்துத் தொகைகள் கணக்கில் எடுத்துக்கொள்ளப்பட்டால், கேரள மாநிலத்தின் தனி ஒருவர் வருமானம், புள்ளியியல் துறையின் மாநில வருமான மதிப்பீடுகளைவிடக் கணிசமாய் அதிகமாயிருக்கும் எனக் கூறப்படுகிறது.

*ஆதாரங்கள் :* *1. பொருளியல் மற்றும் புள்ளியியல் இயக்ககம், தமிழ்நாடு அரசு*
*2. இந்திய தேசீய கணக்குப்புள்ளி விவரங்கள் 1950–51 லிருந்து 1996–97 வரை.*
*3. பொருளாதார மற்றும் அரசியல் வார இதழ் ஆராய்ச்சி நிறுவனம் 1998*

## ஈ. தமிழ்நாட்டில் வீட்டுவசதிப் பற்றாக்குறையின் மதிப்பீடு - 2001 மற்றும் 2011

1. 2001-லும் 2011-லும் தமிழ்நாட்டில் வீட்டுவசதிப் பற்றாக்குறை, வீட்டுவசதித் துறையில் பின்வரும் இருபெரும் பகுதிகளை கணக்கில் எடுத்துக் கொண்டு மதிப்பிடப்படுகிறது.

   i. குறைந்த அளவு வீட்டு வசதிகள் தேவை (குறும) மற்றும்

   ii. மீளக்கட்டிக் கொடுக்கும் கேட்பு.

2. மீச்சிறு (அ) குறைந்தபட்ச வீட்டுவசதித் தேவையானது மொத்தக் குடும்பங்களின் எண்ணிக்கை மற்றும் 2001–ல், 2011–ல் மொத்த வீட்டு வசதிப் பிரிவுகளின் எண்ணிக்கை ஆகியவற்றை மதிப்பீடு செய்து கணக்கிடப்படுகிறது. கிராமப்புறம் மற்றும் நகர்ப்புறக் குடும்பங்கள் ஆகிய இரண்டின் எண்ணிக்கை பதிவாளர் - தலைவர், இந்தியஅரசு, வல்லுநர் குழுவால் 2001 மற்றும் 2011-ல் உத்தேசமாய் திட்டமிடப்பட்ட மக்கட்தொகையின் அடிப்படையில் தனியாய் மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. 2001–ல் குடும்பங்களை மதிப்பீடு செய்யப் பயன்படுத்தப்பட்ட குடும்பத்தின் அளவுகள் ஊகிக்கப்பட்ட அளவு : கிராமப்புறம் 4.2. நகர்ப்புறம் 4.4 2011–ல் ஊகிக்கப்பட்ட அளவு : கிராமப்புறம் : 4.0. நகர்ப்புறம் 4.2 குடும்ப அளவு தரநிலை 1981–க்கும் (கிராமப்புறம் : 4.61 நகர்ப்புறம்: 4.92) 1991–க்கும் இடையே கிராமப்புறம் 4.36, நகர்ப்புறம் 4.64) (மக்கட்தொகைக் கணக்கு குடும்ப அளவு தரநிலை) இடைப்பட்ட காலத்தில் காணப்பட்ட இறக்கப் போக்கினைக் கருத்தில் கொண்டு ஊகிக்கப்பட்டது. 2001–க்கும் 2011–க்கும், மாவட்ட வாரியான குடும்பங்கள், திட்டமிடப்பட்ட உத்தேச மக்கட் தொகையிலிருந்து மதிப்பீடு செய்யப்பட்டது. இது 1991 மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி ஒவ்வொரு மாவட்டத்தின் மக்கட்தொகை விழுக்காட்டையும், மேற்சொன்ன குடும்ப அடைவுதர நிலை களையும் (கிராமப்புறம் மற்றும் நகர்ப்புறம் இரண்டுக்கும்) பயன்படுத்திக் கணக்கிடப்பட்டது. இதேபோன்று 2001 மற்றும் 2011–ம் ஆண்டுகளுக்கான வீட்டுவசதிப் பிரிவுகள், 1961–லிருந்து 1991 வரை கிடைக்கப்பெறும் மக்கட்தொகை மற்றும் வீட்டுவசதிப் பிரிவுகளின் கணக்குப் புள்ளிவிவரங்களை பயன்படுத்திப் பின்னிறக்க முறையில் மதிப்பிடப்படுகின்றன. 2001 மற்றும் 2011–க்கான மாவட்ட வாரியான வீட்டுவசதிப் பிரிவுகள், 1991 ம.தொ.க.–ன் படி ஒவ்வொரு மாவட்டத்திலும் (கிராமப்புறம் மற்றும் நகர்ப்புறங்களுக்கு) உள்ள வீட்டு வசதிப் பிரிவுகளின் விழுக்காட்டைப் பயன்படுத்தித் தனியாகப் பிரித்து மதிப்பிடப்படுகிறது.

3. மீளக்கட்டிக் கொடுக்கும் தேவையைக் கணக்கிட கிராமப்புறம் மற்றும் நகர்ப்புறங்களில் பழுதான நிலையில் உள்ள எல்லாக் கச்சா வகை வீடுகளும் வழக்கற்றுப் போய் மீளக்கட்டிக் கொடுக்கப்பட வேண்டும் என ஊகிக்கப்படுகிறது. மேற்சொன்ன பின்னிறக்க முறையில் 2001 மற்றும் 2011–க்கு மதிப்பீடு செய்யப்பட்ட வீட்டு வசதிப்பிரிவுகள் பின்னர், முறையே கிராமப்புறம் மற்றும் நகர்ப்புறங்களில் 1991 ம.தொ.க.–ன் படி ஒவ்வொரு மாவட்டத்திலிருக்கும் வீட்டுவசதிப் பிரிவுகளின் விழுக்காட்டின்படி, ஒவ்வொரு மாவட்டத் திற்கும் பங்கீடு செய்யப்படுகிறது. மாவட்டவாரியாக, வீடுகள் மதிப்பீடு செய்தபின் கச்சா வீடுகளின் எண்ணிக்கையும், பழுதான நிலையில் அதாவது மீளக்கட்டிக் கொடுக்கப்பட விருக்கும் (கிராமப்புறம் மற்றும் நகர்ப்புறங்களில்) வீடுகளின் எண்ணிக்கை, வீட்டு வகைத் தரங்களின்படியும் ஒவ்வொரு வகைக்கட்டமைப்பின்கீழ், பழுதான நிலையிலிருக்கும் விழுக்காட்டின்படியும் (%) மதிப்பிடப்படுகிறது. (தேசியமாதிரிக் கணக்கெடுப்பு 49–வது சுற்றின் அறிக்கையில் கண்டுள்ளபடி கீழே உள்ள அட்டவணையைக் காணவும்)

| வகை | கட்டமைப்பு வகைப்படி குடும்பங்களின் விழுக்காடு | | கேடான நிலையிலிருக்கும் கட்டமைப்பின் விழுக்காடு | |
|---|---|---|---|---|
| | கிராமப்புறம் | நகர்ப்புறம் | கிராமப்புறம் | நகர்ப்புறம் |
| 1 | 2 | 3 | 4 | 5 |
| செம்மையான | 35.16 | 69.25 | 3.18 | 2.22 |
| பாதி செம்மையான | 23.50 | 17.22 | 12.95 | 12.39 |
| கச்சா | 41.33 | 13.53 | 29.94 | 43.20 |
| அனைத்தும் | | | 16.54 | 9.51 |

*ஆதாரம் : தேசிய மாதிரிக் கணக்கெடுப்பு 49-வது சுற்று, 1993.*

4. குறைந்த அளவு வீட்டுவசதி கேட்பு, மீளக்கட்டிக் கொடுக்கும் கேட்பு (மேற்சொன்னபடி மதிப்பிடப்பட்டது), தமிழ்நாடு முழுமைக்கும் மற்றும் மாவட்டங்களுக்கும் தனித்தனியாகவும் வீட்டுவசதிக் குறைவை மதிப்பீடு செய்ய ஒன்றாய் சேர்க்கப்படுகின்றன.

## அட்டவணை அ.ஏ.1 2001 மற்றும் 2011 ஆண்டுகளில் தமிழ்நாட்டில் வீட்டுவசதிக் குறைவு (மாவட்டவாரியான மதிப்பீடுகள்)

(ஆயிரத்தில்)

| வ. எண் | மாவட்டங்கள் | 2001 | | | 2011 | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | வீட்டுவசதித் தேவை குறைந்த அளவு மதிப்பீடு | மீளக் கட்டிக் கொடுக்கும் கேட்பு மதிப்பீடு | வீட்டுவசதித் தேவை மதிப்பீடு குறைந்த அளவு | வீட்டுவசதிக் குறைவு மதிப்பீடு (3+4) | மீளக்கட்டிக் கொடுக்கும் கேட்பு மதிப்பீடு | வீட்டுவசதிக் குறைவு மதிப்பீடு (6+7) |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 1. | சென்னை | | | | | | |
| | மொத்தம் | 96 | 56 | 152 | 138 | 68 | 206 |
| | கிராமப்புறம் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| | நகர்ப்புறம் | 96 | 56 | 152 | 138 | 68 | 206 |
| 2. | காஞ்சிபுரம் | | | | | | |
| | மொத்தம் | 120 | 104 | 224 | 176 | 113 | 289 |
| | கிராமப்புறம் | 68 | 73 | 141 | 101 | 76 | 177 |
| | நகர்ப்புறம் | 52 | 31 | 83 | 75 | 37 | 112 |

(தொடர்ச்சி)

(அட்டவணை அ.ஏ.1 தொடர்ச்சி)

| வ. எண் | மாவட்டங்கள் | 2001 | | | 2011 | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | வீட்டுவசதித் தேவை குறைந்த அளவு மதிப்பீடு | மீளக் கட்டிக் கொடுக்கும் கேட்பு மதிப்பீடு | வீட்டுவசதித் தேவை மதிப்பீடு குறைந்த அளவு | வீட்டுவசதிக் குறைவு மதிப்பீடு (3+4) | மீளக்கட்டிக் கொடுக்கும் கேட்பு மதிப்பீடு | வீட்டுவசதிக் குறைவு மதிப்பீடு (6+7) |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 3. | கடலூர் | | | | | | |
| | மொத்தம் | 147 | 126 | 273 | 211 | 133 | 344 |
| | கிராமப்புறம் | 119 | 115 | 234 | 173 | 120 | 293 |
| | நகர்ப்புறம் | 28 | 11 | 39 | 38 | 13 | 51 |
| 4. | வேலூர் | | | | | | |
| | மொத்தம் | 137 | 68 | 205 | 184 | 73 | 257 |
| | கிராமப்புறம் | 70 | 56 | 126 | 98 | 59 | 157 |
| | நகர்ப்புறம் | 67 | 12 | 79 | 86 | 14 | 100 |
| 5. | திருவண்ணாமலை | | | | | | |
| | மொத்தம் | 66 | 53 | 119 | 94 | 56 | 150 |
| | கிராமப்புறம் | 51 | 50 | 101 | 75 | 52 | 127 |
| | நகர்ப்புறம் | 15 | 3 | 18 | 19 | 4 | 23 |
| 6. | சேலம் | | | | | | |
| | மொத்தம் | -67 | 113 | 46 | -32 | 121 | 89 |
| | கிராமப்புறம் | -56 | 94 | 38 | -25 | 98 | 73 |
| | நகர்ப்புறம் | -11 | 19 | 8 | -7 | 23 | 16 |
| 7. | தருமபுரி | | | | | | |
| | மொத்தம் | 76 | 64 | 140 | 108 | 67 | 175 |
| | கிராமப்புறம் | 73 | 60 | 133 | 103 | 63 | 166 |
| | நகர்ப்புறம் | 3 | 4 | 7 | 5 | 4 | 9 |

(தொடர்ச்சி)

(அட்டவணை அ.ஏ.1 தொடர்ச்சி)

| வ. எண் | மாவட்டங்கள் | 2001 | | | 2011 | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | வீட்டுவசதித் தேவை குறைந்த அளவு மதிப்பீடு | மீளக் கட்டிக் கொடுக்கும் கேட்பு மதிப்பீடு | வீட்டுவசதித் தேவை மதிப்பீடு குறைந்த அளவு | வீட்டுவசதிக் குறைவு மதிப்பீடு (3+4) | மீளக்கட்டிக் கொடுக்கும் கேட்பு மதிப்பீடு | வீட்டுவசதிக் குறைவு மதிப்பீடு (6+7) |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 8. | ஈரோடு | | | | | | |
| | மொத்தம் | –78 | 73 | –5 | –61 | 77 | 16 |
| | கிராமப்புறம் | –61 | 63 | 2 | –43 | 65 | 22 |
| | நகர்ப்புறம் | –17 | 10 | –7 | –18 | 12 | –6 |
| 9. | கோயம்புத்தூர் | | | | | | |
| | மொத்தம் | –22 | 85 | 63 | 7 | 93 | 100 |
| | கிராமப்புறம் | –20 | 55 | 35 | –1 | 57 | 56 |
| | நகர்ப்புறம் | –2 | 30 | 28 | 8 | 36 | 44 |
| 10. | நீலகிரி | | | | | | |
| | மொத்தம் | 7 | 17 | 24 | 14 | 18 | 32 |
| | கிராமப்புறம் | 5 | 11 | 16 | 10 | 11. | 21 |
| | நகர்ப்புறம் | 2 | 6 | 8 | 4 | 7 | 11 |
| 11. | திருச்சி | | | | | | |
| | மொத்தம் | 19 | 112 | 131 | 64 | 120 | 184 |
| | கிராமப்புறம் | 7 | 95 | 102 | 44 | 99 | 143 |
| | நகர்ப்புறம் | 12 | 17 | 29 | 20 | 21 | 41 |
| 12. | தஞ்சாவூர் | | | | | | |
| | மொத்தம் | 94 | 118 | 212 | 150 | 125 | 275 |
| | கிராமப்புறம் | 59 | 103 | 162 | 103 | 107 | 210 |
| | நகர்ப்புறம் | 35 | 15 | 50 | 47 | 18 | 65 |

(தொடர்ச்சி)

(அட்டவணை அ.எ.1 தொடர்ச்சி)

| வ. எண் | மாவட்டங்கள் | 2001 | | | 2011 | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | வீட்டுவசதித் தேவை குறைந்த அளவு மதிப்பீடு | மீளக் கட்டிக் கொடுக்கும் கேட்பு மதிப்பீடு | வீட்டுவசதித் தேவை மதிப்பீடு குறைந்த அளவு | வீட்டுவசதிக் குறைவு மதிப்பீடு (3+4) | மீளக்கட்டிக் கொடுக்கும் கேட்பு மதிப்பீடு | வீட்டுவசதிக் குறைவு மதிப்பீடு (6+7) |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 13. | புதுக்கோட்டை | | | | | | |
| | மொத்தம் | 50 | 33 | 83 | 67 | 35 | 102 |
| | கிராமப்புறம் | 44 | 30 | 74 | 59 | 32 | 91 |
| | நகர்ப்புறம் | 6 | 3 | 9 | 8 | 3 | 11 |
| 14. | மதுரை | | | | | | |
| | மொத்தம் | 57 | 81 | 138 | 99 | 88 | 187 |
| | கிராமப்புறம் | 10 | 59 | 69 | 33 | 61 | 94 |
| | நகர்ப்புறம் | 47 | 22 | 69 | 66 | 27 | 93 |
| 15. | திண்டுக்கல் | | | | | | |
| | மொத்தம் | 1 | 50 | 51 | 21 | 53 | 74 |
| | கிராமப்புறம் | –2 | 44 | 42 | 15 | 46 | 61 |
| | நகர்ப்புறம் | 3 | 6 | 9 | 6 | 7 | 13 |
| 16. | இராமநாதபுரம் | | | | | | |
| | மொத்தம் | 31 | 29 | 60 | 47 | 31 | 78 |
| | கிராமப்புறம் | 19 | 26 | 45 | 31 | 27 | 58 |
| | நகர்ப்புறம் | 12 | 3 | 15 | 16 | 4 | 20 |
| 17. | விருதுநகர் | | | | | | |
| | மொத்தம் | –14 | 41 | 27 | –1 | 45 | 44 |
| | கிராமப்புறம் | –3 | 31 | 28 | 9 | 33 | 42 |
| | நகர்ப்புறம் | –11 | 10 | –1 | –10 | 12 | 2 |

(தொடர்ச்சி)

(அட்டவணை அ.ஏ.1 தொடர்ச்சி)

| வ. எண் | மாவட்டங்கள் | 2001 | | | 2011 | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | வீட்டுவசதித் தேவை குறைந்த அளவு மதிப்பீடு | மீளக் கட்டிக் கொடுக்கும் கேட்பு மதிப்பீடு | வீட்டுவசதித் தேவை மதிப்பீடு குறைந்த அளவு | வீட்டுவசதிக் குறைவு மதிப்பீடு (3+4) | மீளக்கட்டிக் கொடுக்கும் கேட்பு மதிப்பீடு | வீட்டுவசதிக் குறைவு மதிப்பீடு (6+7) |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 18. | சிவகங்கை | | | | | | |
| | மொத்தம் | 11 | 28 | 39 | 24 | 30 | 54 |
| | கிராமப்புறம் | 8 | 24 | 32 | 18 | 25 | 43 |
| | நகர்ப்புறம் | 3 | 4 | 7 | 6 | 5 | 11 |
| 19. | திருநெல்வேலி | | | | | | |
| | மொத்தம் | 0 | 67 | 67 | 26 | 71 | 97 |
| | கிராமப்புறம் | –1 | 54 | 53 | 20 | 56 | 76 |
| | நகர்ப்புறம் | 1 | 13 | 14 | 6 | 15 | 21 |
| 20. | தூத்துக்குடி | | | | | | |
| | மொத்தம் | –5 | 37 | 32 | 8 | 40 | 48 |
| | கிராமப்புறம் | 0 | 27 | 27 | 10 | 28 | 38 |
| | நகர்ப்புறம் | –5 | 10 | 5 | –2 | 12 | 10 |
| 21. | கன்னியாகுமரி | | | | | | |
| | மொத்தம் | 65 | 38 | 103 | 86 | 41 | 127 |
| | கிராமப்புறம் | 58 | 34 | 92 | 76 | 36 | 112 |
| | நகர்ப்புறம் | 7 | 4 | 11 | 10 | 5 | 15 |
| | தமிழ்நாடு | | | | | | |
| | மொத்தம் | 793 | 1391 | 2184 | 1428 | 1495 | 2923 |
| | கிராமப்புறம் | 450 | 1103 | 1553 | 908 | 1149 | 2057 |
| | நகர்ப்புறம் | 343 | 288 | 631 | 520 | 346 | 866 |

*ஆதாரங்கள் : மக்கட் தொகை : 1981 மற்றும் 1991 ம.தொ.க மற்றும் பதிவாளர் தலைவர் வல்லுநர் குழுவின் 2001 மற்றும் 2011–ம் ஆண்டுகளின் திட்டமிடப்பட்ட மக்கள் குடும்ப பயன்பாடுகள்*

*2001–ம் ஆண்டுக்கு ஊகிக்கப்படும் குடும்ப பயன்பாடு கிராமப்புறம்: 4.2, நகர்ப்புறம்: 4.4. 2011–ம் ஆண்டுக்கு கிராமப்புறம்: 4.0, நகர்ப்புறம்: 4.2*

*வீட்டுவசதிப் பிரிவுகள் : 2001 மற்றும் 2011–ம் ஆண்டுகளுக்கு, 1981, 1991 ம.தொ.க.–யைப் பயன்படுத்திப் பின்னிறக்க முறையில் திட்டமிடப்பட்டது.*
*மீளக்கட்டிக்கொடுக்கும் கேட்பு: தேசியமாதிரிக் கணக்கெடுப்பு 49-வது சுற்று பயன்படுத்தப்பட்டது. வீட்டுவசதி விழுக்காட்டின் 1993–ம் ஆண்டு முடிவுகள்.*
*வகை கட்டமைப்பு மற்றும் பழுதான நிலையிலிருக்கும் கச்சாவீடுகளின் விழுக்காடு (தொழில்நுட்பக் குறிப்புகளைப் பார்க்கவும்)*

குறிப்புகள் : *காட்டப்பட்டுள்ள மாவட்டங்கள் 1991 ம.தொ.க.–ன்படி ஒருங்கிணைந்த மாவட்டங்கள் ஆகும். இம்மாவட்டங்கள் தற்போது இரண்டாயும் (வரிசைஎண்கள் 2,3,6 மற்றும் 14) மற்றும் மூன்றாயும் (வரிசை எண்கள் 11 மற்றும் 12) பிரிக்கப்பட்டுள்ளன.*

## உ. இழப்புக் குறியீட்டின் கணக்கீடு (இ.கு.க.)

ஒவ்வொரு பகுதிக்கும் இழப்புக் குறியீடு பின்வரும் வாய்ப்பாட்டின் மூலம் கணக்கிடப் படுகிறது.

$$\text{இழப்புக் குறியீடு } (i) = \frac{\text{இலக்கு } (X_{i_}) \text{ — உள்ளபடியான மதிப்பு } (X_i)}{\text{இலக்கு } X_i - \text{ குறுமம் } X_i}$$

i-வது மாறியின் மாறும் இயல்புக்கேற்ப j-வது மாவட்ட இழப்புக் குறியீடு மதிப்புகள் இம்மாறும் இயல்புகளின் சராசரியென விளக்கப்படுகிறது.

$$I_j = I_{ij}/3 \qquad i = 1, 2, 3$$

ஒவ்வொரு பகுதியும் சமமான முக்கியமாயிருப்பதாலும் ஏதாவது ஒன்றில் குறைவு, ஒரு குறிப்பிட்ட மாவட்டத்தின் மக்களது இழப்பை சுட்டிக்காட்டுவதாயமைவதால், அளவுகள் ஒவ்வொன்றிற்கு சமமான மதிப்புகள் அளிக்கப்படுகிறது. ஒவ்வொரு அளவுக்கும் எடுத்துக் கொள்ளப்பட்ட இலக்கு மதிப்புகளும், குறைந்த அளவு மதிப்புகளும் பின்வருமாறு :

**சேமக்குடிநீர்**

இலக்கு : 100 விழுக்காடு

குறைந்த அளவு : 32.10 விழுக்காடு (ஒரு மாவட்டத்தின் குறைந்த அளவு மதிப்பீடு)

**துப்புரவு**

இலக்கு : 90 விழுக்காடு

குறைந்த அளவு : 8.63 விழுக்காடு (ஒரு மாவட்டத்தின் குறைந்த அளவு மதிப்பீடு)

**மின்சாரம்**

இலக்கு : 100 விழுக்காடு

குறைந்த அளவு : 39.1 விழுக்காடு (ஒரு மாவட்டத்தின் குறைந்த அளவு மதிப்பீடு)

